ரான்மணி

# ...னயா சுவாமிகள்

...பு மலர்



பொதிச்சுவாமி-பொன்னையா சுவாமி மடாலயம்

கரிவலம்வந்தநல்லூர்.

சித்தகல்ப சிரோன்மணி

# தவத்திரு பொன்னையா சுவாமிகள் நினைவு மலர்

சுபகிருது ஐப்பசி 26உ ✿ 11–11–1962

பொதிச்சுவாமி - பொன்னையா சுவாமி மடாலயம்
கரிவலம்வந்தநல்லூர்.

# உள்ளுறை

---

## அருள் மொழிகள்

சுவாமிகள் சென்னைக்கு ஒரு சமயம் வந்திருந்தபோது, தனது ஆத்ம நண்பர் திரு வெங்கட்ராமய்யர் அவர்களுடன் மௌண்ட்ரோடு ரௌண்டானுப் பக்கம் இரவில் ஒருநாள் நடந்துகொண்டிருக்கும்போது, திடீரென்று நின்று தனது நண்பரிடம் இவ்வாருகச் சொன்ஞர்கள். "இவ்வளவு கோலாகலமாக இத்தனை கார்கள், மிகப் பிரகாசமான மின்சார வெளிச்சம், சமுத்திரக்காற்று, உல்லாசமாகப் பொழுது போக்குவதற்கு வேண்டிய விடுதிகள், கண் காட்சிகள் முதலிய இந்தப் பல வசதிகளைத் தள்ளி விட்டு, யாரைய்யாச் சுலபமாக உலகத்தைத் துறந்து சன்னியாசியாவதற்கு இசைவார்கள்?" என்று சொல்லித் துறவியாவதில் உள்ள சிரமத்தை விளக்கினுர்கள்.

✿ ✿ ✿ ✿

"ஆங்கில வைத்திய முறையில் சர்க்கரையைக் குளுகோஸாக மாற்றி மருந்தாக உடலைப் பேண உபயோகிக்கும் அளவுக்குக் கண்டு பிடித்திருக்கிறுர்கள். ஆனுல் சித்த வைத்திய முறையில் இதைவிட ஒரு படி உயர்ந்து சென்று, சர்க்கரையை உப்பாக மாற்றும் வழிகண்டு, உடலையும் உயிரையும் பேணும் மார்க்கம் கண்டிருக்கிறுர்கள் சித்தர்கள்!" என்று சொல்லி விளக்கிக் கூறுவார்கள்.

---

## பொன்னையா சிவம்!

வடமொழியுந் தென்மொழியும் வாடாத் தவமும்
உடனுகக் கொண்ட உரவோன்—இடனறிந்து
பேசும் முறையறிந்து பேசுபுகழ்ப் பொன்னையா
தேசு நிறைந்த சிவம்.

ர. சேதுரகுநாதன்

---

Reprinted by The Nadar Press Ltd., Sivakasi.

# பதிப்புரை

ஆண்டவன் இருக்கிருரா, இல்லையா என்ற நாத்திக வாதத்தின் விவாதத்தில் இன்று நாடு போய்க்கொண்டிருக்கிறது! ஆண்டவன் இருக்கிருர் என்று சொல்லி வாதம் புரிகிற வர்கள், 'இருக்கிருர்' என்று அடித்துச் சொல்லி நிருபிக்க முடியாத சூழ்நிலையில் ஆண்டவனின் சோதனைக்குள்ளாகி தவிக்கிருர்கள். ஆண்டவன் இல்லை என்று சொல்லித் தீவிரமாக பிரதி வாதம் புரிகிறவர்களோ, 'இல்லை' என்று அறுதியிட்டுக்கூறி தம் வாதத்தில் வெற்றிகாண முடியாத சூழ்நிலையிலே நின்று திக்குமுக்காடுகின்றனர். இருக்கிருர் என்று சொல்லும் பரம பக்தனுக்கும், இல்லை என்று சொல்லி வாதம்புரியும் அந்தப் பரம நாத்திகனுக்கும் ஆண்டவன் அளிக்கும் பரிசு வெறும் சூன்யம்தான்! இந்த சூன்யமே அந்தப் பரம்பொருளின் திருவிளை யாடல் தானே! கண்டவர் விண்டிலர், விண்டவர் கண்டிலர்!

ஆனுல், ஆண்டவன் அங்கிங்கெனுதபடி எங்கும் பிரகாசித்திருக்கிருர் என்று சொல்லும் படி, ஆண்டவன் தூணிலும் இருக்கிருர், துரும்பிலும் இருக்கிருர், என்று துணிந்து சொல்லும் படி நமக்குத் துணிவைத் தந்திருக்கிறது அந்தப் பரம்பொருளின் திரு உருவம்.

அந்தந்தக் காலங்களில் அந்தந்தச் சூழ்நிலைக்கு ஏற்ப ஆண்டவன் மனித ருபத்திலே வந்து மனிதகுலம் தழைக்க மாபெரும் சாதனைகளைச் செய்திருக்கிருர்; செய்துவருகிருர்; செய்துகொண்டே இருக்கிருர்! இதை எவரால் மறுக்கமுடியும்?

யேசுவாகவும், புத்தராகவும், நபிநாயகமாகவும் ஆண்டவன் தோன்றவில்லையா? ராமகிருஷ்ண பரமஹம்சராகவும், விவேகானந்தராகவும், மகாத்மாவாகவும் இன்னும் எத்தனை எத்தனையோ மகரிஷிகளாகவும் ஆண்டவன் தோன்றவில்லையா? தோன்றிஞர்! ஆண்டவன் இல்லை என்று எவரால் மறுக்க முடியும்?

இப்பேர்ப்பட்ட அரியபெரிய மகான்களின் வழித்தோன்றலாக தமிழகத்தின் தென் கோடியிலே ஒரு துறவி பிறந்தார்! அவர் உடலாலும், உடையாலும் துறவியாகக் காட்சி அளிக்கவில்லை. ஆனுல், அவர் உள்ளத்தால் துறவுபூண்டு, உண்மையான மெய்ஞ்ஞானியாக விளங்கினுர்! அந்த மெய்ஞ்ஞானிதான், இல்லறத்தில் நல்லறம் கண்டு துறவறம் கண்ட தவத்திரு பொன்னையா சுவாமிகள். அவர் ஒரு சித்தகல்ப சிரோன்மணி. அவர் மக்களில் ஒருவராக வாழ்ந்து ஆத்மீக வழியில், சித்த நெறியில் முக்தி அடைந்தவர். அன்னுர் சமாதிநிலை அடைந்து இந்த நவம்பர் 11-ம் தேதியோடு இரண்டாண்டு பூர்த்தி அடைகிறது, இந்த இரண்டாம் ஆண்டு குருபூஜை விழாவில் அன்னுரின் திருவடிகளுக்கு இந்த நினைவு மலரை எங்கள் அன்பின் காணிக்கையாக அர்ப்பணிக்கிருேம்.

தெய்வத்தன்மை பொருந்திய இந்த அரிய நினைவு மலரை தவத்திரு ஞானனந்த சுவாமிகள் அவர்களது தெய்வத் திருக்கரங்களால் வெளியிட இசைந்திருப்பது எங்களுக்குக் கிடைத்த ஒரு பெரும் பாக்கியம் என்றுதான் சொல்லவேண்டும். "பாம்பின் கால் பாம்பு அறியும்" என்ற பொருள் மொழிக்குத்தக்க தவத்திரு பொன்னையா சுவாமிகள் போன்ற சிறப்பு மிகு சித்தர்களையும் அவர்களது அருமை பெருமைகளையும் தெய்வீக சக்தி நிரம்பிய

தவத்திரு ஞானானந்த சுவாமிகளைப்போன்ற ஞானப்பழங்களால் தான் அறியமுடியும். ஆகவே இந்த மலரை அவர்கள் திருக்கரங்களால் வெளியிடுவது சாலச் சிறந்ததாகும். அவர்களுக்கும் எங்கள் பணிவன்பான வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

சுவாமிகளின் அருளும் ஆசியும்பெற்றுச் சிறப்புடன் விளங்கும் நம் மதிப்பிற்குரிய சபாநாயகர் உயர்திரு எஸ். செல்லப்பாண்டியன் அவர்கள் அன்புகூர்ந்து இம்மலருக்கு முன்னுரை எழுதியுள்ளார்கள். அவர்களுக்கு முதற்கண் எங்கள் வணக்கத்தையும் நன்றியையும் தெரிவித்துக்கொள்கிறோம்.

இந்தப் பொன்னுள நினைவு மலரில், அன்னாரை தரிசித்துப் பேசி மகிழ்ந்தோர் பலரும் அன்னார் அருள்உரை கேட்டு வாழ்க்கையில் வெற்றி கண்டோர் பலரும், அன்னார் ஆசிபெற்று அருளும் பொருளும் அடைந்த பலரும், அன்னாரின் சக்தியால் கொடிய நோய்நொடிகளி லிருந்து விடுதலைபெற்று புதிய சக்திபெற்ற பலரும், சுவாமி அவர்களின் சக்தியைப்பற்றி, அவரது அற உரைகளைப்பற்றி, ஆக்க வழிக்கு அழைத்துச் சென்ற அந்த அதிசயவிதம்பற்றி, இப்படிப் பலவிதமாக உள்ள அவர்களது அருமை பெருமைகளைப்பற்றி தங்கள் தங்கள் கோணத்திலிருந்து, தங்கள் கருத்தை எழுத்து வடிவில் வடித்துத் தந்திருக்கிறார்கள்.

படிக்கப் படிக்கத் தெவிட்டாத அரிய கருத்துக்களை தொகுத்துத்தந்த இந்தப் பெரியார் களுக்கு எங்கள் அன்புகலந்த நன்றியையும் வணக்கத்தையும் உரித்தாக்குகிறோம்.

ஒரு அரிய கருவூலமாகக் கருதவேண்டிய இந்த மாமலரைச் சிறந்த முறையில் தயாரிக்கப் பெரிதும் முன்னின்று உதவிய பிரசாத் பிராசஸ் நிறுவனத்தாருக்கும், பி. என். கே. அச்சகத் தாருக்கும் எங்கள் நன்றி கலந்த வணக்கத்தைத் தெரிவிப்பதில் பெருமகிழ்ச்சி அடைகிறோம்.

அதோடு, மிகக் குறுகிய காலத்தில் சக்திவாய்ந்த சுவாமிகளின் இந்த உயரிய மலரை அழகுற அச்சிட்டுத் தந்துதவ பெருமுயற்சி எடுத்துக்கொண்ட ஏ. பி. கதிர் அச்சக உரிமை யாளர் திரு. செல்லத்துரை அவர்களுக்கும், அவரது மேற்பார்வையில் நல்லமுறையில் அச்சிட்டு புத்தக வடிவாக்கித்தந்த சென்னை மெட்ரோபாலிடன் அச்சகத்தாருக்கும், இம்மலரில் எழுதியுள்ள அனைவரையும் நேரில்சென்று கண்டு நினைவு மலர்க் கட்டுரைகளைச் சேகரித்து உதவிய திரு நக்கீர முல்லைப்பாண்டியன் அவர்களுக்கும், தெய்வசக்தி பொருந்திய சுவாமி களின் திருஉருவத்தை தாங்கி நிற்கும் இந்த நினைவுமலரின் அட்டையை மிக அழகுற அமைத்துத் தந்து பலருக்கு மெருகூட்டிய ஓவியர் ஆனந்தன் அவர்களுக்கும் எங்கள் அன்பு கலந்த நன்றி.

கடைசியாக, இந்த அறிவுப் பெட்டகமான, அன்பு சுவாமிகளின் நினைவு மலரைச் சிறந்த முறையில் தயாரிக்க எங்களோடு தோளோடு தோளாக நின்று பலவழிகளிலும் பெருமுயற்சி எடுத்து ஒத்துழைத்த எங்கள் அன்பு சகோதரர் திரு கன்னிக்கண்ணன் அவர்களுக்கும் எங்கள் நன்றி. வணக்கம்!

டாக்டர் பி. குருசிரோன்மணி
பி. பரமகுரு
பி. கிருஷ்ணமூர்த்தி

கருவை
11—11—1962



தவத்திரு ஞானனந்தகிரி சுவாமிகள்

உ

# அருளுரை

1962–ஆம் ஆண்டு ஐப்பசித் திங்கள் பௌர்ணமியன்று நெல்லை மாவட்டம், கருவைக்கு வருகை தந்து, பல்லாயிரக் கணக்கான பக்தர்கள் முன்னிலையில் தவத்திரு பொன்னையா சுவாமிகள் அவர்களின் நினைவு மலரை தவத்திரு ஞானனந்தகிரி சுவாமிகள் அவர்கள் மனமுவந்து வெளியிட்டார்கள். அதுசமயம் அவர்கள் ஆற்றிய அரிய அருளுரையின் சாரம்: "ஞான மார்க்கத்தில் செல்பவர் மூன்று வகை உண்டு. ஒன்று, இளமையிலேயே துறவு பூண்டு ஞானத்தை நாடிச் செல்வது. இரண்டாவது, சிலகாலம் இல்லறத்தில் இருந்து விட்டு, பட்டினத்தார் போல், "சட்டி சுட்டதடா, கைவிட்டதடா," என இல்லறத்தை துறந்து, ஞானத்தை நாடிச் செல்வது. மூன்றுவது, இல்லறத்திலே இறுதிவரை இருந்து, "புளியம் பழமும் தோடும் போல, தாமரை இலையும் தண்ணீரும் போல" பட்டும் படாமலும், விட்டும் விடாமலும், விருப்பு வெறுப்பற்ற நடுநிலையைக் கடைப்பிடித்து, துறவற தர்மத்தையும் மேற்கொண்டு, ஞானத்தை நாடிச்செல்வது. இம்மூன்று வகையிலும், மிகவும் அருமை பெருமை வாய்ந்தது, வெகுகடினமானது முழுமையாய் உள்ளது மூன்றுவது வகையே. அவ்வழியைக் கடைப் பிடித்து வெற்றி கண்ட இல்லற ஞானி நமது பொன்னையா சுவாமிகள். அவர்களது அருள் காந்த சக்திதான் அடியேனாகிய இந்த ஊசியை திருக்கோயிலூர் தபோவனத்திலிருந்து இங்கு இழுத்து வந்துள்ளது. இம் மகா சன்னிதியில் இச்சிறுவன் இவ்வரிய நினைவு மலரை வெளியிடு வதில் மட்டற்ற மகிழ்ச்சி அடைகிறேன். அதோ பெரியவர்கள் சமாதியின் மேல் நின்று நம்மையெல்லாம் மனமுவந்து வாழ்த்தி ஆசிகூறுகிறார்கள்."

# முன்னுரை

சபாநாயகர், உயர்திரு எஸ். செல்லப்பாண்டியன், B. A., B. L., சென்னை

தவத்திரு பொன்னையா சுவாமிகள் அவர்களின் வாழ்க்கையின் பல அம்சங்களைப்பற்றி அவருடன் நெருங்கிப் பழகிய பல நண்பர்களும், உற்றார்களும் எழுதிய இந்த நினைவு மலருக்கு முகவுரை எழுதுவதற்கு கிடைத்த இந்த சந்தர்ப்பத்தை நான் எனக்குக் கிடைத்த ஒரு அரிய வாய்ப்பாகக் கருதுகிறேன்.

தவத்திரு சுவாமி அவர்களை சுமார் முப்பது ஆண்டுகளுக்கு முன்பாக முதல் முதலாக பாளையம்கோட்டையில் சந்திக்கும் பேறு பெற்றேன். அன்று முதல் அவர்களுடைய அழகிய திருஉருவமும், சாந்த சீலமும், எந்த சந்தர்ப்பத்திலும் கலங்காத நெஞ்சமும், அரிய இன்மொழிகளும் எந்த நேரமும் ஒலித்துக் கொண்டே இருக்கின்றன. இகம், பரம் இரண்டையும் ஒன்றுக இணைத்து, போலி வேடங்கள் ஒன்றும் இல்லாமல், அரிய நூல்களைக் கற்று, மக்களுக்கு ஏற்பட்ட மனநோய், உடல் நோய் இரண்டிற்கும் மருந்தாக விளங்கினுர்கள்.

அவர்களுடன் நான் பல சமயங்களில் மணிக்கணக்காக சம்பாஷணை செய்திருக்கிறேன். அவர்களுடைய பேச்சு ஒவ்வொன்றும் சந்தேகத்துக்கு இடமில்லாமல் தெளிவுடனும், நமக்கு நல்ல வழிகாட்டியாகவும் அமைந்திருக்கும். அவர்களுடைய வாக்கியங்கள் ஒவ்வொன்றும் ஒரு அரிய பழமொழியாகவே தோன்றும். உடல் நோய்களுக்கு அவர்கள் செய்து வந்த சில மருந்துகளை நான் நேரடியாகப் பார்த்திருக்கிறேன். அவ்வளவு உன்னத குணங்கள் படைத்த மருந்துகளை, அவர்களையொத்த தவப்புதல்வர்களைத் தவிர வேறுயாரும் செய்யமுடியாது என்பது எனது எண்ணம். செல்வந்தர்களுக்காக செய்யப்பட்ட பல விலைஉயர்ந்த மருந்துகளை ஏழைகளுக்கு இலவசமாகக் கொடுத்து உதவி வந்தார்கள். பரந்த நோக்கமும், ஏழை மக்களிடம் அளவிலா அன்பும் உடையவர்கள் சுவாமிகள்.

தவத்திரு சுவாமிகள் ஒரு திரிகால ஞானியுமாவார்கள். சில நேரங்களில் நான் தேர்தலைப்பற்றி நினைக்காத காலத்திலும்கூட "சட்டசபைக்கு போய் முதன்மையாக இருக்க வேண்டும்" என்று சொல்லி வந்தார்கள். அப் பெரியாருடைய வாழ்க்கையில் நாம் ஒவ்வொருவரும் அறிந்து, கடைப்பிடித்து, நடக்கவேண்டிய விஷயங்கள் பல இருக்கின்றன.

இந்த அரிய நினைவு மலர் என்ற புத்தகத்தில் கட்டுரை எழுதியுள்ள பல அன்பர்களும் அதை நல்ல முறையில் விளக்கியிருக்கிறுர்கள். அவர்களை நான் பாராட்டுகிறேன். மக்கள் யாவரும் இப்புத்தகத்தை நன்ருகப் படித்து இன்புறுவதுடன், இம்மைக்கும் மறுமைக்கும் நல்ல அனுபவங்களைப் பெற்று பயனடைவார்கள் என்பதில் சந்தேகமில்லை.

# கல்வியும் கலையும்பற்றி சுவாமிகள்

'இழுக்குடைய பாட்டுக்கு இசை நன்று' கல்பனைகளுடன், சுயம் பாடாமல், சிட்டையாகக் கற்றுப் பாடும்போது, அபசுரமிருந்தாலும், குரல் கேட்பதற்கு இனிமையாக யிருந்தால், அச்சங்கீதத்திலுள்ள இழுக்கை ஓரளவு இனிய இசை மாற்றிக்கொள்ளும். பொதுவாகப் பெண்களுக்கு இயற்கையிலேயே இனிமையான குரல் அமைந்திருக்கிறது.

❁ ❁ ❁ ❁

அதிக அளவில் முக்கியமாகப் பெண்களுக்கு, அதிலும் குறிப்பாகப் பின்தங்கிய வகுப்பைச் சேர்ந்த பெண்களுக்கு உபயோகமான கல்வி யையும், பல துறைப் பயிற்சிகளையும் கொடுப்பது மிக முக்கியமான ஆக்க வேலை. பெண்களைப் பண்படுத்தினால்தான் குழந்தைகள் நல்ல முறையில் பயிற்சியடைந்து பண்பட்டு உபயோகமான தேச பிரஜையாகும் வாய்ப்புண்டாகி, அவர்களால் நாடு விருத்தியடையும். அத்துடன் தக்க கல்வி முறையின் உதவியால் பெண்களுக்கிடையே ஒற்றுமையும், பெருந்தன்மையும், பொறுமையும் உண்டாகி, ஆண்களுக்கிடையே அன்பு இணைப்பால், ஒற்றுமையும் நம்பிக்கையும் எற்படும். இது காரணமாகத் தேச நலனும் பாதுகாக்கப்படும். எந்த ஒரு நாட்டில் பெண் கல்வி அதிகமோ அந்த நாட்டில் முன்னேற்றமும் அதிகம் உண்டாகும்.

❁ ❁ ❁ ❁

புதுக்கோட்டை, கஞ்சரா மகாவித்துவான், காலஞ்சென்ற திரு தட்சணாமூர்த்தியா பிள்ளை அவர்கள், சாமிகள் நடத்தும் குருபூஜை அனைத்திலும் மனமுவந்து பங்கெடுப்பார். சாதாரண வித்துவானையும் ஊக்கப்படுத்தி நல்ல முறையில் உற்சாகத்துடன் வாசிக்கச் செய்து, அவர்களுடன் பக்கவாத்தியம் தானே வாசித்து கச்சேரிகளை வெற்றியுடன் முடிக்கும் பெரும் ஆற்றல் பிள்ளை அவர்களுக்கு உண்டென்று சுவாமிகள் அடிக்கடி சொல்வார்கள். இவ்வாறு அமைந்த கச்சேரி ஒன்றில், குருபூஜை அன்று, பிள்ளை அவர்கள் கஞ்சிராவும், பழனி முத்தையா பிள்ளை அவர்கள் மிருதங்கமும் பக்கவாத்தியமாக அமைந்தது. பழனி முத்தையா பிள்ளை அவர்கள் மிகத் துல்லியமாகக் கணக்குப் போடுவதில் நிபுணர். பக்கவாத்திய ஆலாபனைச் சமயத்தில், மிகவும் நுணுக்கமான மாத்திரை இடத்தில் எடுப்பு எடுத்துவிட்டார். முதலில் திரு தட்சணாமூர்த்தியா பிள்ளை அவர்கள் அந்த இடத்தைக் கண்டுபிடிக்க முடியாமல் முதலில் மலைத்துப் பின்பு அதைக் கண்டுபிடித்து, அவருடன் இணைந்து வாசித்து முடித்தார்கள். பூஜை முடிவில் இன்று கச்சேரி பெரிய போர்க்களமாக முடிந்ததென்று சாமிகள் சொல்ல, மறுதினமும் தங்கி, சுவாமிகளை யோக இன்பமடைந்து மகிழச்செய்து ஆசி பெற்றுச் சென்றார்கள். இந்தத் தெய்வீக சங்கீத ரசிகத்தன்மையின் உச்சநிலை யைச் சுவாமிகள் இவ்வாறு விளக்கி வந்தார்கள்.

குருவுக்குள் பரமகுரு



தவத்திரு பொதி சுவாமிகள்

கரிவலம்வந்தநல்லூர்.



சித்தவைத்திய சிரோன்மணி தவத்திரு பொன்னையா சுவாமிகள்

கரிவலம்வந்தநல்லூர்.

## அம்மை அப்பன்



திருமதி கோமதி அம்மாள்

சித்தகல்ப சிரோன்மணி
தவத்திரு பொன்னையா சுவாமிகள்

பராசக்தி பீடம்



மேருவடிவில் ஸ்ரீசக்கரம்



உருவாகும்
பஞ்சமூர்த்தி தேவாலயத்தில்
பராசக்தி ஆலயம்

# தவத்திரு பொன்னையா சுவாமிகள் துதிப்பாடல்

திரு வெ. வெங்கட்டராமய்யர், சிவகாசி.

தவத்திரு பொன்னையா சுவாமிகள் இராஜ பாளையத்தில் 1890-ம் ஆண்டு ஞாயிற்றுக் கிழமை விசாக நக்ஷத்திரத்தில் புவியில் அவ தரித்தார்கள். பாலப்பருவத்தில் மிகவும் சுறு சுறுப்பாக ஏதாவது ஒரு வேலையைச் செய்து கொண்டே இருக்கவேண்டும் என்ற தன்மை யுள்ளவர்களாகவும், தாய் தந்தையரின் அடி பணிந்து அவர்களுக்கேற்ற துணைகளெல்லாம் செய்து வந்தார்கள்.

குமரப் பருவத்தில் உடற்பயிற்சி ஆசன சாதனைகள் இன்னும் மற்ற சாகஸகங்களைச் செய்து திடகாத்திரமாய் இருந்தார்கள். அச் சமயம் அவர்கள் மன உறுதியும், திடமும், நீதியை நிலை நாட்டுவதில் நேர்மையானபற்றும் ஆலயங்களினிடை பக்தியும் கொண்டே வளர்ந் தார்கள்.

பின்னர் நெற்றி நிறைய நீறு பூசி நிர்மல நிலையுடைய மனமுடையோன் என்பதை அப் பொழுதே காட்டினவாறு தோன்றிற்று. கழுத் தில் உருத்திராக்கமும், தினமும் துவைத்து பழுப்பேறின ஆடை ஒன்றும், துண்டு ஒன்றும் பொன்னிறமான மேனியும் சதைப்பற்று இல் லாமல் பரவிசாரத்தினல் தோலும் எலும்பு மாகி மெலிந்த சரீரத்தோடு அனுதினமும் இராஜபாளையத்திற்கு மேற்கேயுள்ள அப்பள ராஜா ஊருணியில் நீராடி உலரா ஆடை யோடே ஒர் கல்லின்மீது ஆசனமிட்டமர்ந்து நிட்டை புரிந்து வந்தார்கள். காலஞ்செல்வது தெரியாது அமர்ந்திருந்திருக்க, பெற்ற அன்னை யின் மனம் கலங்கி, கையில் உணவுடன்தான் பெற்ற தவப் புதல்வனைத் தேடி, எங்கும் காணு மல், ஊருணிக்கரையில் இருப்பதாக உற்றோர் மற்றோர் சொல்லக்கேட்டு, அவ்விடம்விரைந்து சென்று, புதல்வனைக் கண்டு மகிழ்ந்து, உணவு கொடுக்கலானுர்கள். தாம் தம் வசம் இல்லாத தாலும், நிட்டையின் உயர்நிலையில் இருந்த தாலும், ஒரு கவளம் உண்டும், ஒரு கவளத்தை எறிந்தும், வாயை துடைப்பதற்கும் கையை கழுவுவதற்கும்உணர்வில்லாமலிருக்க, அன்னை யும், அப்பணியாற்றி, கரம் பிடித்து இல்லங் கொண்டு சேர்ப்பார்கள். (சுவாமி அவர்களின் திருவருள் தாயார் அவர்கள் இதைச் சொல்லக் கேட்டேன்) இதன் நடுவே அரியதமிழ் நூல்களை யெல்லாம் அரிய பெரிய சான்றோர்களிடம் பாடம் கேட்டு வந்தார்கள்.

இச்சமயம் பந்துக்களின் நிர்பந்தத்தின்மேல் இராஜபாளையத்தில் திருமதி கோமதி அம்மாளை மணம் புரிந்து கொண்டார்கள். முறை தவறிப் போகாது முடித்து வைத்த திருமணமாயினும் பின் வாழ்வில் சுவாமிகள் இல்லறம் நடத்தும் பொழுது, இது இறைவனின் திருவருளாலேயே முடிக்கப்பட்ட மணமாகவே தோன்றிற்று.

இவ்வாறிருக்க வடமொழியிலிருக்கும் ஆதி சங்கரர் முதலானோர் அருளிச்செய்த அரிய பெரிய நூல்களை வடமொழியின் வாயிலாகவே தெரிந்து கொள்ளவேண்டி அம்மொழியைத் திருவனந்தபுரம் சென்று திறம்படக்கற்றுவரும் பொழுது குருவினுடைய கிருபையும் ஏற்பட்டு அவர்களும் சீடருக்கு செப்பவேண்டிய முறைக ளெல்லாம் கற்பித்து "இனிதுறத் தூங்கி இல்லறம் நடத்துக" என்று இயம்பிப் போந் தனர். சுவாமிகளும் இராஜபாளையம் திரும்பி வந்து இல்லறம் நடத்தி வரலானுர்கள். பின்னர் சுவாமிகளும் தன் தர்மபத்தினியுடன், கலியுகத்தில் இல்லறத்தை, எவ்விதம் நடத்து வது என்பதை, எவ்வுயிர்க்கும் தெரியுமாறு, புரிந்து வந்தார்கன். சுவாமிகளுடன் பிறந்த மூத்த சகோதரர் ஒருவர் திரு. கிருஷ்ணத் தேவர் அவர்கள் சுவாமிகளுக்கு அக்காலத்தில் உற்ற துணையாக இருந்து வந்தார். நற்குடியில் பிறந்தும் வருவாய் அதிக மில்லாமல் ஏதோ இருந்ததனைக்கொண்டு அண்ணன் கொடுத்த அமுதுபடியால் அழகாக வாழ்க்கை நடத்தி வந்தார்கள்.

இவ்வமயத்தில்தான் அடிமைக்கு சுவாமி களது திவ்ய தரிசனம்கிட்டி அவர்களின் அருளால் ஆட்கொள்ளப்பட்டு குருசீட முறையை விளங்க உபதேசிக்கப் பெறும்பேறு கிட்டியது. இல்லறத்தில் இருந்தாலும் இறைவனடிப்பணி புரிந்து கொண்டு வந்ததாலும் உலகத்திலுள்ள சீவர்கள் நோய்வாய்ப்பட்டுவருந்தும்நிலையைக் கண்டு அரும்பெரும் ஔடதங்கள் முடிக்க லானார்கள்.

இச்சமயம் தெய்வத்திரு பொதிச்சாமி என்ற பசுபதி பரமகுரு சுவாமிகள் தென்னாடெங்கும் சஞ்சரித்தும் வயோதிகத் திசையில் இராஜபாளையம் வந்து சேர்ந்தனர். இந்தப் பருவத்தில் தமக்கு தவத்திரு பொன்னையா சுவாமிகள் உற்றதுணையாயிருப்பார்கள் என நினைத்து அவர்களுடனேயே இருந்து வரலாயினர். தெய்வத்திரு பொதிசுவாமிகள் கரிவலம் வந்தநல்லூரில் எழுந்தருளியிருக்கும் பால் வண்ணநாதருக்கு வருடா வருடம் நான்கு கட்டளைகள் செய்து வந்தனர். தவத்திரு பொன்னையாசுவாமிகள் இதற்கு வேண்டிய துணைகளெல்லாம் புரிந்து கட்டளைகளை நன்கு நடத்தி வந்தனர். நாங்களும் உடன் செல்வதுண்டு.

பின்னர் எல்லாருமே பாளையங்கோட்டைக்கு தாம் பெற்ற குழந்தைகள் கல்வி கற்கவேண்டி, சென்று இல்லறம் நடத்தி வந்தார்கள். அவ்வமயம் தன் மூத்த சகோதரருடைய குழந்தைகளுக்கும் தக்க உதவி செய்து தன்னுடனேயே இருத்திக் கல்வி பயில்வித்தனர். குழந்தைகளும் செவ்வனே கற்று சீர்பெறும் பட்டங்களைப் பெற்றனர்.

பின்னர் எல்லாருமே பாளையங்கோட்டையிலிருந்து கருவை வந்து வாழ்ந்து வந்தார்கள். கொஞ்ச காலத்திற்குப் பின் 1930-ம் ஆண்டு தெய்வத்திரு பசுபதி பரமகுரு பொதிச்சாமி அவர்களும் கருவையம்பதியிலேயே சமாதி கொண்டு திருவருளுடன் இரண்டறக் கலந்தார்கள். தவத்திரு பொன்னையா சுவாமிகள் அன்னாருக்கு அவர்கள் அடங்கியிருக்கும் திவ்ய சமாதிக்கு மேல் தானே நேரிலிருந்து அருஞ்சிற்பிகளின் உதவியால் அரிய பெரிய கல்மண்டபம் எழுப்பியுள்ளார்கள்.

கல்வி கற்று பட்டம் பெற்ற பிள்ளைகளை பதவியிலமர்த்தி அவர்களின் மணக்கோலம் கண்டு பேரன் பேத்திகளையும் பார்த்து அவர்களுடன் அளவளாவி அரனடி மறவாது இருந்து வரும்பொழுது தனக்குக் காலம் அருகாமையிலிருப்பதை யறிந்து தனக்குப்பின் இடத்துக் குரியவர் ஒருவரையுங் காணாது இனத்துணையாகவே தன் பேரன்மார்களில் ஒருவரான சிரஞ்சீவி முத்துகுருவைத் தேர்ந்தெடுத்து இளையபட்டம் சூட்டாது சூட்டி உபதேசித்து 1960-ம் ஆண்டு நவம்பர் மாதம் 4-ம் தேதி திருவருளில் இரண்டறக் கலந்து கொண்டார்கள். பின் கருவைக்கு எழுந்தருளி அங்கேயே சமாதியாகி திருக்கோயில் கொண்டுள்ளார்கள்.

## காப்பு

அன்ன வயல்கருவை தன்னில் சமாதிகொண்ட
என்னையன் பொன்னைய சாமியின்மேல்—சொன்மாலை
வேலவன் வேண்ட விரைந்து மணமுடித்த
மூலவனே முன்னின் றருள்.

## நூல்

கருணையின் வடிவே போற்றி கலியுக குருவே போற்றி
ஒருமனை நடத்தி வென்ற உத்தமா போற்றி போற்றி
இருவினை நடுவிற் சென்ற இறைவனே போற்றி போற்றி
பொறுமையே உருவாய்க் கொண்ட பொன்னைய ஸ்வாமி போற்றி.

போற்றியென் றேற்ற வல்லாற் புனிதனே என்ன செய்வோம்
சேற்றிலே இருக்கின் றோமே சீர்கெட உம்மை விட்டு
ஆற்றியே எம்மை ஏற்றி ஆறுதல் செய்யவேண்டும்
தேற்றுவீர் எம்மைச் சுவாமி திருவடி சிரமேற்கொண்டேன்.

கொண்டதோ ரன்பு மென்மேல் குறித்திடப் போமோ இங்கே
விண்டுமே சொன்ன தெல்லாம் வேதங்கள் முடிவ தாமே
கண்டுநாம் பழகி டாது கருணையை வியந்து பார்த்தும்
தொண்டுக ளாற்றிப் பாதந் தோத்திரஞ் செய்து வந்தோம்.

முதல்முதல் வந்த போது சீடனின் முறைகள் மற்றும்
விதமிது வென்று சொல்லி மேவியாட் கொண்டீ ரன்பாய்
அதமனும் அறிவு பெற்று அதுமுதல் அப்ய சித்துப்
பதமது பெற்று வாழ்ந்தேன் பரமான குருவே போற்றி.

வந்துமென் வீடு சேர்ந்து வழக்கம்போல் ஆசி தந்து
இந்தநூல் பாரும் என்று என்னிடை ஒன்று சேர
தந்தது முதலா யேழை தடையெது மின்றிப் பாட
வந்ததே என்ன சொல்வேன் வாதத்தை வென்ற ஸ்வாமி.

அருள்மொழி தமிழை அன்று பயின்றவன் அல்ல னேனும்
இருள்கெடும் ஒளியைப் போல இதயத்தின் உள்ளே ஊற
வெருளறப் பாடி வந்தேன் வேண்டியே உங்கள் பாதம்
பொருள்படச் செய்வ துங்கள் பொறுப்பது சொன்னேன் ஸ்வாமி.

பாலனும் பருவந் தன்னில் பாரினில் குறிப்பொன் றில்லை
சீல மாம் நூல்கள் கற்றுச் சீர்பெற யோக மிட்டு
வேலனும் முருகன் பாதம் வேண்டியே கோவில் சென்று
தூலமாய் திரிந்து நன்று தூயதாய் ஆக்கிக் கொண்டீர்.

தீரத்தில் குளித்தெ ழுந்து தீவிர பக்தி யோடு
பாரத்தில் பற்றி லாது பரிவொடு நீறு பூசி
நேரத்தை நிட்டை யாக்கி நெறிமுறை யோகம் செய்த
ஈரத்தை என்ன சொல்வேன் என்னையாட் கொண்ட தேவா.

வடமொழி நூல்கள் கற்க வனந்தமாம் புரமே சென்று
திடமொடு பயின்று மிக்க திருநெறி வழுவாநின்று
உடனருள் குருவுமாகி உபதேச மிட்டு வாழ்த்த
கடமையின் வழியே வந்து கலைபெறு மனையு மானீர்.

வேதநூல் சாத்தி ரங்கள் வேறது யாவும் கற்று,
வாதமும் பயின்று நல்ல வடமொழிப் பனுவல் பார்த்து
ஆதமாய் குருவும் சேர அவரிடை யாவும் கேட்டுப்
பேதமே சிறிதி லாத பெரியதோர் நிலையி லாகி.

கற்பதே வடிவ தான களத்திறம் கொண்டு வாழ்ந்த
அற்புதம் சொல்லப் போமோ அரன்ஐயை இருவர் போல
உற்றபேர்க் கெல்லாம் மிக்க உபதச மிட்டே வந்து
அற்றமே அறுத்தெ றிந்த ஐயனே போற்றி போற்றி.

அகமது பொன்று மாறு அரிதுயில் யோக முண்டு
சகமதில் இருந்து மில்லாச் சகசமாம் நிட்டை யுண்டு
இகமதை விவக ரித்தும் இதமதே மொழிந்தும் என்றும்
சுகநிலை வழுவா நின்ற சுத்தனே போற்றி போற்றி.

உலகிடைச் சீவ ரெல்லாம் ஒருபிணி யின்றி வாழப்
பலவகை மருந்துசெய்து பரிவொடு தந்த தேவா
கலையது கடந்து நின்ற கரையதன் இயல்பு சொன்ன
நிலையுமென் கண்ணின் முன்னே நிற்பதைக் காண்கின்றேனே.

கருணையின் வடிவாய் நின்று கைவல்யம் உபதே சித்து
இருவினை யகன்று போக எவ்வுயிர்க் கிதமே சொல்லி
பருவமும் ஆக்கி வைத்த பண்ணவா உந்தன் பாதம்
இருகரம் சிரமேற் கொண்டு ஏற்றியே தொழுகின்றேனே.

எண்ணத்திற் கெட்டா தான இடத்தினைத் தொட்டுப் பேசும்
வண்ணத்தை என்ன சொல்வேன் வரிசையில் யாரே உள்ளார்
உண்ணமாய்க் காலம் போக்கி உறுதியாய் நின்று மேலே
விண்ணோடே எல்லா மான் விமலனே போற்றி போற்றி.

தினந்தினம் செய்து வந்த திருவிளை யாடல் எல்லாம்
நினைந்துநான் எழுதப் போமோ நிலந்தனில் நம்பு வாரோ
மனந்தனை அறிவ தாக்கி மாபெருந் தானத் தான
இனந்தனைச் சேர்ந்த தேவா இணையடி போற்று கின்றேன்.

காலமாய்த் துயின்று வந்த காட்சியைச் சொல்லு வேனோ
தூலமே துண்டு துண்டாய்க் கிடந்ததைத் தொகுக்கப்போமோ
தாலமாய் வந்தோர் நோய்கள் தடவியே போக்கிவிட்ட
சீலத்தைச் சொல்லு வேனோ சின்மயா னந்த ரூபா.

நினைப்பினால் நேயர் நோயை நீக்கின தென்ன சொல்வேன்
அனைத்துமாய் அறிவாய் நின்ற அழகினை என்ன சொல்வேன்
மனத்திலே மருவொன் றில்லா மாபெரும் நிலையி லுண்டு
வனத்திலும் சஞ்ச ரித்து மாதவம் செய்த தேவா.

மாங்கல்யப் பிச்சை தந்தீர் மலரடி மங்கை போற்ற
தாங்கியே வறியர்க் கெல்லாம் தக்கதோர் வழியும் சொன்னீர்
ஏங்கியே மருளும் போது எண்ணெண்ணு திடமும் தந்தீர்
வாங்கினோம் வாழ்வு யர்ந்தோம் வாட்டங்கள் ஒன்று மின்றே.

மரணத்தை மாற்றி வைத்தீர் மணமதை செய்து வைத்தே
அரசனும் ஆண்டிக் கொவ்வான் என்றுமே அறைந்து சொன்னீர்

இரவதைப் பகல தாக்கி ஏக(அ)னு போகம் பேசி
சரமதன் இயல்பைச் சொன்னீர் சார்ந்துநாம் பழகு தற்கே.

அடிக்கடி கேட்டும் எங்கள் அனுபவம் தெரிந்துகொண்டீர்
படிப்படி ஏற்றி வைத்தீர் பாரிடைப் பற்ற றுத்தே
இடிக்கிடி எதிர்த்துப் பேசி எவரையும் வென்று நின்றீர்
படிப்பதும் சொல்லி வைத்தீர் பாதமே போற்று கின்றோம்.

நினைப்பிலே ஆகொ ணாத நிட்டைகள் பலவும் செய்து
மனத்திலே நினைக்கொணாத மாபெரும் தானத் தானீர்
அனைத்துமாய் நின்று காட்டி அறிவினை ஊட்டி வைத்தீர்
வனத்தினும் கூட்டிச் சென்றீர் மறைவழி உரைப்ப தற்கே.

மக்களின் புறத்திலான மாபெரும் கடமை தீர்த்தீர்
தக்கதோர் துணையும் செய்து தானமும் ஏற்றி வைத்தீர்
பக்கமாய் இருந்து மிக்க பரிவுடன் உபத சித்தே
சிக்கலில் அகப்ப டாத சீரதும் சொல்லி வைத்தீர்.

சீடர்கள் சங்க மொன்று சீரொடு தாளிற் சேர
ஆடலும் பாட லாகி அதனிடைஅறிவை ஊட்டி
வீடதைப் பெறுவ தற்கு வேண்டிய துணைகள் செய்து
நாடதில் வாழ்க்கையாக நன்மொழிஇட்ட தேவா.

கலியுகத் தேற்ற வாறு காட்டின பெருமை சொல்ல
வலிமையு மில்லை இங்கு நடையுடை மற்றும் எல்லாம்
மலிவுறு விதத்தி லாகி மாந்தர்கள் வியந்து போற்றும்
சலிவுற லின்றிக் காணச் சாற்றின குருவே போற்றி.

வேற்றுமை சிறிதி லாது வேண்டுவோர்க் கெல்லாம் நல்ல
உற்றென வேத சார உண்மையை உபத சித்தே
நாற்றிசை எங்கும் காண ஞானத்தின் வடிவ மானோய்
ஏற்றினோம் உலகில் உம்மை எப்பொழு தெங்கு காண்போம்.

இந்தவா றிருக்கும் போது இனியதோர் முனிவர் வந்து
சொந்தமாய் உறவு கொண்டு துணைபெற எண்ண மிக்க
அந்தமாய் அன்பு கொண்டு ஆதரித் தவர்பால் என்றும்
சிந்தையோ டிருந்த துண்டு சேமமாய்ப் பானை யத்தில்.

கருத்துடன் ஆண்டில் நாலு கட்டளை செய்ய வேண்டி
பருத்துள பொதியு முண்ட பசுமதி முனிவர் கூட
எருத்திழு வண்டி யேறி இனியதோர் கருவை சேர்ந்தீர்
வருத்தமே சிறிதி லாது வழிநடை யாகி வந்தோம்.

வழியெலாம் கைவல் யத்தை வாய்மொழி யாகக் கூறி
விழியவைக் கொட்டிக்கொட்டி வேறொரு நிலையில் நின்று
மொழிமொழி அருத்தம் சொல்லிமுற்றுமே தெரியு மாறு
வழியதை வகுத்துச் சொன்ன வரதனே போற்றி போற்றி.

பெரியதோர் நிலையி லான பசுபதி பேற்றைச் சொல்ல
அரியதே அவர்கள் பாதம் அடிமைகள் போற்றி வந்தோம்
உரிமையோ டுண்மை பேசி உளமது கலந்த துண்டு
கரிவலம் வந்த நல்லூர் களைபெறச் செய்து வந்தீர்.

காலமும் செல்லச் செல்லக் கருவையே இனிதென் றெண்ணி
கோலமாய்க் குடிசை செய்து குடியினி துண்டு வாழ்ந்து
ஆலமர் கடவு ளண்டை அவரது அருளை நாடிச்
சீலமாய்த் தவத்தி லாகிச் சேமமாய் இருந்து வந்தீர்.

மனையதை நடத்தி வந்த மகிமையைச் சொல்லு வேனோ
இனமென வெல்லாம் இங்கே ஏற்றதை இயம்பு வேனோ
தனதென ஒன்றிலாது தனித்ததைக் கூறு வேனோ
சினமதைச் சிரிப்பால் வென்ற சீலத்தைசெப்பு வேனோ.

அற்பமாய் இருந்த என்னை அறிவுள வழி நடத்தி
நெற்றியின் பாதை காட்டி நிட்டையும் சொல்லி வைத்தீர்
கற்பகத் தருவைப் போலக் கருணையைப் பொழிந்த தேவா
சிற்பரா னந்த ரூபா திருவடி சென்னி வைத்தேன்.

இருடிகள் இருந்தா ரென்று இனியநூல் தனிலே கண்டோம்
இருள்மருள் ஒன்றி லாமல் இறையுடன் ஒன்றுய்ச் சேர்ந்து
சுருதியின் முடிவு கண்டு சுகமதாய் அரிது யின்ற
கருணையின் வடிவை என்று கலியிடை எங்கு காண்போம்.

கலையதின் முடிவே போற்றி கதியருள் முனிவா போற்றி
இலையெனச் சொல்லி டாத இயல்பினைக் கொண்டாய் போற்றி
அலைதுயி லரியைப் போல ஆனவா அருளே போற்றி
புலமையி னுயர்வே போற்றி பொன்னைய ஸ்வாமி போற்றி.

அகமது கொண்டு வாழ்ந்து அவனியில் பவமே செய்து
இகமதை நிலையென் றெண்ணி இச்சையின் வழியே சென்று
சகமது சலித்துப் போனோர் சமயத்தில் சரணே நாடப்
புகலடி தந்து காத்த பொன்னைய ஸ்வாமி போற்றி.

மலையது விழுந்திட் டாலும் மயக்கமே சிறிதி லாது
தலையது நிமிர்ந்து நிற்கும் தன்யனே போற்றி போற்றி
எலையது கடக்கச் செய்யும் இச்சையை உருவ தாக்கும்
புலனதை யடக்கி வென்ற பொன்னைய ஸ்வாமி போற்றி.

குறைவற்ற நிலையில் வைத்துக் குடும்பத்தை நடத்தி வந்தீர்
நிறைவுற்ற குடத்தி லெங்கு நீரது தளும்பல் சொல்வீர்
முறையற்ற போதில் எல்லாம் முதுரை பலவும் செப்பும்
அறைஉரம் என்று காண்பேன் அடிகளை போற்று கின்றேன்.

சுற்றத்திற் கேற்ற வாறு சுகத்தினைக் காத்துத் தந்தீர்
அற்றவர்க் கருகி ருந்து அரியதோர் துணையும் செய்தீர்

பற்றற நின்று கொண்டீர் பாரிலே பணிக ளாயும்
குற்றத்தைத் திருத்திப் பேசிக் குணமுற ஆக்கி வைத்தீர்.

அன்னைபோல் அன்பு பேசி ஆறுதல் மிகவே செய்து
பின்னையே உள்ள தெல்லாம் பிசிர்கெடச்சொல்லி வைத்தீர்
தன்னையே காட்டி டாது சகசமாய்த் திரிந்து சென்றீர்
என்னைய எங்கு காண்போம் ஏகமாய்க் கலந்த பின்னர்.

உயர்வுள நிலையி ருந்து உயிர்நிலை தொட்டுப் பேசப்
பயமுடன் அருகி ருந்து பரிவொடு நன்று கேட்போம்
சுயபல மில்லா தாலே சுருக்கமாய்க்கேட்ட பின்னர்
அயலது சென்றிருப் போம் அந்நிலை குறையு மட்டும்.

உலகத்தில் எல்லா மாகி ஒருபற்றும் இல்லா தாகிப்
பலகற்றும் கல்லா தாகிப் பாமரன் ஒப்ப தாகிக்
கலையற்ற நிலையி லாகிக் காணுவோர் வியந்து பேசும்
நிலையுற்ற பரமா னந்த நிச்சயத் தானேய் போற்றி.

வரும்பொருள் உரைப்பாய் போற்றி வாழ்விடை இருந்தாய் போற்றி
துரும்பென இன்னல் யாவும் துச்சமாய்த் தள்ளி நேரே
விரும்பிடு பாதை சென்று வேதத்தின் முடிவு கண்டு
திருந்திட என்றும் சொல்லும் தீரனே போற்றி போற்றி.

கருமத்தைச் செய்து தீர்த்துக் கடமைகள் முழுதும் பார்த்து
தருமத்தை விட்டி டாது தானதை நேரில் செய்து
பருமத்தைத் தெளிவு பண்ணி மயக்கத்தைப் போக்கி நல்ல
பருவத்தில் ஆக்கி வைத்த பரமனே போற்றி போற்றி.

மயிலது வந்த தென்பீர் மருகனும் வந்தான் என்பீர்
மயில்வர வில்லை என்பீர் மருகன்தான் வந்தான் என்பீர்
துயில்நிலை கொண்டு மிக்க துக்கம்போல் அழுது கொண்ட
ஒயிலதன் அர்த்தம் காண உலகத்தில் யாரே உள்ளார்.

பத்துநா லாண்டு முன்னல் பாதத்தைப் போற்றி வந்தோம்
சித்தினை வியந்து பார்த்துச் சீடராய் நினைத்துக்கொண்டோம்
கற்றுநீர் கொடுத்தீர் இந்தக் கலியுகத் தேற்ற வாறு
முற்றிலும் கொண்டோம்இல்லை மும்மத அழுக்கி னலே.

தனக்குப்பின் தகுதியுள்ள தனயனை எங்கும் காண
இனத்துணை முத்துகுருவே இதற்குநேர் பொருத்தம் என்று
நினைத்துமே கடலூர் சென்று நேமத்தோ டுபத சித்து
அனைத்திலும் பற்றி லாத ஆனந்த நிலையி லாகி.

இருக்கநாள் அருகி லாக எதனையும் பேசி டாது
உருக்கமாய்ச்சாடை செய்து ஒருவரும் அறியா வண்ணம்
பெருக்கமாய் வேதம் சொல்லும் பெரியதோர் சமாதி யாகி
விருத்தமாய் விபூவு மாகி வியாபித்து நின்றய் போற்றி.

கருவையம் பதியில் வந்து களையொடு கோவில் கொண்டீர்
கிருபையோ டெம்மைக் காத்துக் கிளப்பியே நிலையு யர்த்தித்
தருவைப்போ லருள் புரிந்து தயவுடன் எம்பால் ஆகி
வருக யாம் மனங்கசிந்து மலரடி வாழ்த்து கின்றோம்.

பத்தனுய்ப் பாரில் கோவில் பலவுமே வணங்கி வந்து
சித்தனுய்ச் சீல மோடு சீர்பெறு நிட்டை யாகிச்
சுத்தனுய்ச் சுயமு மாகிச் சுருதியின் முடிவே யான
சத்தியாய்ச் சிவனு மான சச்சிதா னந்தா போற்றி.

இந்தவாழ் வெல்லாம் உங்கள் இணையடி தொண்டு செய்தேன்
எந்தவாழ் வாமோ இன்னும் எதுவேனும் உங்கள் பாதம்
வந்துநாள் என்றும் பாடி வாழ்த்திட வரமும் தாரீர்
சொந்தமாய் எனையாட் கொண்ட பொன்னைய ஸ்வாமி போற்றி.

## பயன்

ஐம்பதினே டொன்றுய் அமைந்தவிச் சொன்மாலை
நம்பகமாய் நாடோறும் கற்றோர்கள்—அம்புவியில்
பொன்னையன் என்னும் புனிதன் அருள்பெற்று
நன்னயமாய் வாழ்வார்கள் நன்று.

—சுவாமிகளின் அடியார்க்கும் அடியேன்.



# போகயோகி

திரு தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான், M. A., I. A. S., நெல்லை

**மன்றலின்வந்து மணித் தவிசுஏறி**
**வென்றிநெடுந்தகை வீரனும் ஆர்வத்து**
**இன்துணை அன்னமும் எய்தி இருந்தார்**
**ஒன்றிய போகமும் யோகமும் ஒத்தே**

என்று கவிச்சக்ரவர்த்தி கம்பன் ராமனும் சீதையும் மணக்கோலத்தில் இருப்பதை நினைந்து பாடுகிறார். இப்படி இருவரும் போகமும் யோகமும் ஒன்றிய நிலையில் இருந்தார்கள் என்று சொல்வது பொருந்துமா? என்றெல்லாம் நமக்கு ஒரு சந்தேகம் எழும். இது போலவே யோகம் போகம் இவற்றின் உண்மைகளைக் குறித்து ஒரு சந்தேகத்தைக் கிளப்பியிருக்கிறாள் அன்னை பார்வதி. கேள்வியைத் தன் கணவனிடமே கேட்டிருக்கிறாள். அதற்கு விடையாக சிவபெருமான் அன்னையிடம், "நீ பூலோகத்தில் ஞானத்தலத்தை அடைந்து தவம் செய். அங்கு நான் வந்து உபதேசிக்கிறேன்." என்று சொல்கிறார். அப்படியே ஞானபூமியை நாடி வருகிறாள் அன்னை. காவிரிக் கரையிலே முனிவர்கள் எல்லாம் இருந்து தவம் செய்யும் ஒரு அழகிய காவினைக் கண்டு அங்கேயே தவம் செய்ய முனைகிறாள். இன்பத்தைத் தருகின்ற முத்தியின் தன்மையைத் தெரிந்து கொள்ள வந்தவள் ஆதலின் இனிய சுவையுடைய நீரையே திரட்டி லிங்கத் திருஉரு அமைத்துக் கொள்கிறாள். இந்த அப்புலிங்கத்திற்கும் அபிஷேகம் முதலியன செய்து ஆராதனை பண்ணுகிறாள். இவள்தன் தவத்திற்கு இரங்கி அண்ணல் அக்காவிற்குவந்து அவளது சந்தேகத்திற்கு விளக்கம் கூறுகிறார். அவர் கூறியது இதுதான். 'உலகங்கள் எல்லாம் என் அருள் வழியே நடப்பன. நடனத்தைப் பிறருக்கு கற்பிக்க விரும்பும் நடன ஆசிரியன் முதலில் தானே நடனம் ஆடிக் காட்டுதல்போல உலக மக்களுக்கு யோக நிலையையும் போக நிலையையும் பயிற்றுவிக்க நானே நடத்திக் காட்ட வேண்டியிருக்கிறது. உலகில் உள்ள ஆன்மாக்கள் எல்லாம் போகத்தை நுகர உன்னை மணந்து தழுவி போகியாகவும், யோக சித்திபெற்று மெஞ்ஞானத்தை அடைந்து முத்தி அடைவதற்காக போகியாக இருந்த நான் யோகியாகவும் இருக்கிறேன்,' என்கிறார். யோக நிலையில் இருக்கும் ஆண்டவனே போகியாகவும் காட்சி தரும் ரகசியம் இதுதான் என்று அன்னை அறிகிறாள், நாமும் தெரிகிறோம்.

இத்துணை விஷயங்களை நாம் தெரிந்தாலும் இப்படி ஒருவரே யோகியாகவும் போகியாகவும் இருத்தல் சாத்தியமானதா என்று அடிக்கடி சந்தேகம் உறுவோம். அப்படி இருத்தல் சாத்தியமே என்பதை நமக்கெல்லாம் எடுத்துக் காட்டும் அளவில் யோகியாகவும் போகியாகவும் வாழ்ந்து காட்டியவர்களே தவத்திரு பொன்னையா சுவாமிகள். இளமையிலேயே இவர்களது உள்ளம் துறவில் ஈடுபட்டிருக்கிறது. எனினும் விதிப்பயனால் பருவம் எய்தியபோது தனக்கெனத் தாய்தந்தையர் நிச்சயித்து வைத்திருந்த பெண்ணை மணக்க இசைந்திருக்கின்றார்கள். இந்த நிலையில்தான் திருவனந்தபுரம் சென்று அங்குள்ள மகமதிய முனிவர் ஒருவரிடம் சீடராய் அமர்ந்திருக்கிறார்கள். திருநெல்வேலி அமரர் ஜே. சக்கரபாணி நம்பியார் அவர்களது நண்பராக வாழ்ந்திருக்கிறார்கள். நம்பியார் அவர்கள்மூலம் இவர்களது குடும்ப நிலையை அறிந்த அம்முனிவர் இவர்களை மனைவியாரோடு வாழ உத்திரவிட்டிருக்கிறார்கள். அதனபின் குரு வாக்கைத் தட்டாமல் இல்லறம் நடத்தியிருக்கிறார்கள். இல்லறம் என்னும் நல்லறம் நடத்தும்போதும், ஏதோ புளியம் பழமும் தோடும்போல, ஒட்டியும் ஒட்டாமலுமே வாழ்ந்திருக்கிறார்கள். குருநாதர் அருளால் பல நல்ல சித்த வைத்திய முறைகளைத் தெரிந்து அதன் மூலம் மக்கள் இனத்திற்கு சேவை செய்திருக்கிறார்கள். இப்படி யோகியாகவும் போகியாகவும் வாழ்ந்தே மற்றவர்களுக்கு வழிகாட்டியிருக்கிறார்கள்.

இவர்கள் கடைசியில் வந்து குடியேறி நிலைத்து நின்ற ஊர் கரிவலம்வந்தநல்லூர், சங்கரன்கோவிலை அடுத்த சிற்றூர். அன்று அதிவீரராம பாண்டியன் இருந்து அரசு செலுத்தியதோடு அங்குள்ள பால்வணணனை-கருவை அந்தாதி என்று பாடல் பாடப்பட்டிருப்பதை எல்லாம்தான் அறிவோமே. அந்த பாண்டியன் வழியிலேயே பால்வண்ணனை நினைந்து நினைந்து வழிபட்டிருக்கிறார்கள்.

**மாலுண்டு நெஞ்சே வருந்துவது என்?**
**பால்வண்ணன் காலுண்டு அடியார்கனிந்து**
**இசைத்த-நூலுண்டு**
**வாழ்த்திட வாயுண்டு அலர் சொரியக் கையுண்டு**
**தாழ்த்திடவும் உண்டேதலை**

என்றபடி இறை அருளில் திளைத்து வாழ்ந்திருக்கிறார்கள்.

வீரமறவர் குலத்திலேயே பிறந்தவர்கள் என்றாலும் நல்ல சாந்த சொரூபி. கட்டான உடலும் பொன்னுன மேனியும் படைத்தவர்கள் சம்பாஷித்து அளவளாவதற்கு உகந்த பெரிய மனிதர். எனக்கு அவர்களோடு அவ்வளவு நெருங்கிய பழக்கம் இல்லை என்றாலும் பல தடவை அவர்களை சந்தித்து சல்லாபித்து இன்புற்றிருக்கிறேன். பல சிறப்புகள் வாய்ந்த இந்தத் தவத்திரு பொன்னையா சுவாமிகளின் சிறப்பு-அவர் யோகபோகீஸ்வரராகவாழ்ந்ததே என்று கருதுகின்றேன். அப்படி வாழ்தல் கூடுமா என்று சந்தேகப்படுவர்களுக்கு எல்லாம் எடுத்துக்காட்டாக நிற்பவர்போல, வாழ்ந்து காட்டியிருக்கிறார்கள். அந்த அமரர் நினைவு என்றும் பசுமையாக இருப்பதாகுக. அவர்கள் மக்களும் பிறரும் எல்லா நலமும் பெற்று வாழ அந்தப் பால்வண்ணன் அருள்புரிவாராக.

# சத்திய சீலர்

திரு. M. சுப்பிரமணிய கரையாளர், செங்கோட்டை.

இன்றைய இருபதாம் நூற்றுண்டில் அன்பர்களாலும், மற்றவர்களாலும் ஒப்பற்ற ஒழுக்கமுடைய சத்தியசீலர் என்று மதிக்கப்படும் மாண்பு மிகு தவத்திரு பொன்னேய சுவாமி அவர்களுடைய நட்பை நான் எனது பதினைந்தாம் வயதில் எங்கள் பங்களாவிலேயே பெற்றுவிட்டேன். நானும், என் சகோதரர்களும், திருவனந்தபுரத்திலுள்ள எங்கள் பங்களாவில் தங்கிப் பள்ளி சென்று படித்துவந்தோம். அப்படி அங்கு படித்துக்கொண்டிருக்கும் நாளில்தான் புண்ணிய புருடராகிய சுவாமிகளின் இனிமையான வார்த்தைகளைக் கேட்டுப் பழகும் நல்ல வாய்ப்பு கிட்டியது. இன்றும் அவர்களை நினைத்தால் என் இளமைக் காலத்தோடு கூடிய இனிய நிகழ்ச்சிகள் என் நினைவிற்கு வருகின்றன. சுவாமிகள் எங்களுடைய பங்களாவிற்கு ஒருநாள் ஒய்வுபெற்ற போலீஸ் இன்ஸ்பெக்டர் திரு ஆறுமுகம் பிள்ளை என்பவரோடு வந்திருந்தார்கள். வனப்புச் சொட்டும் சிவந்த மெல்லிய உடலிலே, இடுப்பில் ஒரு வேட்டியும், மொட்டைத்தலையில் நீண்ட துண்டும் போட்டு மறைத்திருந்தார்கள். அவர்களுடைய கோலத்தைக் கண்டதும் இளைஞராகிய எங்களுக்கு சிரிப்புத்தான் வந்தது.

என் தந்தையாரின் சிறந்த நண்பராகிய திரு ஆறுமுகம் பிள்ளை அவர்கள் நம் சுவாமி அவர்களை என் தகப்பனாரிடம் அறிமுகப்படுத்தி வைத்தார்கள். அவர் என் தந்தையாரிடம், "நம் சுவாமிகள் எனது சிறந்த நண்பர். அமைதியும், ஒழுக்கமும் கொண்டவர்கள். சத்தியசீலர். நன்னெறி வழியைக் கடைப்பிடிக்க வடமொழியாகிய சமஸ்கிருதம் படிக்க வந்துள்ளார்கள். அவர்களுக்குத் தங்குவதற்கு தங்கள் பங்களாவே நல்ல இடம் என்று அழைத்துவந்திருக்கின்றேன். அதற்குதாங்கள் சம்மதிப்பீர்கள் என்று நம்புகிறேன்." என்று சொன்னுர்கள். உடனே என் தந்தையார், "அதற்கென்ன அவர்கள் தாராளமாக இந்த பங்களாவிலேயே தங்கட்டுமே," என்று சொன்னுர்கள். மறுநாள் சுவாமிகள் எங்களோடுபங்களாவில் தங்கத் தொடங்கினுர்கள். அவர்கள் எங்களோடு வந்து தங்கும்போது எப்பொருளும் கொண்டுவரவில்லை. அவர்கள் கையிலே ஒரு பைதான் இருந்தது. அப்பையில் சில புத்தகங்களும் சில துணியும் தவிர வேறு ஒன்றும் இல்லை. இதைக் கண்ட நான் சுவாமிகளிடம், "என்ன சுவாமி! பங்களாவில் தங்க வந்திருக்கிறீர்கள் பொருள்கள் எதுவும் எடுத்துக்கொண்டு வரவில்லையா? ஏன் சாமி பின்னுல் வண்டியில் வருகின்றனவா?" என்று கேட்டேன். அப்பொழுது என்னேடு என்னுடன் பிறந்தோர் எல்லோரும் இருந்தார்கள். நான் கேட்ட கேள்விக்கு சுவாமிகள் எங்கள் எல்லோரையும் பார்த்து, "தம்பிகளே, நம்முடைய வண்டியெல்லாம் பின் வண்டிதான். என் மனம் தான் பொருள், சொத்து எல்லாம். முன் வண்டி எங்கேயாவது நொடியில் விழுந்து நொறுங்கிவிடும்." என்று வேடிக்கையாகப் பேசி எங்களைச் சிரிக்க வைத்துவிட்டார்கள். வேடிக்கையாகச் சிரித்துப் பேசிய அவர்கள் பின்னுல் விநோதபுரி என்ற உலகத்தைக் காட்டி வேத மொழிகளை உபதேசித்தார்கள். சுவாமி அவர்களின் தோழமை கிடைக்கப் பெற்றது எங்கள் பெரும் பாக்கியமே.

சுவாமிகள் எங்கள் பங்களாவிலே தங்கியிருந்து வடமொழிக் கல்லூரி சென்று படித்து வரலானுர்கள். அவர்கள் எங்கள் பங்களாவிலிருந்து செல்லுவதையும், வருவதையும் யாரும் காண முடியாது. அது ஒரு மாயமாகவே இருக்கும். அறையிலிருந்து அவர்கள் எப்பொழுதும் படித்துக் கொண்டிருப்பார்கள். நாங்கள் பள்ளி செல்ல புறப்படும்பொழுது, அவர்களைப் பார்க்க முடியாது. வேடிக்கையாக ஒரு நாள் நான், "ஓ சாமியாரே, வாருங்கள் பள்ளிக்குச் செல்லலாம்." என்றுசத்தமிட்டு அழைத்தேன், அங்கிருந்தால்தானே அவர்கள்! ஏமாற்றத்துடன் நான் பள்ளிக்குச் சென்றேன். மாலையில் பள்ளிவிட்டு பங்களாவுக்குத் திரும்பி வரும்

போது சுவாமிகள் வேகமாக நடந்துவந்து என்னோடும், என் தம்பி தங்கைகளோடும் சேர்ந்து கொண்டார்கள். அப்போது நான் பொய்க் கோபத்தை வரவழைத்துக்கொண்டு, சுவாமிகளிடம் பேசாது இருந்தேன். அதைக் கண்ட அவர்கள் சிரித்துக்கொண்டே "தம்பி, காலையில் அதிக நேரம் சப்தம் போட்டுக் கூப்பிட்டாயோ? நான் சீக்கிரமே பள்ளிக்கூடம் போய்விட்டேன். அதற்கென்ன நாளைக்கு ஒன்ருகவே நாம் சேர்ந்து பள்ளிக்குப் போவோம்," என்று சொல்லி எங்களை மகிழ வைத்து பங்களாவுக்கு அழைத்துச் சென்ருர் கள். அப்பொழுது சுவாமிகள் இடமாறி உருவின்றிச் செல்லும் தத்துவமும் கற்றிருந் தார்கள்.

சில நாட்களில் நாங்கள் எல்லோரும் சுவாமி அவர்களை வற்புறுத்தி எங்களோடு உட்கார்ந்து சாப்பிடச் சொல்லுவோம். அவர்களும் எங்களு டைய அன்பிற்கு வேண்டி எங்களோடு வந்து சாப்பிட உட்கார்ந்து கொள்வார்கள். கோலா கலமான சிரிப்பும் வேடிக்கையுமாகவே உணவு வேளை முடியும். அந்நேரம் சுவாமிகள் ஏதாவது நகைச்சுவையான கதைகளைச் சொல்லுவார் கள். அதைக் கேட்டு எல்லோரும் பங்களா அதிரும்படி சிரிப்போம். ஆனல் சுவாமி அவர் கள் மௌனமாக இருந்துவிடுவார்கள்.

**அன்பின் வழியது உயர்நிலை அஃதிலாருக்கு**
**என்புதோல் போர்த்த உடம்பு**

என்ற குறள் கருத்தின்படி அன்பின் வழியது கொண்டு எங்களோடு அளவளாவி அருங்கருத் துக்களைக் கொட்டுவார்கள். நம் சுவாமிகள் காலை மூன்று மணிக்கே எழுந்து வெளியே சென்று நீராடிவிட்டு ஐந்துமணிக்குத்தான் பங் களாவிற்கு திரும்புவார்கள். பின்னர் ஐந்திலி ருந்து உட்கார்வார்களேயானல் எட்டுமணி வரை தன் அறையில் நிஷ்டையில் இருப்பார் கள். அதைக்கண்ட நாங்கள் அவர்களுக்குஎந்த விதமான இடையூறும் கொடுக்கமாட்டோம். எப்பொழுதும் அவர்கள் அறையில் தனியாகவே யிருந்து வடமொழி நூல்களைப் படித்துக் கொண்டிருப்பார்கள். சிலநேரம் அவர்களுக்கு உற்சாகம் கிளம்பிவிட்டால் எங்களையெல்லாம் அழைத்து வியப்பான கதைகளையும், பாடல் களையும் சொல்லி எங்களை மகிழ்வு படுத்து வார்கள்.

இவ்விதம் எங்களுடைய நட்பு வளர்பிறை போல் வளர்ந்து கொண்டிருக்கும் ஒருநாளில், நம் சுவாமிகளிடம், "சுவாமி, இனிமேல் இந்த வேஷத்தைக் கலைத்துவிட்டு உடையை மாற்ற வேண்டும். கோட்டுப் போட வேண்டும். தொப்பிவைக்க வேண்டும்," என்றேன். இதை கேட்ட சுவாமிகள் "உடையையும், நடையை யும் மாற்றவேண்டிய காலம் வந்துவிட்டதோ?" என்று சொன்னர்கள். உடனே நாங்கள் அல் பாக்கா கோட்டும், தொப்பியும் கொண்டுவந்து அவர்களிடம் கொடுத்தோம். சுவாமிகள் அதை வாங்கிப் போட்டுக்கொண்டார்கள். எல்லோரும் சுவாமிகளை அழைத்துக்கொண்டு உல்லாசமாகக் குற்ருலம் சென்ரேம். இவ்வித உல்லாசப் பிரயாணங்களில் சுவாமிகள் எங்க ளுக்கு வேண்டிய அறிவுரைகள் பகர்வார்கள். "கல்வி என்பது ஒருகற்பகத்தரு. கல்விஇல்லா தான் கண்ணற்றவனே. சற்றும் கடமை தவ ருது காரியங்கள் புரியவேண்டும். கலகலப்பாக வும், கனிவாகவும் எப்பொழுதும் இருந்து மாணவர்கள் கல்வி கற்கவேண்டும். அன்பு என்னும் கருவியால் அற்பனையும் அறிவுள்ள வனுய்த் திருத்தலாம். அன்னையும் பிதாவும் முன்னெறி தெய்வம் என்று வாயினல் மட்டும் சொல்லாது அப் பெற்ருேர்கள் சொல்லுகிற வேலையை அனுதினமும் செய்ய வேண்டும்," என்று கூறுவார்கள். அப்படி எத்தனையோ தடவைகள் உல்லாசப் பயணம் சென்றிருக்கிரேம். என்னுடைய அத்தான் திரு சக்ரபாணி நம்பியார் அவர்களிடம் சுவாமிகள் பேரன்பு கொண்டிருந்தார்கள். எங்களிடம் விளையாட்டுப் பிள்ளை போல் பழகி ஞலும், திரு சக்கரபாணி நம்பியார் அவர்கள்

வந்துவிட்டால் போதும். எங்களையெல்லாம் மறந்து இருவரும் எங்கே போகிறார்கள்; யாரை சந்திக்கிறார்கள் என்று சொல்ல முடியாது.

மாலை வேளையில் நாங்கள் சுவாமிகளை அழைத்துக் கொண்டு விளையாடுவதற்காகப் பள்ளிக்கூடம் செல்லுவோம். அவர்களும் எங்களோடுகால்பந்து விளையாடுவார்கள். சுவாமிகளின் விளையாட்டு எங்களுக்கு எல்லையில்லா மகிழ்வைக் கொடுக்கும். நாங்கள் விளையாடிக் கொண்டிருக்கும் பொழுது ஒரு குறும்புக்காரர் வந்து சுவாமிகளிடம், "ஏன் சுவாமி, நீங்கள் இச்சிறுவர்களோடு விளையாடிக் கொண்டிருக்கிறீர்களே?" என்று கிண்டலாகக் கேட்டார். அதற்கு சுவாமிகள் "பெரியவர்களோடு விளையாடினும் பெரியவரென்றும், சிறியவர்களோடு விளையாடினும் சிறியவரே", என்றும் சொல்லுவார்கள் என்றார்கள்.

ஒருநாள் நாங்கள் பங்களாவில் படித்துக் கொண்டிருக்கும்போது, சுவாமிகளுடைய அறையில் நான்கு, ஐந்துபேர்கள் சத்தம் போட்டு பேசிக்கொண்டிருந்தார்கள். போய்ப் பார்த்தேன், என்னையே பிரமிக்கச் செய்துவிட்டது, அங்கு நடந்த ஒரு உரையாடல், சுவாமி அவர்களுக்கு திருமணமாகி அப்பெண்ணை ஊரில் விட்டு விட்டு வந்து விட்டார்கள் என்று தெரிந்து ஆச்சர்யப்பட்டேன். உடனே ஒடிப் போய் என்னுடைய சகோதர சகோதரிகளுக்குச் சொன்னேன். எல்லோருமே விழுந்தடித்துக் கொண்டு சுவாமிகளுடைய அறைக்குச் சென்றோம். அங்கு சுவாமிகளைப் பார்த்து "சுவாமி, உங்களுக்குக் கல்யாணம் ஆகிவிட்டதோ? ஒரு பெண்ணைக் கட்டிக்கொண்டு பொய்ச் சாமி வேஷம் போடுகிறீர்களே," என்று கேட்டேன். அதற்கு அவர்கள் எந்த விதமான பதிலையும் கொடுக்கவில்லை. அதைக் கண்ட எனக்குக் கொஞ்சம் பயம் ஏற்பட்டதால் திரும்பி விட்டேன். சுவாமிகளுடைய மாமனார்," நீங்கள் ஊருக்கு வந்து பெண்ணோடு வாழவேண்டும். இப்படிச் செய்வது பாவமில்லையா?" எனச் சுவாமிகளிடம் கெஞ்சிக் கேட்டார். அந்த வார்த்தைகளுக்கு சுவாமிகள் சிறிதும் செவிசாய்க்கவில்லை. அவர்கள் "என்னுடைய படிப்பு முடிந்தவுடன்தான் ஊர்வந்து சேர்வேன். அதன்பின்தான் வீடு, மனைவி எல்லாம்", என்று கோபமாகப் பேசத் தொடங்கினார்கள். இப்பேச்சைக் கேட்டு ஊரிலிருந்து வந்த எல்லோரும் கண்கலங்கி வருத்தத்தில் மூழ்கினார்கள். இந்நிலையில்தான் சுவாமிகளுடைய உயிர் நண்பரான திரு சக்ரபாணி நம்பியார் அவர்கள்வந்துசேர்ந்தார்கள். அவர்களைக் கண்டதும் சுவாமிகள் மனமாரக் கட்டித்தழுவிக் கொண்டார்கள். திரு சக்ரபாணி நம்பியார் அவர்கள் நம் சுவாமிகள் இருந்த நிலையைக் கண்டு விசாரித்து, விபரமறிந்து, சுவாமிகளின் உறவினரிடம், "நீங்கள் கவலையின்றி ஊருக்குச் செல்லுங்கள், சுவாமிகளை நான் அனுப்பிவைக்கின்றேன்", என்று கூறினார்கள். அவர்களும் திரு நம்பியார் அவர்கள் கூறிய வார்த்தைகளில் நம்பிக்கை கொண்டு ஊருக்குப் புறப்பட்டு விட்டார்கள்.

திரு சக்ரபாணி நம்பியார் அவர்கள் எங்கள் குடும்பத்திற்கு வேண்டியவரான முகமத் கான் என்ற மகானிடம் சுவாமிகளை அழைத்துச் சென்றார்கள். அவர்களும் சுவாமிகளின் சக்தியையும், மதி நுட்பத்தையும் கண்டு நட்புக் கொண்டார்கள். சுவாமிகளும் திரு முகமத் கானிடம் அன்பு கொண்டு அடிக்கடிச் செல்லத் தொடங்கி அவர்களுடைய நட்பைப் பெற்றார்கள். மகான் முகமத்கான் அவர்கள் ஒருநாள் சுவாமிகளைப் பார்த்து, "தாங்கள் இனிமேல் மனைவியோடு சேர்ந்து இல்லறத்தை நடத்தலாம். செல்லுங்கள்," என்றார்கள். இதை ஒப்புக்கொண்ட சுவாமிகள் தம் மனைவியரோடு இல்லறம் இனிது நடத்தச் சென்றார்கள்.

சுவாமிகளுடைய குணநலன்களைக் குறிக்க விரும்புகிறேன். புலால் உண்ணுதலை வெறுத்தவர்கள், பொன்னையும் பொருளையும் வேண்டாத புனிதர். நன்கு நன்னெறி நூல்கள் கற்றவர்கள். நண்பர்களோடு நயமாய் உறையாடுவதில் கை தேர்ந்தவர்கள். புன்னகையைத் தான் அவர்களிடம் காணமுடியுமே தவிரக் கோபம் காணல் அரிது.

இவ்வளவு அரிய ஆற்றலுடைய சுவாமி களுடைய அன்பையும், ஆசியையும் நான் பள் ளியில் ஆரும்படிவம் படிக்கும் வரை பெற்று வந்தேன். அதன்பின் நான் கல்லூரி சென்ற பின் அவர்களோடு பழகும் வாய்ப்பு இல்லாமல் போய்விட்டது. சில ஆண்டுகள் கடந்தபின் சுவாமிகளை திருநெல்வேலியிலுள்ள பாளையங் கோட்டையில் சந்தித்தேன். என்னைக் கண்ட சுவாமிகள் பீறிட்டெழுந்த அன்போடு கட்டித் தழுவிக்கொண்டார்கள். நான் மகிழ்ச்சியோடு, "சுவாமி! திருவனந்தபுரத்தில் படிப்புச்சாமி யாக இருந்துவிட்டு, இப்போது இங்கே இல்ல றச் சாமியாகி விட்டீர்களோ," என்று கேட் டேன்.

அதற்குச் சுவாமிகள், "இந்த உலகத்தைப் பற்றித் தெரியவேண்டுமானுல் இல்லற வாழ்க் கையை நடத்தித் தான் ஆகவேண்டியதிருக்கி றது. இந்த விபூதியை அணிந்துகொள்ளுங் கள்," என்று சொன்னுர்கள். அவர்கள் கொடுத்த விபூதியை அணிந்து கொண்டு அவர்கள் கூறிய வார்த்தைகளைக் கேட்டு ஆனந்தமடைந்தேன்.

நான் பள்ளியில் படிக்கும் போது பங்களாவில் சுவாமிகள் இருந்த நிலையையும், இப்போதுள்ள மாறுதல்களையும் கண்டு ஆச்சரியப்பட்டேன். சுவாமிகள் பளபளப்பான சில்க் சட்டை, சில்க் வேஷ்டி, அலங்காரத்தலைப்பாகைஅணிந்துள்ள வர்களாக காட்சி யளித்தார்கள். "இப்படி மாறி விட்டீர்களே"? என்று வியப்போடு கேட்டேன். அதற்கு அவர்கள் சிரித்துக் கொண்டே," நடுத்தெருவில் விடப்பட்ட தேர் நிலைக்குச் செல்ல வேண்டுமானுல் எல்லோ ருடைய தயவும் வேண்டும். வாழ்க்கை என் பது ஒரு அலங்காரத்தேராகும். வாழ்க்கை யிலே வெற்றி காணவேண்டுமென்ருல் நண்பர் களின் அன்பு தேவை. அந்த அன்பர்களைக் கவர்ச்சிப் படுத்த வேண்டுமானுல் உடையழகு தேவை. உண்மைபேசுகின்றஒருவன்கந்தலைக் கட்டியிருந்தால், உலகம் அவனை ஒதுக்கி வைத்து விடுகிறது. உள்ளம் உடைந்து மடி கிருன். ஒழுக்கங்கெட்ட ஊதாரிதன்னை உடை களால் அலங்கரித்துக்கொள்கிருன். அக்கொடி யவனை இவ்வுலகம் பெரிய மனிதன் என்று மதிக் கிறது. ஆனுல் துறவிகளுக்கு இவ்வுலகம் ஒரு சிறு துரும்பு. உண்மையாளன் என்றும் உண்மை யாளனுகவே இருக்கவேண்டுமானுல் உயர்ந்த உடைகள் தேவை. அதற்காகத்தான் இந்தப் பளபளப்பான சில்க் ஆடைகள் எல்லாம் அணி யக்காரணம். இப்போது மக்கள் நம்மை நாடி வருவார்கள். பல்லாண்டுகடினப்பட்டுக்கண்ட சக்திகளையும், அருள் பூத்த அறநெறிகளையும், சித்த வைத்திய உண்மைகளையும் எடுத்துச் சொல்லி அவர்களுடைய துயர்போக்கலாம். உடையழகு கொண்டவனை உலகம் மதிக்கிறது. ஆனுல் அவனே உபதேசியாக இருந்தால் அவ னையே உயர்ந்த கோபுரத்திலுள்ள ஒளிவிளக் காக, தெய்வமாகப் போற்றுகிறது", என்று திருவாய் மலர்ந்தருளினுர்கள்.

இந்த அரிய கருத்துக்களைக் கேட்ட என் உள் ளம் அப்படியே மகிழ்ந்தது. அதோடு நாமும் வாழ வேண்டிய வாழ்க்கைக் குரிய நீதி நெறி களை மொழிந்தார்கள் என்பதைப் புரிந்து கொண்டேன். பின்னுல் சுவாமிகளுடைய அன்பு மொழிகளே நான் மக்களுக்குச் சேவை செய்யும் நகர சபைத் தலைவராகவும், மேல் சட்ட சபை அங்கத்தினராகவும் ஆவதற்கும் வேண்டிய ஊன்று கோலாய் இருந்தன.

சுவாமிகள் வருங்காலத்தில் நடக்கும் நிகழ்ச் சிகளைச் சொல்வதில் வல்லவர்கள். என் தந்தையாரவர்கள் எப்பொழுதும் சுவாமிகளு டன் வேடிக்கையாகப் பேசிக் கொண்டிருப்பார் கள். அன்று அவர்களிடம் என் தந்தையாரவர் கள், "சுவாமி! ஒன்று கேட்கலாம் என்றும் நினைக்கிறேன். கல்லாரிலே நமக்குக் கொஞ்சம் நன்செய் இருக்கிறது. அதையாராவது விலைக் குக் கேட்டால், தகவல் சொல்லி, அதைக் கொடுத்துவிடவேண்டும்", என்ருர்கள். உடனே சுவாமிகள், "ஐயா நீங்கள் நினைப்பது போல் அந்த இடம் விலை போகாது. நீங்கள் ஏராளமாக நன்செய் நிலங்கள் வாங்க

வேண்டியதிருக்கும்போது உங்களிடம் அந்த இடத்தை வாங்க யார் முன்னே வருவார்கள்?'' என்று கூறினார்கள். சுவாமிகளுடைய வாக்குப்படியே ஒரு உப்பளம் வாங்கினோம். அது எதிர்பார்க்காத அளவு லட்சக்கணக்கான பணங்களை லாபமாகக் கொடுத்தது. அதிலிருந்து சுவாமிகள் சொல்லுகிற ஒவ்வொரு வார்த்தைகளையும் மிகவும் நுட்பமாக ஆராய்ந்து போற்றுவார்கள். எங்கள் குடும்பத்தில் நடக்கிற ஒவ்வொரு காரியங்களுக்கும் தவறாது வந்து கலந்து கொள்வார்கள் சுவாமிகள்.

செங்கோட்டைக்கு எங்களுடைய பங்களாவிற்கு வந்திருந்த போது நான் விளையாட்டாக "சுவாமி உங்களுக்குத் தங்கம் செய்யத் தெரியுமா? அதை இப்பொழுது செய்து காட்டுங்கள் பார்க்கலாம்,'' என்று கேட்டேன். சுவாமிகள் அன்போடு, "எனக்குத் தங்கம் செய்யத் தெரியும். அதற்கு வேண்டிய மூலிகைகளை ஒரு சாமியார் எனக்குக் கொடுத்தார். அது எப்படியோ வீட்டில் தவறி விட்டது. வெள்ளி வேண்டுமானால் செய்து காட்ட முடியும். இரண்டணாவிற்கு கடையில் போய் பாதரசம் வாங்கி வாருங்கள். செய்து காட்டுகிறேன்''. என்றார்கள். உடனே இரண்டணாவிற்கு ரசம் வாங்கி வரப்பட்டது. சுவாமிகள் என்னைப் பக்கத்திலேயே உட்காரும்படியும், வெளியே போகக் கூடாதென்றும் கட்டளையிட்டார்கள். நானும் அவர்களுடைய அற்புத வேலையை ஆழ்ந்து கவனித்தேன். சிறிதுநேரத்திற்குள் என்னவிந்தை! பளபளக்கும் வெள்ளிக் கட்டியைச் செய்து முடித்தார்கள் சகல வல்லமை வாய்ந்த அந்த உத்தமர். இவ்வாறு சுவாமிகள் எங்கள் பங்களாவில் செய்த வெள்ளியைச் சோதனை செய்து பார்ப்பதற்காக நான் திருவனந்தபுரம் எடுத்துச் சென்றேன். அங்குள்ள பரிசோதனைக் கூடத்தில் (லேபரட்டரி) அதைச் சோதனை செய்து பார்த்ததில், அங்குள்ள பரிசோதகர்கள்,'' கலப்பில்லாத சுத்தமான வெள்ளி இது. இவ்வளவு சுத்தமான வெள்ளிகிடைப்பது மிகவும் அரிது'' என்று என்னிடம் சொன்னார்கள். இவ்வாறு அவர்கள் கூறியதும் என்னுடைய உள்ளம் கலியுகத்திலே இவ்வளவு அரிய சாதனைகளைச் செய்யும் சுவாமிகளை நினைத்து இன்புற்றது.

சுவாமிகளுடைய சித்த வைத்திய முறைகள் டாக்டர்களால் கைவிடப்பட்ட எத்தனையோ உயிர்களை மீட்டியிருக்கின்றது. டாக்டர்களும் சுவாமிகளிடம் பிணி தீர்க்கும் மருந்து முறைகளையும் கேட்டுச் செல்வார்கள்.

அன்பும், அறிவும் உரைத்து அற்புதச் செயல்கள் பல புரிந்து ஆன்றோர் நவின்ற மொழிகளையும், முக்கனியாய் எங்களுக்கு வழங்கிய அருள் வள்ளல் தவத்திரு பொன்னையா சுவாமிகள் சமாதி கொண்டு கரிவலம்வந்தநல்லூரிலே திருக்கோவில் கொண்டார்கள் என்பதைக் கேட்டு கண்ணீர் கடலாகவும், உள்ளம் புயலாகவும் துன்பப்பட்டு எழுந்தன. ஓயவில்லை. இருப்பினும் அவர்களுடைய அருட்செல்வம் எங்கள் குடும்பத்திற்கு என்றென்றும் நிலையான மகிழ்வை அளித்துக்கொண்டே இருக்கும் என்று உளமாற உறுதி கொள்கிறேன்.

## இந்தியாவின் பெருமை

டாக்டர் G. வெங்கடசாமி, B. A., M. B. B. S., M. S., D. O., மதுரை.

தவத்திரு பொன்னையா சுவாமி அவர்களைப் பற்றி குறிப்பு எழுதுமாறு கேட்டிருந்தீர்கள். பலதடவை இது பற்றியோசித்தேன். மனதினால் சித்த புருடர்களைப் பற்றி ஆலோசித்து எழுதுவது முடியாது. அவர்களுடைய வாழ்க்கையில் ஏற்பட்ட வெளிச்சம்பவங்கள் அவ்வளவு முக்கியமானவையல்ல.

அவர்களுடன் பழகும் வாய்ப்பு ஏற்பட்டது எனது புண்ணியத்தினால்தான். இந்தியாவின் பெருமை, இன்னும் நம் நாட்டில் தவத்திரு பொன்னையா சுவாமிகள் போன்ற சித்த புருடர்கள் தோன்றுவதினாலேதான் அவர்களது ஆசியும், அருளும் நம்மை மேம்படுத்தப் பிரார்த்திப்போம்.

# அடிகளுக்கு அஞ்சலி

பேராசிரியர் திரு K. S. சோணசலம், M. A.,

இன்றைக்கு ஓர் ஆண்டுக்குமுன் அமரபதவி எய்திய தவத்திரு பொன்னையா சுவாமிகளைக் காணவும், நெருங்கிப் பழகவும், நற்பேறுபெற்ற பலரில் நானும் ஒருவன். பூத உடலை நீத்த இப்பெரியார் என்றும், எப்பொழுதும் நம் உள்ளத்தே நீங்காது நிறைந்து நிற்கின்றார். மாந்தருள் முனிவர், முனிவருள் மாந்தர், மழித்தலிலும் நீட்டலிலும் நம்பிக்கையில்லாத பற்றற்ற துறவி. காவி உடையின்றி தூய வெள்ளை ஆடையணிந்து மக்களை மயங்க, மலைய வைக்காது அறிவின் சுடராக அமைந்த சற்குரு. நாட்டைத் துறந்து காட்டில் கரந்துறையும் தபசி அல்ல. மக்களிடையே மாண்பு மிக்கக் குடும்ப வாழ்க்கை நடத்திய சீலர். யோக வித்தையில் விற்பன்னர். சித்த வைத்தியத்தின் சிகரம். தனக்கென்றில்லாமல் பிறர்க்காக வாழ்ந்த உத்தமர் தவத்திரு பொன்னையா சுவாமி அடிகள்.

இருபது ஆண்டுகளுக்குமுன், நான் திருநெல்வேலி இந்துக் கல்லூரியில் ஆசிரியராகப் பணியாற்றிக் கொண்டிருந்த காலம் பள்ளிப் புத்தாண்டு தொடங்கிய முதல் வாரம். புது மாணவர்கள் சேர்ந்துகொண்டிருக்கும் சமயம். ஒரு நாள் காலை ஒரு குதிரை வண்டியில் இரு மாணவர்களும், ஒருமாணவியும் வந்து இறங்குவதைக் கண்டேன். ஒரே மாதிரி வார்த்தெடுத்த முகச்சாயல் மூவரும் உடன் பிறந்தவர்கள் என்பதைப் பறை சாற்றிற்று. பெண் குழந்தைக்கும் ஆண் பிள்ளைகளைப்போல் சரி நிகராகக் கல்வியளிக்க வேண்டுமென்று நினைத்ததுமின்றி, வாகன வசதிகளையும் உதவும் இவர்களின் தந்தையார் யாரோ என்ற கேள்வி என் உள்ளத்தில் எழுந்தது. அன்றையப் பொழுது முடியுமுன், காலையில் கண்டவர்களில் சகோதரர்களை பீ. ஏ. வகுப்பிலும், சகோதரியை இன்டர் வகுப்பிலும் எனது மாணவர்களாகக் கண்டேன்.

சனி, ஞாயிறு விடுமுறை நாட்கள் வந்தன. இருசகோதரர்களையும் அழைத்துக் கொண்டு ஒரு தந்தை என் வீட்டுக்கு வந்து சேர்ந்தார். நான் காணவிரும்பிய தந்தையே அவர் என்பது எனக்கு மிகுதியான மகிழ்ச்சியை அளித்தது. நல்வரவு கூறி அவர்கள் எந்த ஊரைச் சேர்ந்தவர்கள் என்ற கேள்வியைக் கேட்டேன். அக்காலத்தில் பிராமண, கிருத்தவப் பெண்களைத் தவிர பிற வகுப்புப் பெண்கள் கல்லூரிப் படிப்புக்கு வருவதில்லை. மேலும் தாய் தந்தையர் மக்களை மாணவர் இல்லங்களில் சேர்த்துவிட்டு தங்கள் வாழ்க்கையைத் தங்கள் சொந்த ஊர்களில் எல்லா வசதிகளுடனும் கழிப்பதுவே பொதுவான வழக்கம். இதற்கு விலக்காக நான் வரவேற்ற தந்தையார் வெளியூரிலிருந்து பாளையங்கோட்டையில் வாடகை வீட்டில் குடியேறி அயலூரில் அனுபவிக்க வேண்டிய அவதிகளைப் பொருட்படுத்தாதுவந்திருப்பது-அதுவும் பிள்ளைகள் கல்விக்காகவே வந்திருப்பது ஓர் வியப்புக்குறிய செயலாகவே அமைந்தது எனலாம், "சொந்த ஊர் கரிவலம் வந்த நல்லூர்" என்று விடை பகரவே, நான் சொன்னேன், "உங்கள் ஊரைப்பற்றி எனக்கு இரண்டு விஷயங்கள் தெரியும். ஒன்று புராண காலத்தில் யானையின் சிவபக்தியால் சிறப்புற்ற தலம் என்பது ஆகும். மற்றது இக்காலத்தில் சிவ பெருமானே திரு அவதாரம் செய்திருப்பது போல சித்தயோகி, சிறந்த வைத்தியவல்லுநர் குஷ்ட நோய் வரை குணப்படுத்தக் கூடிய பொன்னையா சுவாமி என்னும் பெரியார் வாழக் கூடிய புண்ணியம் செய்த ஊர் என்பது ஆகும். தங்களுக்கு அன்னாரைத் தெரியுமா? அவர்கள் சித்த யோகத்தினால், தீராத பிணி யென்று கைவிடப்பட்டவர்களையும் தமது யோக சக்தியினாலும், சிறிய அற்ப மூலிகைகளாலும் குணப்படுத்துகின்றார்களாமே? தன் சிறு வயதிலேயே யோக, நிஷ்டைகளில் ஈடுபட்டுத் துறவியாக வேண்டுமென்று கங்கணம் கட்டியிருந்தவர். தன் தாயாரின் அன்புக் கட்டளைக் கிணங்க திருமணம் செய்துகொண்டு குடும்ப வாழ்க்கையிலும் தமது ஆத்ம வளர்ச்சியில் கண்ணும் கருத்துமாக இல்லறத்தின் உயர்

வைக் காட்டும் உத்தமராக வாழ்கிறாரமே, அவர்களைத் தங்களுக்குத் தெரியுமா? அவர்கள் உடல்நலனுடன் இருக்கிறார்களா?" என்று விரைவாக என் உள்ளத்தில் எழுந்த எண்ணங்களை யெல்லாம் ஒரே அடியாகக் கொட்டிவிட்டேன்.

தங்கமேனி, கட்டான உடல், பொலிவான தோற்றம், புன்முறுவல் மின்னிக் கொண்டே யிருக்கும் முகம், சாந்தமே வடிவெனத்திகழ்ந்த அத் தந்தையார் சிறிது வாய்விட்டுச் சிரித்தார். கூட இருந்த எனது புதிய மாணவர்கள், "பொன்னையா சுவாமி என்பதே எங்கள் தந்தையாரின் பெயர்", எனப் பெருமைகலந்த பணிவுடன் மொழிந்தார்கள். நான் வியப்பிலே ஆழ்ந்துவிட்டேன். தவத்திரு பொன்னைய சுவாமியவர்களின் புகழ் தென்னாடெங்கும் பரவியிருந்த நிலையில், நான், அவர்கள் தொண்டு கிழவராகவும், உருத்திராக்க மாலைத் தோளினராகவும் காட்சியளிப்பார்கள் என்று எண்ணியிருந்தேன். அவர்களோ நடுவயது ஆடவராகவும் வெளித் தோற்றத்தில் மழித்தலும் நீட்டலும் வேண்டாவா வென்னும் பொய்யா மொழிக்கு இலக்காக இருந்ததைப் பார்த்தவுடன், அவர்களுடைய தூயஉள்ளமும் வாழ்க்கையும் என்னை முற்றும் கவர்ந்து விட்டன. ஆதிகாலத்துச் சித்தர்கள்போல் அவர்கள் பல வித்தைகள் காட்டுவார்களென்று நான் கேள்விப்பட்டிருந்தேன். அதைப்பற்றி வினவியபோது, அவர்கள் அளித்தவிடை சுவாமி விவேகானந்தர் தமது அமெரிக்கச்சீடர்களுக்கு உரைத்த விடையை நினைவூட்டியது. "வெறுங் கையை விரித்துப் பூதிவிபூதியையும், சுவரைத் தொட்டு மதுரை மீனாட்சியம்பாள் திருக் கோவில் குங்குமத்தையும் கொடுப்பது சித்த யோகத்தில் அரிச்சுவடிநிலை. அதில் முன்னேறியவர் (பழுத்த நிலையடைந்தவர்) இச் சிறு வித்தைகளில் நாட்டம்கொள்வதில்லை. எனவே பல ஆண்டுகளாகவே அந்த அப்பியாசங்களைக் கைவிட்டு விட்டேன்," என்றார்கள் தவத்திரு பொன்னையா சுவாமிகள், தந்தைமகற் காற்றும் உதவி அவையில் முந்தியிருப்பச்செயல் என்ற வள்ளுவர் வாக்கு கரிவலம்வந்தநல்லூரில் ஒரு பெருநிலக்கிழார் வாழ்க்கையைப் புறக்கணித்து விட்டு புதுப்பேட்டைத் தெருவில் நகர வாழ்க்கையின் அல்லல்களை வரவேற்கும் இப்பழுத்த யோகியர் உள்ளம் படைத்த மேதையின் மனப்பான்மை மூலம் நிறைவேறுவது கண்டு பாராட்டினேன். அவர்களது முயற்சி திருவருளால் நல்ல பலனும் அளித்து விட்டதைக் கண்ணாரக் கண்ட பின்னரே சுவாமிகள் விண்ணுலக மெய்தினார்கள். முதற் புதல்வர் தந்தையின் கட்டளைக் கிணங்க மேல் நாட்டு முறைப்படி மருத்துவக்கலையைப் பயின்று தனது தந்தையாரின் சித்தவைத்திய நுட்பக்கலை வீணாகாது மக்கள் நலனுக்காகப் பணியாற்றும் டாக்டர் குருசிரோன்மணியாகத் திகழ்கிறார். சுவாமிகளின் முன்னோர்கள் பெருநிலக்கிழார் ஆட்சி புரிந்த காலத்தில் தீயோர்களைத் தண்டித்து மக்களைப் பாதுகாத்து, நாட்டில் அமைதியும் ஒழுங்கும் நிலவச் செய்வதில் தொண்டாற்றியவர்கள். இரண்டாவது புதல்வர் திரு பரமகுரு இத்தகைய முதாதையர்களின் பணியை இக் காலப் பாணியில் சீரிய முறையில் தமது முதற் கடமையாகக் கருதி இன்றைக்குச் செய்து வருகிறார். தமது கடமையைத் திறனுடன் செய்வதற்கு வேண்டிய கல்வி நிறைந்தவர். சென்னைப் பல்கலைக் கழகத்தின் எம்.ஏ. பட்டத்தையும், பி. எல். என்னும் சட்டப்பட்டத்தையும் இளம் வயதிலேயே பெற்றவர். முத்தமிழில் முதன்மையான நாடகக் கலையில் தேர்ச்சி பெற்ற நிபுணர். தந்தையாரின் அறிவையும் ஆற்றலையும் அன்பு உள்ளத்தையும் கணிசமான அளவில் பெற்றவர். சென்னை அரசாங்கக் காவலர் துறையில் உயர்ந்த பதவியில் இளம் வயதில் நியமிக்கப்பட்டவர். இவருடைய திறமையான நிர்வாகத்தால் மக்களின் நன்றியையும் அரசாங்கத்தின் நன் மதிப்பையும் பெற்றுப்பெரும்புகழ் அடைந்திருக்கின்றார். போலீஸ் துறையில் மாநிலத் தலைவராக வேண்டியதிறன் குணம், தகுதியெல்லாம் ஒருங்கே அமைந்தவர் என்பதை யாவரும் அறிவர். "புலிக்குப் பிறந்தது பூனைக் குட்டிகளாகுமா?"

தவத்திரு பொன்னையா சுவாமிகள் ஒரு திரிகால ஞானி. ஆனால் விளம்பரம், ஆடம்பரம் ஆகியவற்றை வெறுத்தவர், "ஒடுங்கிக் கிடப்பது யோகியர் உள்ளம்" என்னும்முதுரைக் கிணங்க எளிய வாழ்க்கையிலும் உயர்ந்த சிந்தனையிலும் பற்றுடைய பெரியார். யாவரையும் தம் மக்களைப்போல் அன்புடனும் பரிவுடனும் நேசித்தவர். பல்லாயிர மக்கள் சுவாமிகளின் சித்த வைத்தியத்தால் உடல் நலம் திரும்பப் பெற்றார்கள். வேறு பல்லாயிரம் மக்கள் சுவாமிகளின் அருள் வாக்காலும் இனிய உரையாடல்களாலும் அழுக்கு நீங்கி ஆன்மா தூய்மை அடைந்துள்ளார்கள். அல்லலின்றி, துயரின்றி, துன்பமின்றி என்றும் இன்பம் தழைக்க இவ்வுலகில் வாழ்வதற்குலக்ஷக்கணக்கான மக்களுக்கு வழிகாட்டிய குருவும் ஆவர். சுவாமிகளின் எளிய உள்ளமும், உயர்ந்த சிந்தனைச்சக்தியும் எல்லாரையும்தமது நண்பர்களாகக் கருதினவே யொழிய சீடர்களாகக் கருதவில்லை. குழந்தை யுள்ளமும், ஞானியின் அறிவும் படைத்த தவத்திரு பொன்னையா சுவாமிகளின் அடிகளைப் பின்பற்றுவோமாக! வாழ்க தவத்திரு பொன்னையா சுவாமிகளின் திருநாமம்!

## சுவாமிகளின் அருள் மொழிகள்

உதயமும் மதியமும் விதியை வெல்லும், அதிகாலையிலும், நடுப்பகலிலும் ஆரம்பித்த காரியம் தடங்கலில்மாமல் நடந்தே தீரும்.

* * *

நம்மில் அனைவரும் கைக்கெடிகாரம் அழகுக்காகக் கட்டியிருக்கிறோம். ஆகவே அவற்றையெல்லாம் சேகரித்து மிகத் தேவையாக இருக்கும் வெளி நாட்டிற்கு அனுப்பி விடுவது நலம். குறித்த நேரத்தில் காரியம் செய்யாத நம் கெட்ட பழக்கத்தை நகைச்சுவையாக இதில் வெளிப்படுத்து கிறார்கள்.

# அம்மையும் அப்பனும்

டாக்டர் பொ. குருசிரோன்மணி, B. A., G. C. I. M., கருவை

'அம்மை அப்பன்' தத்துவத்தை வாழ்க்கையில் நடத்திக் காட்டிய சக்தி, அமரத்துவம் பெற்று சூட்சும நிலையில், பரப்பிரம்மமாக எங்கும் வியாபித்து நிற்கிறது. அதன் சித்து விளையாடல்களையும், செயற்கரிய செயல்களையும், வாக்காலும், எழுத்தாலும் எடுத்துரைக்க முடியாத ஒரு பெருங்காரியம். ஏனென்றால் அது அச்சக்தியில் ஈடுபட்டு ஒன்றி அனுபவிக்கவேண்டிய ஓர் பேரின்பம். ஆயினும் அச்சக்தியின் எல்லை இல்லா பலத்தின் உதவிகொண்டு இவ்வரிய காரியத்தை நிறைவேற்ற எண்ணி, வாழ்க்கைக் குறிப்பு எழுதத் துணிகிறேன்.

தூல உருவத்திலிருந்த இராஜபாளையம் பொன்னையா சுவாமி, என்ற பெயர் படைத்து எங்களுக்குத் தந்தையாகிய இல்லறஞானியைத் தான் மேலே குறித்தேன்! அவர்களது சரித்திரக் குறிப்பைச் சுருக்கமாக முதலில் சொல்லிக் கொள்ளுகிறேன். எங்கள் அப்பா அவர்களுக்கும், அவர்களின் தமையனுருக்கும் திருமணம் ஒன்ருக வைத்தார்களாம். எளிய குடும்பமாகயிருந்தாலும் நல்ல பண்பாடுள்ள குடும்பத்தில் பெண்ணிருக்க வேண்டுமென்பது எங்கள் அப்பா அவர்களின் விருப்பமென்பதறிந்து அதைப் பூர்த்தி செய்ய விளையாடிக் கொண்டிருந்த குழந்தை நிலை மாருத எங்களது அருமை அம்மாவை எங்கள் பாட்டி தேர்ந்தெடுத்து பெரிய அப்பா அவர்களின் திருமண வைபவத்துடன் சேர்த்து அந்தக் காலத்துச் செல்லக் கல்யாண முறையில் முடித்து வைத்தார்களாம். இவ்விதமாக எங்களது பாட்டியும், அம்மாவும் சொல்லக் கேட்டிருக்கிறேன்.

அப்பாவைப் பெற்ற பாட்டியின் பெயர் திருமதி இலக்ஷ்மி. திடமும் தீரமும் உள்ள பெண்ணென்று பலர் சொல்லி இருக்கிருர்கள். அவர்களுக்கு இரண்டு ஆண், இரண்டு பெண் குழந்தைகள். இரு ஆண்களில் ஒருவர் எங்கள் அப்பா அவர்கள். மற்ருெருவர் எங்கள் பெரியப்பா கனம் கிருஷ்ணத்தேவர் அவர்கள். இவர்களை இரண்டு கண்களாக எங்களது பாட்டி வளர்த்து வந்திருக்கிருர்கள். அவர்கள் இருவரும் ஒருவர் ஆத்மீகத்துறையிலும் மற்ருெருவர் லௌகீகத்துறையிலும் மாபெரும் சாதனைகளைச் செய்து முடித்துத் தங்களைப் பெற்ற தாய் மனம் குளிரச் செய்தார்கள்.

அதாவது வாலிபத்திலிருந்தே எங்களது தந்தை பகவத்கீதை முதலியன பயின்று அன்பும், ஆத்மீகப் பயிற்சிகளும் வளர்க்கக்கூடிய முயற்சிகளைச் செய்து தர்மத்தைச் சம்பாதிக்க ஆரம்பித்தார்கள். ஆனல் பெரியப்பா அவர்கள் ஆரம்பத்திலிருந்தே திராசைத் தூக்கி வியாபாரம் செய்து பொருளீட்டிச் செல்வத்தைத் திரட்டும் முயற்சியில் ஈடுபட்டுச் சிக்கனத்தைக் கடைப்பிடித்து லக்ஷாதிபதியானுர். எங்களது அப்பா மூலம் அருளும், பெரியப்பா மூலம் பொருளும் உற்பத்தியாகி அவ்விரண்டிற்கும் உள்ள தனித்தன்மையின் ஆற்றலால் என்னென்ன செய்யவேண்டுமோ அவற்றை எல்லாம் உலகில் செய்து முடித்தன. ஆனல் பொருளினும், அருள் எவ்வளவு அளவில்லாச் சக்தி வாய்ந்ததென்பது அம்மை அப்பனுக இருந்து எல்லோரையும் ஆதரித்துவந்த அந்த அருட்சக்தியை ஆராயும்போது வெளிப்படுகிறது.

அந்த ஆத்மதீப ஒளியின் பிரகாசத்தைக் கவனிக்குமுன் அந்த தெய்வீக ஒளியை அதிகப் பிரகாசத்துடன், எங்களுக்கும், மற்றும் எல்லோருக்கும் பெரும் அளவில் பயன்படச் செய்த எங்கள் அன்னையின் பெருமையைப் பற்றிச் சில வார்த்தைகள் கூறிக்கொள்ளுகிறேன். எங்கள் தாயின் முதல்பெயர் இருளாயி அது பின்பு லக்ஷ்மி என்று மாறியதாம். அன்னையின் தகப்பனுர் பெயர் கனம் வீரபத்திர தேவர். தாயார் இளமையிலேயே காலமாகி விட்டார்கள். தமயன்மார்கள் மூவர். அந்தக் குடும்பமே உண்மை, மானம், ரோசம் போன்ற பலபெரிய குணங்களைக் கொண்டு வாழ்ந்தது. எங்களது

அன்னைக்குப் பெயரை மாற்றி கோமதி என்று எங்கள் பாட்டி வைத்தார்களாம். அன்னைக்கு வளர்ப்புப் பிள்ளைகள் அநேகமுண்டு. எங்கள் நன்மையையும், வளர்ச்சியையும், முன்னேற்றத்தையும் கவனிப்பதைவிட எத்தனையோ மடங்கு அதிகமாக அவர்களின் வளர்ப்புப்பிள்ளைகளைக் கவனித்தது, அந்தத் தாய்மை உள்ளம்! அது தெய்வீகமானது! நிறைந்ததுதான் தெரியும்; குறைந்தது தெரியாது. மற்றவர்கள் வருந்துவதை நினைத்து வருந்தி அதை நீக்க முன்னேறிச் செல்லும் கருணை உள்ளம் அது. சிவனது அம்சமான அப்பா அவர்கட்கு ஏற்ற, உமையாளின் அம்சமான மனைவி எங்கள் அன்னை என்று மட்டும் சுருங்கச் சொல்லி விடலாம். இச்சக்தியும் சிவனும் ஒன்றுபட்டு ஆற்றிய அழியாத கடமைகளும் காரியங்களும் பலப்பல! அவற்றில் சிலவற்றைத்தான் உதாரணமாகக் கூறமுடியுமே தவிர, எல்லாவற்றையுமே கூற முயல்வது கடற்கரை மணலை எண்ணும் முயற்சிக்கு ஒப்பாகும்! அவை அவ்வளவு அளவிடற்கரியது; என்றும் அழியாததும்கூட!

முன்கூறியபடி அப்பா அவர்களுக்குச் செல்லக் கல்யாணமாகியதே தவிர குடும்பம் நடத்த வேண்டுமென்ற நோக்கம் எழாது, எப்போதும் பகவத்கீதை படிப்பதும், பல சன்னியாசிகளைத் தேடிச் செல்லுவதும், அவர்களுக்குப் பணி விடை செய்வதுமான இயற்கையான மனப்போக்கை உடையவர்களாக இருந்தார்கள். வடமொழியில் பலதர்க்க நூல்கள், வேதசாஸ்திர நூல்கள் முதலியவற்றைக் கற்றுத் தெளிவதில் ஈடுபட்டார்கள். தர்க்க சம்பந்தமாகப் பலருடன் விவாதித்து வெற்றியுற்றார்கள். அன்றியும் பேச்சில் எவரும் அவர்களை வெல்ல முடியாது. வெறும் பேச்சைவிடச் செய்கையை அதிகம் விரும்புவார்கள்.

தவயோகங்களும், அப்பியாசங்களும் தீவிரமாகச் செய்யும்போது இரண்டு மூன்று தினங்கள் அன்ன ஆகாரமின்றித் தூங்குவதுவழக்கம். அதுசமயம் எவரும் எழுப்பக்கூடாது. இது தூங்காமல் தூங்கிச் சுகம் பெறும் தவயோகம் போலும். அவ்வாறு தொடர்ந்து சாப்பிடாது இரண்டு மூன்று தினங்கள் கழித்துத் தங்கியிருந்த அறையிலிருந்து வெளிவரும் போது, களைப்பொன்று மில்லாது பிரகாசத்துடனிருப்பார்கள். இந்த ஆற்றலின் அடிப்படை உண்மைகள் அந்த யோகநிலையில் இருந்து பேரின்பத்தை அனுபவிப்பவர்களுக்குத்தான் விளங்கக் கூடும்!

அக்காலத்தில் சமஸ்கிரதம் படிப்பதற்குத் தமிழ் நாட்டில் பல இடஞ்சல் இருந்ததால், அவர்கள் மலையாளம் சென்று அதைக் கற்றார்கள். அது சமயம் போலீஸ் உத்தியோகம் பார்த்து அதைக் கைவிட்டு, இல்லறத்து ஞானியாக விளங்கிய பட்டாணி மஸ்தான் ஒருவரைச் சந்தித்து, யோகநிலையை வலுப்படுத்தினார்கள். அன்னாரின் தூண்டுதல் மூலமாகத்தான், இல்லறம் நடத்தி யோகநிலையில் வெற்றி பெற வேண்டுமென்ற சிந்தனை உண்டாகி, இராஜபாளையத்தில் குடும்பவாழ்க்கை நடத்த ஆரம்பித்தார்கள். திருவனந்தபுரத்திலிருக்கும்போது தான், செங்கோட்டைக் கரையாளர் குடும்பத்தாரால் ஆதரிக்கப்பட்டு, அந்தக் குடும்பத்தில் ஒருவராக இருந்து அதன் நலனுக்கு வேண்டுவன எல்லாம் செய்து வந்திருக்கிறார்கள். மேன்மை தங்கிய கனம் சக்கரபாணி நம்பியார் அவர்கள் அக்குடும்பத்தாரில் ஒருவர். அன்னாருடன் தெய்வீகமான உண்மை அன்புடன் இணைபிரியாத் தோழராகக் கடைசிவரை இருந்தார்கள்.

இராஜபாளையத்தில் இல்லறம் நடத்தி வந்த போது, கனம் அம்பையா ராஜா அவர்கள், கனம் இராமசாமி ராஜா அவர்கள், கனம் அழகர் ராஜா அவர்கள் கனம் பெரியசாமித் தேவர் அவர்கள் போன்ற பல ஆத்ம நண்பர்கள் ஏற்பட்டார்கள். இது சமயம், கரிவலம் வந்த நல்லூர் பக்கமாக இருக்கும் பெரும்பத்தூரில் தங்கியிருந்த தெய்வத்திரு பொதிச் சுவாமியின் மகிமையை அறிந்து அவர்களை இராஜபாளையம் அழைத்து வந்து தன்னுடன் வைத்துக் கொண்டார்கள்.

இந்த மகான் முக்காலத்திலும் நடப்பதைச் சொல்லும், பராசக்தியின் அருள் பெற்ற அபூர்வப் பிறவி ஞானி.

இவ்வாறாக இராஜபாளையத்தில் இல்லறம் நடத்தும் போது, நானும் எனது தங்கை சரஸ் வதியும், எனது அடுத்த தம்பி பரமகுருவும் பிறந் ததும், மேல் குறித்த தெய்வத்திரு பொதிச் சாமி அவர்களின் விருப்பப்படிக் கரிவலம் வந்த நல்லூருக்கு குடும்பத்தை மாற்றினார்கள். பின்பு இரு தங்கைகளும், ஒரு தம்பியும் பிறந் தார்கள். இதற்கிடையில், தம்பி பரமகுரு பிறப்பதற்கு முன், மேட்டுப்பாளையத்தில், கொள்ளே கால் பக்கம் சென்று மலைப்பிரதேசத் தில் அலைந்து ஒரு முக்கிய பச்சிலை மூலிகை தேடுவதில் ஈடுபட்டதில் மலேரியா சுரம் கண்டு, பிரகாசமான தேக நலனை இழந்தார் கள். அதிலிருந்தே, வைரம் வாய்ந்த யோக அப்பியாசத்தினால் மிளிர்ந்த அவர்களின் தேகம் பாதிக்கப்பட்டது. இந்த நிலை வருமென்று முன்னதாகவே தீர்க்கதரிசனத்தால் தாமும், உடனிருந்த தெய்வத்திரு பொதிச்சுவாமி அவர்களும், சிவகாசி ஆவுடைச்சங்குச்சாமி அவர்களும், சொல்லியும் விபரம் அறிந்துங் கூட, விதியால் வருவதை அனுபவித்துத்தான் ஆகவேண்டுமென்ற உண்மை உணர்வுடன் திடப்படுத்திக்கொண்டு அவ்வாறே கடைசி வரை அந்த வினைப்பயனை அனுபவித்துத் தீர்த் திருக்கிறார்கள்.

இதுவரை அவர்களின் வாழ்க்கைச் சரித்தி ரத்தை நான் கேட்டு அறிந்த விதத்தில் சுருக்க மாகச் சொல்லிவிட்டேன். இனிமேல் எனக்கு விவரம் தெரிந்ததிலிருந்து, நான் அன்றிருந்த கண்ட "அம்மை அப்பன்" தத்துவத்தின் விளக் கத்தைச் சான்றுகளுடன் சொல்ல முயற்சிக் கிறேன்.

எங்களைப் படிக்கவைத்து ஆளாக்க எடுத்த பெரும் முயற்சிகள் தான் எனக்கு நேரடியாகத் தெரிந்த முக்கிய விவரங்களாகும். என்னை முத லில் படிக்க வைக்கும்போது, வெள்ளியில் ஏடு அடித்து, அதில் தமிழ் கிரந்தம், சமஸ்கிரதம் ஆகிய எழுத்துக்கள் தனித்தனியே வெள்ளி இதழ்களில் எழுதப்பட்டிருந்தது. ஊர்வலக் கோலாகலக் கொண்டாட்டத்துடன் எழுத்தறி வித்தார்கள். நான் முதல் மகன் என்பதால் தனிச்சிறப்புடன் கொண்டாடினார்கள் போலும்! எனது படிப்பின் ஒரு கட்டத்தில் சிவகாசிக்கு அனுப்பி, ஆசிரியர் கனம் வெங்கடராம ஐய்ய ரின் பொறுப்பில் விட்டு, நான் படித்து வந் தேன். அன்றார், நமது இந்தியாவின் நாகரீகப் பண்பாட்டின்படி, 'படிப்பை படிப்புக்காகவே' சொல்லித்தந்து, மாணவர்களை, மேன்பாடு டைய தத்துவ புருடர்களாக்கும் நோக்குடைய வர், பல எளிய, அனாதைப் பையன்களை மேல் குறித்த இலக்குடன் படிக்கவைத்தார்கள். இந்தச் சூழ்நிலையில் நான் படித்துக் கொண் டிருக்கும்போது, சிவகாசி நாடார் மகா ஜனங் களில் முக்கியமான அன்பர்கள் எனக்குக் காதணி விழாவை மிகவும் சிறந்த முறையில், ஊர்வலத்துடன் நடத்தியது நினைவுக்கு வருகி றது. சாமி மகன் என்றமைக்காக அவ்வளவு சிறப்பித்தவர்கள், அன்பு கலந்த பக்தியை அப்பா அவர்களிடம் காட்டி, அவர்களை நட மாடும் தெய்வமாக திடமாக நம்பி மரியாதை செலுத்தும் ஆத்ம நண்பர்கள், அவர்களைபக்தர் களென்றே சொல்லிவிடலாம். அந்தக் காலத் துத்திட நம்பிக்கையும், உண்மை அன்பு இப் போது மிகவும் அபூர்வமான பண்புகளாக இருக் கின்றன. உடல் நலக் குறைவு காரணமாக எனது சிவகாசிப் படிப்பு நின்று கருவை வந் தேன்.

எனது பன்னிரண்டு வயதுவரை என் விருப் பப்படியே விட்டு, பின்பு தனது விருப்பப்படி திருத்தி அமைக்க, மனித தத்துவமும், மனோ தத்துவமும் முழுதும் அறிந்த திரிகாலமறியும் அப்பா அவர்களுக்கு மட்டுந்தான் முடிந்தது! மற்றவர்கள் நான் மன முறண்டுடன் செய்யும் வேண்டாத காரியங்களை தடுக்க முயன்று தோல்விதான் கண்டார்கள். ஆனால் அருட் சக்தி சொன்னதுபோல் என் பன்னிரண்டாவது

முடிவில், ரிஷிவேலியில் மூன்று வருடப்படிப்பு முடித்துத் திரும்பும்போது, முற்றிலும் மாறின வனுக வந்தேன். கடமை உணர்ச்சி மிகுந்து இருந்தது. எனது தம்பி தங்கைகளும், பெரிய அப்பாவின் பையன்களும் கட்டுப்பாடுடன் படித்து முன்னுக்கு வரவேண்டு மென்ற பெரும் ஆவல் எனக்குத்தாளுகவே அந்தப் பன்னிரண் டாவது வயது இறுதியில் உண்டாகியிருந்தது.

ரிஷிவேலிக்குப் படிக்கப் போவதற்கு முன் ஞல் இராஜபாளையத்தில் ஒரு வருடம், எனது சித்தப்பா கனம் பெருமாள் தேவர் அவர்களின் வீட்டில் தங்கி, அவ்வூர் ஹைஸ்கூலில் 4-வது வகுப்பில் படிக்க வைத்தார்கள். அதற்குப் பின் அவ்வூர் சொக்கர் கோவில் பக்கம் தனி யாக வீடு அமைத்து என்னையும், தங்கை தம்பி, பெரியப்பா மகன் முதலிய எல்லோரையும் ஒன்று சேர்த்து, நமது தேசீயப் பண்பாட்டின் படி அதிகக் கட்டுப்பாட்டுடன் படித்து வர ஏற் பாடு செய்தார்கள். தமிழ், ஆங்கிலம், ஹிந்தி படிப்புக்கு ஒரு உபாத்தியாயரும், சங்கீதத் தைப் புராதனப் பாணியில் சொல்லிக் கொடுப் பதற்கு மற்றொருவரும் நியமித்தார்கள். எங்க ளுடனே இருந்து, சங்கீதப் பயிற்சி அளிப்ப தற்கு கனம் மாயாண்டி அண்ணுவி என்னும் அன்பும் ஆதரவும் அதே சமயத்தில் அதிகக் கண்டிப்பும் உடையவரை ஏற்பாடு செய்தார் கள். மிகவும் அதிகாலையில் சங்கீதப் பயிற்சி யுடன் ஆரம்பிக்கும் போதனு முறை ஒன்றை யடுத்து ஒன்ருக, பள்ளி சென்று வருவதுடன் இரவு சுமார் 8 மணி வரை பயிற்சியும் படிப்பும் அன்ருடம் இருந்து கொண்டே இருக்கும். இந்த ஆச்சிரம முறையை நடத்தி வைப்பதற்கு, மேற்பார்வையாளராகக் கனம் சுப்பராஜா என் பவரையும், எங்களை அன்பாகவும் ஆதரவாக. வும் வளர்ப்பதற்கும் சமையல் செய்து வேண் டும் வசதிகள் செய்து கொடுப்பதற்கும் திருமதி மாரிப்பாட்டி என்னும் எங்கள் அருமை அன்னை யின் சிறிய தாயார் அவர்களையும் ஏற்பாடு செய் தார்கள். இவற்றை எல்லாம் தீர்க்கதரிசனத் தன்மையுடன், கடமை என்று கருதி அமைத் துக் கொடுத்த நடமாடும் தெய்வமாகிய அப்பா அவர்கள் அப்போதைக்கப்போது திடீரென்று வந்து, எங்களுடன் சிலதினங்கள் தங்கிச் செல்வார்கள். அதுசமயம் அந்த இல்லம் கல்யாண வீடுபோன்ற கோலாகலத் தோற்ற மளிக்கும். எங்களுக்கெல்லாம் புத்திமதிகள், நீதி முறைகள் புகட்டுவதுடன், அந்த நடமாடும் தெய்வத்தைத் தேடிவரும் ஆத்ம நண்பர் களுக்கு ஆறுதல்களும், ஆத்மீக அபூர்வ நுட் பங்களும் எடுத்துச் சொல்லி ஆனந்தப் பரவ சத்தில் ஆழ்த்துவார்கள். திடீரென்று தன்னைச் சூழ்ந்திருக்கும் அன்பர்களிடம் குறிப்பிட்ட இடத் தில் தனது வரவை எதிர் பார்த்திருப்பதைத் தனது தீர்க்க தரிசன சக்தியின் உதவியால் அறிந்து சொல்லி, அந்த இடத்தை அன்பர்கள் சூழ அடைந்து, முன் கூட்டிச் சொன்னதை நிருபித்து எல்லோரும் ஆனந்த மடைவதை நான் கண்டுள்ளேன். இந்தச் சித்தின் மகிமை சிலரால் தான் நம்ப முடியும். அப்பாவை யொத்த அபூர்வப் பிறவிகளுக்குத்தான் கைகூடும்.

மேல் குறித்தபடி எங்களது இராஜபாளையம் ஆச்சிரம முறைப்படி அமைந்த வாழ்க்கை ஒரு வருட காலம் நடந்து முடிந்த பின்பு மிகவும் புரட்சிகரமான ஒரு செயலைச் செய்தார்கள். குழந்தைப் பருவத்திலேயே அப்பா அம்மா வைப் பிரிந்து குழந்தைகள் சந்தோஷமாகப் படித்துவரும் பழக்கத்தைக் கொடுக்கவேண்டு மென்ற அடிப்படைத் தத்துவத்தை மனதில் கொண்டு, என்னையும், தங்கை சரஸ்வதியையும் தம்பி பரமகுருவையும், பெரியப்பா மகன் இராமசாமியையும் சுமார் 500 மைல்களுக்கு அப்பாலுள்ள சித்தூர் ஜில்லாவில், நம்நாட்டின் நாகரீக அடிப்படையில் அமைந்து உன்னத மாக நடந்துவந்த ரிஷிவேலி பள்ளிக்கு அனுப்பி வைத்தார்கள். எங்களுடன் அப்பாவின் ஆத்ம நண்பராகிய கனம் அழகர் ராஜாவின் மகனும் அன்னுரின் அண்ணுச்சி மகனும் அதே பள்ளிக் குப் படிக்க வந்தார்கள். இதைப் போன்ற காரியங்களைத் தம்மைப் பொறுத்த வரையில்

தமது குடும்பத்தாருக்குச் செய்து காட்டும் தோரணையில், தமது ஆத்ம நண்பர்கள் குடும் பத்திலும் செய்ய வைக்கும் தன்மை அம்மை அப்பன் தத்துவத்தில் அடங்கியிருக்கும் கருணை யின் வெளிப்படையாகும். பலர் அந்தப் பக்கத் தில் அப்பா அவர்களைப் பின்பற்றி அவர்கள் காட்டிய வழியில் சென்று, தங்கள் தங்கள் குடும்பத்தைக் கவனித்துக் குழந்தைகளை உன்னத முறையில் படிக்க வைத்து முன்னுக் குக் கொண்டு வந்திருக்கிறார்கள். இதை வெளிப்படையாக மனமுவந்து சொன்ன ஆத்ம நண்பர்களை நேரில் கேட்டு, அந்தச் சக்தியின் பரந்த நோக்கின் மகிமையை நினைத்து ஆனந்த மடைந்திருக்கிறேன்.

நாங்கள் ரிஷிவேலியில் படித்து வரும் சமயத் தில், இவற்றை எல்லாம் அமைத்து இயக்கி வந்த சக்தியும், அம்மை அப்பன் தத்துவமு மாகிய எங்கள் அப்பா அவர்கள் மற்றொரு புரட்சிகரமான மாறுதலை எங்கள் பயிற்சிமுறை யில் செய்தார்கள். கரிவலம்வந்தநல்லூருக்கு கோடை கால விடுமுறைக்கு வந்திருந்த போது அடுத்த வருடம் முதல் ரிஷிவேலிப் பள்ளிக்குச் செல்லுவதற்குப் பதில் பாளையங் கோட்டைப் பள்ளியில் எங்களைச் சேர்க்கப் போவதாகச் சொன்னார்கள். நான் எப்போதும் தர்க்கம் செய்து அதற்குப் பின்புதான் அப்பா அவர்கள் சொல்வதை ஏற்றுக்கொள்வது வழக்கம். அடிப்படையில், எனக்கு அருள் சக்தியாகிய அப்பா அவர்கள் விருப்பப்படி நடக்கவேண்டுமென்பதே நோக்கம். ஆயினும் மனமுறண்டு அதிகமாக உள்ளவன். ஆகவே பாளையங்கோட்டைக்கு நாங்கள் எல்லாம் படிக்கப்போக வேண்டுமென்று சொன்னதும், நான் அப்பா அவர்களிடம், என்னநோக்குடன் இவ்வாறு சொல்லுகிறார்களென்று கேட்டேன். உலக அனுபவத்தோடு பொருந்திப் போகும் இல்லற ஞானியாகிய அப்பா அவர்கள் கீழ்க் குறித்தபடி எடுத்துச் சொன்னார்கள் "நீங்கள் எல்லோரும் பூலோக சொர்க்கம் போன்ற, ரிஷிவேலி பள்ளியில் படித்து வருகிறீர்கள். அதிலேயே மேல் கொண்டு படித்தால், உலகுக் குப் பொருந்தாமல், வெளி உலகம் தெரியாது. இன்ப வாழ்க்கையிலேயே பழகி வந்து விடுவீர் கள். ஆகவே உங்களுக் கெல்லாம் வேறொரு மாதிரியான உலக மொன்றிருக்கிறதென்று காட்டுவதற்காகவே பாளையங்கோட்டைஹாஸ் டலில் சேர்த்துப்படிக்க வைக்கப்போகிறேன்" என்று எனக்கு விரிவாக எடுத்துச் சொல்லி மனதில் பதிய வைத்து, அடுத்த வருடம் அவ் வாறே செய்தார்கள். எங்களுடன் ஹாஸ் டலில் ஆழ்வார்குறிச்சி கனம் சுப்பிரமணிய முதலியார் அவர்களின் மகன் திரு வரந்தரும் பெருமாளும் மற்றவர்களும் ஒன்று சேர்ந்து படிக்கும் வாய்ப்பு அமைந்தது. இவ்வாறு ஒரு வருடம் படித்துவரும் போது எனக்கு மனச் சஞ்சலமாகி, அப்பா அவர்களிடம் சென்று, ரிஷிவேலி பள்ளி மாதிரி இல்லாமல், இங்கு வாங்கும் சம்பளத்திற்குப் படிப்பை விற்பனை செய்வதுபோல் படுவதாகவும். ஆசிரியர் மாண வர்களுக்கிடையே அன்னியோன்ய அன்பும் நெருங்கிய தொடர்பும் இல்லை என்றும், இந்தச் சூழ்நிலையில் படிக்க என்றால் முடியா தென்றும், உடம்பும் இளைத்துக் கொண்டே வருவதுடன் வயிற்று வலியும் உண்டாவதால், ஹாஸ்டலை விட்டு வெளியில் வீடமைத்து மேல் கொண்டு படிக்க வைக்கும்படி அப்பா அவர்களிடம் கேட்டுக் கொண்டேன். அவர்களும், குழந்தை களைப் படிக்க வைப்பதையே இலக்காகக் கொண்டிருந்ததால், பாளையங்கோட்டையில் தனி வீடு அமர்த்திப் படிக்க வைக்க ஏற்பாடு செய்தார்கள். பாளையங்கோட்டையில் புதுப் பேட்டை தெற்குத்தெருவில் அமைந்த வீட்டில் என் தங்கைகள் மூவர். தம்பிகள் இருவர். பெரியப்பாவின் பையன்கள் இருவர். உதவிக்கு எனது பெரியம்மா, எனது அம்மா முதலியோர் தங்கி, "படிப்பதே தொழிலென்ற" நோக் குடன் ஆச்சிரமத்தை யொத்த கட்டுப் பாடுடன் பயிற்சி பெற ஏற்பாடு செய்தார்கள். "பிறருக்கு உழைப்பதே பிறவியின் கடன்." என்ற ஒரே இலக்குடைய அன்புத் தெய்வ மாகிய அப்பா அவர்கள் வெளியூர்களுக்குக்

குறிப்பாக தேவாரத்திற்குச் சென்று, தம்மை நாடி வருகிறவர்களுக்கு ஆறுதல் மொழியும், அவர்களின் துன்பத்தில் தாமும் பங்கெடுத்து அதைத் தீர்த்து வைக்கும் மார்க்கத்தை எதிர் காலம் தெரிந்து சொல்லிக் கொண்டு, மாதக் கணக்கில் வெளியூர்களிலேயே தங்கி விடுவார் கள். ஆயினும் ஏதாவது நெருக்கடியான நிலைமை இங்கு உண்டானால், மிகவும் அதிசயப் படும் வகையில் பாளையங்கோட்டை வந்து விடுவார்கள். அதில்தான் அவர்களின் ஆத்மீக அப்பியாசமும், திருஅருள் சக்தியும் அடங்கி யிருக்கிறது. இதுபோன்று மாதக் கணக்கில் வெளியூர் சென்று திரும்பும் வரை, தம்பி தங்கைகளை மிகக் கண்டிப்பான கட்டுப்பாட்டில் படித்து வரவேண்டுவன செய்து கவனிக்கும் பெரும் பொறுப்பை எனக்கு விட்டிருந்தார்கள். ஆனால் எங்களுடன் தங்கியிருக்கும்போது எங் கள் எல்லோருக்கும் அந்தந்தச் சந்தர்ப்பத் திற்குத் தகுந்தாற்போல், அவர்களுடைய அறி வுரைகளும், உலக அனுபவமடங்கிய நீதிமொழி களும், எங்கள் பள்ளிப்படிப்புடன் சேர்ந்து கிடைத்துக் கொண்டே வந்தன. இவ்வாருகக் குடும்பப் பண்பாடுடன் சேர்த்துக் கொடுத்த பயிற்சிதான் எங்களுக்குப் பின் வாழ்க்கையில் உதவியாகயிருந்தது, அறையில் ஆடிப்பின்னல் அம்பலத்தில் ஆடவேண்டு மென்பது அப்பா அவர்களின் பொன்மொழி. இந்த அடிப் படைத் தத்துவத்திற் கிணங்க, எங்களுக்கு எப்படி முறைப்படி பேசுவது, எப்படி எழுது வது, எப்படி நடப்பது, எப்படி உட்காருவது என்றுகூட சொல்லிக் கொடுத்தார்கள். அந்த அம்மை அப்பன் தத்துவம் நிறைந்த அச்சித்தர் பெருமான் இவ்வாருக, நான் செயின்ட் சேவியர்ஸில் இன்டர் படித்து முடிப்பதற்கும் தம்பி பரமகுரு அண்ணுமலை பல்கலைக் கல்லூரி யில் இன்டர் முடிப்பதற்கும், தங்கை சரஸ்வதி பத்தாவது படித்து முடிப்பதற்கும் சரியாக இருந்தது.

இந்தச் சந்தர்ப்பத்தில், அல்லும் பகலும் உழைத்து, நேரம் தவருமல் அன்னமிட்டு, ஆதரித்துவந்த கருணையே உருவான எங்கள் அம்மா நோய்வாய்ப்பட்டு, ஆங்கில வைத்திய டாக்டர் கைவிட்டதை, இராப்பகலாய் அன்னை பக்கத்திலேயே இருந்து அபூர்வ வைத்தியம் செய்து வெற்றி பெற்ற அப்பா அவர்களின் கருணைக் கடலாகிய கடமை உள்ளத்தை நினைக்கும்போது இப்போதும் வியப்புண்டா கிறது. தனது சொந்தச்சித்த வைத்திய பஸ்ப முறைகளைக் கொண்டு அன்பு அம்மாவின் உயிரை மீட்டினர்களென்றுதான் சொல்ல வேண்டும்!

இது சமயம் மற்ருெரு மாறுதல் செய்தார் கள். இன்டர் வகுப்புக்குப் பின்பு அதிக கட்டுப் பாடும் கண்டிப்புமில்லாது, தன்னைத்தானே கவனிக்கும் பழக்கம் வரவேண்டுமென்ற அடிப் படை உண்மையை மனதில் கொண்டு, அதிகச் செலவையும் கருதாமல், என்னையும், தம்பி பரமகுருவையும், திருநெல்வேலி ஜங்ஷனில் இருக்கும் மதுரை திரவியம் தாயுமானவர் இந்து காலேஜில் பி. ஏ., வகுப்பிலும், தங்கை சரஸ்வதியை இன்டர் வகுப்பிலும் சேர்த்து, பாளையங்கோட்டையிலிருந்து, குதிரை வண்டி யில் சென்று, அந்தக் கல்லூரியில் படித்துவர ஏற்பாடு செய்தார்களென்ருல் அவர்களின் உயர்ந்த இலக்குவின் வலுவை என்னென்பது! படிப்பிற்காக அவர்கள் எடுத்துவந்த இப்படிப் பட்ட பெரும் முயற்சிகளைக் கண்டு அங்குள் ளோர்வியப்படைந்ததுடன், இது சம்பந்தமான பெருஞ் செலவை எவ்வாறு நிர்வகிக்கிருர்கள் என்ற வினவையும் கேட்டார்கள். ஒரு சந்தர்ப் பத்தில் இதற்கு அப்பா அவர்களே பதில் சொன்னுர்கள். "நான் பேங்கில் பணத்தைப் போட்டு வைத்து, பணத்தை மட்டும் நம்பி இம் முயற்சிகளில் ஈடுபடவில்லை. தெய்வீகத்திரு அருட் சக்தியை, சங்கல்ப மூலமாக முழுதும் நம்பிக் காரியங்களில் ஈடுபடும்போது. அவை பெரிய காரியங்களானுலும் தாளுகவே சுலப மாக நடந்து விடுகின்றன" என்று சொல்லி பெரிய ஆத்ம தத்துவத்தை விளக்கினுர்கள். இந்த அபூர்வ உண்மை எத்தனை பேர்களுக்கு

விளங்கி இருக்குமென்றே, அல்லது இந்த முறைப்படி எத்தனை பேர்களால் நடத்திக் காட்ட முடியுமென்றே சொல்வதற்கில்லை. லக்ஷத்தில் ஒருவராகிய அவர்களையொத்த அவதார புருடர்களுக்கு மட்டுமே முடியுமென்று எண்ணுகிறேன். இவ்வாறாக இந்துக்கல்லூரி யில் நானும், தம்பி பரமகுருவும், பி. ஏ., பட்டமும், தங்கை சரஸ்வதி இன்டர் வகுப்பும் படித்து முடித்தோம். "ஆண் குழந்தைகள் எல்லாம், எக்கஷ்டப்பட்டாவது படித்துப் பட்டம் வாங்கிவிட வேண்டும். ஆனால் பெண் குழந்தைகளைக் கட்டாயப்படுத்தி மேல் படிப்புப் படிக்க வைக்கக்கூடாது. அப்படிக் கண்டிப்புச் செய்தால் பெண்களின் உடல் நிலை கெட்டு விடும்" என்பது அப்பா அவர்களின் முடிவு. அவ்வாறே எனது தங்கை சரஸ்வதியின் படிப்பும் இன்டர் வகுப்புடன் நின்றுவிட்டது. நில புலன்களை ஒன்றையும் பொருட்படுத்தாமலும், "கருமமே கண்ணாய்" கருவையிலிருந்து பாளையங்கோட்டைக்குப் பிள்ளைகளைப் படிக்க வைப்பதையே ஒரு குறியாகக் கொண்டார்கள் அந்தக் கரும யோகியாகிய தந்தை அவர்கள்!

இந்தச் சந்தர்ப்பத்தில் நாங்கள் இரண்டாவதாகப் புதுப்பேட்டை நடுத்தெருவில் குடி புகுந்த வீட்டில் நடந்த சில முக்கிய சம்பவங்களைக் குறிக்க விரும்புகிறேன். ஒரே காம்பவுண்டில் இரு வீடுகள் அமைந்திருந்தன. ஒரு வீட்டில் ஆழ்வார் குறிச்சிகனம் சுப்பிரமணிய முதலியார் அவர்களின் குடும்பத்தாரும், அதன் பக்கத்து வீட்டில் எங்கள் குடும்பமும் இருந்தன. ஆசார முறையில் ஆழ்ந்திருக்கும் ஒரு சைவ முதலியார் குடும்பத்துடன் எங்கள் குடும்பம் ஒன்றுபட்டு ஒரே குடும்பமெனப் பழகி அன்னியோன்யமாக இருந்துவந்தது அனைவர்க்கும் ஆச்சரியமாக இருந்தது. முற்போக்கான மற்றவர்களுக்கு எங்களிரு குடும்பத்தாருக்கிடையில் இருந்துவரும் ஒன்றுபட்ட வாழ்க்கை முறை ஒரு நல் வழிகாட்டியாக இருந்தது. இதன் காரணமாக எங்களிரு குடும்பத்தாரையும் அவர்கள் அதிகமாக மதித்துத் தனி அன்பும் காட்டி வந்தார்கள்.

ஒரு தினம் வைதீகத்தில் ஊறிய தேசிகர் ஒருவர், மிகவும் ஹாஸ்ய உணர்ச்சியுடன் அதே சமயத்தில் உறுதியுடன் சில வாழ்க்கை உண்மைகளை விளக்கிச் சொல்லும் ஆற்றலை உடைய எங்கள் அப்பா அவர்களிடம் கீழ்க் கண்ட வினாவைக் கேட்டார். "சாமி உங்களுக்குரிய பேச்சுத்திறன் முதலிய மற்ற எல்லாத் திறமைகளின் உதவி கொண்டு, நீங்கள் அரசியலில் இறங்கி மேடை ஏறிப்பேசி, ஏன் பொதுத் தொண்டில் ஈடுபடக்கூடாது?" அதற்கு அப்பா அவர்கள், "பொதுத் துறையில் எல்லோருமே இறங்கிவிட்டால் குடும்பங்களைச் சீரான முறையில் அமைத்து ஒழுங்குபடுத்த ஒருவருமே இல்லாமல் போய்விடும். எந்த முறையில் பிள்ளைகளைப் பண்படுத்திக் குடும்பத்தை அமைத்தால் நல்லதென்று எனக்குப் படுகிறதோ, அந்த முறையில் செய்து என்னளவில் தேசத் தொண்டு செய்துவிட்டேன். இவ்வாறே எல்லோருமே செய்ய ஆரம்பித்தால், தேசத்தின் முக்கிய சொத்தாகிய குழந்தைகள் பண்படும்போது, நமது தேசமும் தானாகவே பண்படும். இந்த இலக்கை என்னைப் பொறுத்த வரை செய்து இன்புற்றுக்கொண்டிருக்கிறேன். மற்றபடி தாங்கள் சொல்லும் அரசியலுக்குத் தங்களை யொத்தவர்கள் தான் தகுதியானவர்கள்" என்று சொல்லி முடித்தார்கள். இவ்வாறாக, இல்லற மென்றால் என்ன? அடிப்படைத் தேசீய ஆக்க வேலை என்றால் என்ன? அரசியல் துறை என்றால் என்ன? என்ற பெரிய கருத்துக்களை ஆணித்தரமாக எடுத்துச் சொன்னதும், தேசிகர் அவர்கள் மேற் கொண்டு ஒன்றும் பேச இடமில்லாது எழுந்து சென்றார்.

இவ்வாறாக கர்மயோகியாகிய, அந்த அம்மை அப்பன் சுமார் முப்பது வருடங்களுக்கு முன்னதாகவே, சாதி மதம் முதலிய வேறுபாடுகளில்லாச் சமுதாயம் உருவாக்குவதற்கு வேண்டிய அடிப்படையைத் தம் அளவில் தம் குடும்பத்திலும், தம்மிடம் நெருங்கிப் பழகும் ஆத்ம நண்பர்களின் குடும்பத்திலும் அமைத்து உண்மையான தேசத் தொண்டு புரிந்தார்கள். அந்தப் புரட்சி வீரரான புனிதத் தந்தை,

இப்போது சமூகச் சீர்திருத்தச் சட்டங்களில் அடங்கிய தத்துவங்களை யெல்லாம் பல வருடங்களுக்கு முன்னதாகவே நடைமுறையில் எண்ணற்ற இடையூறுகளுக்கிடையே அமுல் செய்து வெற்றியும் அடைந்தார்களென்பது எனது முடிவு. இந்த இலக்குகளைச் சந்திக்கும்போது உண்மையும், அன்பும் தம்மிடம் காட்டும் ஆத்ம நண்பர்களுக்கு மட்டுமே கட்டுப்பட்டு அவர்களின் விருப்பத்திற்கு இணங்கி தம்மால் இயன்ற எல்லாப் பிரயாசைகளையும் எடுத்து அவர்களுக்காக இராப்பகலாக உழைப்பார்கள். ஆனால் பணத்தாலும், செல்வாக்கு, வேறு சூழ்ச்சி முதலியவற்றின் உதவியாலும் இந்த உண்மை வீரரை எதிர்த்தவர்களை தமது தெய்வ பலத்தைக் கொண்டு தோற்கடித்து, விரோதிகளையும்கூட நல்லவர்களாகவும், நண்பர்களாகவும்ஆக்குவார்கள். கந்தலைக்கட்டிக்கொண்டு வரும் உண்மை அன்பனிடம் மணிக்கணக்கில் பேசிக் கொண்டேயிருந்து அளவளாவி உபசரிப்பார்கள். ஆனால் ஆடம்பரத்திலும், காரிலும் வந்து காண வருகிறவர்கள் ஆணவத்தைக் காட்டி, உண்மை அன்பைக் காட்டாதிருந்தால் அவர்களைக் காணக்கூட மறுத்து விடுவார்கள். இவ்விதம் அம்மையைப்போல் ஆதரித்து, அப்பனைப்போல் அடக்கி ஆட்கொள்ளும், அந்த 'அம்மை அப்பனான' ஆத்மசக்தி!

முன் குறித்ததுபோல் எனது பி. ஏ. பட்டப் படிப்பு முடிந்ததும் சிலகாலம் நல்ல ஓய்வு எடுக்கவேண்டுமென்றேன். அதற்கு அவர்கள் சம்மதித்தார்கள். தம்பி பரமகுருவை எம். ஏ. படிக்கச் சென்னை அனுப்பினார்கள். சுமார் ஒரு மாத காலம் சாப்பிடுவதும், பின்பு தூங்குவதுமாகவே இருந்தேன். அதிக காலம் இவ்வாறு நல்ல ஓய்வெடுக்க வேண்டுமென்று நினைத்தவன் ஒரு மாத காலத்திலேயே சலிப்புத்தட்டி, 'ஏதாவது' வேலைக்குப் போகவேண்டுமென்று அப்பா அவர்களிடம் அடிக்கடி சொல்ல ஆரம்பித்தேன். அவர்களுக்கே உரிய பொறுமையுடன் கேட்டுக் கொண்டேயிருந்துவிட்டு, தமது ஆழ்ந்த கருத்தை இது சம்பந்தமாகச் சொன்னார்கள். "ஏதாவது ஒரு வேலைக்குப் போக வேண்டுமென்று சொல்லி அவசரப்பட்டுச் சம்பளம் குறைந்த வேலைக்கு ஆரம்பத்திலேயே அமர்ந்து கொண்டால் ஆயுள் பூராவும் செலவுக்குப் பற்றாது குடும்பத்துடன் கஷ்டப்பட வேண்டியது வரும். ஆகவே கொஞ்சம் பொறுத்திருந்து நல்ல ஆரம்பச் சம்பளத்துடன் அமைந்த வேலைக்குப் போகவேண்டும்", என்றார்கள். அதேபோல் வெகு சீக்கிரமாகவே பொருளாதார ஆய்வாளர் வேலை கிடைத்து ஒப்புக் கொண்டேன். நல்ல ஆரம்பச் சம்பளமும் மதிப்புமுள்ளதாக இருந்தது. சுமார் இரண்டு வருடங்கள் இவ்வாறு வேலை பார்த்து வரும் போது, ஒரு சமயம் டாக்டர் கொண்டல்ராவ் என்பவர்கள் அப்பா அவர்களிடம் பஸ்ப மருந்து சாப்பிடும் விஷயமாய் வந்திருந்தார்கள். அது சமயம் நாட்டு வைத்தியக் கல்லூரி யொன்று ஆரம்பிக்க இருப்பதாகச் சொல்ல, அப்பா அவர்கள், அவ்வாறென்றால் எனக்கு அதில் ஒரு இடம் பார்த்து வைக்கும்படி சொன்னார்கள். அவ்வாறே ஒரு இடம் எனக்கு அக் கல்லூரியில் ஒதுக்கி அப்பா அவர்களுக்கு எழுதினார்கள். அவர்களும் என்னை கூப்பிட்டு, "ஆங்கில வைத்தியமும் நாட்டு வைத்தியமுமாகிய இரண்டும் இணைத்துச் சொல்லிக் கொடுப்பதால், உன்னை இந்தப் புது மருத்துவக் கல்லூரியில் சேர்க்கிறேன். அப்படிப் படித்தால்தான், நாகரீக உலகத்தில் நம்மிடமிருக்கும் வெகு பிரயாசையுடன் கண்ட சித்த மருத்துவ உண்மைகளை நமது நாட்டிற்கும் வெளி நாட்டிற்கும் எடுத்துச் சொல்லி நிலை நாட்ட முடியும்" என்று சொல்லித் தமது சீரிய இலக்குவை எடுத்துக்காட்டி என்னை மிகக் கடினமான 6 வருட மருத்துவப் படிப்பில் ஈடுபடச் செய்ததுடன் மட்டுமல்லாமல், வேறு சில முக்கிய கருத்துக்களையும் சொன்னார்கள். கல்லூரியில் என்னைச் சேர்ப்பதால் நான் சம்பாதித்து வரும் மாதம் ரூபாய் இருநூறும், அத்துடன் அவர்கள் படிப்புக்காக செலவிடப் போகும் ரூபாய் நூறும் சேர்த்துத் தமக்கு மாதம் மூன்று நூறுக்குக் குறையாது செலவு ஏற்படுமென்றும்;

அது சம்பந்தமான கவலையைத் தாமே ஏற்றுக் கொண்டதால், நான் ஒன்றும் கருதாமல் படித்துவர வேண்டுமென்றும், அத்துடன் கல்லூரியில் சேர்ந்த பின்பு எவ்வளவு அதிக சம்பளத்தில் வேலை வந்தாலும் அதை ஒப்புக்கொள்ளக் கூடா தென்றும், மேற்கொண்டு சிரமத்தைப் பொருட்படுத்தாமல் படித்து முடிக்கவேண்டுமென்றும், சொல்லி உறுதிப்படுத்தி அனுப்பி வைத்தார்கள்.

அந்த அருள்வாக்கின்படியே நான் கல்லூரியில் சேர்ந்து மூன்று மாதத்திலேயே மாதம் ரூ. 250-ல் புள்ளிவிவர ஆய்வாளர் என்ற உத்தியோகம் என்னைத் தேடிக்கொண்டு வந்துவிட்டது. ஆனால் அப்பா அவர்களின் தெய்வீகமான அருள்நிறைந்த தீர்க்கதரிசனமான வாக்கு மேற்கொண்டு மருத்துவப் படிப்பை படிப்பது என்ற உறுதிக்கு வரச்செய்தது. அதனால் வந்த வேலையை வேண்டாமென்று எழுதி விட்டேன். மிகவும் பிரயாசையுடன் மேற்கொண்டு இரண்டு வருடம்படித்துமுடித்தேன். அது சமயம் என் திருமண ஏற்பாடுகளை அப்பா அவர்கள் செய்ய ஆரம்பித்து என்னுடைய அபிப்பிராயத்தைக் கேட்டார்கள். அதற்கு அப்பா அம்மாவுக்குப் பிடித்த பெண் எனக்கும் பிடித்ததுதானென்று சொல்லிவிட்டேன். அதுபடியே திருச்சியில் பெண் பார்த்து திருமணத்தை வெகு சிறப்பாக முடித்து வைத்தார்கள்.

மருத்துவப் படிப்பில் மூன்றாவது வருடம் படித்துக்கொண்டிருக்கும்போது அப்பா அவர்களுக்குப்பக்கவாதம்வந்து பாளையங்கோட்டையில் தனக்குத்தானே வைத்தியம் செய்து வெற்றிபெற்றதாகக் கேள்விப்பட்டேன். ஏனென்றால் அவர்கள் எனக்கோ, தம்பி பரமகுருவுக்கோ இதுபற்றி தெரிவிக்கவே இல்லை. அதற்குக் காரணம் நாங்கள் தூரதிசையில் இருப்பதால் கவலைப்படுவதுடன் படிப்பும் வேலையும் கெடுமென்று நினைத்ததுதான்.

இது சந்தர்ப்பத்தில் அவர்கள்தெய்வீகசக்தியின் உதவிகொண்டு அபூர்வ வைத்தியம் செய்யும் ஆற்றலை ஓரளவு குறிக்க விரும்புகிறேன். ஒருவருடைய விதியின் பலத்தையும் அவருடைய கருமவினையாகிய விட்டகுறை தொட்டகுறையின் நிலையையும், சூட்சுமமாகப் படம் போல் பார்த்துச் செய்யும் சீரிய வைத்தியம் அது. ஆகவேதான் சிலருக்குத் தாமே வலியச் சென்று வைத்தியம் செய்வதும், சிலர் பெரு முயற்சி எடுத்தும் அவர்களிடம் மருந்து சாப்பிட முடியாது போவதற்கும் காரணமாகும். அவர்களிடம் சித்தரது முப்பு வைத்திய முறை கைவசமிருக்கிறதென்று பலருக்கும் தெரியாதிருந்தது. ஏனென்றால் அவரவர்கள் நோக்கம் மனப்பக்குவத்திற்குத் தகுந்தாற்போல் உலக ஞானம் தெரிந்த அந்த உத்தமர் பழகி வந்ததே காரணம். சிலரிடம் அரசியலையும், சிலரிடம் இசையையும், சிலரிடம் வைத்தியமும், சிலரிடம் வேகடையான ஹாஸ்யமும், சிலரிடம் உலகலௌகீகமும், இன்னும் சிலருடன் ஆத்மீக அனுபவங்களையும் அவரவர்கள் தன்மைக்குத் தகுந்தாற்போல் பழகியும் பேசியும் வந்தது அந்த அம்மை அப்பன் தத்துவத்தின் பிரதிபிம்பம். மருந்து செய்வதில் ஈடுபடும்போது, பொருள் விரயத்தையும், சிரமத்தையும் கொஞ்சமும் பொருட்படுத்தாமல் இராப்பகலாக உழைத்து சித்த மருத்துவ ஆராய்ச்சியை அரசாங்க ஆதரவு ஒன்றுமில்லாமல் தமக்குத் தாமே தெளிந்து, முடிவான உண்மைகளைத் தெளிவாக நிர்ணயம் செய்து வைத்திருந்தார்கள். சொந்த மகனுக்குக்கூட இவ்வாறான உயர்ந்த கலையைச் சொல்லிக் கொடுக்காத பழக்கத்தை உடைய இந்த நாட்டில், எனக்கு எடுத்துச் சொல்லி தாம் கண்ட இன்பம் உலகமும் காணட்டும் என்ற பெருந்தகையுடன் பக்கத்திலேயே வைத்து சித்த வைத்தியமுறையைச் சொல்லச் சொல்ல எழுதவைத்து, சந்தேகத்தை நிவர்த்தி செய்து சித்தர் கலையை என்றும் அழியாதிருக்க வேண்டுவன செய்தார்கள். இந்தப் பெரும் நோக்குடனே என்னை

இணைப்பு மருத்துவக் கல்லூரியில் படிக்கவைத்ததுமாகும். ஏட்டில் படித்துமட்டும் சித்த வைத்தியத்தைத் தெளிவுபட நடைமுறையில் பழகுவது முடியாதென்றே சொல்லலாம். ஏனென்றால் பரிபாஷையில் புரியாமலிருக்க வேண்டுமென்றே, சித்தர்கள் எழுதிச் சென்றிருக்கிறார்கள். சித்தர்களின் நோக்கம், அப்படிச் செய்தால்தான் அதற்கே உரிய தகுந்த ஆத்மா அதைக் கையாளுமென்ற குறிகோள் போலும்! ஆகவேதான் அப்பா அவர்கள் தெளிந்த நடையில் தாம் கண்ட உண்மைகளை மட்டும் எழுதச் சொல்லி, என் மனதில் பதிய வைத்ததின் முக்கியத்துவம் இப்பொழுது நன்கு விளங்குகிறது. இவ்வாறு செய்துமுடித்துப் பின்பு ஒருநாள் எங்கள் அன்பு அன்னையிடம் சென்று "நான் இவ்வளவு பெரிய உயிர்க் கலையை உன் மகனிடம் ஒப்படைத்திருக்கிறேன், அவன் அதனுடைய பெருமையை உணர்ந்து போற்றுவானா?" என்று கேட்க, எங்கள் அன்னை அதற்கு, "புலிக்குப் பிறந்தது பூனையாகுமா! புலியாகத்தானே இருக்கும்; அத்துடன் அந்த அமைப்பிருக்கும்போது, அவனுக்குக் கிடைத்துத்தானே ஆகும்." என்ற அவர்களுடைய சம்பாசனையை பக்கத்து அறையிலிருந்து கேட்ட நான் புளகாங்கிதம் அடைந்தேன்.

பொதுவாகவே அப்பா அவர்கள் பலருக்கு வேலை கொடுத்து அவர்களது சம்பளத்தை தாமதமில்லாமல் உடனுக்குடன் கொடுத்து இன்புறுவதுவழக்கம். இதற்கு ஒருசான்று பாளையங்கோட்டை பெருமாள்புரம் வீடு. அது கட்டிடவேலை நடக்கும்போது, வேலைக்குவரும் ஆட்கள் உண்மையுடனும், முழுமனதுடனும் தனது சொந்த வீட்டுக்காரியம்போல் வேலை செய்ய வேண்டும். அப்படி இல்லாவிடில் நீக்கி விடுவார்கள். வீட்டுச் செலவுக்கு இல்லாவிட்டாலும்கூட உண்மையான வேலையாட்களுக்கு கூலியைக் கொடுத்து இன்புறுவார்கள். இந்தத் தெய்வீக நிர்வாகத்தில் வேலை செய்கிறவர்கள் மன நிம்மதிக்குப் பல தத்துவ உண்மைகளையும், உலக அனுபவங்களையும் அழியாச் செல்வமாகப் பெற்றுக் கொண்டே இருப்பார்கள். தப்புச் செய்தால் அதைச் செய்பவர் வல்லவராயினும், மெல்லவராயினும் சரி பயமின்றி இடித்துரைத்துத் திருத்துவார்கள். அது சமயம் அப்பன் தத்துவம் அவர்களிடம் வெளிப்படும். அதே சமயத்தில் ஆதரிக்கும்போது அம்மையின் தத்துவமும் வெளிப்படும். இப்படிப்பட்ட அபூர்வ நிர்வாகத்தில் ஈடுபட்ட ஆசாரி ஒருவர், அப்பா அவர்களின் ஒரு மணி நேர அறிவுரையைக் கேட்டு கண்ணீர் விட்டு "என் சொந்ததந்தைகூட என்முன்னேற்றத்தைக்கருதி இவ்வளவு பிரயாசைஎடுக்கவில்லை" என்று ஆனந்தத்தால் அழுவதை நான் பார்த்திருக்கிறேன். அப்போது எங்கள் தந்தை அவர்கள் அனைவருக்கும் தந்தையாகவும் தாயாகவும் இருந்து ஆதரிக்கிறார்கள் என்று நினைத்து மனம் உருகினேன்.

ஆறுவருடக் கடினமான மருத்துவக் கல்லூரிப் படிப்பை, அவர்களின் திருவருள் சங்கல்பச் சக்தியின் உதவி கொண்டு முடித்து டாக்டர் பட்டத்துடன் தம்பி பரமகுருவுடன் கோபிச்செட்டிபாளையத்தில் தங்கியிருந்த அப்பா அம்மாவைக் காண்பதற்கு விரைந்து சென்றேன். தனக்கே உரிய தனிப்பட்ட முறையில் என்னை வரவேற்றார்கள். இவ்வளவு பெரும் முயற்சி எடுத்துப் படித்து முடித்த பட்டப் படிப்பை அவர்கள் கொஞ்சமும் மதித்துப் பெருமைப் படுத்தியதாகக் காட்ட வில்லை. இது எனக்கு வியப்பையும், புரியாத திகைப்பையும், ஓரளவு மனத்தளர்ச்சியையும் கொடுத்தது. இதைச் சூட்சுமமாக அறிந்த அவர்கள் சில தினங்களுக்குப்பின்பு கீழ்க்கண்டவாறு சொல்லி மனதைத் தேற்றினார்கள். "உனது உண்மையான படிப்பு இனிமேல் தானிருக்கிறது. இது வரை படித்துப் பெற்ற பட்டப் படிப்பு உலக அங்கீகாரம் பெறுவதற்குரிய போலிப் படிப்பு. இனிமேல் தான் உண்மையான நிரந்தரப் படிப்பாகிய சித்த மருத்துவ முறைகள் செய்பாகம், கைபாகம் அறிந்து செய்து பழகி அக்கலையை நிரந்தரப் படுத்த வேண்டும். இந்த முடிவைக்

காணவே இதுவரை கொடுத்த படிப்பு'' என்று சொல்லி யாராலும் காட்ட இயலாத ஒரு புதுப் பாதையைக் காட்டினார்கள். இச்செயல் என்னைச் சிந்தனையில் ஆழ்த்தியது. அவ்வாறே பாளையங்கோட்டைப் பெருமாள்புரம் வீட்டில் வைத்து மருந்து செய்முறையில் என்னைப் பழக்கினார்கள். பின்பு அப்பா அம்மா கருவை சென்று வசித்தார்கள். ஒருவருடத்திற்குப்பின் அப்பா அவர்கள் ஆசி கூறி கோவில்பட்டியில் டாக்டர் தொழிலைக்கோலாகலமாக ஆரம்பித்து வைத்தார்கள். அப்பா அவர்கள் என் வசம் ஒப்படைத்த சித்த மருத்துவ முறையையும், நான் கற்ற ஆங்கில மருத்துவ முறையையும் இணைத்து நூதனமாக அப்பா அவர்கள் கொடுத்த மனிதப் பண்பாட்டையும் மனதில் கொண்டு வைத்தியம் செய்ததால் பலருடைய ஆதரவும் அன்பும் அபரிமிதமாகப் பெற முடிந்தது. அத்துடன் அடிக்கடி கருவை சென்று அப்பா அவர்களிடம் சித்த மருத்துவப் பயிற்சியும் தொடர்ந்து பெறும் வாய்ப்புமிருந்தது.

இந்தச் சமயத்தில் விதிவிளையாட ஆரம்பித்தது. ஒரு நாள் சென்னையில் முன்னாள் நான் படித்த கல்லூரியில், கெசட் பதிவு பெற்ற ஒரு உத்தியோகம் காலி இருப்பதாகவும், மனுச் செய்யும் படியும் தகவல் வந்தது. நானும் ஒரு மனுவைப் போட்டு வைத்தேன். சில தினங்களில் வேலையைஒப்புக்கொள்ளும்படி ஆணையும் வந்து விட்டது. மிகவும் சிறப்பாக நடந்து வரும் டாக்டர் தொழிலை விடுவதா? அல்லது ஆராய்ச்சித் துறையில் அமைந்த இந்த வேலையை ஒப்புக் கொள்ளுவதா? என்ற குழப்பத்தில் சில தினங்கள் சும்மாவே இருந்து விட்டேன். மறுபடி உடனே ஒப்புக்கொள்ளும்படி கேட்டு வந்ததும், அந்த ஆணையுடன் கருவைக்கு அப்பா அவர்களின் ஆணையைக் கேட்கச் சென்றேன். எதிர்காலம் தெரிந்து சொல்லி வழிகாட்டும் தெய்வம் இது சம்பந்தமாக மௌனம் சாதித்தது. அது சமயம், ''கோவில் பட்டியிலிருந்தாலும், மதராஸிலிருந்தாலும் ஒன்றே. நினைத்தால் வந்து விடலாம். அவனை மதராஸில் வேலை ஒப்புக்கொள்ளச் சொல்லுங்கள் சாமி!'' என்று எங்கள் அன்னை சொன்னாள். விதியின் வலியைஉணர்ந்தகலியுகக்கண்ணனான அப்பா அவர்களும், ''அம்மா சொல்லுகிறாள் அதுபடி செய்'' என்று சொல்லித் தம் கருத்தை மறைத்து விட்டார்களென்பது என் உற்றார் சொல்லப் பின்னால் அறியவந்தேன். எண்ணித் துணிந்த பின்பு பின் வாங்குவது சரியில்லை என்று ஓர்மையுடன் வேலைப் பார்த்துவர ஆரம்பித்தேன். செய்து வரும் மருத்துவ ஆராய்ச்சியுடன் சேர்த்து அப்பா அவர்கள் அருளிச்செய்த சித்த மருத்துவ முறையையும் கையாண்டு அவர்களின் சங்கல்பத்தை நிலை நிறுத்தலாமென்ற துணிவுடன் இருந்து வரும் போது, மற்றொரு பெரும் அதிர்ச்சியும் சோதனையும் உருண்டு வந்தன. அண்மையிலேயே இருந்து அளவளாவி அன்பு அமிர்தம் ஊட்டி ஆதரித்து வந்த 'அம்மை அப்பன்' தூல நிலையைவிட்டு சூட்சும நிலையை அடைந்தது. அந்நிலையில் அச்சக்தி அது நியமித்த இலக்குவைச் செய்து முடிக்க என்னைக் கருவியாக உபயோகிக்கு மென்று அசைக்க முடியாத நம்பிக்கை ஒன்றே எனக்கு ஆறுதலைக் கொடுக்கிறது. ''உலகிலுள்ள நோயெல்லாம் ஒரு நோய்; அதைத் தீர்ப்பது ஒரே மருந்து'' என்ற சித்த மருத்துவ அடிப்படையான உயிர் மருந்தை'', செய்து முடித்தால் அந்த சக்தியின் இலக்கு நிறைவேறிய தெனலாம். அதற்கு அத்திருவருள் சக்தி சூட்சும நிலையில் நின்று எல்லா ஆற்றலையும் கொடுக்குமாகுக! வெல்க தவத்திரு பொன்னையாஸ்வாமி நெறி!

இதுவரை குறித்த, 'அம்மையப்பன்' நிலையிலிருந்து, ''நயம்பயம்'' என்ற அடிப்படையில் அமரத்துவம் பெற்ற அப்பா அவர்கள் எனக்கு ஊட்டி வளர்த்த அமிர்தத்தை யொத்த சில தத்துவ உண்மைகளை இங்கு குறிக்க விரும்புகிறேன். இவை என் வாழ்க்கையில் வழிகாட்டியாய் நின்று ஆத்மீக, லௌகீக காரியங்களில் முன்னேறிச் சென்று வெற்றி காண உதவியாக இருக்கின்றன. மிகச் சிறிய வயதிலிருந்தே ஒரு

ஆக்கிரண சக்தி என்னை இழுப்பதுபோன்ற உணர்ச்சியுடன், தம்மை மறந்து அப்பா அவர்கள் மணிக்கணக்கில், மணி கொண்டடிக்கும் ஓசையுடன் கேட்போர் எல்லாம் மெய் மறந்து இருக்கப் பேசுவதைக் கேட்டு இன்புறத் துடிப்பேன். அதுசமயம் மிகக் கண்டிப்பாக என்னைத் துரத்தி அந்த ஆபூர்வப் பேச்சுக்களை கேட்க விடாது படிக்கச்செல்லும்படி விரட்டுவார்கள். இருப்பினும் மறைவாக இருந்தாவது, அப்போதைக்கப்போது அத்தெய்வீகப் பேச்சை யான் கேட்டு அறிந்த உண்மைகளையே கீழே கொடுக்கிறேன்.

"கடமையே இலட்சியம். இலட்சியமே தெய்வம். இது பகவத் கீதையின் முடிவான தத்துவம். ஆகவே கடமையைச் செய்தால் தெய்வ வழிபாடு ஒருவன் செய்கிருன். கடமை என்பது தனக்குச் செய்யவேண்டியது, தன் குடும்பத்திற்குச் செய்ய வேண்டியது, தன் உறவினர் நண்பர்களுக்குச் செய்யவேண்டிய கடமை, தேசத்திற்குச் செய்யவேண்டிய கடமையென்று பலவாகப் பிரியும்."

"மெய்யனுக்கு மெய்யன், பொய்யனுக்குப் பொய்யன்! இது ஆழ்ந்த அறிவாளிகள் அறிந்த உண்மை. பகவத்கீதையின் அடிப்படையும் அதுவே. உண்மையுள்ள ஒருவரிடம் பொய் காட்டினுல் உலகில் ஒருவருமே துணையில்லை. அத்துடன் அது தெய்வத் துரோகமு மாகும். அதே போல் பொய்யனிடம் மெய் காட்டினுல் பல இடையூறுகள் உண்டாகும்".

"குடலும் கூந்தலும் கொண்டது கொள்கை. ஆகவே கூழானுலும், நளபாகமானுலும் மன நிம்மதியுடனும், திருப்தியுடனும் சாப்பிட்டுப் பழகினுல் குடலும் இதை அனுசரித்து நிற்கும், கூந்தல் சீவி அழகு செய்யும் விதத்தில் அமைவதுபோல்."

"துரும்பையும், 'மாப்பிள்ளை' என்று சொன்னமாத்திரத்தில் ஒரு முழம் எழுந்திருக்கும்"

"கடவுள் உண்டென்று சொல்லுவோரும், இல்லையென்று சொல்லுவோரும் ஒன்றே. ஏனென்ருல் இவர்களிருவருமே புத்தி கூர்மையைக் கொண்டு தர்க்கருபமாக கடவுளை நிருபிக்க முயல்கிருர்களே தவிர இருவரும் கண்டிலர். கண்டவர் விண்டிலர். விண்டவர் கண்டிலர்"

"கண்டதை மட்டும் பேசும் உலகம்; ஆகவே அது என்ன நினைக்குமோ என்று சந்தேகித்து செயலில் இறங்காது இருந்துவிடக் கூடாது. நின்ருல்நிற்கிருர் என்னும்,நடந்தால் நடக்கிருர் என்னும் படுத்தால் படுத்துவிட்டர் என்னும். ஆகையால் தனது முயற்சியில் தன் நிலையை உயர்த்திக் கொண்டால் உலக அபிப்பிராயமும் அதற்குத் தகுந்தாற்போல் மாறிக்கொள்ளும்"

"தன்னைவிட உயர்ந்த நிலையில் இருப்பவர்கள் தன்னை விரும்பினுல் ஒழிய, பந்துக்களாய் இருந்தாலும், தானே வலிய அவர்களிடம் போகக் கூடாது. ஆனுல் தன்னைவிட எளியவர்கள் விரும்பா விடினும் வலியச் சென்று அவர்களை ஆதரிப்பது உத்தமம்"

"மனிதன் நடக்கும் கோயில். அவனுக்கு நம்மால் ஒரு நன்மையாவது செய்வதற்கு வாய்ப்பு உண்டாகுமென்ருல், அதை முழு மனதுடன் செய்வது தெய்வ ஆராதனை யாகும்.

இரு மதத்தினைச் சேர்ந்த இருவர், தர்க்கம் பண்ணி முடிவில் தன் தன் மதத்தை நிருபிக்க முயற்சி செய்து கொண்டிருந்த சந்தர்ப்பத்தில் அமரத்துவம் பெற்ற அப்பா அவர்கள் மௌனமாகயிருக்க, இது சம்பந்தமாக அவர்களுடைய முடிவான கருத்தைக் கேட்டபோது, "வெவ்வேறு மதப்பற்றுள்ளவர்கள், ஒரே முடிவுக்கு வந்து விட்டால் பல மதங்களும் உலகிலே இல்லாது போகும். அது முடியாத காரியம். ஆகவே யானும் இத்தர்க்கத்தில் ஈடுபட்டு ஒரு முடிவு காண்பது முடியாதென்பதால் ஒதுங்கியிருந்தேன். ஆனுல் எல்லா மதங்களிலிருந்தும் 'எம்மதமும் சம்மதம்' என்ற யோக நிலையில்

இரண்டறக்கலந்து மௌனத்தியானம் செய்யும் யோகிகளைத்தான் நான் விரும்புகிறேன். அவர்கள் பித்தராகவும் பேயராகவும் உலகத்தாரால் கேலி செய்யப்பட்டோ அல்லது உலக விவகாரங்களில் ஈடுபட்டுத் தாமரையும் தண்ணீரும் போல் இருந்து, இல்லற வாழ்க்கை நடத்தி யோக நிலைப் பேரின்பத்தை மறைமுகமாக இருந்து அனுபவித்து இன்புற்று வரும் ஞானிகளைத்தான் நான் குறிக்கிறேன்," என்றார்கள்.

"சங்கீதமானது, சரநூல் முதலிய நாசி ஓட்டக் கலையைக் கலையவிடாது, மனதை ஓர்மைப்படுத்தி யோக நிலைக்குத் துரிதமாக எடுத்துச் சென்று தன்னை மறந்து இன்புறச் செய்யும் பலவித யோகங்களில் ஒன்று. அதேபோல் அந்த யோக நிலையைக் கலைக்கவும் அதற்குச் சக்தி உண்டு."

"பரதநாட்டியமும் ஒருவித யோகம். அதை உரிய தத்துவப் பயிற்சியுடன் தன்னை மறந்து ஒரு மாது ஆடுவாளேயானால், அன்னாருக்கு எதிரில் உள்ளவர் எவ்வளவு காலம் நிலைத்திருப்பார் என்று கூறிவிடும் திரிகால ஞான நிலை ஏற்படும்."

"குழந்தைகளை அறியாப் பிராயத்திலேயே, இப்போதிருக்கும் முதியோர்களின் பழக்க வழக்க சாவகாசம் ஏற்படாமல் தனிப்பட்ட சூழ்நிலைகள் அமைந்த பயிற்சிப் பள்ளிகளில் சுமார் 10 வருட காலம் குறையாமல் புதுப் பண்பாடுடன் பயிற்சியும் படிப்பும், பழக்க வழக்கமும் கொடுத்து வெளிக்கொண்டு வந்தால் தேசத்திற்குப் புதிய வாழ்க்கை ஏற்படும். அல்லாவிட்டால் இப்போதிய முதியோர்களிடையே பரவி இருக்கும் நோய்களாகிய சாதி மத வேறுபாடுகள் குழந்தைகளையும் பாதித்து நாட்டையும் பலகீனப்படுத்தும். ஆகவே குழந்தைகளைப் பண்படுத்துவதுதான் முதல் ஆக்க வேலையாகும். அவர்களை நன்கு அபிவிருத்தி செய்துவிட்டால், அணைகட்டல், ரோடுபோடல் போன்ற பல ஆக்க வேலைகளால் ஏற்படும் நன்மைகளை அனுபவிக்கவும், போற்றவும் வேண்டிய பண்பாடு அவர்களுக்குண்டாகும்."

"படித்தது கேட்டது மட்டும் எடுத்துப் பேசுவதில் பயனில்லை. தானே வாழ்க்கையில் அனுபவித்து அறிந்து கண்ட உண்மைகளை மட்டும் எடுத்துச் சொன்னால் நன்மையுண்டு."

"திருவள்ளுவர் வைரத்தை ஒத்த தத்துவங்களை மட்டும் எழுதிச் சென்றார். ஆனால் கம்பனோ அந்த வைரங்களைத் திறம்படக்கட்டி வாழ்க்கைக்குப் பொருத்திச் சொல்லி இருக்கிறார். கம்பன் செயல் மிகவும் அபூர்வமானது."

"பெண் கொடுக்கும்போது தன்னைவிட உயர்ந்த குடும்பத்திலும்; பெண் எடுக்கும்போது தன்னைவிடத் தாழ்ந்த குடும்பத்திலும் சம்பந்தம் செய்ய வேண்டும். 'தனக்கு எளியது தாரம்' என்ற அடிப்படையில்."

"முக்காலத்தையும் அறிவதற்குப் பல முறைகள் உண்டு. அவைகளாவன:- சோதிடம், பஞ்சபட்சி, சரநூல் பயிற்சி முதலிய 260-க்கும் மேலான யோக முறைகளிருந்த போதிலும், இவை எல்லாவற்றிலும் கணக்கில் தப்பு ஏற்படுவதற்கு இடமிருக்கிறது. ஆனால், "ஞான திருட்டி," என்ற முறையில் அறியப்படுவது நிச்சயம் நடந்தே தீரும்."

"யாவும் விட்டகுறை தொட்டகுறை என்ற நியதியில், விதி அமைப்புப்படி நடந்தேறுவதால், எக்காரியமும் சிறிதானாலும் சரி, பெரிதானாலும் சரி கைகூடுவதற்கு ஒரு தக்க "டயம்," (காலம்) உண்டு. அக்காலம் வரும் வரை நம்பிக்கையுடன் பொறுத்திருந்து முயற்சித்துச் சாதித்துக்கொள்ள வேண்டும்."

"திரௌபதி, தன் துயில் உரியும் பொழுது, தனது சக்தியில் நம்பிக்கைகொண்டு அவமானத்தைத் தடுக்க முயன்றும், ஒரு நிலையில் முடியாதென்று பட்டதும், தன்னை மறந்து, 'தான்' என்ற எண்ணத்தை விட்டு

தெய்வ பலத்தை நம்பிய மாத்திரத்தில்தான், 'அருட்சேஸே' உண்டாகி அவமானம் ஏற்படாது தவிர்க்கப்பட்டது.

"எல்லோரும் சாமியாராகிவிட முடியாது. அது அவ்வளவு சுலபமான வித்தையல்ல. ஆகவே ஒவ்வொருவரும், லௌகீக உலக காரியங்களில் வெற்றி பெறுவதற்குத் தக்க வாறு படிப்பு, பொருள் முதலியவைகளைப் பெற்று ஒரு நிலையில் அமர்ந்து கொள்ளும் சக்தியைப்பெற வேண்டும். அப்போது இரு பலனையும் அடைவதற்கு வாய்ப்புண்டு, அல்லா விட்டால் ஒருவருக்கும் உபயோக மில்லாமல் வாழ்க்கை விருதாவாகும். உலக காரியங் களில் வெற்றி காண முடியாதவன், சாமியா ராக மட்டும் எப்படி ஆகிவிட முடியும்?"

"ஒருவனைத் துன்புறுத்திக் கெடுப்பதற்கு யௌவனம், தனசம்பத்து, அபிவிவேகமென்றே மூன்றும் சேர்ந்துவேண்டியதில்லை. யௌவனத் தின் அவஸ்தையே போதுமென்று கவி காளி தாசர் கருதுகிறார்."

"தாமிரத்தில் ஊறல் அறில் தன் தேகத்தில் ஊறல் அறும்" செம்புக்கு தனக்குத்தானே துர்நாற்றம் உள்ள ஒரு களிம்பை உற்பத்தி செய்யும் குணமுண்டு. அதேபோல், மானிட உடலிலும் களிம்பை யொத்த துர்நாற்ற அசுத்தம் தானுகவே உற்பத்தியாகிக் கொண் டிருக்கிறது. தாமிரத்தைத் தக்க முறையில் சுத்திசெய்து,முப்புவின்' உதவிகொண்டுதாமிர பஸ்பமாகிய உயிர் மருந்தென்ற கல்பத்தைச் செய்து முடித்து உட்கொள்ள, தன் தேகத்தில் ஊறல் நீங்கி உடல் நோயும் உயிர் நோயும் எடுபட்டு, மனத்திற்குச் சாந்தி ஏற்படும்; வாசியும் கூடும். இதுவே இராஜயோகத்தைக் கைகூடச் செய்யக்கூடிய இராஜ வைத்திய மாகிய சித்த வைத்தியம்."

ஒரு அபூர்வ ஆத்மாவின் அபூர்வச் சாதனை களே அடுத்துவரும் பரம்பரையின் வேதமாகும். அது அந்தப் பரம்பரையின் சொத்துமாகும். அபூர்வ கலியுக அவதாரபுருடர்களில்ஒருவராக கருத வேண்டிய 'அம்மையும் அப்பனு'மாக இருந்து ஆதரித்து வந்ததும், இப்போது சூட் சும நிலையிலிருந்து ஆதரித்து வருகிறதுமாகிய தவத்திரு பொன்னையா சுவாமிகளின் நெறியை ஒருவாறு எழுதிமுடித்தேன்.

---

## "அருள் மொழிகள்"

"செத்தது நீயா? உன் அண்ணனு?" என்று மந்த புத்தியுள்ள முதலாளி தன்னைக் காணவந்த தோட்டக்காரனைப் பார்த்துச் சொன்னதாகச் சொல்லி அனை வரையும் குலுங்கக் குலுங்கச் சிரிக்க வைப்பார்கள்.

"எப்போதும் எதில்ரேட்தி அன் ரெடி" போல் இருக்கிருயே என்பார்கள். இதில் குறித்த ஆங்கிலேயே மன்னன் எப்போதும் ஒரு காரியத்திற்குத் தயாராகாமல் சோம்பேறியாக இருப்பதை ஒரு உதாரணமாகச் சொல்லி குறித்த நேரத்தில் எதற்கும் தயாராகவேண்டும் என்ற பெருங்கருத்தை ஹாஸ்யமாகக் கூறுவார்கள்.

"ராஜயோகம் நீசப்பார்வை, நீசயோகம் ராஜப் பார்வை" என்று சோதிடத்தைச் சுருக்கிச் சூத்திரமாய் விளக்குவார்கள். அதாவது சிலருக்கு ஆரம்பத்தில் யோக அம்சங்கள் சிறப்பாக இருந்த போதிலும், அதனுடைய முடிவில் நீசத்துவம் ஒத்த சில அசூசையான சம்பவங்களும் கலந்திருக்கும். ஆனுல் மற்றும் சிலருக்கு ஆரம்பத்தில் நீசத்துவம் உள்ள கஷ்டங்கள் ஆரம்பித்தும், முதலில் இருந்தது போலில்லாது முடிவில் பலருக்கும் நன்மையாகவும், பல சிறப்புள்ள முடிவுகளும் உண்டாகும்."

# சாகாக் கலைஞர்

மெய்வழி திருகேந்திர அனந்தர் ம. ரா. சண்முகசுந்தரம், B. A., B. L., மதுரை

"விஞ்ஞானம்" என்று இப்போது வழங்கி வருகின்ற புறத்துறையிலும், "மெய்ஞ்ஞானம்" என்ற அகத்துறையிலும், இரண்டு துறைகளிலுமே, "அற்புதங்கள்", அதாவது சாதாரண அறிவுக்கு எட்டாத நிகழ்ச்சிகள் உண்டு. நமது சிற்றறிவினது பாரித்துப் பெருகிய வடிவுதான் "விஞ்ஞானம்" என்றால், நமது நுண்ணறிவு நுணுகி நுணுகி உணர்ந்தறியும் அறிவொளியே "மெய்ஞ்ஞானம்" எனலாம். "விஞ்ஞான" நாட்டமே உண்மை நாட்டம், பயன் தருவதும் அதுவே, என்று முடங்கும் நாற்காற் குருடர்கள், "மெய்ஞ்ஞான"க் காட்சிகளுக்கு முழுக் குருடர்களே.

என் தம்பி பேராசிரியர் குருசாமி தனது கட்டுரையில் கூறியுள்ள நிகழ்ச்சிகள் மெய்ஞ்ஞானி ஒருவரின் வாழ்க்கையில் வெகு சாதாரணம்.

தவத்திரு பொன்னையா சுவாமிகளைப் பற்றி நினைக்கும் போதெல்லாம் அவர்களது பொன் மேனியின் பொலிவு முன்னிற்கும். அவர்களை நான் முதன்முதலில் சந்தித்தபோது, தூய்மையான வெள்ளை வேட்டியும், வெண் பட்டங்கியும் அணிந்திருந்ததோடு, மிகக் கவர்ச்சியாகத் தலைப்பாகையும் கட்டியிருந்தார்கள்.

சுவாமிகளது நாவன்மையைமறக்கமுடியாது. மேடைப் பேச்சில் அவர்களுக்கு நம்பிக்கைக் கிடையாது. சுவாமிகளது பேச்சுத் திறமையையும், அது ஒரு விநாடிப் பேச்சாயிருந்தாலும் அது தவறாமல் விளைவிக்கும் நற்பயனையும் நோக்க, இன்றைய பேச்சுப் பெருச்சாளிகளெல்லாம் தத்தம் சின்னஞ் சிறு சிலவுகளில் சென்றொழிய வேண்டியதே. செம்பொருள் கண்டார் வாய்ச்சொல்தானே நிறைமொழி? மற்ற எல்லாம் வெறுமொழிதானே?

உண்மையான துறவிகள், உலகத்து ஏனையோர் போலவே, மனைவியொடு மக்களும் பெற்றுத்தான் வாழ்வார்கள் போலும். மெஞ்ஞானமும் மெய்த்துறவும் மனிதரிடமிருந்து ஓடுவானேன்? அவற்றின் உண்மைப் பயன் மனிதரற்றகாட்டில் யாரை வாழ்விக்க? நாட்டுக் கல்லவா வேண்டும் அவர்களது திருநோக்கு?

சுவாமிகள் திருமணம் கொண்டபின்பும் சில ஆண்டுகள் தனித்தே இருந்தது உண்மை தான். ஆனால் எங்கள் அன்னையாரோடு அவர்கள் வாழ்ந்த ஆண்டுகளே பல. அவர்கள் ஒளிந்திருந்த ஒடுக்கத்திலிருந்து வெளியாகி மனை வாழ்க்கையை மேற்கொண்டபோது, தமக்கென உரிய வீடும் பிறவசதிகளும் ஒன்றுமில்லை. உத்தியோகம் பார்த்தார்களா, உழுதார்களா, வேறு வகையில் உழைத்தார்களா, மற்ற உலகத்தவர் போல? ஆனால் வாழ்க்கை வசதிகளில் எதில் குறைந்திருந்தார்கள்? "அருள் அனைத்தும் ஆட்டும், சுமை நீ பொறுப்பது என்?" என்று நான் ஒரு முறை சொன்னபோது—"வாழ்க்கையின் உண்மையை எவ்வளவு நன்றாகச் சொல்லி விட்டீர்கள்! நீங்கள் எழுதிய பாட்டா இது?" என்றார்கள்.

மக்களை "அவையத்து முந்தியிருப்பச் செய்" துள்ளமையிலிருந்து சுவாமியவர்கள் மனையறம் பேணிப் பெற்ற வெற்றித்திறத்தினை ஒருவாறு அறியலாம்.

என் குருதியிலிருந்த இனிப்புப் பெருக்கத்தாலே அடிக்கடி நேரும் மயக்கத்தாலும் பிற சில தொல்லைகளாலும் பாளையங்கோட்டையிலுள்ள பெரிய மருந்தகத்தில் படுத்திருந்தேன். இதனை எவ்வாறு அறிந்தார்கள்? ஒரு நாள் மாலை நானிருந்த தனியறைக்கு வந்தார்கள். நாங்கள் பேசிக்கொண்டிருந்த போது, மருந்தகத் தலைவர், மாவட்டத் தலைமை மருத்துவ அதிகாரி, வந்தார், "அதிகம் பேசக்கூடாது; மருந்து என்று யாரிடமும் ஒன்றும் வாங்கி உண்ணலாகாது. மருந்தக விதிகளின்படி கண்டிப்பாயிருக்க வேணும்..." என்று ஆங்கிலத்தில் என்னிடம் சொல்லலானார். சுவாமிகளுக்கு ஆங்கிலம் தெரியாததல்ல, மருத்துவரும் சுவாமிகளும் பேசினர்,

அப்பேச்சின் முடிவில் சுவாமிகள் சொன்னது என் நெஞ்சத்தில் அழியா எழுத்தாக அழுந்தி விட்டது. அதன் சுருக்கம் வருமாறு: "டயாபிட்டிஸ் என்ற சர்க்கரை நோய்க்கு உங்களிடம் மருந்து கிடையாது. இதை ஒப்புக்கொள்ளும் நீங்கள் சர்க்கரை நோயாளிகளை ஏன் முடக்கி வைக்கவேணும்? கழுத்து அறுபட்டு குற்றுயிராய் நேற்றுக் கொணரப்பட்ட ஒருயிரும் உங்களுக்குஒரு 'கேசு' தான்! இங்கே ஒரு வாரமாக வறிதே முடக்கி வைத்திருக்கும் இந்தத் தம்பியின் உயிரும் ஒரு 'கேசு' தான்! ஏதோ வாங்குகிற சம்பளத்துக்கு மருந்தகத்தைச் சுற்ற வேண்டியது; எவனோ எங்கோ செய்துபெருவிலைவாங்கிக்கொண்டு அனுப்பின ஏதோ ஒன்றை, எந்த எந்த நாட்டிலோ எது எதைப் பார்த்தோ எப்படி எப்படியோ எழுதிய ஒன்றை நூல் எனக் கொண்டு, அதில் சொல்லியது சரிதானோ என்றுகூடத் தெரியாத நிலைமையிலேயே, மருந்தென்ற பெயரால் ஒன்றை உண்ணவைத்தும் ஒன்றை ஊசியால் குத்தி உட்செலுத்தியும் உயிர்களை வதைக்கிறீர்கள். நோய் நீங்குவது உங்களாலோ நீங்கள் மருந்தென்று தரும் எதுவாலோ அல்ல, உயிரின் ஆற்றலால், என்பது நீங்கள் ஒப்பினாலும் ஒப்பாவிட்டாலும் உண்மையே. பிறநாட்டு மருந்துகளை விற்றுத் தருவதற்குத் தகுதியான "ஏஜண்டு"கள் தானே நீங்கள்?" என்றார்கள்.

பெரிய டாக்டர் இங்கே குறுக்கிட்டார்—"டயாபிடிசைத் தீர்க்க உங்களிடம் தான் மருந்து உண்டா?" என்றஏளனக்கேள்வியோடு. "பிறவிப் பிணியையேத் தீர்க்கிறவர்களிடமா இந்தக் கேள்வி?" என்று சொல்லிச் சமாதானம் செய்ய முயன்றேன். சாமிகள் விடவில்லை. "உமக்கே 3½% சர்க்கரை இருக்கிறதே! பல ஆண்டுகளாக முயன்றும் உம்நோயையே நீக்க முடியாத நீர், 4½% உள்ள இந்தத் தம்பிக்கு என்ன செய்துவிடுவீர்?" என்றார்கள். சாமிகள் இதைச் சொன்னதும் டாக்டர் வாயடைத்துப் போனார். "எனக்கு டயாபிடிஸ் என்றும், அதிலும் 3½% சர்க்கரை என்றும், திட்டமாக உண்மையைச் சொல்லி விட்டார்களே! உங்களுக்கு 4½% என்பதையும் நீங்கள் சொல்லித் தெரியவில்லை போலிருக்கிறதே ..." என்ற வண்ணம் தனது வியப்புணர்ச்சியை என்னிடம் கொட்டிக் கொண்டிருந்ததே ஒழிய, நோய்க்கு மருந்து வாங்கலாமே என்ற உணர்ச்சி தோன்றவில்லை அந்த மண்டையில்!

மருந்தகத்தினின்றும்விடுதிபெற்று,ஒன்பதே வேளை மருந்தில் என் உடம்பைத் துப்புரவு செய்தருளினார்கள். அவர்கள் செய்தது மருந்தா, மாயமா! "இந்த நோய்தீர்வதில்லை; நாளடைவில் உடம்பை முழுதும் அழித்து விடும்". என்று மருத்துவ "வல்லுநர்களால்" கைவிடப்பட்ட நான் சுவாமிகளின் திருநோக்கத்தால் இன்று அறுபது நிறைந்தும் நல்ல உடல் நலனோடு இருந்து வருகிறேன்.

நானறிந்த இன்னொரு நிகழ்ச்சி. எனக்கு மிக நெருங்கிய உறவுள்ள அம்மா ஒருவர் "கனோரியா"ப் புண்களால் மிக மிக அவதிப்பட்டுக் கொண்டிருந்தார். சுவாமிகளுக்குக் காட்டினேன். "இவர்களுக்கு ஏன் இது!" என்று கேட்டுவிட்டு, "எத்தனை மெய்ஞ்ஞானச் செம்மல்களுக்கு அன்னம் ஊட்டிய அமுதக் கை" என்றுபுகழ்ந்து,மருந்து கொடுத்தார்கள். இது நிகழ்ந்தது இருபது ஆண்டுகட்கு முன்னர். இப்போது எண்பது பிராயத்திலிருக்கும் அவ்வம்மையார் அந்தக் கை வண்ணத்தை நினைந்து கசிந்துருகிக் கொண்டிருக்கிறார்.

சுவாமிகளுக்கும் எனக்கும் இடையே தோன்றி வளர்ந்த உறவு வெறும் வைத்தியம் பற்றியதல்ல. நான் மறக்க முடியாத ஒரு நிகழ்ச்சி எங்களிடையே எவ்வகை உறவு இருந்தது என்பதனை ஒருவாறு காட்டும். "செத்தே போனால் சிரியாரோ" —என்று ஒரு நாள் பேச்சிடையே சொன்னேன். "என்ன! என்ன! செத்தேபோனால் சிரியாரோ! அருமையான மணி வாக்கு. இது யார் வாக்கு, இது யார் வாக்கு!" என்று எக்களித்தார்கள்.

"சாகாக்கலை" என்ற "மூல பண்டார"மே எங்களைக் கூட்டி உறவை வளர்த்தது.

எனக்கொரு மனக் குறைவு, தம்பிமார் வேற்றெண்ணம் கொள்ளார் என்றதுணிவோடு என் குறையைச் சொல்லி கொள்ள விரும்புகிறேன். அம்மாவுடன் வாழ வருமுன், சாமிகள் எங்கு இருந்தார்கள், என்ன நிலையில் இருந்தார்கள், எந்த மெய்ஞ்ஞானச் செம்மல் திருவடியில் திளைத்தார்கள்....என்ற விவரங்களை முழுவதும் அறிந்துகொள்ளவேண்டாமோ! பிறவியால் முகமதியராயிருந்த பெரியார் ஒருவர்களே சாமிகளை ஆண்டு கொண்ட இடம் என்பதைத் தானும் எவ்வளவு தூரம் உலகம் அறியும்? பொதிச் சாமிகளையும் அவர்களது சித்திப் பெருமைகளையும் ஒருவாறு அறிவேன்; அவர்களைச் சாமிகள் கண்டது எங்கள் ஊரில்தான்; ஏன், அவர்களைத் தம்மிடத்துக்கு அழைத்துப் போனதே எங்கள் தந்தையாரவர்கள் வைத்திருந்த மடத்திலிருந்து தான் "பொன்"னுக்கும் "பொதிச்"சும் உறவு நாள்தோறும் வளர்ந்து வந்ததெனினும், குருசீட சம்பந்தம் இல்லை அவர்களிடையே. இதைத் நான் தெரிவிப்பதெல்லாம், இந்த தப்புணர்ச்சி சிலரிடையே இன்று நிலவி வருவதால் தான்.

மேலும் ஒரு வேண்டுகோள். சாமிகளை நான் சந்திக்கும் போதெல்லாம் "காகபுசுண்ட பகவான்" என்ற திருப்பெயரை அடிக்கடி சொல்லியிருக்கிருர்கள். என் தவக்குறை, அப்போதெல்லாம் அதில் குறிப்பின்றி இருந்து விட்டேன். இப்பால் அடியேன் பெற்றுள்ள மெஞ்ஞானத் தொடர்பால் "காகபுசுண்ட பகவான்" பற்றி அறிந்துள்ளவைமென்மேலும் அறியத் தூண்டுகின்றன, திருவாளர் குருசிரோன்மணியும், பரமகுருவும், இதன்கண் முயல்க என்ற வேண்டுதலோடு முடிக்கிறேன்.

---

## தவத்திரு பொன்னையா சுவாமிகள்-ஒரு விளக்கம்

**ராவ்சாகிப், கு. அருணசலக் கவுண்டர், நெல்லை**

காலஞ்சென்றராவ்சாகிப், ஜே. சக்கரபாணி நம்பியார் எம். ஏ. பி. எல்., அவர்கள் முன்னால் ஜில்லா போர்டு உபதலைவர். சர்க்கார் உதவி வக்கீல். ஆனல், நம்பியார் என்றுதான் நாங்கள் அவரை அன்போடு அழைப்போம், எங்கள் மதிப்புக்கும் மரியாதைக்கும் பாத்திரமான நல்லார் அவர். ஒரு நாள் மாலை நான் அவர் வீட்டுக்குச் சென்றேன், 25 வருடங்களுக்கு முன் அவர் வீட்டுத் திண்ணையிலே ஒருவர், ஏறக்குறைய நாற்பது வயதுள்ளவர் சற்று பருமனய் இருந்தார். வீதிக்கு முகம் காட்டி, உட்கார்ந்து சுவரிலே சாய்ந்து கொண்டிருந்தார். அவர் எதிரிலே நம்பியார் இருந்தார். இவர்கள் ஏதோ பேசிக்கொண்டிருந்தார்கள். அப்பெரியவர் ஏதோ ஆச்சரியமான சங்கதிகளைச்சொல்பவராகவும் நம்பியார் அதை ஆவலுடன் கேட்பவராகவும் காணப்பட்டனர்.

நம்பியார் அடிக்கடி தலை அசைத்துவிட்டுக் கலீர் என்று சிரிப்பது கேட்டது. நானும் அவர்களை அணுகி விட்டேன். பெரியார் பேசுவதை நிறுத்த, அதனல் நம்பியார் திரும்பிப் பார்த்தார். "வாருங்கள், நல்ல சமயத்தி. வந்தீர்கள்," என்று வரவேற்று, "இவர் என்னுடைய அருமையான நண்பர்," என்று பெரியார்க்கு என்னை அறிமுகம் செய்து வைத்தார். "இவர்கள் தான் பொன்னையா சுவாமிகள். பல சந்நியாசிகள், ரிஷிகள், மகான்களை எல்லாம் தரிசித்திருக்கிருர்கள்," என்று பெரியவரை எனக்கும் அறிமுகம் செய்து வைத்தார். நானும்அவர்கள்பேச்சில்கலந்துகொண்டேன். பொன்னையா சுவாமிகள் பேசிக் கொண்டிருந்

தனதக் கேட்பதை விட அவர்களை முதல் தடவை நான் பார்க்கிறேன் ஆதலால், அவர்களை நான் பார்த்துக்கொண்டே இருந்தேன் என்பது தான் மெய்.

சிறந்த யோகப் பயிற்சியால் உடல் இளைத்தல், பருத்தல் இல்லாமல் மிகுந்த வலிவும் பொலிவும் வாய்ந்தவராய்க் காணப்பட்டார்கள். மெய்ஞ்ஞானி ஆதலால் பளபள என்று மின்னும்படியான நல்ல தேஜஸை அடைந்திருந்தார்கள். பக்தி அவர்களிடம் குடி கொண்டிருந்ததால், எல்லாரிடமும் மிகுந்த பரிவுடையவராய் விளங்கினார்கள். கர்மம் புரிதல் இன்ன விதம் என்பதை நன்கு உணர்ந்தவர்கள் ஆதலின், ஒய்வு ஒழிவின்றி நிஷ்டையிலிருந்து எது நேர்ந்தாலும் அதில் மனம் பற்றாது எல்லாவற்றையும் இனிதாகவே உணரும் பரமகுரு போலத் திகழ்ந்தார்கள்.

இப்படி நான் சொல்வதால் அவர்கள் மாண்பு முழுவதையும் நான் சொல்லி விட்டதாகக் கொள்ளல் கூடாது. கண்ணால் கண்டு அவர்களைத் தெரிந்து கொண்டவர்களுக்கு நான் கூறியது மிகவும் குறைவாகத் தான் தோன்றும். அவர்கள் ஒரு மகான். அவர்களிடத்தில் பல பெரியவர்கள் சென்று, தங்கள் சந்தேகங்களைக்கேட்டுத் தெளிவடைகிறார்கள். துயரங்கள் தீரப்பெறுகிறார்கள் என்பதும் பின்னால் தெரிய வந்தது. நம்பியார்க்கு சுவாமிகள் ஜீவேசுவர பேதத்தைக் கூறி, ஐக்கியத்தைச் சொல்வதாகத் தெரிந்து கொண்டேன்.

அவர்கள் அன்று சொல்லிய விஷயங்கள் அருமையானவை, எந்த நூலிலும் தெளிவாகக் கூறப்படவில்லை. மற்றெவராலும் அவர்கள் போதித்தபடி போதிக்க முடியாது. விஷயம் நன்றாகப் புத்தியில் பொருந்துமாறு உவமை உபகதைகளைக் கொண்டு அற்புதமாக விளக்கினார்கள். சந்தேகங்களை வெகு சுலபமாய்ப் பரிகரித்து விடுவார்கள். சந்தேகம் எனச் சொல்லத் தொடங்கும் போதே, "நீங்கள் நில்லுங்கள்," என்று தடுத்து நமது சந்தேகத்தை அவர்களே பூரணமாயும் தெளிவாயும் கூறி, "இது தானே?" என்று கேட்பார்கள். சங்கைகளுக்குச் சமாதானம் கூறும் போது நம்மை மறந்து ஆனந்தம் அடைவோம்.

ஜீவேசுவர ஐக்கியத்தை அன்று நான் அவர்களிடம் கேட்ட பிறகு, எனக்கிருந்த சந்தேகங்கள் பல ஒழிந்தன. அப்போது எனக்கு ஏற்பட்ட மகிழ்ச்சியும் தைரியமும் பின் ஒரு போதும் ஏற்பட்டதில்லை. அவர்களைக் காணும் முன் உலகம் பெரியது. அதை அறிதற்குத் தகுந்த ஞானம் நமக்கில்லை என்றிருந்தேன்.

அவர்களைக் கேட்டபோது, உலகம் என்பது சொல் மாத்திரமாயும், தோற்றம் மாத்திரமாயும் இருப்பதே அன்றி, சோதனை செய்து ஆராயுமிடத்து உண்மையான ஒரு பொருள் அல்ல என அறிந்தேன். அறிவே பெரிது. அறிவே உலகம். அறிவே கடவுள், எனவும் அறிந்தேன். அன்றைய தினம் இரவு சுமார் பத்து மணிக்கு அவர்கள் பேச்சை முடித்தார்கள்.

மற்றொரு சமயம் அவர்களை நான் சந்தித்த போது; "இக்கலிகாலத்திலே பலரும், விபரீத குணங்களால் ஒற்றுமையுள்ள மனம் இரண்டாகி, நமது வேதத்தை அவமதித்து, மகரிஷிகளின் வாக்கியத்தைப் புறக்கணித்து, சொந்த மதத்தை அறியாமலே வெறுத்து, புற மதங்களிற் புகுந்து, புதிய ஆசாரங்களை மேற்கொண்டு பலராலும் இகழப்பட்டுக் கடைசியாக ஒன்றும் தெரியாமல் உழன்று வீணாய்க் கெடுகிறார்கள்," என்று கூறி, "உங்களுக்கு சொந்த மதத்திலே விருப்பும், கடவுளிடத்திலே பக்தியும் உண்டாகியிருப்பது உங்களுடைய பூர்வஜென்ம வாசனைதான்," என்று என்னைப் பாராட்டினார்கள். ஆனால் அப்போது நான் நாஸ்திகன். திடுக்கிட்டேன்.

அவர்கள் மேலும் சொன்னார்கள்: "ஒவ்வொருவரும் தங்கள் மதம் எது? அது கூறும் விஷயங்கள் என்ன? என்பதை அறிந்து

அதிற்சொல்லியவண்ணம் நடந்து உண்மையை அறிய வேண்டும். அதைச் செய்யாமல் கடவுள் உண்டா? உண்டு என்பது எப்படி? உலகம் பொய்யா? மெய்யா? என்று கேள்வி கேட்டு வீண்வாதம் செய்கிறுர்கள். இந்தக் கேள்வியைச் சிறந்த கேள்வி என்று பெரியோர் கருதார்," என்று அவர்கள் கூறிய போது எனக்காகத் தான் சொல்கிறுர்களோ என்ற திகில் என்னைப் பற்றியது.

"உலகம் பொய்யானுல் என்ன? மெய்யானுல் என்ன? உலகத்திலே சுக துக்கங்கள் இருக்கின்றன. அவை அநித்தியம், அற்பம் என்று ஒவ்வொருவரும் ஒப்புகின்றனர். ஆதலின் உலக சிற்றின்பத்தை ஒழித்து, நித்தியானந்தத்தை அடைய வேண்டுமானுல், ஆசைகளைத் துறப்பது அவசியம். ஆசைகளைத் துறக்கும் போது, உலகம் பொய்யானுல் என்ன? மெய்யானுல் என்ன?

என்ன தெளிவு! "கடவுள் உண்டா எனின் சிலர் இல்லை என்பார்கள், அதைக் கண்டது யார் என்பார்கள். ஆனுல் ஒவ்வொரு மனிதனும் தான் உண்டா என்பதைப் பற்றிச் சந்தேகிப்பதில்லை. ஆதலால் எது நிச்சயம் என்று ஒவ்வொருவனும் நம்புகிறுனே, அதை முதலில் விசாரிக்க வேண்டும் என்று பெரியோர் கூறுவர்."

உண்மைதானே! "உலகத்திலே அறிஞுவிருப்பவன் "நான் யார்?" என்று ஆத்ம விசாரணை செய்ய ஆரம்பிக்க வேண்டும். ஆத்மா எது? அநாத்மா எது? நான் என்பது தேகத்தைக் குறிக்கவில்லை; ஆத்மாவையே குறிக்கிறது என்பதை உணர்ந்து அநாத்மாவாகிய தேகத்தில் பற்றுக் கொள்ளாது ஆத்மாவை நாட வேண்டும். தன்னை விசாரியாமல் வேருென்றை விசாரிக்கப் புகுதல் கூடாது. தன்னை அறிந்தால் எல்லாவற்றையும் அறிந்ததாகும்," என்ன எளிய உபதேசம்!

**தன்னை அறிந்து செறிந்து தான் அற்ருல்**
**பின்னைப் பிறப்பில்லை வீடு—என்பது தானே**
**ஔவை குறள்.**

"ஆத்மாவை அறிதல் எப்படி? வெளிமுகமாய் ஊர் எங்கும் தேடினுல் காணலாகுமா? இடுப்பிலே பிள்ளையை வைத்துக் கொண்டு, ஊர் எங்கும் தேடினதாயின் மூடத்தனம் எப்படிப் பட்டது?

**"ஒக்கலைப் பிள்ளையுடன் இருக்க ஊர் எங்கும்**
**தேடி உழலு வேனை**
**அக்கணம் பிள்ளையைக் காட்டித் தந்த**
**ஆசானைப் பாடி நின்று ஆடாய், பாம்பே!"**

என்று ஓர் ஞானி தன் ஆசானைத் துதித்தார். அதிசமீபமாய்-நமக்குள்ளேயே எல்லாவற்றிற்கும் ஆதாரமாய் உள்ளது ஆத்மா. அதிசூட்சமாய் மனத்திற்கும் ஆதாரமாய் இருக்கும் ஆத்மாவை மனதால் அறிய முடியாது; கண்ணுலும் காண முடியாது. ஒரு மனிதன் ஓர் அறையிலே உட்கார்ந்திருக்கிறுன். ஜன்னல் வழியாக அறைக்கு வெளியே போகிறவர்களைப் பார்க்கிறுன். ஆனுல் அறையில் தானிருப்பதைப் பார்க்க ஜன்னலின் உதவி வேண்டுமா? அது போல உலகத்திலே உள்ள பொருள்களை அறியவும் காணவும் மனமும் கண்ணும் வேண்டும். கண்ணுக்கும் மனத்திற்கும் பின்னுள்ள ஆத்மாவை அறிய மனமும் கண்ணும் வேண்டுமா? அறைக்குள் இருக்கும் மனிதன் தான் இருப்பதை எப்படி ஓர் கருவியின் உதவி இன்றி அறிகிறுனே, அப்படியே மனிதன் தன்னை அதாவது ஆத்மாவை எதன் உதவியும் இன்றி அறிகிறுன். தீபத்தின் இருப்பை அறிய வேறு ஓர் தீபம் வேண்டுவதில்லை. ஆதலால் மனிதன் தன்னைத் தானே தான் அறியவேண்டும். அது எப்படி என்று கேட்கிறீர்களா? மனமானது ஒன்றை நினைத்து முடிந்து, மற்ருென்றை நினைப்பதற்குள்ளாக, இடையில் ஒன்றையும் நினையாமல் நிற்கும் இடமே ஆத்மா. மறுபடியும் நினைவு வந்தால் மனம் உண்டாகிறது. சங்கற்ப விகற்பங்கள் அற்ற, நினையாமை என்னும் ஆத்மாவை, நினைவே சொருபமாகிய மனம் அறியாது. இவ்விதமான ஆத்ம சொருபத்தை சாவகாசமாய்த் தனியே இருந்து அனுபவத்திற் காண

வேண்டும். அதைக் கண்டவர் சிலர். அவருள் ஒருவர்தான் நம் சுவாமிகள்.

"மட்டறஓடும் மனத்தை நிறுத்திக்
கட்டுதல் வீடு; விடுத்திடல் கட்டு"

என்று சுவாமிகள் கூறுவார்கள். "வரையறை இன்றி இந்திரிய வாயிலாக விஷயங்களில் ஓடும் மனத்தை நிறுத்தி ஒருமுகப் படுத்தினால் வீடு சித்தியாம். மனத்தை நிறுத்துவது எப்படி? அதற்குரிய பயிற்சி யாது? மானைக் கண்ட இடத்து, புலி தாவி ஓடுமாப் போல, விஷயங்களில் தாவி ஓடும் இயல்புடைய மனத்தை வசப்படுத்தி நிறுத்துதல் உலக போக்கிலே பற்றுள்ள மக்களுக்கு ஒருவாற்று னும் அமையாது. மனம் பதைப்பற்று நின்ற இடத்து ஆத்ம தரிசனமும் அதன் வாயிலாக சீவன் முத்தியும், அதன் வாயிலாகப் பிற வாமையும் சித்திக்கும் என்று, சில சாதனங் களை நம் முன்னோர் வகுத்தனர். அவையாவன: மந்திர யோகம், பரிசயோகம்; பாவயோகம், அபாவயோகம், மகாயோகம், இந்த ஐந்து யோக சாதனங்களிலே சில அடயோகம், சில ராஜயோகம், பிராணனைத் தடுத்தல் அட யோகம், மனோ விருத்தியைத் தடுத்தல் ராஜ யோகம், ராஜயோகம் யாவர்க்கும் பயன்படுவ தாக இருப்பதால், பதஞ்சலி முனிவர் அதை விபரமாக வெளிப்படுத்தினார். அவர் செய்த நூல் யோக சூத்திரம், அதை சுருக்கியும் பெருக்கியும் தழுவியும் பல யோக நூல்கள் தோன்றின. யோக சூத்திரங்கள் 198, நான்கு பாதங்களாக வகுக்கப் பட்டுள்ள அவற்றின் முக்கிய நோக்கம், சஞ்சலமுள்ள சித்த விருத் தியைத் தடுத்து, அதன் மூலமாய் மனம் சமாதி அடைந்து, அதன் வழியாய்க் கைவல் யத்தை அடைதல். நான்கு பாதங்களில் ஒன் றில், சித்திகளைப் பற்றி விபரமாய்ச் சொல்லப் பட்டிருக்கின்றது. ஆனால் சித்திகள் சமாதி அடைகிறதற்கு இடையூறாக இருக்கின்றன, என்றும் அதனால் அவைகளை நாடுதல் கூடாது என்றும் கூறப்பட்டுள்ளது."

யோக முறைகள் ரகசியமாக இருந்தன. அதனால் நாளடைவிலே மறக்கப்பட்டன. மறைந்தும் வந்தன. திருமூலர் திருமந்திரம் நமக்குப் புதிரே. எனினும் அவ்வப்போது அவதாரபுருடர் போல சிலர் தோன்றி யோகப் பயிற்சியின் மகிமையை வலியுறுத்தி வந்தனர். அவருள் ஒருவர் நம் தவத்திரு பொன்னையா சுவாமிகள், சித்திகளை வென்ற நிறை மனிதர் அவர்கள்.

"உலகம் கடவுளின் பூரண படைப் பாய் இல்லை; அஞ்ஞான இருளடைந்த கோணலான வெளிப் பாடமாக இருக்கிறது. எனினும் அது முற்றிலும் தெய்வ மயமாக மலர்வதற்கே படைக்கப் பட்டிருக்கிறது மக் களினமும் உலகும் இந்த நிலையிலேயே நிரந் தரமாக இருக்க வேண்டும் என்பது இறை வனது திருவுள்ளம் அல்ல. மனிதன் பூரண அறிவும், ஒளியும், இன்பமும், ஆற்றலும் பெற்று இறைவனுடன் கலந்து இவ்வுலகிலேயே வாழ் வதன் பொருட்டு மற்றொரு படியை நோக்கி உயர்ந்து செல்ல வேண்டும். உடல், உயிர், மனம்-இவற்றிலே மனம் சிறிது உயர்ந்த உணர்வு நிலை. சாதாரண மனிதன் மனத்துக்கு அப்பால் செல்வதில்லை. அதனால் அந்தகார த்திலே உழல்கிறான். இம்மனத்துக்கு மேலே, (உயர் மனம், ஒளிமனம், அந்தர் ஞான மனம், அதிமனம் என்ற) மெஞ்ஞான உணர்வு நிலை களுக்கும் அப்பால் உள்ளது இறைவனது சச்சி தானந்த நிலை. துன்பங்களுக்குக் காரணமான அறியாமை இவ்வுலகிலிருந்து அறவே நீங்க வேண்டுமானால் மக்களது உணர்வு அஞ்ஞான நிலையை நீங்கி மெய்ஞ்ஞான நிலையை நோக்கி மேன் மேலும் உயர்ந்து செல்லச் செல்ல மனிதன் தெய்வமனிதனாகிறான். முற்றறிவும் பேராற்றலும் பேரின்பமும் வாய்க்கப் பெறு கிறான். இவ்வுலகில் அமரனாக வாழ்கிறான். அதனால் மண்ணுலகமும் மாறி விண்ணுலகின் தன்மையை எய்தும் மனிதனும் உலகும் இவ் வுயர்நிலை எய்த வேண்டும் என்பதே இறைவன் திருவுள்ளம். படைப்பின் நோக்கமும்,

பரிணாமத்தின் முடிவும் இதுவே என்பதைத் தெரிந்திருந்த நம் சுவாமிகள், "மக்களில் ஒரு சிலரேனும் இவ்வுயரிய நிலை எய்தினால் மக்களனைவரும் இதனை நாளடைவிலே எய்த லாகும்," என்பார்கள்.

பாரத நாட்டின் பழம் பெருமைகளைக்குறித்து அங்கலாய்க்கும் பலரும், கடவுள் அருள் பெற்ற ரிஷிகள், கிருத யுகத்து அற்புதங்கள் போலவும் கலியுகத்திலே அவர்கள் அவதரியார் என்றும் பேசுகின்றனர். இது தவறு. நமது பூமி புண்ணிய பூமி. நமது தருமம் தலை சிறந்தது. வீரனும் முனிவனும் பக்தனும் இப்புண்ணிய பூமியிலே அவ்வப்போது தோன்றி வந்துள்ளனர். வேதரிஷிகள், கண்ணபிரான், புத்த பகவான், சங்கரர், ராமானுஜர், நாயன்மார்கள், ஆழ்வார்கள், விவேகானந்தர், தாயுமானவர், ராமலிங்கர் முதலிய மகாபுருஷர் பரம்பரை வாழையடி வாழையாய் வந்திருத்தலைக் காண்கிறோம்.

"யோகமும் தவமும் எங்கும்; ஊசனும்
மறுரும் எங்கும்
யோகமும் பொலிவும் எங்கும், புண்ணிய
முனிவர் எங்கும்"

என்று சேக்கிழார் சிறப்பிக்கும் நம் தமிழ் நாட்டில் நமது தலை முறையிலே வாழ்ந்திருந்த பரிபூரணர் நம் தவத்திரு பொன்னையா சுவாமிகள்.

யோகத்தின் முடிவான விளக்கம் யாதாயிருப்பினும், யோகவிளக்கிலே சரியான வழியைக் கடைப்பிடித்துக்காட்டியவர்கள் நம் சுவாமிகள். "அஞ்ஞானம் இருள் போலச் சூழ்ந்தும், குழப்பம் விளைவித்தும், தப்பெண்ணங்கள் வளர்ந்து வந்தபோது, சுவாமிகள் உண்மையைக் கண்டு அதை இறுகப் பற்றினார்கள். காலதேவன் அடைத்திருந்த கதவுகளைத் திறக்கவல்ல சாவியைக் கண்டெடுத்தார்கள்," என்று எதிர் காலத்திலே அவர்கள் சீடர்கள் அவர்களைப் பாராட்டிப் போற்றுவார்கள் என்பது திண்ணம். தவத்திரு பொன்னையா சுவாமிகள் புகழ் ஓங்குக.

---

## சுவாமிகளின் சிந்திக்க வைக்கும் சின்னக் கதைகள்

*"ஒரு சாமியார் தன் கௌபீனத்தை எலிகள் கடித்து விட்டதால் அதை விரட்டுவதற்கு ஒரு பூனை வளர்த்தாராம். அப்பூனைக்குப் பால் வேண்டுமே என்பதற்காகப் பசு ஒன்று விலைக்கு வாங்கினாராம். ஆனால் அப்பசுவைக் கவனிக்க ஆள் வேண்டுமே என்பதற்காக ஒரு பெண்ணை மணந்து கொண்டாராம். பின்னர் பிள்ளை குட்டிகளோடு பல ஆண்டுகள் அப் பூனையை வளர்த்துவந்தாராம். ஐயோ! கௌபீனத்தைக் காக்க பூனை வளர்க்கப்போய் பிள்ளை குட்டிகளோடு குடும்பம் பெருத்து விட்டதே என்று வருத்தப்பட்டாராம் அச்சாமியார்" இப்படி வருவோர்களுக்கு எதையும் சிந்தித்தே செயலாற்ற வேண்டும் என்று இக் கதையைக் கூறுவார்கள் வேடிக்கையாக.*

*"ஒரு சாமியார் மற்ற சாமியாரோடு தன்னை மறந்து பேசிக்கொண்டிருக்கும்போது, சமையல்காரன் வந்து உப்புமாவிற்கு எவ்வளவு உப்பு போடவேண்டும் என்று அரை குறையாகக் கேட்டான். பேச்சில் ஈடுபட்டுக் கொண்டே சாமியார் "சரியாகப் போடு" என்றார்கள். சமையல்காரனோ சரிக்குச் சரி உப்புப் போட்டு உண்ணமுடியாத உப்புமாவாக்கி விட்டான், சாமியார் இருவரும் அதைச் சாப்பிட்டுப்பார்த்தவுடன், திகைத்து பேசாது ஒன்றும் பேசாது தலையிலடித்துக் கொண்டு சென்றார்கள்" இப்படிச் சில கதை சொல்லி அரை குறையாக உள்ள எண்ணம் கொண்டவன் முன்னேற முடியாது என்று சொல்லுவார்கள்.*

*ஒரு சாமியார் சித்தாந்த நூல்களில் ஈடுபட்டுப் படித்துக்கொண்டிருந்தார். அவரது மனைவி ஆவேசமாக அவரைத் திட்டி, அந்த ஆத்மிக ஈடுபாட்டிலிருந்து விடுபட்டு நேரத்தை வீண் போக்காமல் சம்பாதிக்க வேண்டும் என்று கத்திக் கொண்டிருக்கும்போது, சாமியாரைப் பார்க்க வந்தவர் ஆச்சரியப்பட்டு, அந்த அம்மாளைத் திட்ட எத்தனிக்கும்போது, சாமியார் குறுக்கிட்டு, அவ்வாறு செய்ய வேண்டாமென்றும், அவளுடைய துணையிருந்ததால்தான், தன்னால் சாத்வீகத்தை அடைந்து ஆத்மிக சாதனையில் வெற்றி பெற முடிந்ததென்று சொல்லி மன நிம்மதியுடனிருந்தார்.*

---

# முக்காலமும் உணர்ந்த முனிவர்

தமிழ்ப்பேராசிரியர், செ. ப. கரு. இராமநாதன் செட்டியார், அண்ணாமலைநகர்

தவத்திரு கி.பொ. பொன்னையா சுவாமிகள் அவர்களின் திருவருள் சமாதிக்கு நடைபெறும் மூன்றாவது குருபூசை வழிபாட்டு நாளன்று அவர்களைப்பற்றிய நினைவு மலரொன்று வெளி வருவது பாராட்டுதற் குரியது. அவர்களின் பூதவுடல் மறையினும், அவர்களின் அருள் உருவமும், அறிவு உருவமும் நம் உள்ளத்தை விட்டு ஒருநாளும் அகலா. நான், சுவாமிகள் அவர்களை ஒருமுறை கண்டு பேசி உரையாடும் பேறு பெற்றேன். அந்நிகழ்ச்சியை ஒட்டிய என் கருத்துக்களை இங்கே குறிப்பிட விரும்பு கிறேன்.

சுவாமிகள் அவர்களின் இரண்டாவது குமாரரும், நாடறிந்த நற்புகழ் பெற்றவரும் தென்னாற்காடு மாவட்டக் காவல் துறைத் தலைவரும், தம் பொறுப்புக்குரிய கடமைகளை நிறைவேற்றுவதில் பிறருக்கு எடுத்துகாட்டாக விளங்குகின்றவரும், பல உயர் பண்புகள் நிறையப் பெற்றவரும் ஆகிய திரு. பொ.பரமகுரு எம்.ஏ; பி.எல்; ஐ.பி.எஸ்., அவர்கள் என் பழைய நண்பராவார். அவர்களுடன் ஒருநாள் நான் அளாவளாவி உரையாடிக் கொண்டிருந் போது தம் தந்தையாராகிய நம் சுவாமிகள் அவர்களின் அருமை பெருமைகளைப் பற்றி அவர்கள் என்னிடம் கூற நேர்ந்தது. தம் தந்தையார் அவர்களைப் பற்றிய செய்திகள் ஆதலால், சொல்லவேண்டி அளவு அவற்றை திரு பரமகுரு அவர்கள் சொல்லாமல், ஒரு சிறு அளவே கூறினார்கள். ஆயினும் சுவாமிகள் அவர்களைக் காணுதல் வேண்டும் என்னும் அவா, அவர்கள்பால் செல்லுமாறு என்னை மிகவும் தூண்டியது. அதன் விளைவாக 18—9—60 ஆம் நாளில், நான் கடலூருக்குச் சென்றேன். அவ்வமயம் நமது தமிழ் நாட்டு முதல் அமைச்சர், கடமைவீரர் காமராசர் அவர்களின் வருகைக்காகத் தமது கடமையை நிறைவேற்றப் புறப்பட்டுக்கொண்டிருந்த திரு பரமகுரு அவர்கள், சுவாமிகள் அவர்களுக்கு என்னை அறிமுகப் படுத்திவிட்டுச் சென்றுவிட் டார்கள். சுவாமிகள் அவர்களைக் கண்டவுடன் அவர்களின் அழகிய முதுமைத் தோற்றம் என்னைக் கவர்ந்தது. அப்போது, திருத் தொண்டர் புராணத்தில் சேக்கிழார் கூறியுள்ள செய்யுட் பகுதி ஒன்று என் நினைவிற்கு வந்தது. அது, நம்பி யாரூராகிய சுந்தரரைத் தடுத்து ஆட்கொள்ள வந்த சிவபிரான் கொண்ட முதிய வர் வேடத்தைப் பற்றிக் கூறுவதாகும்.

"மொய்த்துவளர் பேரழகு மூத்தவடி வேயோ
அத்தகைய மூப்பெனும் அதன்படிவமேயோ"

என்பது அப்பகுதி. பல பொருள்களிலும் காணப்படும் அழகெல்லாம் ஓரிடத்தில் ஒன்று கத் திரண்டு வளர்ந்து பேரழகாகி, அப் பேரழகு முதுமையடைந்தால் எப்படியிருக் குமோ அது போலவும், அத்தகைய அழகு நிறைந்த முதுமைப்பருவம், ஒரு மானிட வடி வங்கொண்டு வந்தால் எவ்வாறு இருக்குமோ அதுபோலவும் இருந்தது, அம்முதியவர் தோற் றம் என்பது அதன் கருத்து. ஆனால், சிவ பிரான் எடுத்துவந்த அம்முதிய வேடத்தை நாம் கண்டதில்லை; என்றாலும், தம் சுவாமிகள் அவர்களுடைய அழகின் முதிர்ச்சியும், முதுமை யின் அழகும் சேக்கிழார் வாக்கையும், சிவ பிரான் கொண்ட முதிய வேடத்தையும் எனக்கு நினைவூட்டின.

பின்னர், அணுகியிருந்து சுவாமிகள் அவர் களை உற்று நோக்கினேன். அப்போது திருவள் ளுவர் கூறிய தவத்தின் இலக்கணம் என் நினை விற்கு வந்தது. மனம் ஐம்பொறிகளின் வழியே செல்லாமல், ஒரு முகமாய் நிற்றற் பொருட்டு விரதங்களால் உணவைக் குறைத்தல் வேண் டும். வெயில் மழை பனி என்பவற்றால் தம் உயிர்க்கு வரும் துன்பங்களைப் பொறுத்துக் கொள்ளுதல் வேண்டும்; பிற உயிர்களுக்குத் துன்பம் செய்தல் கூடாது. இவ்வளவே தவத்தின் இலக்கணம், என்று கூறவந்த தெய் வப்புலவர் திருவள்ளுவர்,

"உற்ற நோய் நோன்றல் உயிருக்குஉறுகண்
செய்யாமை
அற்றே தவத்திற்கு உரு"

என்றார். இவ்வாறு வள்ளுவர் வகுத்த தவத்தின் இலக்கணத்திற்கு சுவாமிகள் சிறந்ததோர் எடுத்துக் காட்டாக விளங்குதலைக் கண்டு அளவில்லாத மகிழ்ச்சியடைந்தேன்.

நான் அறிய விரும்பிய செய்திகளைப் பற்றி எனக்கு வேண்டும் அறிவுரைகளை எல்லாம் சுவாமிகள் தெரிவித்தார்கள். நான் அவர்களுடன் நெடுநேரம் உரையாடிக் கொண்டிருந்தும் நேரம் சென்றது எனக்குத் தெரியவில்லை. கடிகாரத்தைப் பார்த்த பின்பே இரண்டுமணி நேரம் ஆயிற்று என்பது தெரிந்தது. சுவாமிகள், ஆன்று அவிந்து அடங்கிய கொள்கைச் சான்றோர் ஆதலால், அவர்களின் உடல் தளர்ந்திருந்தும் உள்ளத்தின் உயர் பண்பு காரணமாக அவர்கள் முகத்தில் இரண்டுமணி நேரத்திலும் புன்சிரிப்புமாறவில்லை. அவர்கள் பேச்சில் இனிமைப் பண்பும், அறிவு ஒளியும் விளங்குதலைக் கண்டேன். என்வாழ்வில் நடந்த செய்திகள் சிலவற்றை நடந்தவாறே அவர்கள் கூறக்கேட்டவுடன் எனக்குப் பெருவியப்பு உண்டாயிற்று. முன்பு சுவாமிகளின் உடல் தோற்றத்தைக் கண்டு, இவர்கள் ஆண்டில் முதிர்ந்தவர்கள் என்று கருதிய நான், இப்போது சுவாமிகள், அருளிலும் மெய்யுணர்விலும் முதிர்ந்தவர்கள்; அடக்கத்திலும் அனுபவத்திலும் சிறந்தவர்கள்; தவத்திலும் குணத்திலும் உயர்ந்தவர்கள்; நிறைமொழி மாந்தர்; சொல்லாற்றல் மிக்கவர்கள் எனத் தெரிந்து கொண்டேன். அப்போது மணிமேகலையில்,

"வாத்தொலை வில்லாய் ஆயினும் தளர்ந்து
மூத்த இவ்யாக்கைவாழ்கபல்லாண்டு"

என்று அறவண அடிகளைச் சோழன் மாதேவி வாழ்த்தியது போல, யானும், இந்த முதிய யாக்கை, பல்லாண்டு பல்லாண்டுகள், வாழ்வதாகுக என்று என் உள்ளத்துள் வாழ்த்திக் கொண்டேன்.

மேலும், எதிர்காலத்தில் என் வாழ்க்கையில் நடைபெற இருக்கும் செய்திகளைப் பற்றிச் சுவாமிகள் கூறியவைகளும், அவ்வாறே நடைபெற்று வருகின்றன. முக்காலமும் உணர்ந்த முனிவர் என்று சுருக்கமாக அவர்களைப் பற்றிச் சொல்லிவிடலாம். அவர்களைக்கண்ட அன்று முதல் அவர்களிடத்தில் ஒரு தனி ஈடுபாடு எனக்கு உண்டு. அவர்களை மீண்டும், மீண்டும், காணுமாறு அவர்களின் உடல் நீடிக்கவில்லையே என்ற பெரு வருத்தமும் உண்டு. அவர்களை நேரிற் கண்டவர்கள் யாவராயினும், அன்பு, அருள், அறிவு, தவம் ஆகியவற்றின் திருவுருவமாக அவர்கள் திகழ்வதை அறிதல் கூடும். சுவாமிகள், இல்லறத்தில் துறவறங் கொண்ட பெரியோராவர்.

"எத்தொழிலைச் செய்தாலும் ஏதவத்தைப்
பட்டாலும்
முத்தர் மனமிருக்கும் மோனத்தே"

என்பது, அநுபவ வாக்கு. அறுபத்து மூன்று நாயன்மார்களிலும், ஆழ்வார்கள் பன்னிருவரிலும் இல்லற வாழ்க்கையை மேற்கொண்டவர்களே பெரும்பாலோர் என்பதும் இங்கு நினைக்கத்தகும்.

சுவாமிகள் மக்களின் உயிர்ப் பிணி தீர்க்கும் மருத்துவராக விளங்கியதுடன் உடற்பிணி போக்கும் மருத்துவராகவும் விளங்கினார்கள். எனவே, சுவாமிகள் அவர்களின் அருளால், மன நலமும், உடல் நலமும் பெற்றோர் பலராவர்.

"தக்கார் தகவிலர் என்பது அவரவர்
எச்சத்தால் காணப்படும்."

என்னும் முது மொழிக்கு ஏற்ப சுவாமிகளுக்குப் புதல்வர்கள் மூவர் உள்ளனர். அவர்கள் மூவரும் பொதுநலத் தொண்டர்களாகத் திகழ்வது, நாட்டின் நற்பேறுகும். அடியவர்கள், சுவாமிகளை நினைந்தும், கரிவலம் வந்த நல்லூரிலுள்ள அவர்களின் சமாதியைக்கண்டு வணங்கியும் நற்பேறு பெற்று உய்வார்களாக.

## சுவாமிகளின் அருள்மொழி

"இருக்கேன்னு இருக்கேன். செத்தேன்னு இருக்கேன் வாப்பா." பாவம் இவரது உலகம் தன் தொப்பியில் இருக்கிறது போலும். இவரது தலையிலிருந்த தொப்பியைக் காற்றடித்துக் கொண்டு போய் விட்டதால் வருந்தினர். ஏன் வருந்துகிறீர்களென்று கேட்டதற்குதனதுதொப்பிபோய் விட்டதற்கு மேல் குறித்து விதம் சொன்னதாகத் தெரிய வந்தது. இதை மனஞ் சோர்ந்து கவலையில் இருப்பவர்களுக்குச் சொல்லிச் சிரிக்க வைப்பார்கள்.

---

# இல்லறத் துறவி

திருமதி சரசுவதி, வத்திராயிருப்பு

தலைப்பைக் காணும்போதே அதிசயமாக இருக்கலாம். ஆனால் அப்படி அதிசயக்கத்தக்க ஓர் அபூர்வப் பிறவி உண்மையிலேயே, இப் பரந்த உலகில் பிறந்து, புதுமையாக வளர்ந்து, ஞானப் பாலுண்டு, பண்புடன் கடமை தவருது ஆனந்தமாக இல்லறம் நடத்திக் கொண்டே துறவற நிலைமையை அனுபவித்து மறைந்துள்ளார்கள். அப்பேற்பட்ட புண்ணியவான் தவத்திரு பொன்னையா சுவாமி அவர்கள் இராஜபாளையத்தில் பிறந்து கருவையில் சமாதியடைந்துள்ளார்கள்.

இம்மகான் சிறு பிராயத்திலேயே தெய்வ பக்தியும், அடியார்களிடத்தில் அன்பும், மக்களிடத்தில் இரக்கமும், எதையும் மனத் திடம் கொண்டு சாதிக்கும் ஆற்றலும் ஒருங்கே கொண்டு வாழ்ந்தவர்கள். இவ்வில்லறத் துறவிக்கு ஆண்டவனருளால் ஆறு குழந்தைகள் மூன்று ஆண், மூன்று பெண், ஆகா! அக் குழந்தைகளை வளர்த்த வகைதான் என்னே? ஒவ்வொரு குழந்தையும் பிறந்து பேசப் படிக்கும் வரை கண்ணால் குழந்தைகளைக் காண்பதோடு சரி. பின்னல் அவை பேசப் படித்ததும் தான் தன் பக்கத்தில் வைத்து அவர்களுக்கு அறிவு புகட்டுவதே ஓர் அலாதிப் போக்காக இருக்கும். இது போக; அப் புண்ணியவாளர் இல்லறத்தில் புகுமுன் துறவிகளுக்குரிய கொள்கைகளெல்லாம் பல மகான்களை அண்டி அவர்களுக்குத் தொண்டு புரிந்து அவர்களிடம் இருந்து கற்ருர்கள். சகல சாத்திரங்களையும் அவர்களிடமிருந்து கற்றுத் தேறினர்கள். கடுமையாகத் தியானங்கள் செய்து அப் "பராசக்தி"யின் அருளைப் பூரணமாகப் பெற்ருர்கள். அந்த அம்பாள் சக்தி பெற்று அவளிடம் நேரில் பேசி உலகோருக்கு வரும் பொருள் உரைத்தும், நோய்நொடி மனக்கவலைகளை நீக்கியும் வந்தார்கள்.

இல்லறத்தில் இவ்வன்புக் களஞ்சியத்திற்கு வாய்த்த துணைவியாரும் ஒரு தெய்வ பக்தி உடையவர்களே. ஊர் மக்கள் அனைவரும்தன் மக்களென அன்பு காட்டுவார்கள். கணவர் செல்லும் போக்குகளுக்கெல்லாம் மனத் திடத்துடன் ஒத்துப் போவார்கள். இதுவும் அம் மகானுக்கு அவர்கள் போக்கிற்கு ஓர் உதவி தான். இல்லத்திலிருக்கும் போதே மணிக் கணக்காகவோ, நாள் கணக்காகவோ உண்ணுது, உறங்காது அப் பராசக்தி தியானத்திலே உட்கார்ந்து விடுவார்கள். அந்தச் சமயங்களில் அப் புண்ணியவதி கணவரை

எட்டி எட்டிப் பார்த்து விட்டு அவர்களுக்கு ஒருவிதத் தொந்தரவும் கொடுக்காது காலா காலத்திற்கு உணவு மட்டும் தவருது அன்ஞர் இருக்கும் இடத்தில் கொண்டுவைத்து விட்டுச் சத்தம் செய்யாது திரும்பி வந்துவிடுவார்கள். கணவரது குறிப்பறிந்து நடக்கும் ஒப்புயர்வற்ற ஓர் தெய்வப் பிறவி.

பின்னர், குழந்தைகள் பிறந்ததும் அக் குழந்தைகளும் அன்பு அப்பா கண் மூடித் தியானத்தில் இருக்கின்ருர்கள் என்ருல், சத்தம் செய்யாது எட்டிப் பார்த்து விட்டு ஓடி விடவும் பழக்கப்படுத்தப் பட்டார்கள். ஆகவே, அந்தப் பேசும் தெய்வத்திற்கு, இவ்வளவு பெரிய இல்லறத்திலும் துறவிக் கோலம் பூண்டு அந்த அம்பாள் அருள் பெற ஏதுவாயிருந்தது.

இது வரை அம்மகானுடைய வாழ்வுக் குறிப்புக் கண்டோம். இனி, அன்ஞருடைய சாதனைகளைக் காண்போம். அன்ஞர் சாதனை களனைத்தும் கூறுவதென்பது இயலாது. ஓரளவு இல்லறக் கோலத்திலும், சில துறவறக் கோலத்திலும் காண்போம், இல்லறத்துறவி யாகிய அன்ஞர் ஓர் சிறந்த சித்த கல்ப சிரோன்மணி. பலவகை உயர்ந்த பஸ்பங் களும், உப்பு வகைகளும், லேகிய வகைகளும், தைல வகைகளும் உண்டு பண்ணத் தெரிந்த வர்கள். இத்தனை வகைச் சிறந்த மருந்துகள் செய்யும் விதங்கள் அத்தனையும் ஒரு நோட் டிலோ அல்லது ஓர் ஏட்டிலோ எழுதிவைப்பது கிடையாது. எல்லாம் அன்ஞர் மன ஏட்டிலே பதிந்து கிடக்கும். செய்யும் போது எல்லா வகைகளும் மழ மழ என்று பொழிவார்கள். மேலும், திடீர் திடீரென புதுப்புது வகை மருந்துகள் செய்யும் விதம் தோற்றம் கண்டு அவற்றை உடனே செய்வார்கள். இந்த ஞாபகச் சக்தி அன்ஞர் மறையும் மட்டும் இருந்தது. இத் தெய்வீக மருந்துகளைத் தம் மக்களுக்கு மட்டும் அவர் உபயோகிக்க வில்லை; உலக மக்கள் அனைவருக்கும், சகல கொடும் வியாதிக்கும் கொடுத்து நோயாளியின் அவஸ் தையைப் போக்கி புண்ணியம் தேடினுர்கள். தன் மனைவிக்கோ குழந்தைகளுக்கோ நோய் வந்தால் நோய்வாய் அறிந்து அதற்கேற்ப ஔடதங்கள் அடிக்கடி கொடுத்து அவர்களு டைய அவஸ்தையைப் போக்குவார்கள். மேலும், அவர்கள் தியானத்தில் உட்கார்ந்து அந்த அம்பாளை வேண்டித் தானே நோயின் கொடுமையைப் பெற்றுக் கொண்டு நோயாளி கண்ணயரச் செய்வார்கள். இனி, எங்கே போவோம் அந்த ஆறுதலுக்கும், அன்புப் பராமரிப்புக்கும்? அவர்கள் ஆத்மாதான் உதவி புரிய வேண்டும்.

குழந்தைகள் வளர்ப்பையே நான்கு வகைக் காலமாகப் பிரித்துக் கூறுவார்கள். அதாவது, பிறந்தவுடன் அன்பிற்சின்னம், பேசப் படித்த வுடன் அறிவு புகட்டும் கால மென்று சொல்லு வார்கள். பின், மூன்ருவதாக வளர்ந்து கல்வி கற்க ஆரம்பித்தவுடன் பண்பும், உலக அனுபவ மும் புகட்டி கண்டித்து, அவசியமென்ருல் அடி கூடக் கொடுத்துச் சீர்திருத்தி வளர்க்கும் காலம் கடைசியாக இளமைக் காலத்தில் வரும்பொருள் உரைத்து, யோசனைகள் கூறி சிநேகிதனைப் போல் பாவிக்க வேண்டுமெனக் கூறுவார்கள். இக்காலங்களைச் செய்கை யிலும் காட்டி மறைந்த அவ்வன்பு மகானை என்று, எங்கு காண்போம்?

ஓர் ஆணே, பெண்ணே பள்ளிப் படிப்பில் பெரிய பட்டங்கள் பெற்ற போதிலும், பெற்ருேர் புகட்டும் பண்புடன் கலந்த கல்விதான் அவர்கள் குடும்பங்களிலும் வெளி உலகங் களிலும் சோபிதமாகவும், சந்தோஷமாகவும் காணப்படும். பண்பில்லாப் பட்டதாரிகளிடம், பாவம்! பண்புள்ள பெண் மக்கள் படும் பாடு தான் என்னே! வாழ் நாட்கள் முழுதும், நிம்மதியற்று, இன்பமில்லாது போய் விடுகிறது குழந்தைகளுக்கு வளர்ப்புத்தான் முக்கியமென் பதை நன்கு காட்டிச் சென்றுள்ளார்கள். கல்வி கற்கும் காலத்தில் ஆடம்பர வாழ்க்கை யாகாது, குழந்தைகளுக்கு உண்ண, தின்னத்தான்

செல்லமே தவிர அவர்கள் முன்னேறும் விஷயத்தில் மிகவும் கண்டிப்பாக இருக்க வேண்டும் என்பார்கள். சகலமும் முடித்து உலக வாழ்க்கையில் இறங்கும் போது கைநிறைய மோதிரங்களும், இடுப்பில் பட்டுக் கரை வேட்டியும், சந்தனமும், சாத்துப் பொடியும் அவசியமென்பார்கள். அதன்படியே நடை முறையிலும் செய்து காட்டினார்கள். படிக்கும் போது பெண் குழந்தைகளுக்குப் பொன்னகைகள் மிகவும் சொற்பமே. ஆனால் திருமணத்தின் போது கண்டோர் அதிசயிக்க அணிகலன்கள் பூட்டிச் சிறப்பாகத் திருமணம் செய்து வைத்தார்கள். ஆணையும், பெண்ணையும் ஒன்று போல் கல்வி கற்க வைத்தார்கள். பெண் மக்களை எஸ். எஸ். எல். ஸி. வரையும், ஆண் மக்களைப் பட்டதாரிகளாக்கி ஒரு மைந்தனை டாக்டராகவும், மற்றொரு மைந்தனை போலீஸ் சூப்ரெண்டெண்டாகவும், கடைசி மைந்தனை மின்சார வல்லுநராகவும் ஆக்கிப் பெருமையடைந்தார்கள். இல்லற மென்றால் இது போன்று இருக்க முயற்சிக்க வேண்டும். ஒவ்வொருவருக்கும் கடமை செலுத்துவதில் அவர்களைப் போல் தியாகம் செய்யவே முடியாது. இனி என்று காணப் போகிறோம் கனி மொழி பேசும் அந்தத் தெய்வீகத் தியாகியை!

இல்லறத்தில்தான் இவ்வளவு அக்கறையென்றால், ஆத்மீகத் துறையிலும், இதைவிடப் பன் மடங்கு கட்டுத் திட்டமாக நடத்திக் காட்டினார்கள். தன்னிடமுள்ள தெய்வீகச் சக்தியால் ஏசுநாதர் போலவும், புத்தர்பிரான் போலவும் நோயால் அவதிப்படுபவர்களின் கஷ்டத்தைத் தியான நிட்டையிலிருந்து போக்கிக் குணம் பெறச் செய்வார்கள். வியாபாரம் தொழில் முதலியவைகளின் கஷ்ட நஷ்ட சமயங்களில் எப்போதும் இலாபம்கிட்டுமென்று கூறுவார்கள். மேலும், சகல மக்களுக்கும் வரும் பொருளுரைத்து நிம்மதி யூட்டுவார்கள். நாட்டிலுள்ள எல்லோருக்கும் சாதி, மத பேதமின்றி உதவி செய்து அன்புப் பிதாவாக— அற வொளியாக வாழ்ந்து வந்தார்கள். தாழ்த்தப்பட்டவர்களின் விவர மில்லாத வழக்குகளெல்லாம் இப் பேசும் தெய்வத்தின் முன்னால் சமாதானப்படுத்தப்பட்டுச் சந்தோஷமாக வீடு செல்வார்கள். இவ்வஞ்சா நெஞ்சருக்கு உலகோர் "சாமி" என்ற பட்டமும் சூட்டி யிருந்தார்கள். நாம் எல்லோரும் ஒரு காரியம் எடுத்து நடத்த வேண்டுமென்றால் பெட்டியிலோ. பையிலோ பணம் வைத்துத் தான் காரியம் நடத்த முடியும். ஆனால், "வெறுங் கையில் முழம் போடுகிறார்" என்றால் அவர்களுக்கே சாலப் பொருந்தும். எப்பேற்பட்ட காரியமானாலும், அன்று இரவு வரை ஒன்றுமே நடந்திருக்காது. காலையில் பார்த்தால் எல்லாக் காரியங்களும் மளமள வென்று நடக்கும். சமுத்திரத்தில் துலா போட்டது போல் வற்றாது எல்லாச் சாமான்களும் செழித்து விடும். இப்படிப்பட்ட பல அதிசயங்களை அவர்களுடனிருந்து அனுபவித்துள்ளோம். எங்களைப் போற்றி வளர்த்த தெய்வம் மறைந்து விட்டதே! எங்கள் அன்புக் களஞ்சியம், அமுதப் பெட்டகம் அகன்று போயிற்றே! எங்கே காண்போம் இப்பேற்பட்ட பொருளை! ஆண்டு ஆண்டுதோறும் அழுது புரண்டாலும் மறைந்தார் வரப் போவதில்லை. ஆனால் எங்களுக்கு அன்பு அப்பா அவர்களின் ஆவி பக்கத் துணையாக இருந்து உதவி புரியும். நம்பினோரைக் கைவிட மாட்டார்கள். வாழ்க நம் குல தெய்வம்! தினமும் தவறாது துதிப்போமாக!

---

# விஞ்ஞானத்துக்கு அப்பால்

தமிழ்ப்பேராசிரியர், திரு ம. ரா. போ. குருசாமி, M. A., கோவை

என் தாயாருக்குப் பேறுகால சமயம். நாற்பது ஆண்டுகளுக்கு முன்பு, 1921, அம்மாவுக்குப் பெரியம்மை வார்த்திருந்தது, மிகக் கடுமையான நிலை !''கரு சிதைந்தே இருக்கும்; பிறந்தாலும் உயிரோடு இருக்காது; அப்படி இருந்தாலும் குருடாயிருப்பது உறுதி—சேயைப் பற்றிப் பேசுவானேன்; தாயே பிழைப்பது பத்தாம் பட்சம்......'' என்று பேசிக்கொண்டார்கள். அம்மைக்கு வைத்தியம் என்று நம் நாட்டில் செய்யமாட்டார்களே! ஆயினும் பண்டிதர்களுக்குக் குறைவில்லை; உள்ளூர் வைத்தியர்களோடு அயலூர் வல்லுநர் சிலரும் வந்திருந்தனர். மந்திரவாதிகளும் இருந்தனர். இவர்கள் தந்த அச்சம் போதாதென்று, சோதிடம் என்ற பெயரால் ''களத்திரத் தானம் பலம் போதாது; ஏழாமிடம் வந்து '' என்று அச்சுறுத்திக் கொண்டிருந்தனர் சிலர். ''கல்லுப் பிள்ளையார்'' என்று பெயர்பெற்ற என் தந்தையாரவர்கள் இந்தச் சூழலில் சுருண்டுகிடந்தார்கள்.

முக்கத் தேவர் என்ற எங்கள் குடும்ப நண்பர்—''ஐயா, வைத்தியம் மந்திரம் சோதிடம் ஒன்றும் வேண்டாம்; நம் பொன்னையா சாமியவர்கள் வந்தால் போதும்; சரி என்று சொல்லுங்கள்; நானே போய் அழைத்துவந்துவிடுவேன்...'' என்று எட்டாந் தடவையாகச் சொன்னார்கள். சரி என்ற அடுத்த விநாடி வண்டியும் ஆளும் சென்றனர்.

சாமியவர்கள் அப்போது இராசபாளையத்திலே அப்பாள் ராசா ஊருணிப் பக்கத்தில் மற்றக் குடியிருப்புகளுக்கெல்லாம் ஒதுங்கி ஒதுப்புறமாகத் தனியே அமைந்த கூரைக் குடிசையில் வசித்துவந்தார்கள். ''சாமியாவது வருவதாவது! அவர்களைக் காணவே முடியாது! இழுத்துப் படுத்துவிட்டால் மனைவியார் உள்பட யாருமே நெருங்கக்கூடாதே!...'' இவ்வாறு அங்கலாய்த்துக் கொண்டிருந்தார்கள் புகழ் சிறந்த வைத்தியரும் இராசபாளையம் வாசியுமான எங்கள் சம்பந்தியார்.

இரவு பதினொரு மணிக்கு மேலிருக்கும் சாமியவர்கள் வந்துவிட்டார்கள்.

வந்தவர்கள் மருந்து கொண்டுவந்தார்களா? மந்திரம் போட்டார்களா? அம்மாவைப் பார்க்கவேனும் செய்தார்களா? இவை ஒன்றும் செய்யவில்லை; இழுத்து மூடிப் படுத்துவிட்டார்கள் எங்கள் வீட்டு வெளித்திண்ணையில்! படுத்துவிட்டால்தான் அவர்களை யாரும் நெருங்கக் கூடாதே! எல்லோரும் சும்மா இருந்தார்கள்.

இரண்டு மூன்று நாழிகைகள் சென்றன. ''இரண்டு மணிகள் உண்டு இன்னும் ஏன் கவலை!'' என்று சொல்லிய வண்ணம் எழுந்தார்கள் சாமிகள். அந்த நொடியிலேயே அம்மைத் தொந்தரவுமட்டுமல்ல, பேறுகால சமயங்களிலெல்லாம் என் தாயார் தவறாமல் பட்டுவந்த வேறொரு தாங்கலாகாத் துன்பமும் ஒருங்கே நீங்கின. பேறுகாலம் ஆயிற்று. ஊறு ஒன்றுமின்றிப் பிறந்தேன் நான்.

எனக்குப் பின்பு ஒரு தங்கையும் பிறந்தாள்.

எண்பது வயதோடு இன்று என் பக்கத்திலுள்ள என் தாயாரிடமிருந்து பலகால் கேட்டு அறிந்த அற்புதச் செய்தி இது.

மனிதனைத் தவிர மற்ற உயிரினங்களை இயல்லூக்கம் (Instinct) ஒன்றே பெரும்பாலும் ஆள்வது, கி. மு. பத்தாயிரம், கி. பி. பத்தாயிரம், எந்தக் காலமாக இருந்தாலும், உணவு உறக்கம் ஒழுக்கம்—எல்லாம் எப்போதும் போலவேதான். பிற உயிர்களுக்கு, ''முன்னேற்றம்'' என்ற தத்துவமே அவைகளுக்கு இல்லை. மனித அறிவு இடைமிட்டாலொழிய, பிற உயிர்கள் ''வளர்''வதில்லை, அறிவு என்ற வகையில், ''எண்ணி''ப்பார்க்கும்

இயல்பும், அவ் வாற்றலால் விளையும் முன்னேற்றமும், பிற உயிர்களுக்கு இல்லை இவ் வாற்றல் மிக்க எண்ணத்தின் நிலைக்களமே மனம் என்பது. இம்மன நலத்தின் ஆற்றல் அளவிறந்தது; அளவுதானும் உண்டோ என்று ஐயுறும் அளவிற்கு ஆற்றல் மிக்கது. விஞ்ஞானம் என்ற வகையில் இதைப் புறத்தளவில் ஒருவாறு கண்டுள்ள இன்றைய அறிவுலகம், மெய்ஞ்ஞானம் என்ற அகவுலகில் நுழையக் கூடவில்லை எனலாம். பரு உடலைப் பல வகையில் ஓயாமல் ஒழியாமல் ஆண்டு கொண்டிருந்தும் அவனுக்குப் புலப்படாமலே எங்கோ ஒளிந்திருக்கும் அவனது உயிரையும் அவ் உயிரின் உள்ளே இருந்து அதனையும் ஆள்கின்ற ஆண்டவனையுமே, கண்டுகொள்கிறான் மனிதன் என்றால், அவனது மனத்தின் ஆற்றலை எளிதாக அளவிட ஒண்ணுமா! பல்லாயிரவர்க்கு ஒருவரே இவ் ஆற்றல் பெறுவர் என்பது உண்மைதான். ஆயினும் இப்பேறு பெற்ற பெரியோர் உண்டு தானே!

உடலில் உறு பொருளையும் அப்பொருளை ஆளும் பரம்பொருளையும் கண்டு, அக்காட்சியிலே திளைக்கின்ற செம்மல்களின் காட்சிக்கு அகப்படாத எதுவும் இருக்க முடியுமா? இக் காட்சி கை வந்த ஞானிகட்குக் காலம் இடம் முதலிய தடைகள் இல்லை. அவர்களுக்கு ஆகாதது என்பதும் ஒன்று இல்லை. "எல்லாம் வல்ல சித்தர்" என்ற தொல் வழக்கு வெறும் சொலவடை அல்ல. பொருள் பொதிந்த உண்மைத் திருவாக்கு.

விஞ்ஞான ஆராய்ச்சியின் எல்லைக்கு அப்பாற்பட்டு இயங்கும் ஞானிகள் நம் காலத்திலும் உண்டு என்பதற்குத் தவத்திரு. பொன்னையா சாமிகள் ஒரு சான்று. அவர்களது வாழ்க்கையில் நிகழ்ந்த சில நிகழ்ச்சிகள் உலகியலில் அன்றாடம் காணும் நிகழ்ச்சிகளைப் போல இராமலிருக்கலாம்; ஆனால் அந்நிகழ்ச்சிகள் பற்றிய உண்மையில் ஐயங்கொண்டு புறக்கணிக்காமல், அந்நிகழ்ச்சிகளின் பின்னணியில், அடிப்படையாக அமைந்த ஆற்றலின் வரலாற்றைப் பற்றி "ஒன்றி இருந்து நினைமின்கள்" என்று வேண்டிக் கொள்கிறேன்.

சாமிகளின் வாழ்வில் நிகழ்ந்துள்ள "அற்புதங்கள்" சிலவற்றில் நானறிந்த வேறும் ஒன்று சொல்வேன்.

ஏறக் குறைய முப்பதாண்டுகட்கு முன்னே என் பெரிய தமையனார் திருச்செந்தில் கோயிலதிகாரியாக இருந்தார்கள். அப்போது சாமியவர்கள் தம் மக்களுடன் (திரு குரு சின்னமணி, பரமகுரு, சரஸ்வதி இவ்வப்பி—என்று நினைவு) தன் தமையனாரின் விருந்தினராக வந்திருந்தார்கள். ஒரு நாள் முன்னந்தி நேரம். அலைவாய்க்கரையில் சாமியவர்களும் என் தமையனாரும் பேசிக்கொண்டிருந்தார்கள். சாமியவர்கள் திடீரென்று பேச்சை நிறுத்தி விட்டார்கள். சில நொடிகள் சென்று—என்னையா, இப்படி நேரத்திலா வருவார்கள்! வந்தாலும் கவனம் வேண்டாமா?" என்று சொன்னார்கள். அலைவாய்க்கரையில் சாமிகள் முன்பே சம்மணம் போட்டு உட்கார்ந்திருந்த என் தமையனாருக்கு சாமிகளின் சொல்லு விளங்கவில்லை. "சாமி என்ன சொல்லுகிறீர்கள்!" என்று கேட்டதற்கு, "ஒன்றுமில்லை" என்று சொல்லி வாயடைத்து விட்டார்கள். சுமார் ஒருமணிநேரம்கழித்துபோலீசு இன்ஸ்பெக்டரொருவர் (திரு முத்தையா முதலியார் என்று பெயர் ஞாபகம்) வந்து சேர்ந்தார். சாமியவர்களைப் பார்ப்பதற்காகக் காரிலே வருகிறபோது வழி பிசகி வயலுக்குள் வண்டி இறங்கிவிட்டது; அநேகமாககவிழ்ந்தே விட்டது; நல்ல வேளை, ஆபத்தில்லாமல் வண்டியிலிருந்தவர்கள் தப்பினார்கள்; புன்னகை தவழும் திருமுக விலாசத்தோடு சாமியவர்கள் வயலுக்குள் நின்றுகொண்டிருந்தார்கள்! என்று அவர் வாய் மூலம் விளக்கம் கிடைத்தது சாமிகளின் சொல்லுக்கு.

அன்பு இழுத்து வரும் அடியவருக்கு நேர நின்ற இடையூறு சாமியவர்களின் நுண்ணுடம்புக்கு வேலை தந்துவிட்டது.

இன்னொரு நிகழ்ச்சி—சற்று வேடிக்கையானது. சாமியவர்கள் எங்களுடன் ஒரு முறை தங்கியிருந்து பிரிந்தபோது தன் சட்டையொன்றை விட்டுச் சென்றுவிட்டார்கள். எனது மைத்துனர் (பெரிய தமக்கையாரின் கணவர்) இந்து நிலையப் பாதுகாவல் துறையிலிருந்தார்கள். ஆலயங்களிலிருந்து ஆண்டுக் கட்டணமாகப் பணம் தண்டும் கட்மையொன்று அவர்களுக்கு உண்டு. பல ஆண்டுகளாக நிலுவையாகி தம்மால் இயலாது என்று மற்றவர்கள் கைவிட்டுப்போன இடங்களில் சென்று தண்டுவதில் ஒரு எக்களிப்பு அத்தானுக்கு. அப்படிப்பட்ட சமயங்களில் "எடுடா அந்தச் சட்டையை!" என்று வாங்கி அணிந்து கொண்டு செல்வார்கள்; வெற்றி தரத் தவறியதில்லை. அவ்வங்கி! என்னே சாமிகளின் அருள்!

"வெளி நாட்டார் ரொட்டியைப் பிரதான ஆகாரமாகக் கண்டு பிடித்தனர்; நம் தேசத்தவர் இட்லியைக் கண்டுபிடித்தது போல்" என்பார்கள் தவத்திரு சுவாமிகள்.

## ஆத்மீகக் களஞ்சியம்

திரு சுப்பையா நாயுடு, திருவில்லிபுத்தூர்

சிறுவயதிலேயே ஆத்மீக வழிகளின் உண்மைகளை அறிய வேண்டும் என்ற அவா அதிகரித்து, தியான முறையைக் கையாள, உழைத்துக் கொண்டு வந்தபோது, வடமொழியில் தான் அவ்வுண்மைகளைக் காணமுடியும் என்பதாக தெரிந்து, திருவனந்தபுரத்திலுள்ள வடமொழிக் கல்லூரிக்குச் சென்று அங்கு தாம் பயின்றதாகவும் என்னிடம் தவத்திரு பொன்னையாசுவாமி அவர்கள் கூறியிருக்கின்றார்கள். தவமுனிவராகிய அவர்கள் தர்க்க வியாகர்ண வேதநூல்களை நன்கு கற்று ஆராய்ந்திருக்கின்றார்கள். அப்போது அவைகளின் உண்மைகளில் ஈடுபட்டு நிஷ்டையில் இருந்து அதிக அனுபவம் பெற்றிருக்கின்றார்கள். அந்த நிஷ்டை அனுபவம் நீடித்துக் கொண்டேயிருக்க இயற்கையின் உண்மைகள் அவர்கள் மனதிற்கு எளிதில் புலப்பட்டுக் கொண்டு வந்ததாம்.

சுவாமி அவர்கள், மூலிகைகளின் தனிக் குணங்களும், உலோகங்களின் தனிக்குணங்களும் அவைகளை ஔடதமாக்கும் முறைகளும் தன்மனதிற்கு புலப்பட்டதாகவும் எனக்குச் சொல்லியிருக்கின்றார்கள்; தனக்கு ஞான போதை எந்த நேரமும் உண்டாகி தன்னிடம் வந்த அன்பர்களுக் கெல்லாம் அதை விளம்பிக் கொண்டிருக்கவே அவா உண்டாகி அப்படியே செய்து வந்தார்களாம். எந்த லௌகீக விஷயத்தைப்பற்றி பேசினாலும் அதில் ஆத்மீக விஷய சிலேடைகளைச் சொல்லி மாயையில் இச்சையுள்ள மனமும் ஆத்மீக விஷயத்தில் திரும்ப வேண்டும் என்ற எண்ணத்துடன் பேசுவார்கள். பெருமையோடு எல்லோரும் வாழ வேண்டும் என்ற நற்கருத்துக் குவியல்கள் தான் சுவாமி அவர்களின் உள்ளங்களில் விளையுமே தவிர சிறுமை சிறிதுங்கூட காண்பதரிதாகும். அறிவுக்கு விருந்து தான் அவர்களிடம்

எப்போதும் கிடைத்துக் கொண்டிருக்கும். சுவாமி அவர்களை ஒருமுறை கண்டவர்கள், அடிக்கடி அவர்களை காணவேண்டுமே எனத் தேடி வந்துகொண்டே யிருப்பார்கள். காரணம், அவர்களுடைய கனிவான சொல்லையும், கருத்தான உரைகளையும் மீண்டும் கேட்க வேண்டுமே என்ற எண்ணந்தான். சுவாமிகளின் நல்லுரைகளைப் பெற்றால் நலிந்த வாழ்வு நலம் பெறும்.

சுவாமிகளின் திருமுக மண்டலத்தில் நெற்றியினுடைய தேஜஸ் காய்ச்சிய சொக்கத் தங்கத்தைப்போல் பிரகாசிக்கும். அப்படி அவர்களுடையதிருநெற்றியில் தங்கச்சுடரொளி வீசுவதால் காண்போர் கண்களுக்கு கவர்ச்சியூட்டும். இப்படிக் கண்ணுடன் செவிக்கும் நல்லுணவு கிடைத்துக் கொண்டே இருக்குமாதலால், சுவாமிகளை காணவந்த அன்பர்கள் தங்கள் வீட்டுக் காரியங்களை யெல்லாம் மறந்து நாட்கணக்கில் அவர்களுடன் இருந்து கொண்டே யிருப்பார்கள். அப்படி இருப்பவர்களைப் பார்த்து மற்றவர்கள், இவர்கள் விரக்தி அடைந்து போய்விடுவார்களோ என்று பயந்து விடுவார்கள். ஏனென்றால், அப்படிப்பட்ட ஆகர்ஷண சக்தி சுவாமிகளிடம் உண்டாகி இருந்தது. இதனால் பிரபுக்களும், விவேகிகளும், ஏழை எளியவர்களும் அவர்களைத் தேடி வந்துகொண்டே யிருப்பார்கள். நல்லன்பர்களும், பிரபுக்களும் சுவாமிகளை தங்கள் இல்லத்திற்கு அழைத்துச் சென்று நாள் கணக்கில் இருக்க வைத்து அவர்களுடைய அருளைப்பெற காத்துக் கொண்டிருப்பார்கள்.

தூங்காமல் தூங்கிதேடிவந்தவர்கள் உள்ளத்தில் சுவாமி அவர்கள் ஆனந்தத்தை உண்டாக்கிக்கொண்டே யிருப்பார்கள். சுவாமிகளிடம் பேசிக்கொண்டே யிருந்தால் இரவெல்லாம் பகலாகவேயிருக்கும். வைகறையில் சேவல் கூவும் போதுதான் அதிக நேரம் ஆகிவிட்டதோ என்று அனைவரும் ஆச்சரியப்படுவார்கள். இப்படிப்பட்ட வியப்பூட்டும் அதிசயங்களை சுவாமிகளுடன் கூடவேயிருந்து எத்தனையோ முறைகள் கண்கூடாக கண்டிருக்கின்றேன். நான் மறுநாளே திரும்பிவிடலா மென்று அவர்களை காண்பதற்காகச் செல்வேன். ஆனால் மூன்று நாளோ, நான்கு நாளோ கழித்துத்தான் திரும்பி வருவேன். பின்னர் வீடுதிரும்பியவுடன் தான் மறுநாளே திரும்பிவிடவேண்டுமென்ற என் திட்டம் நினைவுக்கு வரும். சுவாமி அவர்களின் பொன்மொழிகள் தாம் என் உள்ளத்தை ஈர்த்து நாட்கணக்கில் தங்கவைத்து விட்டதே என்று எண்ணி மகிழ்வேன். வந்த அன்பர்களின் வாடிய உள்ளத்துயர்களைப் போக்கி தூய வழிகாட்டும் சுவாமி அவர்களின் பேருரைகளையும் சக்திகளையும் எப்படி என்றால் அளவிட்டுக்கூறமுடியும். எத்தனையோ அதிசயங்களையும் அடியார்களுக்குக்காட்டியசித்து வேலைகளையும் கணக்கிட்டு கூற இயலாது. சிலர் சொல்லவும் கேட்டிருக்கின்றேன். நான் நேரடியாகவும் பலகாட்சிகளைக் கண்டு பரவசமடைந்திருக்கின்றேன். வேதமொழி வல்லுநரான சுவாமி அவர்கள் வண்டிகளில் யாத்திரை செய்யும் போது கூட நிஷ்டையில் இருப்பார்கள். அப்படி நிஷ்டையில் இருக்கும் போது அவர்களிடம் சில உயர்ந்த சக்திகள் உண்டாகி இருக்கின்றன. அதற்கு எடுத்துக்காட்டாக 1920ம் ஆண்டில் நடந்த ஒரு நிகழ்ச்சியைக் குறிக்கின்றேன்.

ஒரு ஒற்றை மாட்டு வண்டியில் சுவாமிகள் உட்பட எழுவர் ஏறியிருந்தார்கள். அந்த வண்டி அடுத்த ஊரிலுள்ள ஒரு திருமண வீட்டிற்கு அவசரமாகச் செல்லத்தயாராக இருந்தது. நேரமும் குறைவாகத்தான் இருந்தது. அந்த குறைந்த நேரத்தில் வண்டி திருமண வீட்டிற்கு போயாக வேண்டும். அந்த திருமண வீட்டார் ஒரு வாரத்திற்கு முன்னதாகவே சுவாமிகள் அவர்கள் தங்கள் இல்லத்திற்கு வர வேண்டுமென்று கெஞ்சிக் கேட்டுக்கொண்டிருந்தார்கள். இந்த பார மிகுந்த வண்டிசெல்ல வேண்டியிருந்த திருமண வீட்டை நோக்கி

விரைந்தது. வண்டி பாரமிகுதியால் மாடு திணறிக்கொண்டு இழுக்க முடியாமல் பாதியில் நின்று விட்டது. திருமண வீட்டிற்கு போக முடியாது போல் இருக்கிறதே என்று வண்டியி லுள்ள அனைவர்க்கும் ஐயம் தோன்றிற்று.

இந்த நிலையைக் கண்ட சுவாமி அவர்கள் அந்த மாட்டுக் கயிற்றை தன் கையிலே கொடுக்கும்படி வாங்கிக்கொண்டு உடனே தூங்கத் துவங்கி விட்டார்கள். இதைக் கண்ட வண்டியில் உள்ளவர்கள், "என்ன? சுவாமிகள் வண்டியோட்டாது தூங்குகின்றார்களே," என்று எண்ணிக்கொண்டு, அவர்களிடம், கேட் கவும் பயந்து கொண்டு பேசாதிருந்தார்கள். திடீரென்று வண்டியை ஒரு குலுக்கு குலுக்கி, வண்டியை இழுக்க முடியாமல் தினறிக்கொண் டிருந்த அந்த மாடு பன்னிரெண்டு மைல் வேகத்தில் தன்னை அறியாமல் நான்கு கால் பாய்ச்சலிலே படுவேகமாக ஓடியது. வண்டியி லுள்ள மற்றவர்கள் எங்கே வண்டி கவிழ்ந்து விடுமோ என்று ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்து பயப்படத் துவங்கினார்கள். ஆனால் எந்தவித ஆபத்தில்லாமல் திருமண இல்லத் திற்கு தக்க சமயத்தில் திருப்பூட்டிற்கு போய் சேர்ந்தார்கள். வண்டியிலிருந்தோர் சுவாமிக ளின் அதிசயச் செயலைக்கண்டு, ஆச்சரியப் பட்டு கல கல என்று வயிறு வெடிக்கச் சிரித் துக் கொண்டே அந்த திருமண இல்லத்தில் வந்து இறங்கினார்கள். இந்த நிகழ்ச்சி வண்டி யிலுள்ளோர்களுக்கு வேடிக்கையாக இருந்தா லும், அது ஓர் அற்புதச் செயலே. சுவாமிகளின் சித்து விளையாடல்களின் மகிமைதான் என்னே! மற்றொரு திருமண வீட்டிற்கு சுவாமிகள் அழைக்கப்பட்டிருந்தார்கள். இவ்வாறு அழைத்துக்கொண்டு சென்றவர்கள் கல்யாண வீட்டுக் காரியங்களை கவனிக்கத் துவங்கி சுவாமி அவர்களை அழைத்து வந்ததை மறந்து விட்டார்கள். திருமணம் முடிந்து உணவு பரி மாறும் வேளையிலும்கூட மறதியாகவே இருந்து விட்டார்கள். பந்திகள் வைத்துக் கொண்டி ருந்த போதிலும் சுவாமிகளை அவ்வீட்டார் தேடவில்லை. சுவாமிகள் தான் இருந்த இடத் திலே உட்கார்ந்திருக்க, அறுசுவை உண்பதற் காக ஓர் இலை போடப்பட்டது. ஒரு பெண் கறிவகைகளை எடுத்துக்கொண்டு வந்து அதிக தூரத்திலிருந்து இலையில் அலட்சியமாய் பரி மாறுவதை சுவாமி அவர்கள் கண்டு கல்யாண வீட்டைவிட்டு வெளியே வந்துவிட்டார்கள். அதையும் கூட்டத்தில் ஒருவரும் கவனிக்க வில்லை. சுவாமிகள் ஒரு விடுதியில் தங்கிக் கொண்டு அந்தக் கவனக் குறைவை சிறிதும் நினையாமல் இருந்து கொண்டிருந்தார்கள். அப்படி இருந்தாலும் தன் மனதில் இந்தச் சம் பவம் பற்றி அருள் என்ன நினைக்குமோ என்ற எண்ணம் சுவாமிகளுக்கு தோன்றிக் கொண்டி ருந்தது. பின்னர் வழக்கம் போல் சுவாமி அவர்கள் தூங்கிவிட்டார்கள்.

நள்ளிரவு மணி இரண்டிருக்கும். திருமண வீட்டில் "ஐயோ, ஐயோ," என்று பயங்கர சப்தம் பள்ளியறையில் திடீரென்று எழுந்தது, தூங்கிக் கொண்டிருந்த எல்லோரும் பதறி எழுந்து மணமக்கள் கூச்சலிடும் வேதனையைக் கண்டு பயந்து ஒன்றும் செய்ய முடியாமல் தவித்தார்கள். அத்தருணம் அக்கல்யாண வீட்டுப் பிரமுகருக்கு சுவாமிகளைப் பற்றிய நினைவு வந்து, உடனே சுவாமிகள் தங்கியிருக் கும் விடுதிக்கு வந்து சுவாமி அவர்களின் திருப் பாதங்களை வணங்கி, "சுவாமிகளே, அடியேனை மன்னிக்க வேண்டும். திருமண வீட்டில் யான் தங்களை கவனிக்க மறந்து விட்டேன். மிகவும் புண்பட்டு வருந்துகின் றேன். சுவாமி தங்களை கவனிக்காத காரணமோ என்னமோ மணமக்கள் பள்ளி யறையில் அலறித்துடித்து அவதிப்படுகிறார்கள். அருள் சொரிந்து அவர்களை காப்பாற்ற வேண்டும்" என்று கெஞ்சி வேண்டினர். சுவாமிகள் அதைக் கேட்டு சிரித்துக்கொண்டே ஔடதங்கொடுத்துமணமக்களின் அவதியைப் போக்கினார்கள். தெய்வ அருள், அடியார்களைக் காத்துக்கொண்டிருக்கிறது என்றும், தங்க ளுக்கு பிழை செய்தவர்களை அடியார்கள்

பொறுத்துக் கொண்டாலும், தெய்வம் பொறுத்திராது என்றும் சுவாமிகள் அடிக்கடி திருஷ்டாந்தங்கள் மூலமாகவே கதைகளைக் கூறுவார்கள்.

தீர்க்க தரிசனம்பற்றி அடிக்கடி சுவாமி அவர்கள் பேசுவார்கள். பெரியோர்கள் மனக் கண்களுக்கு எதிர்காலத்தின் கருவை நிகழ் காலத்தில் காணும் சக்தி உண்டு என்பார்கள். செஞ்சரள் தரிசாக இருந்த ஓரிடத்திற்கு சுவாமிகள் போயிருந்த போது அந்த இடம் பெரிய தொழிற்சாலைகளும் மாடமாளிகைகளும் உண்டாகக்கூடிய இடமாகத் தன் கண்களுக்குத் தெரிகிறது என்று திருவாய் மலர்ந்தருளினார்கள். அத்திருவாக்குப்படியே தற்போது சஞ்சீவி மலைக்குத் தெற்கே உள்ள இடத்தில் பல மில்களையும் குமாரசுவாமி நகரையும் கண்கூடாக காண்கிறோம். இந்த அரிய விஷயத்தை சுவாமிகளின் அந்தரங்க நண்பரான அம்பைய ராஜா அவர்கள் என்னிடம் சொல்லியிருக்கிறார்கள். தன் அன்பர்களுக்குத் தீங்கு ஏற்பட்டால் சுவாமி அவர்கள் அதிகமாக வருந்துவார்கள். தீங்கு நினைத்தவர்களை அவர்கள் குற்றம் உணரும்படியாக தங்கள் மனதில் சங்கல்பம் செய்து கொண்டார்களேயானால், குற்றம் செய்தவர்களுக்கு இன்னல் பல உண்டாகி அந்தக் குற்றத்தை அவர்கள் உணரும்படியாகச் செய்யும். அதற்குப் பல உதாரணங்கள் உண்டு. ஆனால் அவைகள் சொல்லத்தக்கவை அல்ல, சுவாமி அவர்கள் வேதாந்த மொழிகளைப் பேசும் போது சொல்லுவார்கள், "ஞானத்தை அடைவது என்பது இலேசான காரியமல்ல. நெருப்பாற்றை மயிற்பாலம் மூலம் கடந்து, நூலேணி கொண்டு ஏறிச் செல்லவேண்டும். கபடவேஷதாரிகளுக்கு அது கிட்டாது. உயிரைக் கொடுத்து அடைய வேண்டிய விஷயமது. பற்றுதலுள்ளவர்களுக்கு அது கிட்டாது. அது மூச்சைப் பிடித்த காரியமைய்யா," என்று அடிக்கடி கூறுவார்கள். "என் கண்ணே, மணியே என்றால் அது வராதய்யா. அண்டத்திலுள்ளதை பிண்டத்திலே பார்க்கவேண்டிய விஷயம். நிலையேறிப்பார்த்தால்தான் நிலவும் தெரியும். அதில் அநேகப் படிகள் உண்டு" என்பார்கள். அப்படி அவர்கள் சொல்லும்போது அந்த உயர் சூட்சுமநிலை அவர்களுக்கு வந்துவிடும். அவர்கள் சொல்லுவதைக் கேட்பவர்களுக்கும் அந்நிலை வருவதாகத் தெரியும். சுவாமி அவர்களுக்கு சங்கீதக் கலையில் அதிக ஈடுபாடு உண்டு, பாடகர்கள் நாயனக்காரர்கள், மேளக்காரர்கள் சுவாமி அவர்களை அதிகமாக விரும்புவார்கள். ஏனென்றால் அவர்கள் சுவாமிகள் முன்னிலையில் கச்சேரி ஆரம்பித்தால் அவர்களுக்கு அதிக நாட்களாகப் படித்தும் கையாள முடியாமல் இருந்த பந்தாக்களும், இராக வாய்ப்புக்களும், உயர்ந்த மனோபாவங்களும் அவர்களுக்கு அப்போது கிட்டித் தன்னைமறந்து யாவரும் ஆச்சரியப்படத்தக்க வகையில் இசை முழங்குவார்கள். கச்சேரி முடிந்து போகும் போதுதான் தாங்கள் புதிய பந்தாக்களும், இராக வகைகளும் வாசித்தோம் என்பதை உணர்வார்கள். உடனே அதற்கு காரணமாகிய அறிவுத் தெய்வம் தவத்திரு சுவாமி அவர்களின் திருப்பாதங்களில் வணங்கி ஆசிபெற்றுச் செல்லுவார்கள். அதற்கு ஒரு எடுத்துக்காட்டு, தனது மகள் திருமதி சரஸ்வதியின் கல்யாணத்தின்போது மழைக்கொட்டிய போதும் திரு வீராச்சாமி திரு மீனாட்சி சுந்தரம் அவர்கள் நடத்திய மேளக்கச்சேரியாகும். இப்படி நாயனக்காரர்களும், தவுல் காரர்களும் சுவாமிகளின் முன்னர் வாசித்துச் சிறப்பு பெறக்காரணம், தவத்திரு உடையார் தமது யோக சக்தியை தம் முன்னிலையிலுள்ள நபர்களுக்குக் கொடுத்துக்கொண்டே இருந்ததுதான். சுவாமி அவர்கள் தமாஷாகவே சில நேரம் பேசுவதுண்டு." நான்இல்லாததில் பெரியவன், மற்ற பிரபுக்கள் இருப்பதில் பெரியவர்கள், கோட்டீஸ்வரனை கோவணாண்டி மதிக்க மாட்டான். நான் கடலில் துலாப் போட்டவன். விளைந்த காட்டுக் குருவி,"

என்று நகைச்சுவையோடு கூறுவார்கள். பெரியவர்களை எப்போதும் உள்ளன்போடு உவந்து புகழ்ந்து பேசிக்கொண்டே இருப்பார்கள். சுவாமிகள் சொல் மழை கொட்டும் போது இடையிடையே மஸ்தான்களைப் பற்றியும், பட்டணத்தடிகளைப் பற்றியும் அடிக்கடி உதாரணம் கூறுவார்கள். நிஷ்டையிலே நாட்கணக்காக இருந்து ஞான மார்க்க உபதேசம் செய்யும் சுவாமிகள் சமாதி இலக்ஷணம் பற்றி பேசும்போது, "பலகோடி அண்ட பகிரண்டமும் தன்னுள்ளே பார்த்து நிற்பது சமாதி. எழுபுவனத்தையும் சுத்தியும் சுத்தாதிருப்பது சமாதி." என்று மஸ்தான் பாடல்களை சொல்லுவார்கள்.

> "மாத்தான வத்தையும் மாயாபுரியின்
> மயக்கத்தையும்
> நீத்தார் தமக்கு ஒருநிட்டை உண்டோ
> நித்தம் அன்புகொண்டு வேர்த்தால் குளித்து
> பசித்தால் புசித்து விழிதுயின்று பார்த்தால்
> உலகத்தார் போலிருப்பர் பற்றற்றவரே"

என்ற பட்டினத்தடிகளின் பாடலைச் சொல்லி நமது மனோ நிலையைத் தூக்கிவிடுவார்கள். சப்த சொருப பிரம்ம நிலையைப்பற்றி பேசும் போது, "சப்தம் பிறந்தயிடம் தன் மயமாய் நின்றயிடம். சித்தம் பிறந்தயிடம் தேர்ந்து தெளிவதெக்காலம்? ஓசை ஒடுங்குமிடம், ஓம்காரத்துள்ளொளிகாண் பேசாதிருக்கும் பிரமமிது என்றுண்டி," என்று குறிப்பிடுவார்கள். அவர்கள் அப்படி சொல்லும்போது அந்நிலையிலிருந்து ஆழ்ந்து சொல்வதாகவே நமக்குத் தெரியும். சுவாமி அவர்களைத் தேடி தெய்வத் திரு பசுபதி பரமகுரு பொது சுவாமி அவர்கள் வந்து சேர்ந்தார்கள். தெய்வ அருள்பெற்ற பசுபதி பரமகுரு பொது சுவாமி அவர்கள் மிக நயமாக சுவாமி அவர்களைப் பேசும்போது, "அவருக்கும் நமக்கும் அதிக வேறுபாடுகள் உண்டு. சுவாமி பெரிய இராஜ யோகி அரசன்," என்பார்கள். அரசியலைப்பற்றி சுவாமி அவர்கள் அடிக்கடிப் பேசுவதுண்டு, நம் நாட்டை ஆண்ட வெள்ளையர்களுக்கு நம் நாட்டைப் பற்றிய மட்டில் அடிப்படை நல்லெண்ணம் இல்லை. இன்னும் இரண்டொரு ஆண்டில்தானே விட்டுவிட்டு ஓடிவிடுவார்கள் என்று கூறினார்கள். ஆனால் அது எப்படி நடக்க முடியுமென்று எண்ணினோம். அது நடக்குமென்று சொன்னார்கள்; அப்போது நம்ப முடியாமலிருந்தது பின் ஆச்சரியப்படும்படி 1947-ல் நடந்தது.

சுவாமிகளிடம் சுரங்கண்ட குழந்தைகளைக் கொண்டுவந்து காட்டுவார்கள். அக்குழந்தையைப் பார்த்துவிட்டு தன் கையால் சிறிது நேரம் தொட்டுக்கொண்டு இருப்பார்கள். பிறகு அந்தக்குழந்தையின் காய்ச்சல் குறைந்து சாதாரண நிலைமைக்கு வரும். அப்படியாக காய்ச்சலை இறக்கிவிட்டு தான் தொட்ட கையை தண்ணீர் கொண்டு கழுவிக்கொள்வார்கள். அப்போது, தன் கையில் ஏற்றிக் கொண்ட உஷ்ணத்தைப் போக்குவதற்காகவே கழுவுவதாக நமக்குப் புலப்படும்.

ஒரு தடவை சுவாமி அவர்கள் சோளக் காட்டிலுள்ள ஒரு கிணற்றில் இறங்கி மகிழ்வோடு பல அன்பர்களுடன் குளித்துக்கொண்டிருந்தார்கள். அப்போது திடீரென மல்லிகைப் பூவின் நறுமணம் எங்கும் வீசியது. அங்கிருந்த அன்பர்கள் ஆச்சரியப்பட்டு, "திடீரென இம் மணம், எங்கிருந்து, எப்படி வந்தது? அருகில் பூந்தோட்டம் ஒன்றுமில்லையே. நாம் வரும் போது இந்த மணம் கிடையாதே. இது அற்புதமாக இருக்கின்றதே." என்று கேட்கத் துவங்கினார்கள். சுவாமிகள், "நினைத்தால் உண்டாகக்கூடியதுதான் அது." என்று கூறினார்கள்.

சுவாமி அவர்கள் இரண்டு மூன்று நாட்கள் வரை நிர்விகற்ப சமாதியில் இருந்தார்களென்று, அவர்களது நெருங்கிய அன்பர்கள் சொல்லக் கேட்டிருக்கிறேன். அந்த நிலையை அடைந்தவர்களுக்குத்தான் சித்துக்கள் ஏற்படுவதுண்டு. அதை அவர்கள் சோதனை செய்து பார்ப்பது வழக்கமாம். அவர்கள் ஒரு போட்

டோக் குழுவில் தானும் நின்று படம் பிடிக்கும் போது தன்னை அந்த படத்தில் விழாதபடி செய்திருக்கிறார்கள். தாயுமான சுவாமி அவர்கள் சொல்லியபடி "வேறொருவர் காணாது உலகத்துலாவலாம்," என்பதற்கேற்ப இந்த நிகழ்ச்சி உள்ளது.

ஆத்மீகத் துறையில் அதிதீவிரமாக உழைத்து உண்மையைக் கண்கூடாகக்கண்டு அனுபவித்தவர்கள் சுவாமிகள். அவர்கள் இப்படி அனுபவித்த சக்திகளைப் பக்தர்களுக்கும், அன்பர்களுக்கும் நல்ல பயனளிக்கும் முறையில் வழங்குவார்கள். சுவாமிகள் அவர்களது அன்பர்கள் படிப்புப் பரீட்சைகளுக்கோ அல்லது சங்கீதக் கச்சேரிகளுக்கோ போவதாக இருந்தால், அவர்களிடம் அந்த பரீட்சை அல்லது கச்சேரி எந்த நேரம் நடக்கும் என்று நேரத்தைக் கேட்டுக் கொள்வார்கள். பின் அந்த நேரத்தில் அப்படிப் பரீட்சைக்கோ அல்லது கச்சேரிக்கோ செல்பவர்களை தன் மனதில் நினைந்து நிஷ்டையில் தூங்குவார்கள். அவர்கள் எத்தனை மைலுக்கு அப்பாலிருந்தாலும் சரி அவர்களுக்குத் தன்னை அறியாமல் ஆற்றல் பிறந்து நன்றாய் விடை எழுதவும், அன்றி கச்சேரி விமரிசையாய்ச் செய்யவும் வாய்ப்பு கிடைக்கப் பெறுவார்கள். அப்படிச் செய்வது 'தனது சக்தியை அவர்களுக்குக் கொடுத்தல்,' என்று சொல்வார்கள்.

'சும்மா இருத்தல்' என்பதைப்பற்றி, சுவாமி அவர்கள் பேசுவார்கள். 'சும்மா இருத்தல்' என்பது இலேசான காரியமில்லை. புலன்கள் ஐந்தும் தன்னிருப்பில் ஒடுங்கி செயல்பற்றி இருக்கும் உயர்நிலைக்குத்தான் சும்மா இருத்தல் என்பார்கள். "சும்மா இருந்து சுகம் பெறுவது எக்காலம்." என்ற பாட்டைச் சொல்வார்கள். அச்சொல் கேட்பவர்களுக்கு அந்த நிலையே உணர்த்தும்படியாக இருக்கும். சுவாமி அவர்கள் முன்னிலையில் இருந்தாலே சத்சங்க அனுபவத்தால் அவர்கள் சொல்லும் நிலைகள் முழுதும் நமக்கு வந்து, நாம் அதை அனுபவிப்பதாகவே இருக்கும். ஆழ்கடல் நெஞ்சமும், ஆய்ந்து கற்ற வேதாந்த உள்ளமும், அவதிப்பட்டு வருவோர் துயர் நீக்கும் அருளும் கொண்ட சுவாமிகள் இப்பூவுலகில் தோன்றிய அள்ள அள்ளக் குறையா ஆத்மீகக் களஞ்சியமே!

## சுவாமிகளின் அருள் மொழிகள்

தத்துவ பூர்வமாகவும், அபசுரமில்லாமலும், வாசிக்கும் நாதசுரம் போன்ற மங்கள இசைகள் விசேட சமயங்களில் வாசிக்கச் செய்யும் போது, சொந்த வீட்டிலேயே வைத்து நடைபெறச் செய்வது நல்லது. அவ்வாறு செய்வது குடும்பத்திற்கு விருத்தி. நாத பிரம்மம், அவ்விசை நிகழ்ச்சி நடந்த இடத்தில் நிலைத்து நின்று இந்த விருத்தியைக் கொடுக்கும்.

'தன்னை ஒரு மனிதத்தரகன்' என்று சொல்லிக் கொள்வார்கள். நடமாடும் கோயில்களான மனிதர்களின் தனித்தனி ஆத்ம நிலையையும், தன்மையையும் ஆராய்ந்து அதற்குத் தகுந்தார்போல் அவரவர்களிடம் பழகிவருதில் தனக்குள்ள தனிப் பிரியத்தை இவ்வாறு கூறுவார்கள். மனிதர்களைப் பாகு படுத்தி அறிவதுதான் மிகப் பெரிய வித்தை. அதுவே முடிவான அறிவுமாகுமென்பார்கள். இந்த அபூர்வ வித்தையில் தேர்ந்தவர்களைத்தான் 'மனிதத்தரகன்' என்று குறிக்கிறார்கள்.

# தெய்வப் பிறவி

வைத்தியர், திரு பெரியசாமித் தேவர், இராசபாளையம்

உலகிலே இறைவனின் திருவருளால் எண்ணற்ற யோகிகள் தோன்றி யிருக்கின்றனர். இப்பொழுதும் அவர்கள் கடலிலே பிறக்கும் முத்துச் சிப்பிகளைப் போலத் தோன்றுகிறார்கள். தூய வாழ்வினைச் சுடர் ஒளியாக்கும் அவ் யோகிகளின் இளமை வாழ்க்கை, அந்த வாழ்விலே வடித்த விநோதங்கள் முதலியவைகளை ஊடுருவிக் கண்டால் மக்களே வியப்படைவார்கள். 'சின்ன வயதிலே சுட்டித்தனமாக விளையாடித் திரிந்த இவரா! எல்லோரும் போற்றும் யோகியானார்.'' என்று ஊர்மக்கள் ஆச்சரியப்பட்டு, அவரை வழிபடும் தெய்வமாகக் கருதி வழிபடத் தொடங்கி விடுவார்கள். இவ்வாறு செய்வது உலக மக்களின் இயல்பே ஆகும்.

இராமநாதபுரம் சேதுபதி மன்னர் அவர்களால் அமெரிக்கா முதலிய மேல் நாடுகளுக்கு அனுப்பப்பட்டு, இந்து மதத்தின் பெருமையை உலகெலாம் பரப்பி முழக்கமிட்ட உலகம் போற்றும் சுவாமி விவேகானந்தா அவர்கள் இளமையிலே பள்ளியில் படித்துக் கொண்டிருக்கும்பொழுது எவரும் கண்டு அஞ்சும்படி குறும்புத்தனம் செய்துவந்தார்கள். அவ்வாறு குறும்புத்தனம் புரிந்துவந்த அவர்கள் கடலிலே நதி சங்கமமாவதுபோல ஸ்ரீராம கிருஷ்ணபரமஹம்சர் அவர்களிடம் சரணடைந்து, சீடராகிச் சிதைந்த சமுதாயத்திற்கு நல்வழி காட்டும் உலகம் போற்றும் தவயோகி ஆனார்கள். அதே போல்தான் ஆயிரக்கணக்கான மக்களுக்கு அரிய உதவிகளைச் செய்து, அறவழி காட்டிய அன்புத் தெய்வம் தவத்திரு பொன்னையா சுவாமிகள், தன் இளமை வாழ்விலே சுவாமி விவேகானந்தரைப் போலவே குறும்புத்தனமான செயல்களைச் செய்வதும், மரங்களிலே ஏறித் தலைகீழாகத் தொங்கியாடுவதும், பல நண்பர்களைச் சேர்த்துக் கொண்டு பயங்கரமாகச் சிலம்பாடி அவர்களைத் திணறவைப்பதும், அழகாய்ப் புலிவேடம் பூண்டு ஆவேசமாய் ஆடுவதும் போன்ற குறும்புச் செயல்களைச் செய்து வந்தார்கள்.

மக்கள் வணங்கும் நம் சுவாமிகளோடு நான் இளமையிலேயே பழகி அவர்களுடைய அருங்குணங்களைக் கண்டு ஆச்சரியப்பட்டிருக்கின்றேன். சுவாமிகளுக்கும் எனக்கும் ஏற்பட்ட தொடர்பு மிக விசித்திரமாகவே இருக்கும். நான் அப்போது நூல் கடையில் வேலைபார்த்துக் கொண்டிருந்தேன். ஹார்மோனியம் கற்றுக் கொள்வதற்காக அன்று முதன் முதல் சங்கீத ஆசிரியர் வீட்டிற்குச் சென்றேன். தம் சுவாமிகளும் ஹார்மோனியம் படிப்பதற்காக அங்கு வந்திருந்தார்கள். அன்று முதல் நாங்கள் இருவரும் சங்கீத மாணவர் என்ற முறையில் ஒருவரையொருவர் பழகிக்கொண்டோம். இசையில் தொடர்பு கொண்ட இரு உள்ளங்களும் பின் கடைசி வரை இதயம் மலர்ந்துஒன்றுற நாங்கள் இருவரும் சேர்ந்தே இரவில் சங்கீத ஆசிரியர் இல்லம் சென்று சங்கீதம் கற்று வந்தோம். அங்கு நடந்த ஆச்சரியம் பாருங்கள், நாங்கள் போன பத்தாம் நாளிலேயே நம் சுவாமிகள் கூச்சமில்லாமல் சுரத்தோடு ஹார்மோனியம் வாசிக்கத் தொடங்கிவிட்டார்கள். அக்காட்சியைகண்ட சங்கீத ஆசிரியர் அதிசயப்பட்டு சுவாமிகளுடைய திறமையைப் பாராட்டி,'' வந்த பத்து நாட்களுக்குள் நீண்டகாலம் பழகியதைப் போல் ஹார்மோனியம் வாசிக்கிறாயே, ஆச்சரியமாகத்தான் இருக்கிறது. எல்லாம் தெய்வச்செயல்தான். எவரும் பெறமுடியாத இசை ஞானத்தை பிறவியிலேயே பெற்றுள்ளது உனது எதிர்கால வளர்ச்சியின் வழிகாட்டிதான்,'' என்று சொல்லிச் சுவாமிகளைப் புகழ்ந்தார். அப்போது சுவாமிகள் நயமாக, ஐயா! பிடில் வாத்தியக் கருவி தங்களிடம் இருக்கும். அதைக் கொஞ்ச நேரம் கொடுங்கள். வாசித்துக் காண்பிக்கின்றேன். வாசிப்பதில் குற்றங்குறை யிருந்தால், அவைகளைப் போக்கி நன்

முறையில் பிடில்வாசிக்கக் கற்றுக்கொடுங்கள்'' என்று சொன்னார்கள். அதைக் கேட்ட சங்கீத ஆசிரியருக்கு மேலும் மகிழ்ச்சி உண்டாகியது.

உடனே சங்கீத ஆசிரியர் பிடில் இசைக் கருவியை சுவாமிகளிடம் கொடுத்து, அதை வாசிக்கும்படிச் சொன்னார்கள். கொஞ்நேரம் வாசிக்கின்றேன் என்று சொன்ன சுவாமிகள் ஒருமணி நேரம் மிக அழகாகப் பிடில் வாசித்து எங்கள் உள்ளத்தைக் கொள்ளை கொண்டு இனிய கானத்தில் மூழ்கவைத்தார்கள். சுவாமிகளின் பிடில் இசை நுணுக்கத்தைக் கேட்ட ஆசிரியர் கண்களை மூடித் தானிருக்குமிடத்தை மறந்து அமர்ந்திருந்தார். அப்போது சுவாமிகள் பிடில் வாசிப்பதை நிறுத்திவிட்டு, ''ஐயா! இசைக் கலையில் வல்லவராகத் திகழும் தங்கள் முன்னால் ஏதோ எனக்குத் தெரிந்ததை வாசித்தேன். குற்றங் குறைகளை நீக்கி, என் மீது அன்பு கொண்டு என்னைச் சிறந்த கலைருணுக்குவது தங்கள் பொறுப்பு'' என்று சொன்னார்கள். கண்களைத் திறந்த சங்கீத ஆசிரியர் ''தம்பி! மீண்டும் இன்னொரு முறை பிடில் வாசிக்கவேண்டும். உறுதியாக உனக்கு என்னிடமுள்ள இசைக் கலையைக் கற்றுக் கொடுக்கிறேன். ஆனால் ஒன்று பிறவியிலேயே இருக்கும் உன் இசை ஞானம் என்னை மெய் மறக்கச் செய்கிறதே,'' என்று சொன்னார். ஆசிரியர் சொன்னவுடனேயே வளரும் சித்தின் நிலையை அவசரப்பட்டுக் காட்டி விட்டோமே என்று கண்ட சுவாமிகள் குருவுக்கு மாணவன் அடங்கி நடப்பது போல் மீண்டும் பிடில் வாசிக்கத் தொடங்கினார்கள். ஆனால் பிடில் வாத்தியக் கருவியின் நரம்புகள் திடீரென்று அறுந்து விழுந்தன. அச் செயல் புதிய மாணவன் இசை கற்பது போல் இருந்தது. அவ்வாறு அவர்கள் செய்யக் காரணம், குருவிடம் மாணவன் எப்போதும் அடக்கமாக அடங்கியிருக்கும் பண்பை விளக்கிக் காட்டி, சங்கீத ஆசிரியரின் மனதை மாற்றவே அச் செயலைப் புரிந்தார்கள். சங்கீதஆசிரியர், பிறவியிலேயே சுவாமிகளிடம் வளரும் இசை ஞானத்தையும், யோக நிலையையும் கண்டு வியந்து, தனக்கு மாணவனாக யிருக்க இசையும் சுவாமிகளுக்கு ஹார்மோனியமும், பிடிலும் வாசிக்கவும் கற்றுக் கொடுக்கலானார்கள். இங்ஙனம் பிறவி ஞானம் பெற்ற சுவாமிகளிடம் எனக்குப் பழக வாய்ப்புக் கிடைத்தது இறைவனின் அருள் போலும் என்று எண்ணி சுவாமிகளுடன் மிகப் பயபக்தியோடு பழகி வந்தேன்.

சுவாமிகள் எங்கு சென்றாலும் என்னை அழைத்துச் செல்வார்கள். ஒருநாள் இருவரும் ஊருக்கு மேற்கேயுள்ள தென்னந் தோப்பிற்குச் சென்றோம். சுவாமிகள் நொடிப் பொழுதிலே மரம் ஏறித் தேங்காய்களைப் பறித்துப் போடுவதிலே பெரிய சாமர்த்தியசாலியாகும். அன்றைக்கு சுவாமிகள் மரமேறி பத்துப் பதினைந்து தேங்காய்களைப் பறித்துப் போட்டார்கள். அந்த நேரம் தோப்புக்காரன் தென்னம்பிள்ளைகளுக்குத் தண்ணீர் பாய்ச்சிக் கொண்டிருந்தான். தேங்காய்கள் விழும் சத்தத்தைக் கேட்டு வேகமாக ஓடி வந்து கோபத்தோடு எங்களைச் சத்தம் போட்டான். எனக்கு என்ன செய்வது என்று தெரியாமல் பயம் உண்டாகியது. சுவாமிகளோ மரத்தை விட்டுக் கீழே இறங்கவேயில்லை. ''எத்தனை நாளா இப்படிச் செய்றீங்க? இருவரையும் மரத்தில் கட்டி வைத்துச் சரியான தண்டனை கொடுக்கிறேன். உங்களைச் சும்மா விடப் போவதில்லை. மரத்தை விட்டுக் கீழே இறங்கு,'' என்று சுவாமிகளைப் பார்த்துக் கோபாவேசமாகக் கூறினான் அத்தோப்புக்காரன். அப்போது சுவாமிகள் சிரித்துக் கொண்டே ''பாவம்! எவ்வளவு நேரம் நிற்கிறாயோ, பார்ப்போம்,'' என்று கேலி செய்யலானார்கள். அவன் சிறிது நேரம் நின்று பயமுறுத்திப் பார்த்தான். சுவாமிகள் மரத்தை விட்டுக் கீழே இறங்கவேயில்லை. தோப்புக்காரனுக்கு ஆத்திரம் தாங்க முடியவில்லை. ஒரு கல்லையெடுத்து மரத்திலே சுவாமிகள் மேல் எறியப் போனான். அதற்குள் சுவாமிகள் ஒரு பச்சை

மட்டையைப் பிடுங்கி கீழே போட்டார்கள். அதைக் கண்ட அவன்........"ஐயோ பாம்பு! பாம்பு!" என்று கத்திக் கொண்டே தலை தெறிக்கத் திரும்பிப் பாராமல் ஓடி விட்டான். பின் தேங்காய்களைத் தின்று விட்டு வீடு திரும்பினேம். இதனுல் சுவாமிகளுக்குக் கஷ்டம் ஏற்பட்டால் தெய்வம் வந்து தானே காக்கிறது என்பதைத் தெரிந்து கொண்டேன்.

சுவாமிகள் இளமையிலேயே .வேதாந்தம், லௌகீகம், சங்கீதம் முதலிய கலைகளில் தலை சிறந்தவர்களாக விளங்கினுர்கள். அவர்கள் இளமையிலே படித்த வேதாந்த நூல்களைக் கணக்கிட முடியாது. எப்பொழுதும் இரவு நேரங்களில் சுவாமிகள் வேதாந்தம் படிப்பார்கள். பகற்பொழுதில் எங்களையெல் லாம் குளக்கரைப் பக்கம் அழைத்துக்கொண்டு போய் விளையாடி அளவளாவுவார்கள். இத்தகைய அருள் வடிவம் கொண்ட சுவாமிகள் திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள ஜமீன் சிங்கிலிபட்டி மடத்தில் சில மாதங்கள் தங்கி முத்தானந்த சுவாமிகளிடம் வேதாந்த விளக் கங்கள் கேட்டார்கள். ஆனுல் சிங்கிலிபட்டிச் சாமி நம் சுவாமிகளின் தெய்வ அருளையும், அற்புத சித்து சக்திகளையும் கண்டு வியந்து, சீடராக இருக்கவந்தவரை நண்பராக்கிக் கொண்டார். பிறகு கோவில்பட்டி சென்று சிவானந்த சுவாமிகளிடம் சிறிது நாள் தங்கி யிருந்து வேதாந்தம் படித்தார்கள்.

இவ்விதம் நம் சுவாமிகள் முன்வினைப் பயனுல் வீடு விட்டு வெளியேறி வேதம்படித்துக் கொண்டிருக்கையில், சுவாமிகளுடைய தாயா ரவர்கள் பலமுறை முயன்று, கடைசியாகத் தன் மகனுக்குத் திருமணம் செய்ய முடிவு செய் தார்கள். சுவாமிகள் விருப்பப்படியே ஏழு வயதுப் பெண்ணைப் பார்த்துச் சுவாமிகளுக்குத் திருமணம் நடத்தினுர்கள். இத் திருமணத் திற்கு முக்கிய காரணமாக இருந்தவர் திரு குமாரசாமித் தேவர் அவர்கள் ஆகும். சுவாமிகள் திருமணத்தை முடித்து விட்டுப் பெண்ணைத் தம்முடன் அழைத்துச் செல்லாமல் சமஸ்கிருதம் படிக்க மலையாளம் சென்றுவிட் டார்கள். அங்கிருந்து சிலோன் சென்று பல நகரங்களைச் சுற்றிப் பார்த்து, பல மாதங்கள் தங்கியிருந்து, மக்களின் உன்னதமான அன் பைப் பெற்றுர்கள். அங்குள்ள யாழ்ப்பாணப் பகுதியில் குடியிருக்கும் தமிழ்ப் பெருங்குடி மக்களும் சுவாமிகளை அன்போடு வரவேற்று, பாத பூஜை செய்து, பக்தியோடு தங்களுடைய மரியாதைகளைச் செய்திருக்கிருர்கள். சுவாமி கள் சிலோன் பயணத்தை முடித்துத் தாயகம் திரும்பி மலையாளம் சென்று தன்னுடைய சமஸ்கிருதப் படிப்பை முடித்தார்கள். பின் செங்கோட்டைக் கரையாளர் குடும்பம், திருவனந்தபுரம் மகாராஜா, திவான் முதலி யோர்களிடம் அன்பு விடை பெற்றுக் கொண்டு இராசபாளையம் திரும்பி இல்லறத்தைக் கைக் கொண்டார்கள்.

பார்ப்பதற்கு நல்ல சிவந்த மேனித் தோற்ற மும், பரம்பொருள் சக்தியால் பிறவியிலேயே ஞானச் செல்வமும், இசை, இன்னும் பல கலை களையும் கொண்ட சுவாமிகள் எங்களுடைய வீட்டிற்கு அடிக்கடி வருவார்கள். என்னுடைய தகப்பனுர் தெய்வபக்தியிலே நம்பிக்கை கொண்டவராகும். வேதாந்த நூல்களையும் விடாது படித்து வருவார்கள். சுவாமிகள் வந்துவிட்டால் என் தகப்பனுர் ஆவலோடு அன்பாக வரவேற்று பக்கத்திலே அமரவைத்து அவர்களைப் பார்த்து, "தம்பி! பொன்னையா! நீ வருவதால் என்னுடைய வீடே தெய்வ மணத்தால் நிறைந்திருக்கிறது. நீ இருக்கும் வரை சுந்தரமயமாகத்தான் இருக்கிறது. சென்றுவிட்டால் எனக்குச் சூனியமாகவே தென்படுகிறது" என்று களிப்போடு சொல்லு வார். அதற்குச் சுவாமிகள் வேடிக்கையாக "அப்படியானுல் நான் எப்பொழுதும் உங்க ளுடனேயே இருக்கிறேனே" என்பார்கள். என்னுடைய தகப்பனுர் சிரித்துக்கொண்டே "தம்பி! நாம் நினைப்பதெல்லாம் நடப்பதேது? இறையருள் கிட்டினுல் அதுவே பெருஞ்

செல்வமாகும் தம்பி! குடத்திலிட்ட விளக்குப் போல உன்னிடம் ஞானமார்க்கமும், தெய்வ அருளும் வளர்கிறது. பிற்காலத்தில் இவ் வுலகமே உன்னை ஞானியாகப் போற்றி வணங் கும். நான் உன்னோடு அளவளாவி யிருப்பது நான் முற்பிறவியில் செய்த புண்ணியமாகும்'' என்பார். என் தகப்பனுர் சொல்வதைக் கேட் கும் சுவாமிகள் ஒன்றும் புரியாதவர்கள் போல ''தாங்கள் என்ன சொன்னீர்கள்? ஒன்றும் புரியவில்லையே'' என்பார்கள்.

பின்னர் என்னுடைய தகப்பனுர் வேதாந்த சூத்திரங்களைப் படிக்கத் தொடங்கிவிடுவார். அப்போது சுவாமிகள் மிக அமைதியாக அமர்ந்து அவ்வேத சூத்திரங்களைக் கேட்பார் கள். சுமார் இரண்டு மணிநேரம் கழித்த வுடன், என் தகப்பனுர் படிப்பதை நிறுத்தி விட்டுச் சுவாமிகளைப் பார்ப்பார். உடனே சுவாமிகள் புன்னகையோடு தான் கேட்ட சூத்திரங்களை ஒன்றுவிடாமல் அப்படியே ஒப்பிப்பார்கள். அவர்களுடைய அபார ஞாபக சக்தியைக் கண்ட என் தகப்பனுர் சுவாமிகளை சேர்த்துக் கட்டித்தழுவிக் கொள்வார். பின் சுவாமிகள் தான் ஒப்பித்த வேதாந்த சூத்தி ரங்களுக்கு மிகத் தெளிவான உரைசொல்லி என் தகப்பனுர் மனதைக் குளிரவைப்பார்கள். இத்தகைய ஆற்றல் மிக்க சுவாமிகள் ஒரு தெய்வப்பிறவியேதான். நம் சுவாமிகள் ஒரு தெய்வப் பிறவியாகையால் இளமையிலேயே அவர்களிடம் எண்ணற்ற ஞானக் கலைகள் மலிந்திருந்தன. அக்கலைகளின் ரகசியங்களை நான் இளமையிலேயே நம் சுவாமிகளிடம் கண்டிருக்கிறேன். திருஞானக் கடலிலே மிதந்து, வேதாந்தத்திலே முதிர்ந்து விளங்கும் நம் சுவாமிகளை என் தகப்பனுர் 'வேதாந்த மணி' யென்று அழைப்பார்.

சுவாமிகளிடம் அவர்களை யறியாமலேயே பலவித சக்திகள் வளர்ந்து வந்ததைக் கண் டிருக்கிறேன். சுவாமிகளின் பழைய வீட்டிலே ஓர் சம்பவம் நடைபெற்றது. அதை நினைத் தாலே எனக்கு இன்னும் உடல் நடுங்கும். அன்று ஞாயிற்றுக்கிழமை கடை விடு முறை யாகையால், நான் சுவாமிகளைக் காண்பதற் காக அவர்களுடைய வீட்டிற்குச் சென்றேன். சுவாமிகளின் தாயாரவர்கள் குளித்து முழுகி நெற்றியிலே திருநீறுபூசி சைவப் பழமாகத் திருநீற்றுக் கோலத்தோடு காட்சியளிக்கும் தன் மகனுராகிய சுவாமிகளுக்கு இலை விரித்து, அன்போடு உணவு பரிமாறிக்கொண்டிருந் தார்கள். இருவரும் உணவை முடித்துவிட்டு, வெளித் திண்ணையில் அமர்ந்து பேசிக் கொண்டிருந்தோம், திண்ணையில் இருந்த சுவாமிகளை ஏதோ ஒரு தெய்வ சக்தி திடீ ரென்று தூக்கி முற்றத்தில் எறிய, சுவாமிகள் முற்றத்திலே தலைகீழாக மண்டை நொறுங் கும்படி விழுந்தார்கள் அதைக் கண்ட நான் என் உடல் நடுங்க ''ஐயோ'' என்று சத்தம் போட்டேன். ஆனால் சுவாமிகளோ தமது பொன் உடலிலே ஒருதுளி காயமோ, தூசியோ படாது சிரித்துக்கொண்டு எழுந்துவந்தார்கள். அப்பொழுது அவர்களுடைய முகம் செந் தாமரையாய் ஒளிவிட்டுச் சொலித்தது. சாதாரண மனிதனுக்கு அந்நிகழ்ச்சி ஏற்பட் டிருந்தால் நிச்சயம் மண்டை நொறுங்கியிருக் கும். அதைக் கண்ட நான் தெய்வசக்தியின் விளைவுதான் இந்த அதிசய நிகழ்ச்சிக்குக் காரணம் என்பதைத் தெரிந்து கொண்டேன். வியர்வையால் நனைந்து நடுங்கும் என்னைக் கண்ட சுவாமிகள் சிரித்துக்கொண்டே ''பயப் படாதே'' என்று சொல்லி என் நெற்றியிலே திருநீறு பூசினுர்கள். என்ன விந்தை! என் உடல் நடுக்கம் நின்று பயம் அகன்று, மனம் தெளிவடைந்தது.

காவியணிந்த போலிச் சாமியார்களைக் கண் டால் வேதாந்த விளக்கங்களைக் கேட்டு அவர் களைத் திகைக்க வைப்பது சுவாமிகளுக்கு ஒரு பொழுது போக்காகும். போலிச் சாமியார்கள் சுவாமிகளைக் கண்டால் போதும், தங்கள் கைகளிலே உள்ள திருவோடுகளையும், கமண்

ட்லங்களேயும் துணியால் மறைத்துக்கொண்டு ஓடிவிடுவார்கள். ஒரு சமயம் உடல் பருத்த சாமியார் ஒருவர் ஓட முடியாமல் நம் சாமி களிடம் அகப்பட்டுக் கொண்டார். அப்போது சுவாமிகள் சிரித்துக் கொண்டே "என்ன சாமியாரே! பொன்னுன இல்லற வாழ்க் கையை நடத்த முடியாமல் மனேவி மக்களேப் பிரிந்து இப்படிச் சாமியாராகி விட்டீரே! உமது மனேவி மக்களின் பாவம் உம்மைச் சும்மா விடாது. உழைப்பையே வாழ்க்கையின் உயிர் நாடி என்று எண்ணி, வீடு சென்று உம் வாழ்க்கையைச் சரிப்படுத்தும். இவ்வுலகத் தைத் திருத்தப் பல ஞானிகள் இருக்கின் றனர். உமக்கு இந்த வேலே வேண்டாம்" என்று சொன்னுர்கள். அவ்வார்த்தைகளேக் கேட்ட அப்போலிச் சாமியார் கண்ணீர் விட்டு "சுவாமிகளே! எனக்கு நல்லறிவூட்டி நல்வழி காட்டினீர்கள். என் சொத்தை யெல்லாம் சூதாட்டங்களிலும், குடிப்பதிலும் சூரை யாடிவிட்டு, கட்டிய மனேவியையும் மக்களே யும் கஷ்டப்பட விட்டு, இப்போலிச் சாமியா ராகி விட்டேன். தீயவனுக இருந்தவனேத் திருந்த வைத்தீர்கள். வாழ்விற்கும் வழி காட்டினீர்கள். இனி கழனிவேலே செய்தாவது கல்லுடைத்தாவது என் மனேவி மக்களே காப்பேன். இது சத்தியம். நாடு போற்றும் பெரும் ஞானியாகிய தங்களுக்கு எனது வணக்கம்" என்று கூறி சுவாமிகளே வணங்கிச் சென்றுர்.

இராமநாதபுரம் சேதுபதி மன்னர் நம் சுவாமிகளின் தெய்வச் சித்தின் மகிமையைக் கேட்டு அவர்களேக் காண வேண்டுமென்று விரும்பினுர்கள். அதன்படியே அவர்கள் கார் அனுப்ப நம் சுவாமிகள் இராமநாதபுரம் சென்றுர்கள். அச்சேதுபதி மன்னர் வரவேற் பதற்கு முன் ஆங்கு நடந்த ஒரு நிகழ்ச்சி யாவ ருக்கும் வியப்பைத் தரும். இராமநாதபுரம் அரண்மனேக்கு முன் காரை நிறுத்தி விட்டு நம் சுவாமிகள் கீழே இறங்கினுர்கள். அப் போது சுவாமிகளுடைய வருகையை எதிர் நோக்கி மாடியில் நின்று கொண்டிருந்த மன்னர் அவர்கள் காரின் சத்தம் கேட்டு காரி லிருந்து இறங்கும் பொன்மேனி பொலியும் நம் சுவாமிகளேக் கண்டவுடனே கை கூப்பித் தொழுது வணங்கி மெய்மறந்து நின்றுர்கள். அப்போது பக்கத்திலே நின்றுகொண்டிருந்த திவான் மன்னரிடம் மகாராஜா! நம் தவத்திரு பொன்னேயா சுவாமிகள் வந்துவிட்டார்கள். அதோ காரிலிருந்து இறங்கி நிற்பது அவர் களேதான் என்று நினேவு படுத்தினுர். அவ் வார்த்தைகளேக் கேட்ட மன்னர் அவர்கள் சட்டென்று கண்களேத் திறந்து, விரைந்து மாடியை விட்டிறங்கி மலர்ந்த முகத்தோடு சுவாமிகளுக்கு மாலேயிட்டு வணங்கி மரியாதை களேச் செய்து அரண்மனேக்குள் அழைத்துச் சென்று, சுவாமி விவேகானந்தா அவர்கள் தங்கிய அழகிய பளிங்கு அறையிலே சுவாமி களேத் தங்கவைத்தார்கள். சுவாமிகள் காரை விட்டு இறங்கியதும் அவர்களேக் கண்ட மன்னர் அவர்கள் மெய்மறக்கக் காரணம், நம் சுவாமிகளின் கம்பீரமான பொன்னுடல்த் தோற்றமும், புன்னகை தவழும் இனிய முகமும், தலேயில் நீண்ட சரிகைத் தலேப் பாகையும், சுவாமி விவேகானந்தா அவர்களே மறு பிறவி எடுத்து வந்திருக்கிருர்களோ என்று விளங்கிய காட்சியே ஆகும் பின்னர் சுவாமிகளோடு கலந்து உறவாடி அவர்களிடம் சுவாமி விவேகானந்தா அவர்களின் அரிய குணங்களேயும், தெய்வ சக்தியின் அருள் கொண்ட சித்தின் மகிமையையும் கண் டுணர்ந்து, இப்பூமியில் அவதரித்த புண்ணிய மூர்த்தியே நம் சுவாமிகள் என்று ஆனந்தக் கண்ணீர் வடித்து அகமகிழ்ந்து அவர்களேக் கொண்டாடினுர்கள் சேதுபதி மன்னர்.

இராமநாதபுரம் அரண்மனேயிலே சுவாமி விவேகானந்தா அவர்கள் தங்கிய அறையைத் தெய்வீக அறையென்று கருதி எவரும் அங்கு செல்லக் கூடாதென்று அதைப் பூட்டி வைத்

திருந்தார்கள். விளக்கு வெளிச்சமே இல்லாது பல ஆண்டுகள் பூட்டப்பட்டிருந்த அவ்வறை தெய்வ அருள் ததும்பும் நம் சுவாமிகளின் வருகையால் விளக்கேற்றி வைக்கப்பட்டது. கல் வடிவமாயிருந்த அகலிகை இராமபிரானின் திருவடிகள் பட்டவுடனே உயிர் பெற்றுப் பெண்ணுய் எழுந்தாள். அது போன்றே பல ஆண்டுகள் இருள் படர்ந்திருந்த அந்த அறையில் நம் சுவாமிகளின் திருவடிகள் பட்டவுடனே மண்டியிருந்த இருள் மடியத் திருவிளக்கின் வெளிச்சம் பட்டது. இதனுல் அறியும் கருத்து தெய்வ அருள் உடையவர்களாலே எவ்வுயிரும், எவ்விடமும் நன்மை யடையுமென்பதே.

சேத்தூர் ஜமீன்தார் அவர்கள் சுவாமிகளின் மகிமையை அறிந்து அவர்களை அழைத்து அருமையான விருந்து நடத்தி மகிழ்வித்தார்கள். சுவாமிகளிடம் குடிகொண்டிருக்கும் அற்புத தெய்வ சித்தின் மகிமையைக் கண்ட சேத்தூர் ஜமீன்தார் அவர்கள் "சுவாமிகள், ஓர் தெய்வப் பிறவி," என்று வாயார வாழ்த்தினுர்கள். ஜமீன்தார் அவர்கள் தன் குடும்பத்தில் எந்தக் காரியம் நடந்தாலும் சுவாமிகளிடம் அறிவிக்காமல் இருக்கமாட்டார்கள். பின்னர் சிங்கம்பட்டி, சிவகெங்கை, ஊத்துமலை, ஊர்க்காடு, இளையரசனேந்தல், நெற்கட்டுஞ் செவ்வல், தலைவன்கோட்டை, பேரையூர் போன்ற இன்னும் பல ஜமீன்தார்கள் நம் சுவாமிகளை அரண்மனைக்கு அழைத்து விருந்துகள் பல வைத்து வரவேற்பு செய்து, வெள்ளிப் பட்டயங்கள் வழங்கினுர்கள். அதிலே பேரையூர் ஜமீன்தார் அவர்கள் சுவாமிகளைத் தங்கப்பல்லக்கிலே அமரவைத்து அரண்மனைக்கு அழைத்துச் சென்றுர்கள் என்பது குறிப்பிடத் தக்கதாகும்.

சுவாமிகள் படுத்துத் தூங்கத் தொடங்கினுல் நான்கு ஐந்து நாட்கள் வரை சில சமயங்களில் எழுந்திருக்கமாட்டார்கள். வாழ்க்கையில் சங்கடப்படும் பல அன்பர்கள், சுவாமிகள் தூக்க நிஷ்டையைக் கலைத்து யெழுந்திருக்கும் வரைக் காத்திருப்பார்கள். சுவாமிகள் நிஷ்டையைக் கலைத்து எழுவார்கள். அப்போது குற்றுல அருவியிலே குளித்து மலர்ந்தது போல் அவர்களுடைய முகம் ஜிலு ஜிலு வென்று பிரகாசிக்கும். அவர்கள் அன்போடு தன்னிடம் நாடிவரும் அன்பர்களுக்கு, அவர்கள் நினைத்து வந்த காரியத்தை யூகித்துணர்ந்து பதில் சொல்வார்கள். வந்தவர்கள் "நாம் நினைத்து வந்ததைப் படம் பிடித்தது போல் சொல்லுகிறுர்களே! இவர்கள் ஓர் தெய்வப் பிறவிதான்." என்று பக்திமனதோடு பாதம் தொட்டு வணங்கி, தாம் வந்த காரியங்களை சுவாமிகளின் அருளால் முடித்துக் கொள்வார்கள். இதை நான் பல தடவை நேரடியாகவே கண்டிருக்கின்றேன். அப்படிக் கண்ட ஒரு நாளில் திரு அம்பையராஜா அவர்களும், திரு அன்னம ராஜா அவர்களும், திரு வங்காரசாமி ராஜா அவர்களும் சுவாமிகளிடம் ஒரு காரியம் நினைத்து வந்தார்கள். அப்பொழுது சுவாமிகளோடு நானும் இருந்தேன். சுவாமிகள் நிஷ்டையைக் கலைத்து யெழுந்து, அவர்கள் நினைத்த காரியத்தைச் சொல்லி அது வெற்றி பெறும் என்று ஆசி கூறினுர்கள். அதன்படியே அக்காரியமும் வெற்றியுற்றது.

ஒரு சமயம் சுவாமிகள் மலையாளம் செல்லும் போது என்னையும் உடன் அழைத்துச் சென்றுர்கள். திருவாங்கூர் மகாராஜா எங்களை வரவேற்று அன்போடு உரையாடினுர்கள். பிரபல டாக்டர் பிஸ்லட் பொன்னன் என்பவர் சுவாமிகளைத் தன் வீட்டிற்கு வரும்படிக் கேட்டுக் கொண்டார். சுவாமிகளோடு நானும் டாக்டருடைய வீட்டிற்குச் சென்றேன். அவர் வரவேற்ற நிலை சிறப்புள்ளதாகும். அன்று டாக்டர் ஒரு நோயாளிக்கு ஆப்ரேசன் செய்வதற்காக அங்குமிங்கும் அலைந்து தவித்தார். பாவம்! நோயாளியோ மயங்கிச் சவம்போல் கிடந்தான். டாக்டருடைய பரிதாபநிலையைச் சுவாமிகள் கண்டு கொண்டார்கள். அந்த நோயாளிக்கு வலக் கண்ணிலே ஒரு பெரிய ரணக்கட்டி கிளம்பியிருந்தது. அதைப்பக்குவ

மாய் அறுத்துச் சிகிச்சை செய்யவில்லையானால் கத்திபட்டு அவனுடைய கண் குருடாகிவிடும். அந்த ஆபத்தான நிலையை எப்படிச் சரி செய்வது என்று டாக்டர் ஆத்திரப்பட்டார். பின் சுவாமிகளிடம் தன்னிலையைக் கூறி, நோயாளியின் ரணக்கட்டியைப் போக்கி அவனுடைய கண்ணைக்காக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டார். சுவாமிகள் புன்னகையோடு தன் பையிலுள்ள ஒரு மருந்தை எடுத்து, நோயாளியின் கண்ணிலே வளர்ந்திருக்கும் ரணக்கட்டியின் மேல் தூவி டாக்டரிடம் "டாக்டர், இன்னும் ஒரு மணி நேரத்தில் கட்டி உடைந்து குணமாகிவிடும்," என்று திருவாய் மொழிந்தார்கள். அதன்படியே ஒரு மணி நேரம் கழித்தவுடன் அந்த நோயாளியின் கட்டி உடைந்து, சீழ்வடிந்து கண் தெரியத் தொடங்கியது. அவன் படுக்கையை விட்டு யெழுந்து வந்து சுவாமிகளின் திருவடிகளில் விழுந்து வணங்கினான். டாக்டர் மகிழ்ந்து சுவாமிகளிடம் அம்மருந்தின் தன்மையைக் கூறுமாறு கேட்டார். புன்னகையுடன் சுவாமிகள் "டாக்டரே! இது...அடியேனுக்கு பராசக்தியின் திருவருள் வழங்கிய திருநீறு தான்" என்றார்கள். அதைக் கேட்டவுடனே டாக்டர் சுவாமிகளின் திருவடிகளில் விழுந்து, தங்கள் சக்தியறியாது, மருந்தின் தன்மையைத் தவறாகக் கேட்டு விட்டேன். மன்னித்து விடுங்கள்." என்று சுவாமிகளிடம் கெஞ்சிக் கேட்டார். தெய்வ அருள்படைத்த நம் சுவாமிகள் டாக்டரை ஆசீர்வதித்து, அவருக்குத் தொழிலிலும் நல்ல விருத்தி உண்டாகும்படி அருள்புரிந்தார்கள். இதனால் சுவாமிகள் தன் திருநீற்று மகிமையால் வியாதிகளையும் குணப்படுத்தி வந்தார்கள் என்பதை நேரடியாகத் தெரிந்து கொண்டேன்.

சுவாமிகள் முக்காலம் அறிந்த முனிவராகும். இராமநாதபுரம் அரண்மனையிலே சுவாமிகள் திரு பாண்டிய மகாராஜா அவர்களோடு ஒரு சமயம் தங்கியிருந்தார்கள். அன்று இருவரும் வெகுநேரம் பேசிக் கொண்டிருந்தார்கள். விடிந்தால் தீபாவளிப் பண்டிகையாகும். மகாராஜா அவர்கள் சுவாமிகளிடம் விடை பெற்றுப் படுக்கச் சென்று விட்டார்கள். சுவாமிகள் படுத்து நிஷ்டையில் ஆழ்ந்தார்கள். விடியற் காலம் ஐந்து மணிக்கு அரண்மனைக்குள் ஒரு வேட்டுச் சத்தம் கேட்டது. அதைக் கேட்ட சுவாமிகள் வேட்டுச் சத்தம் புதிதாக இருக்கிறதே என்று ஞானக் கண்ணால் கண்டு விபரம் தெரிந்து வருத்தப் பட்டார்கள். விடிந்தவுடன் மகாராஜா அவர்கள் சுவாமிகளிடம் அவசரமாக ஓடி வந்து வருத்தத்தோடு "சுவாமிகளே! பாவம், நம் அரண்மனை மானேஜர் மகன் பேச்சு மூச்சில்லாமல் கிடக்கிறான். பல டாக்டர்கள் பார்த்தும் ஒன்றும் புரியவில்லையே என்கிறார்கள். தாங்கள் தயவு கூர்ந்து வாருங்கள்," என்று பணிவோடு அழைத்தார்கள். அதற்குச் சுவாமிகள் "மகாராஜா! விடியற் காலம் பையன், சிரட்டையில் கரி மருந்தைக் கடைந்து கல்வெடி செய்திருக்கிறான். பாவம், அது வெடித்து இந்நிலையாக்கி விட்டது. பையன் இறந்து பல நிமிடங்கள் ஆகிவிட்டன. அவன் விதியும் அவ்வளவுதான்," என்று சொன்னார்கள். சுவாமிகள் கூறியவுடன் பையனின் தகப்பனார் மகன் பிணமாகிக் கிடக்கும் அந்த அறையிலே இருந்த தூள் தூளான........ சிரட்டைச் சில்களையும், கரி மருந்தையும் கொண்டு வந்து, சுவாமிகளிடமும், மகாராஜாவிடமும் காட்டினார். அதைக் கண்ட எல்லோரும் வியப்பும் வேதனையும் பட்டார்கள். சுவாமிகளுடைய தெய்வ அருள் சக்தியைக் கண்ட மகாராஜா அவர்கள் சுவாமிகளின் திருவடிகள் போற்றி வணங்கினார்கள்.

தெய்வப் பிறவி யென்றும், ராஜ வைத்தியர் என்றும் மக்கள் போற்றி வணங்கும் சுவாமிகள், பராசக்தி அருள் பெற்ற தெய்வத்திரு பசுபதி பரமகுரு பொதிச் சாமிகள் இராசபாளையம் வந்து தம்முடன் சேர்ந்ததும், சில காலம் கழித்து கருவையிலே சென்று குடியேறினார்கள். கருவையிலே சுவாமிகளுடைய

சித்து விளையாடல்கள் அற்புத மயமாய் நாடெங்கும் பரவியது.

சங்கரன்கோயிலுக்குப் பக்கத்துக் கிராமத்தில் ஒரு சாமியார் இருந்தார். அவர் மந்திர சக்தியில் திறமை யுள்ளவர். அந்த வட்டாரத்திலே தான்தான் பெரிய ஞானி என்று பறை சாற்றிக் கொண்டு மக்களை ஏமாற்றிக் கர்வமாக நடந்து வந்தார். பூவுலகம் போற்றும் புண்யமூர்த்தியான பொன்னையா சுவாமிகளின் அரும்பெரும் சித்து விளையாடல்களின் அற்புத மயத்தைக் கேள்விப்பட்ட மக்கள் ஆயிரக் கணக்காக கரிவலம் வந்த நல்லூர் வந்து சுவாமிகளைத் தரிசித்துப் போனார்கள். அதைக் கண்ட அச்சாமியார், "தன்னைவிட அவர் பெரியவரா? அவருடைய சக்தியைத்தான் பார்ப்போமே," என்று அகங்காரங் கொண்டு கரிவலம்வந்தநல்லூர் வந்தடைந்து, சுவாமிகளைப் பார்த்து வணங்கினார். பக்தியால் பல மக்கள் சூழ்ந்திருக்க ஆசனத்திலே அமர்ந்திருக்கும் சுவாமிகள் அவரைத் தன் பக்கத்திலே அமரச் சொன்னார்கள். அம்மந்திரச் சாமியார் சில நிமிடம் மௌனமாக ஏதோ செய்துவிட்டு நம் சுவாமிகளைப் பார்த்தார். அப்போது சுவாமிகள் சம்மணம் போட்டு உட்கார்ந்து, காலை மாற்றுவதற்காக, வலது காலை எடுக்க முயன்றார்கள், முடியவில்லை. வந்த மந்திரச் சாமியார் காலை யெடுக்க முடியாது கட்டி விட்டார் மந்திரத்தால் என்பதைத் தெரிந்து கொண்டு, அதை விலக்கிக் காலை மாற்றி அமர்ந்து கொண்டு, அவரை ஒரக் கண்ணால் பார்த்தார்கள். அப் பார்வை அவருடைய மந்திர சக்தியை யெல்லாம் தூளாக்கி, அவருடைய வாயைப் பேசமுடியாமல் கட்டி விட்டது. மூடிய வாயைத் திறக்க முடியாமல் அச்சாமியார் அங்கும் இங்கும் புரண்டார். தன்னுடைய மந்திர சக்தியெல்லாம் சுவாமிகள் பார்வையால் தவிடு பொடி யானதைக் கண்டு அஞ்சி, அவர்களுடைய திருப்பாதங்களில் விழுந்து மன்னிப்புக் கேட்டுக் கண்ணீர் விட்டார். சுவாமிகள் சிரித்துக் கொண்டே, "எல்லாம் சிவன் அருள், சிந்தித்துத் தெளிவடை. நான் என்ற அகங்காரம் உம்மிடம் செத்தது. மந்திரம் இனி உமக்குப் பலிக்காது. மருந்துகளைச் செய்து வருகிறவர்களின் நோய் போக்கி வாழும், போரும்," என்றார்கள்.

தெய்வத்திரு பசுபதி பரமகுரு பொதிச் சாமிகள் கருவையில் கொசுக்கடி தாங்க முடியாது சங்கடப்பட்டார்கள். எனவே மழை பெய்தால் கொசுக்கடிக்கும் என்று கருதி கருவையிலே பன்னிரண்டாண்டுகள் மழை பெய்யாது செய்து விட்டார்கள். பின்னர் நம் சுவாமிகள் கண்ட தோற்றப்படி குறிப்பிட்ட நாளிலே இடி மின்னலோடு பெரும் மழை பொழிய தெய்வத் திரு பசுபதி பரமகுரு பொதிச்சாமிகள் சமாதியடைந்து திருக்கோயில் கொண்டார்கள். சுவாமிகள் அச் சமாதிக்கு சிற்ப வேலைகள் அமைந்த ஒரு அழகிய கோயில் மண்டபம் கட்டி வைத்தார்கள்.

இவ்வாறு ஆயிரக் கணக்கான மக்களுக்கு நல்வாழ்வும், நல்வழியும் காட்டி, இல்லறத் துறவியாய்க் கடமை யாற்றி, மக்களுடைய பாவங்களைப் போக்கி தெய்வப் பிறவியாய் விளங்கும் அப்புண்ணிய மூர்த்தி கருவையிலே சமாதியாகி திருக்கோயில் கொண்டார்கள். அத் தெய்வப் பிறவியை தினந்தோறும் துதித்துப் போற்றி வணங்கி மனங் குளிர்ந்து வருகிறேன்.

---

# பூர்வ ஞானம் பெற்ற புனிதர்

திரு நீரார்த்திலிங்கத் தேவர், இராசபாளையம்

தெய்வபக்தியிலே தன் உள்ளத்தை வளர்த்து மக்கள் வணங்கும் தெய்வமாக விளங்கியவர்கள் தவத்திரு பொன்னையா சுவாமியவர்கள். பகவத்கீதை, பாரதம் முதலிய புராண நூல்களைக் கற்றுத் தெளிந்து பண்புடைய துறவியாய் சில காலம் வாழ்ந்தார்கள். ஆனால் பெற்றுப் பேணி வளர்த்த தாயாரோ பிடிவாதமாக இவர்களை இல்லற வாசியாக்கினார்கள். இல்லற வாழ்க்கையிலே இருந்து கொண்டே சுவாமிகள் இறைவன் வழியைக் கடைப்பிடித்துச் சிறந்த தவவலிமை யுடையவராய், மக்கள் போற்றும் நல்லறத் தலைவராய் திகழ்ந்தார்கள், என்றால் அவர்களுடைய பூர்வஜன்மத்தின் நற் பயனே யாகும். அறம் செயவிரும்பு, ஆறுவது சினம் என்று ஆத்திச் சூடியிலிருந்து ஆரம்பித்து, சூடாமணி நிகண்டைத் தொட்டு, குறளைக் கற்று, கம்பராமாயணத்தில் கரைகண்டு, மகாபாரதத்தைப் படித்துப் பயன்பெற்று, வடமொழியையும் மாசறக்கற்று மாமுனிவராய் மாறினார்கள். வாழ்க்கையிலே இவ் வெற்றியைக் காண்பதற்கு அவர்கள் பட்ட பாட்டைக் கணக்கிட்டுச் சொல்ல முடியாது. இரவென்றும் பகலென்றும் பாராது துறவிகளோடு சென்று அவர்கள் கூறுகின்ற வாய் நெறிகளைக் கடைப்பிடித்து தன் மனநிலையைப் பக்குவப் படுத்தும் யோக முறைகளைக் கையாண்டு அதன் பலனும் வெற்றியும் அடைந்தார்கள். நான் சுவாமிகளுடன் இளமையிலேயே தோளோடு தோள் கலந்து விளையாடியவன். சுவாமிகள் இளமையில் எங்கு சென்றாலும் என்னைத்தான் அழைத்துச் செல்வார்கள். நானும் மனங்கோணாமல் அவர்கள் பின்னால் செல்வேன். இளமையிலேயே சுவாமிகளிடத்தில் ஒருவித சக்தி ஆழ்ந்து கிடந்தது. அந்தச் சக்திதான் பின்னால் சுவாமிகள் மகாமுனிவர் ஆவதற்கு மூலகாரணமாய் இருந்தது என்றால் அதைத்தான் பூர்வஞானம் என்பார்கள்.

சுவாமிகளின் ஞானமார்க்கத்தைக் காண்பதற்கு முன்னால் அவர்களுடைய பூர்வீக சரித்திரத்தைச் சற்றுக் காண்போம். சுவாமிகள் 1890-ம் ஆண்டு நந்தன வருடத்தில் பிறந்தார்கள். அவர்களோடு உடன் பிறந்தவர்கள், மூத்தது திருமதி கிருஷ்ணம்மாள் அதற்குப் பின் திரு கிருஷ்ணத் தேவரவர்கள், எல்லோருக்கும் கடைசி திருமதி சௌந்தரம்மாள் ஆவர். சுவாமிகள் ஐந்தாம் வயதிலேயே இராஜபாளையத்திலுள்ள முகமதியர் பள்ளிக்குச் சென்றார்கள். அப்போது ஏட்டுப் படிப்புக்காலம். சுவாமியவர்கள் நான்காம் வகுப்பு வரைப் படித்ததோடு நிறுத்திவிட்டார்கள். இவ்வாறு நிறுத்தியபின் பெருமாள் கோவில் தெருவில் அவர்களுடைய அன்னையாரவர்கள் கடை வைத்துக் கொடுத்தார்கள். அவர்கள் அக்கடை வியாபாரம் நடத்திய விதமே ஒரு வேடிக்கை. "ஐயா, இன்று காசு இல்லை, நாளைத் தருகிறேன், ஒரு படி அரிசியும், இரண்டு படி கேழ்வரகும் கொடுங்கள்" என்று கெஞ்சிக் கேட்டால் போதும்; அவர்களுக்கு என்னென்ன வேண்டுமோ அத்தனையும் அள்ளிக் கொடுத்து விடுவார்கள். இப்படி வருவோர் போவோர்களுக்கெல்லாம் வேண்டிய பொருள்களைக் கொடுத்து கடையை வெறுங்கடையாக்கினார்கள். கடையும் கடை வியாபாரம் செய்யும் போதே கர்ணனாக மாறி விட்டார்கள் நம் சுவாமியவர்கள். தன் தம்பியின் செயலைக் கண்ட திரு கிருஷ்ணத் தேவர் அவர்கள் மிகவும் கோபங் கொண்டார்கள்." சொத்தை யெல்லாம் ஊர்க்காரர்களுக்கு அள்ளிக் கொடுத்து விட்டாரே." என்று கவலையில் ஆழ்ந்தார்கள். ஆனாலும் தம்பியைக் கைவிடக் கூடாதென்று ஒரு தென்னந் தோப்பைக் கட்டு குத்தகைக்கு எடுத்து, சுவாமிகளை தோப்பு வேலைகளைக் கவனிக்கும்படி செய்தார்கள். சுவாமிகளும் நாள் தோறும் தோப்பிற்குச் சென்று, கீற்றுகளை முடைவதோடு தோப்பையும் காவல் பார்த்து வந்தார்கள். சுவாமிகள் தோப்பு

வேலேகளை மிக உன்னிப்பாக்க் கவனிக்கத் தொடங்கினுர்கள்.

அப்பொழுதுதான் அவர்களுடைய வாழ்க் கையிலே குதூகலமும் குறும்புத்தனமும் நுழைந்தன.

தென்னந் தோப்பிற்குச் சென்று கொண் டிருந்த காலத்தில் சுவாமிகள் பார்ப்பதற்குக் கம்பீரமாகவும், நல்ல கட்டமைந்த சிவந்த மேனியும், யாரையும் எளிதில் கவரும் கவர்ச்சி யும், குணத்தில் குன்ருத் தன்மையும், பார்வையில் கருணையும், திறமையில் தீவிரமும் கொண்டிருந்தார்கள். எந்த விளையாட்டிலும் சுவாமிகளைப் போல் எவரும் விளையாட முடி யாது. கிளித்தட்டு விளையாடுவதில் அவர்கள் மகா சாமர்த்தியசாலி. இரண்டு கட்சிகளாகப் பிரிந்து இவ் விளையாட்டை ஆரம்பிப்போம். நான் எப்பொழுதும் சுவாமிகள் கட்சியில்தான் சேர்ந்துகொள்வேன். ஏனென்ருல் சுவாமிகள் கட்சிதான் எப்பொழுதும் வெற்றியுறும். எங்கள் விளையாட்டு முடிவதற்குள் விடிந்து விடும். தன் மகனைக் காணவில்லேயே என்று சுவாமி களின் தாயார் தேடிவருவார்கள். அதைக் கண்டதும் சுவாமிகள் ஒரே ஓட்டத்தில் தன் தாயாருக்குப் பயந்து ஓடி விடுவார்கள். சுவாமிகள் சிலம்பம் முறைப்படிக் கற்கவேண்டு மென்பதற்காக இராசபாளையத்தில் சிலம்பு நிபுணராகிய முத்துச்சாமி ஆசாரியைக் குரு வாகக் கொண்டார்கள். நிலாக் காலங்களில் மைதானங்களில் சுவாமிகள் தன் நண்பர்களு டன் சிலம்பம் ஆடிக் கற்றுத் தேர்ந்தார்கள். பின்னர் அவர்கள் இசையில் பற்றுக் கொண்டு வாய்ப்பாட்டு ஹார்மோனியம் பழக முற்பட் டார்கள். தன் சிலம்பாட்டக் குருவாகிய முத்துச்சாமி ஆசாரி வீட்டில் பஜனைகளை ஏற்படுத்தி வெகு சிறப்பாக நடத்தினுர்கள்.

சுவாமிகள் தோப்பில் இருக்கும் போது தனக்குத் தெரிந்த நண்பர்கள் வந்து விட்டால் 'தென்னை மரத்திலுள்ள தேங்காய்களை அப் படியே குலே குலேயாக இறக்கி விடுவார்கள். இப்படியாக நாள் தோறும் தன் நண்பர்களையும், விளையாட்டு வீரர்களையும் அழைத்துக்கொண்டு போய் தன்னுடைய குத்தகைத் தோப்பில் தேங்காய்கள் இல்லாவிட்டாலும் கூட பக்கத் துத் தோப்பிலுள்ள மரங்களில் ஏறி ஏராளமாய்த் தேங்காய்களைக் கொண்டு வந்து விடுவார்கள். எல்லோருமாகக் கூடி அத் தேங்காய்களை தின்று தீர்த்துக் கட்டி விடுவோம். இவ்விதம் தேங்காய்களைத் தெரியாது பறிக்கும்போது தேங்காய்கள் தரையில் வீழ்ந்து சத்தம் உண் டாக்கா வண்ணம் குலேயுடன் அவற்றைப் பறித்துத் தன் வாயால் கௌவிக் கொண்டு தலே கீழாய் மரத்தினின்று இறங்குவார்கள், மயிர் கூச்செறியும் இதைக் கேள்விப்பட்ட அவர்களுடைய தாயாரும், மூத்த சகோதரரும் அவர்களைக் கண்டித்து வந்தார்கள். இருப் பினும் ஒரு நாள் இரவு சுவாமிகள் மரத்தில் ஏறி தேங்காய் பறிக்க, கீழே அவர்களுடைய நண்பராகிய மணியாரத் தேவர் காவல் இருந்தார். தோட்டத்துக் காவல்காரர் வருவதைக் கண்டவுடன் கீழ் நின்ற மணியாரத் தேவர் ஒரே பாய்ச்சலில் தப்பியோடிவிட்டார். ஆனுல் சுவாமிகள் மாத்திரம் அகப்பட்டுக் கொண்டார்கள். காவல்காரர் சுவாமிகளை மரத்திலிருந்து கீழே இறங்கச் சொல்லி, ஓடி விடாமல் பிடித்து, கைகளைப் பின்கட்டாகக் கட்டி ஊருக்குள் கொண்டுவந்தார்கள். பயந்தோடிய மணியாரத் தேவர் நடந்த விசயங் களையும், காவல்க்காரர் சுவாமிகளைப் பிடித்துக் கொண்டதையும் சுவாமிகளுடைய தாயாரிட மும், சகோதரரிடமும் சொல்லிவிட்டார். இதைக் கேட்ட சுவாமிகளுடைய மூத்த சகோ தரராகிய திரு கிருஷ்ணத் தேவர் அவர்கள் கோபங்கொண்டு கையிலே பூண்பிடித்த ஒரு பிரம்பை எடுத்துக் கொண்டு சென்ருர். காவற்காரர் கட்டி இழுத்து வரும் தன் தம்பியைக்கண்டதும்கோபமாக கைப் பிரம்பால் சுவாமிகளுடைய நெற்றியில் அடிக்கக் காயம் பட்டு இரத்தம் பீறிட்டு ஒழுகியது. இதைப் பார்த்த காவல்க்காரர் பயந்துகொண்டு ஓடி

விட்டார். உடனே சுவாமிகள் கோபங் கொண்டு வீட்டை விட்டு வெளியேறி விட்டார்கள். பல மாதங்கள் கழித்து வாழ்க்கையிலே ஒரு திருப்பத்தை ஏற்படுத்தி சாமியார் கோலத்தில் தன்னூர் திரும்பினார்கள். சுவாமிகள் வீட்டுக்கு வராமல் சாமியார் கோலங் கொண்டு ஞான உபதேசம் செய்ய ஆரம்பித்தார்கள். பல ஞானிகள் கூட்டங்களோடு சேர்ந்து கொண்டு பகவத்கீதை, கைவல்யம், பட்டிணத்தார் பாடல் முதலியவைகளைப் படித்து வந்தார்கள்.

பின் வேதாந்த விசாரணைகள் நடத்துவதற்காக திருநெல்வேலியிலுள்ள குருக்குத்துறை மட்த்தில் சமஸ்கிருதம் படித்துக் கொண்டிருந்தார்கள். சுவாமிகளுடைய தகப்பனாருக்கு உடல்நல மில்லையாதலால் உடனே வரும்படி அவர்களுடைய சகோதரர் தபால் எழுதினார்கள். அதற்கு அவர்கள் வரவே யில்லை. மீண்டும் தகப்பனாருக்கு உடல்நிலை மோசமாக இருக்கிறது, நம்ப முடியவில்லை. உடனே புறப்பட்டு வரவேண்டும் என்று வீட்டிலிருந்து தந்தி கொடுத்தார்கள். அதை வாங்கிய குருக்குத்துறை சுவாமியவர்கள் நம் சுவாமிகள் பூஜையை முடித்து, சாப்பாட்டுக்கு வரும் நேரம், தந்தியைக் கொடுத்து உடனே ஊருக்குப் போங்கள் என்று சொன்னார்கள். உடனே சுவாமிகள் திருநெல்வேலி ரயில் நிலையம் வந்ததும், ரயில் வண்டியும் வந்து புறப்படலாயிற்று. அவசரத்தில் என்ன செய்யமுடியும்? சுவாமிகள் டிக்கெட் வாங்காமலே வண்டியில் ஏறிக் கொண்டார்கள். ஆனால் கூட்டம் அதிகமாகையால் நிற்கக்கூட இடமில்லாமல், படிப் பலகையில் நின்று கொண்டார்கள். வண்டியில் நின்றுகொண்டிருந்த ஒருவன் சுவாமிகளைக் கீழே இறங்கும்படி வற்புறுத்தினான். அவர்கள் மிகக் கெட்டியாக கைப்பிடியை பிடித்துக் கொண்டு இறங்க மறுத்துவிட்டார்கள். கோபங் கொண்ட அவன் தன் கைப் பிரம்பால் சுவாமிகளை அடிக்கத் தொடங்கினான். இதை அவர்கள் பொருட்படுத்தவில்லை. வண்டியும் வேகமாகப் போய்க் கொண்டிருக்கிறது. வண்டியிலுள்ள மக்கள், "பாவம், அந்த அழகான பையனை அந்தப் படுபாவி பிரம்புகொண்டு அடிக்கிறானே," என்று கூறி அத்துஷ்டனை எல்லோரும் அடிக்க ஆரம்பித்து விட்டார்கள். பின்னர் சுவாமிக்கு வண்டியில் உட்காருவதற்கு இடம் கிடைத்தது. இப்படியாக சாத்தூர் வந்து இராஜபாளையம் வருவதற்குள்ளாக அவர்கள் தந்தை காலமானார். பின்னர் சுவாமிகள் தன் தகப்பனாருக்கு வேண்டிய கருமங்களை யெல்லாம் செய்து முடித்தார்கள். சுவாமிகளுடைய தாயார் சுவாமியை வீட்டிற்கு அழைத்துச் சென்றார்கள். சுவாமிகளுடைய எதிர் வீட்டில் ஒரு அம்மாவுக்கு நோய் கண்டிருந்தது. உடனே சுவாமிகள் வீபூதியில் சூடத்தை வைத்து எரித்து தண்ணீரில் கலக்கிக் கொடுக்கும்படி சொன்னார்கள். அதுபடியே அவ்வியாதி தீர்ந்தது.

சுவாமிகளுடைய திருமணத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளை அவர்கள் தாயார் செய்தார்கள். அதன்படியே சுவாமிகளுடைய பதினேழாம் வயதில் அவர்கள் மூத்த சகோதரர்களுடன் சேர்த்துத் திருமணம் நடந்தது. தாயற்ற குழந்தையாகிய இருளாயி என்ற ஏழு வயதுப் பெண்ணை மணப்பெண்ணாகக் கொண்டார்கள். பின்னர் அவ்வம்மையார்க்கு கோமதி என்று பெயர் மாற்றப்பட்டது.

இராஜபாளையத்தில் சுப்பையர் தோப்பில் தங்குவதற்கு ஒரு இடத்தை அமைத்து வேத நூல்களை படித்து ஆராய்ச்சி செய்யத் தொடங்கினார்கள். பின்னர் தனக்கு ஒரு குரு வேண்டும் என்பதற்காகக் காசிக்குப் புறப்பட்டார்கள். இப்படிச் சிதம்பரம் வருகையில் சுவாமிகளுக்கு ஒரு கனவு தோன்றி தெற்கே செல்லும்படியாக ஒரு அசரீரி வாக்கு கிடைத்தது. சுவாமிகள் உடனே ஊர் திரும்பினார்கள். பின்னர் சுவாமிகள் திருவனந்தபுரம் சென்று அங்கு வடமொழிக் கல்லூரியிலே வடமொழி வேத சாஸ்திரங்களைக் கற்று சிரோன்மணி பட்டம்

பெற்றார்கள். சுவாமிகள் திருவனந்தபுரத்தில் படித்துக் கொண்டிருக்கும் காலத்தில் பல பெரிய மனிதர்களோடு தொடர்பு கொண்டு அவர்களுக்கு உபதேசமும் செய்தார்கள். இவ்வாறு தன் படிப்பை யெல்லாம் முடித்து விட்டு தமது குருவின் கட்டளைப்படி ஊர் வந்து சேர்ந்தார்கள். சுவாமிகள் இராஜபாளையத்தில் வேதாந்த உரைகளும், மருத்துவ முறையையும் நடத்தத் தொடங்கினார்கள். அதனால் பெரிய மனிதர்களுடைய கூட்டம் எப்பொழுதும் அவர்களுடைய வீட்டை அலங்கரித்துக் கொண்டே இருக்கும். அப்பொழுது சுவாமிகளோடு நான் எப்போதும் கூட இருந்து அவர்களுக்கு வேண்டிய உதவியைச் செய்து கொண்டிருப்பேன். சுவாமிகள் வெளியே செல்லும்போது உதவிக்காக என்னைக் கூடவே அழைத்துச் செல்லுவார்கள்.

இப்படி இருக்கும் நாளில் 1918-ல் ஒரு அரிய நிகழ்ச்சி நடந்தது. அப்பொழுது சுவாமிகளுடைய மனைவியார் ஆறு மாதக் கர்ப்பிணியாக இருந்தார்கள். அன்று மாலை ஆறு மணிக்கு சுவாமிகளுடைய இல்லாளாகிய திருமதி கோமதி அம்மாள் அவர்கள் மேல் மாடியிலிருந்து இறங்கும் பொழுது தவறி கீழே விழுந்து விட்டார்கள். ஐப்பசி தீபாவளியாகிய அன்று அவர்களுக்கு ஏணியிலிருந்து விழுந்ததால் மயக்கம் போட்டு எழுந்திருக்காமல் இருந்தார்கள். இதைக்கண்ட சுவாமிகளுடைய தாயார் அவர்கள் சுவாமிகளிடம் வந்து "கோமதி விழுந்து விட்டாள்", என்று சொன்னார்கள். இதைக் கேட்ட சுவாமிகள் சிரித்துக் கொண்டே "அப்படியா? விழுந்து விட்டாளா?" என்று கேட்டார்கள். "இன்னும் சிறிது நேரத்தில் தானாகவே எழுந்துவிடுவாள். பயம் வேண்டாம்" என்று சொன்னார்கள். தெய்வ அருள்பெற்றசுவாமிகள் தன்ஞானதிருஷ்டியால் ஒரு மந்திரவாதி ஒரு கருப்பை ஏவிவிட்டு இவ்வாறு விளையாடுகிறான் என்று தெரிந்து கொண்டார்கள். சிறிது நேரம் கழித்து அதே மந்திரவாதி வந்து சேர்ந்தான். சுவாமிகள் அவனை வரவேற்று உட்காரவைத்து தன் தொடையிலே தாளம் போடத் தொடங்கினார்கள். சுவாமிகள் தொடையில் தட்டியவுடனே மந்திரவாதியின் தொடை எரிந்து வீங்கியதால் 'ஐயோ! ஐயோ!' என்று வேதனை பொறுக்காது கத்தினான். அப்பொழுது சுவாமிகள் சிரித்துக்கொண்டே "என் தொடையில் தட்டினால் நீர் ஏனையா அழுகின்றீர்?" என்று கேட்டார்கள். அதற்கு மந்திரவாதி சுவாமிகளின் காலில் விழுந்து, "என்னை மன்னித்து விடுங்கள். உங்கள் சக்தியைத் தெரியாது இந்த தகாத காரியம் செய்துவிட்டேன். கருப்பை ஏவி தங்கள் இல்லாளுக்கு துன்பத்தைக் கொடுத்துவிட்டேன். என்னை மன்னியுங்கள், சுவாமி! என்னுடைய மந்திர சக்தியெல்லாம் உங்களுடைய பார்வையில் கலைந்தோடிவிட்டது. என்னை மன்னித்து என்னுடைய பாவத்தைப் போக்குங்கள், சுவாமி" என்று கேட்டான். உடனே சுவாமிகள் மந்திரவாதியைப் பார்த்து "இப்படிக் கருப்பு ஏவிச் செய்யும் காரியங்கள் எல்லாம் பாவமானது. நல்ல சக்திகளை நன்னெறி வழியிலேதான் பயன்படுத்த வேண்டும் தெரிந்துகொள். இனி உனக்கு மந்திரம் பலிக்காது. நான் சொல்லுகிற வைத்திய முறையை வைத்துக்கொண்டு வயிறு பிழைக்க வழியைப்பார்" என்று சொல்லி சில வைத்திய முறைகளையும் கற்றுக்கொடுத்து அனுப்பினார்கள். சுவாமிகளின் சக்தியால் மேல்மாடியிலிருந்து விழுந்த திருமதி கோமதியம்மாளுக்கு காயமோசேதமோ ஏற்படவில்லை. சுகமே பேறுகாலமாகி திரு குருசிரோன்மணி பிறந்தார். அவர் பிறந்த அடுத்த ஆண்டே பொன்னுத்தாய் சுவாமியை பக்தர்களுக்கு அறிமுகப்படுத்தினார்கள் சுவாமிகள். பொன்னுத்தாய் சுவாமியை கிறுக்கன் என்று சொல்லி அவர்களை சுவாமிகளிடம் அவர்களது பெற்றோர் அழைத்துவந்து காட்டினார்கள். அவர்களைக் கண்டதும் சுவாமிகள் மிக அன்பாக, "சுவாமிகள் எப்பொழுது வந்தது" என்று கேட்டுக் கொண்டே

ஒரு பட்டுவேட்டியை மேனியில் போட்டுவிட்டு, கூட்டிவந்தவர்களை பார்த்து "இவர்கள் ஒரு பிறவிசாமி. இவர்கள் அடங்கிய இடம் மிகவும் விசேஷமாக இருக்கும். இன்னும் கொஞ்ச நாளில் இச்சுவாமிகள் அடங்கிவிடுவார்கள். வீட்டைவிட்டு வெளியே போகாமல் பத்திர மாகப் பார்த்துக் கொள்ளுங்கள்" என்று சொல்லி மரியாதையோடு அனுப்பினார்கள்.

பின்னர் இராசபாளையம் அப்பாள் ராஜா ஊருணிக்குப் பக்கத்திலே மந்தவெளியில் சுவாமிகள் குடியேறினார்கள். அங்கு மூலிகை களைச் சேகரித்து மருந்து செய்தலும், அவை களைப் புடமிடுதலும் ஆகிய காரியங்கள்யெல் லாம் நடைபெறத் தொடங்கின. அப்போது தான் திருவாளர்கள் அம்பைய ராஜா, கிராம முன்சீப் சுப்ப ராஜா, சின்னைய ராஜா, சஞ்சீவி ராஜா முதலிய மிராசுதார்கள் எல்லாம் சுவாமிகளைத் தேடிவரலானார்கள். சுவாமிகள் அவர்களுக்கும், அவர்களுடைய குடும்பத்தார் களுக்கும் மருந்து கொடுத்து நோயெல்லாம் தீர்த்து வைத்தார்கள். சாதாரணமாய் வைத் தியர்கள் பெண் கர்ப்பமாய் இருக்கும்போது மருந்து கொடுக்கமாட்டார்கள். ஆனால் சுவாமி களோ தாராளமாய்த் தருவார்கள். அம்பையா ராஜா அவர்களின் மனைவி கற்பமாய் இருக்கும் போது, சுவாமிகள் மருந்து கொடுக்க குண மாகி ஒரு பெண் குழந்தை பிறந்தது. இப்படி தம் சிறப்புமிக்க சித்த வைத்திய முறைகளால் இராஜபாளைய மக்களுக்கு நற்சேவை செய்து பெயர் பெற்றார்கள். சுவாமிகளின் இரண்டாங் குழந்தை திருமதி சரஸ்வதி பிறந்த 6 மாதம் கழித்து தெய்வத்திரு பசுபதி பரமகுரு பொதிச் சாமியைப் பார்ப்பதற்காக நம் சுவாமிகள் பெருமுத்தூருக்குச் சென்றார்கள். அங்கு தெய்வத்திரு பொதிச்சாமி அவர்களின் சேமிப்புப் பணத்தைத் திருடர்கள் பறித்துக் கொண்டு போய் விட்டார்கள். இதையறிந்த நம் சுவாமிகள் அவர்களுக்கு ஆறுதல் சொல்லி இராஜபாளையத்திற்கு அழைத்து வந்தார்கள். அவ்வாறு வந்த தெய்வத்திரு பொதிச்சாமிகள் அங்கண ராஜா என்பவர் வீட்டில் தங்கலா னார்கள். தெய்வத்தன்மை வாய்ந்த சுவாமிகள் இருவரும் இராசபாளையத்தையே வேதாந்தத் திருவிடமாகும், சித்த வைத்திய சாலையாகவும் மாற்றினார்கள். மக்கள் எல்லோரும் நேரிற் கண்டு ஆசி பெற்றுச் சென்றார்கள்.

பின்னர் தெய்வத்திரு பொதிச்சாமிகளின் விருப்பப்படியே நம் சுவாமிகள் கரிவலம் வந்த நல்லூர் சென்று குடியிருக்கலானார்கள். அதற் குப்பின் சுவாமிகள் எத்தனையோ சித்துவிளை யாடல்கள் புரிந்திருக்கிறார்கள். அவைகளை யெல்லாம் செவியாறக் கேட்டு அவர்களைத் துதித்துள்ளேன். பின்னர் பாளையங்கோட் டைக்கு குழந்தைகள் படிப்பதற்காகத் தன் குடியிருப்பை மாற்றி பல ஆண்டுகள் கழித்து மறுபடியும் கருவை வந்தடைந்தார்கள். அருள் சக்தியும், அருங்கலையான சித்த வைத்திய முறைகளும் கொண்ட தவத்திரு பொன்னையா சுவாமிகள் மக்கள் வணங்கும் தெய்வமாக கரிவலம்வந்தநல்லூரிலே சமாதியானார்கள். என்னுடைய வாழ்க்கையை மலரவைத்த சுவாமிகளுடைய அருள் சக்தி என்றும் என்னைக் காப்பாற்றி என் குடும்பத்தின ருக்கும், பக்தர்களுக்கும் பொங்கும் மகிழ்வை அள்ளி வழங்கும்.

மற்றவர்களின் குடும்ப விவகாரங்களைப் பொறுமையுடன் கேட்டு, இருதரத்தாருக்கும் பாதகமில்லாதபடி, நடுநிலை நின்று சமாதனப் படுத்திக் கோர்ட்டுகளுக்கு விவகாரத்தை விடாமல், வீண் செலவு இருபக்கத்திற்கும் வரவிடாது தடுப்பார்கள். ஆகவேதான் சுவாமிகள் சமாதி கொண்ட தினத்தன்று "இனி யாரிடம் எங்கள் குறைகளைச் சொல்லி ஆறுதல் அடைவோம்!" என்று பலர் ஏங்கி அழும் காட்சி காண்போர் மனதை உருக்குவதாக இருந்தது.

# கண்கண்ட தெய்வம்

திரு பொ. பரமகுரு, M. A., B. L., I. P. S., கருவை

"ஞாயிற்றைச் சங்கிலியால் அளக்கல் ஆமோ?
ஞானகுரு புகழினை நாம் வகுக்கல் ஆமோ?
ஆயிரம் நூல் எழுதிடினும் முடிவுறுதாம்;
ஐயனவன் பெருமையை நான் சுருக்கிச்
சொல்வேன்"
— பாரதி அறுபத்தாறு

உயிரினுக்கும் உயிராய், அறிவுக்கும் அறிவாய் எவ்வுயிர்க்கும் இலக்காய், எச்செயலுக்கும் ஆதரமாய் இயங்கும் மெய்ப்பொருளே தெய்வம் என்பர் ஆன்ருேர். ஆனல் "ஒன்றென்றிரு தெய்வம் உண்டென்றிரு" என்ற திட நம்பிக்கையேதவிர, எளிதில் எவரும் தெய்வத்தைக் கண்டதில்லை.

"கண்டவர்கள் ஒருக்காலும் விண்டிடார்கள்.
விண்டவர்கள் ஒருக்காலும் கண்டிடார்கள்"

என்று பாடியுள்ளார் பாம்பாட்டி சித்தர். இருப்பினும் கற்பகக் கனியாய், கருணைக்கடலாய், அறிவுச் சுடராய், அருள் ஒளியாய், அறிஞருள் பேரறிஞராய், பக்தருள் பரம பக்தராய், கர்மயோகியருள் உத்தம யோகியாய், ஞானிகளுள் மகாஞானியாய், குருவுக்குள் பரம குருவாய், அன்பின் வடிவமாய் அன்பர்க்குத் தெய்வமாய் அவனியில் அவதரித்து அருள் வழங்கியவர்கள், வழங்கி வருபவர்கள் எங்கள் தெய்வத்தந்தையார் தவத்திரு பொன்னையா சுவாமிகள்.

அவர்கள் அன்பே தெய்வமென முழங்குந் தெய்வம். அனைத்துயிரும் ஒன்றென்று எண்ணும் தெய்வம். செந்நெறி பெருக்குந் தெய்வம். இடும்புகளைப் போக்குந் தெய்வம். எண்ணியதை எண்ணியபடி அளிக்குந் தெய்வம். ஐந்தெழுத்தின் அரும்பொருளாய் விளங்குந் தெய்வம். நாட்டு மக்களுக்கு நல்லறிவும், நல்வாழ்வும் நல்குந் தெய்வம். உள்ளத்து ஒருவனை உள்ளுறு சோதியை உணர்த்துந் தெய்வம். தெய்வம் என்ற சொல்லின் பொருளை விளங்கவைத்த என் கண்கண்ட தெய்வம்.

எங்கள் தெய்வத்தந்தையாம் சுவாமிகளைக் கண்டால் எவர்மனமும் அவர்கள்பாலே செல்லும். அவர்களது வசீகரமான தெய்வீகத் தோற்றம், எவர் உள்ளத்தையும்கவர்ந்துவிடும். பளபளக்கும் பழுதற்ற அங்க அமைப்பும், பளிங்கென ஒளிவீசும் கருணைக் கண்களும், தேசுடன் சுடர்விடும் திருமுகமும், அம்முகத்தில் மின்னும் புன்முறுவலும் காண்போருக்கு களிப்பூட்டின. அவர்கள் உள்ளிருந்து ஊற்றெடுத்த ஆண்டவன் அருளானது அவர்களது திருக்கண்களின் பொலிவாலும், திருமுகத்தின் ஒளியாலும் அவர்களைக் கண்டு தரிசித்த மக்கள் பாலும், அவர்கள் வழியாய் மற்றவர்கள் பாலும் ஊறி, மக்கள் பலரையும் அவர்களிடத்தே காந்தம் போல் இழுத்தது. களர்புலத்தைப் போன்ற பலதிறமக்களதுமனதையெல்லாம் அன்பெனும் கலப்பையால் உழுது உழுது, அருளெனும் அருநீர்ப் பாய்ச்சி, அவற்றில் கடவுள் எனும் கரும்புப் பயிரை விளைவித்தார்கள் கண்கண்ட தெய்வமாம் எங்கள் தந்தையார் அவர்கள்.

அவர்கள் 1890-ம் ஆண்டு இராஜபாளையத்தில் ஒரு நடுத்தர மறக்குடியில் அவதரித்தார்கள். உடன்பிறந்தமூத்தசகோதரர்ஒருவர் சகோதரிகள் இருவர். இளம் வயதில் பள்ளிப் படிப்பில் நாட்டமின்றி சிலம்பம், மற்போர் போன்ற தேகப்பயிற்சியிலும் புலிவேடம், பஜனை போன்ற ஆடல் பாடலிலும் ஆர்வம் செலுத்தினர்கள். அவர்களது தமையனர் திரு. கிருஷ்ணத்தேவர் அவர்களோ ஆதியிலிருந்தே கண்ணுங் கருத்துமாய்த் தொழிலில் கவனம் செலுத்திப் பொருளீட்டத் தொடங்கினர்கள். தன் தம்பிக்கு ஒரு தொழில் முயற்சிவேண்டுமே யென்று எண்ணி ஒரு சிறு பலசரக்குக் கடை அமைத்துக்கொடுத்தார்கள் எங்கள் பெரியப்பா. ஆனல்எங்கள்தந்தையார் அவர்களோ கடையில் இருந்த சரக்கையெல்லாம் வந்தவர்களுக்கு தானமாய் வழங்கிவிட்டுக் கடையைக் காலியாய் வைத்தார்கள். எனவே வியாபாரத்

திற்கும் இவர்களுக்கும் வெகு தூரம் என்றெண்ணி தென்னந் தோப்புக் காவலுக்கு அனுப்பினுர்கள் அவர்கள் தமையனர். அங்கும் ஓர் நாள் பக்கத்துத் தோட்டத்தில் தேங்காய் திருடியதற்காகச் சினந்து வெகுண்டு தடி கொண்டு தலையில் தம் தமையனர் அடித்து இரத்தம் சிந்த, "நீங்களும், உங்கள் தொழிலும் எனக்குத் தேவையில்லை. இதோ வெளியேறுகிறேன்," எனக் கூறித் தம் விட்ட குறை தொட்ட குறை வினைப்பயன் வினைவால் சிங்கிலிபட்டி மடம் சென்று ஞானவழியில் ஈடுபட்டார்கள். இடுப்பில் நாலுமுழ வேட்டியும், உடம்பில் சிறு துண்டும், நெற்றியில் பட்டைப் பட்டையாய் விபூதியும், தலையில் உச்சிக்குடுமியும் கொண்டு விளங்கினுர்கள். தாம் இளமையில் செய்த சுட்டித்தனம், சேட்டை, குறும்பு யாவும் மறந்து, தம் பிறவிப் பயனை அடைய முற்பட்டார்கள்,

"ஐந்துபேர் வாழ்கின்ற வீடு—அதில்
அறிவான பொருளொன்றை நாடு
பஞ்சுபோல் பறந்திடும் கூடு—நானைப்
பாவியமன் வந்தால் காடு"

என்ற உண்மை உணர்ந்து, தம்மை அறியத் தலைப்பட்டார்கள்.

தன் பிரிய மகன் கோபங் கொண்டு துறவியாய் இவ்விதமே சென்று விடுவார்களோ வென்று அஞ்சிய எங்கள் பாட்டியார் கெஞ்சி அழுது வேண்டிப் பதினேழு வயதான எங்கள் தந்தையார் அவர்கட்கும், அப்பொழுது ஏழு வயதான எங்கள் அருமைத் தாயார் அவர்கட்கும் திருமணம் முடித்து வைத்தார்கள். மணமாகியும் மனம் மாருது, "உடம்பினைப் பெற்ற பயனுவதெல்லாம், உடம்பினில் உத்தமனைக் காண்," என்ற ஔவை அருள் வாக்கைப் பின்பற்றி நடக்கலானுர்கள்.

"பெயரும் கருங்கடலே நோக்கும் ஆறு ஒண்பூ
உயரும் கதிரவனே நோக்கும் உயிரும்
தருமனையே நோக்கும் ஒண்தாமரையாள் கேள்வன்
ஒருவனையே நோக்கும் உணர்வு"

எனத் தெளிந்து, தெய்வ வழிபாடும், பக்தியுமே தாம் உய்யும் வழி எனக்கொண்டார்கள். எனவே வீட்டில் இருப்புக் கொள்ளாது, தம் ஞான மார்க்கத்திற்கு வழி காட்டும் குரு ஒருவரைத் தேடி வடக்கே சென்ருர்கள். சிதம்பரத்தை அடைந்தார்கள்.

"தில்லையம் பலத்துத் திருநடம் பயிலும்
தொல்லை இறைவர் துணைக்கழல் வணங்கி,"

ஆயிரக்கால் மண்டபத்தில் அயர்ந்து தூங்கலானுர்கள். தூக்கத்தில் இறைவன் தோன்றி, "நீ தெற்கே செல். உன் எண்ணம் சித்தி பெறும்," எனக் கட்டளையிட அதன்படி தெற்கே பயணமானுர்கள்.

திருநெல்வேலி தாமிரபரணி ஆற்றங்கரையை அடைந்தார்கள். வடமொழி வேதம் படிக்க எண்ணி அங்கும் இங்கும் அலைந்து, திருப்படமருதூர் அடைந்தார்கள். அங்கு மிகவும் கெஞ்சி வேண்டி ஒரு அந்தணரிடம் மறைமுகமாய் சிலகாலம் வடமொழி கற்ருர்கள். பின்னர் அதற்கும் இடையூறு ஏற்படவே இறுதியாய் திருவனந்தபுரம் அடைந்தார்கள். அங்கே செங்கோட்டை கரையாளர் அவர்களின் ஆதரவில் தங்கிச் சுமார் பத்தாண்டுகள் வடமொழி வேத நூல்கள் கசடறக் கற்றுத் தேர்ந்தார்கள். திருவனந்தபுரத்தில்தான் அவர்கள் தம் குருவைக் கண்டு கொண்டார்கள். போலீஸ் இன்ஸ்பக்டராய்ப் பணியாற்றி, வேலை விடுத்து ஞானியாய் மாறின மஸ்தான் முகமத்கான் அவர்களின் சீடரானுர்கள். அவர்களது குரு மகான் ஓர் அரும்பெரும் சித்தர். அவர்கள் ஒரு நாள் எங்கள் தந்தையார் அவர்களிடம் "உங்கள் முடிவு என்ன?" என்று கேட்க, "இவ்விதமே துறவியாய் இருந்துவிடவே அவா," எனப் பதிலளித்தார்கள். அதற்கு, "உங்கள் விதி அப்படியில்லை, ஏற்கனவே திருமணமாகியுள்ளதால், நீங்கள் இல்லறத்தில் இருந்தே துறவறம் கொள்ளுதல் வேண்டும். அதுதான் நற்பயன் நல்கும். இல்லையேல் பெரும் பாவம் ஒன்று உங்களைச் சாரும்,"

என்று கண்டிப்பாய்க் கூறினார்கள் குருமகான். அத்திரு வாக்கைச் சிரமேல் கொண்டு ஊர் திரும்பினார்கள்.

அதே சமயம் இராஜபாளையத்தில் தன் பெற்றோர் மறுமணம் செய்யத் தொந்திரவு செய்தாலும், தன் மாமியாரின் இடிசொல் தாங்க இயலாததாலும், மனம் உடைந்து, உயிர் வெறுத்து இருந்தார்கள் எங்கள் அன்னையார். தக்க சமயத்தில் எங்கள் தந்தையார் அவர்கள் ஊர் திரும்பி எங்கள் அன்னையாரைக் காத்தார்கள். ஊரை அடுத்த ஆற்றில் ஏழு ஊற்றுக்கள் தோண்டச் செய்து, அவற்றில் முறையே ஒவ்வொன்றிலும் மூழ்கச் செய்து தூய்மைப் படுத்தித் தம் இல்லறமாம் நல்லறம் தொடங்கினார்கள். தாமரை இலைத் தண்ணீர்போல் இல்லறம் நடத்தித் தம்யோக ஞான நெறியைக் கடைப்பிடித்து ஒழுகலானார்கள்.

திருநெல்வேலி மாவட்டத்தில் நள்ளி என்ற ஊர் உளது. அங்கே மறக்குடியில் அவதரித்த மாபெரும் மகான் தெய்வத்திரு பசுபதி பரம (தவசி) குரு பொதிச்சாமி அவர்கள் ஆவர். அவர்கள் ஆதியில் படிப்பின்றி ஆடு மேய்த்துக் கொண்டிருந்தார்கள். ஒரு நாள் நடுப்பகல், கடும் வெய்யில், வெப்பம் தாங்காது ஆடுகளை ஓர் ஆலமர நிழலில் அமர்த்தினார்கள். தம் கஞ்சிக் கலயத்திலிருந்த அமுதை உண்டுவிட்டு நிழலில் உட்கார்ந்தார்கள். அதுசமயம் ஒரு பெரியவர் அங்கு தோன்றி, "தம்பி, தாகம் தாங்க முடியவில்லை. ஏதாவது தாகத்திற்கு கொடு" என்று வேண்டினார். "ஐயா! சற்று முன்தான் கஞ்சி குடித்து முடித்தேன். அருகில் எங்கும் நீர் இருப்பதாய்த் தெரியவில்லை. என் செய்வது! சரி, இருங்கள். இதோ, வருகிறேன்," எனக் கூறித் தம் ஆடுகளிடமிருந்த பாலைக் கலயத்தில் பொறுமையாய்ப் பீச்சிக் கொணர்ந்து கொடுத்தார்கள். அப்பாலை யுண்டு தாகம் தணிந்த பெரியவர், "தம்பி, உன் நாக்கை நீட்டு," எனக்கூறி அதில் ஏதோ தன் விரலால் எழுதி விட்டு, "என்றாவது ஒரு நாள் என் நினைவு உனக்கு வரும். அன்றிலிருந்து பராசக்தியைத் தொழுது, ஒவ்வொரு பௌர்ணமிக்கும் கருவை பால்வண்ணநாதருக்கு கட்டளை பூஜை நடத்திவா, பலன் கிட்டும்." எனக் கூறிச் சென்றார். பின்னர் தெய்வத்திரு பொதிச்சாமிகளுக்குத் திருமணம் நடந்தது. மணமான முதலிரவு, தன் விருப்பமின்றி அத்திருமணம் நடைபெற்றதால் மணமகள் சுவாமிகளை வெறுத்து அவமதித்தார். அந்த அவமானம் தாங்காது இல்லறத்தை வெறுத்து வீட்டைவிட்டு வெளியேறித் துறவு பூண்டார்கள். முன்னொரு நாள் தம்மிடம் ஆட்டுப்பாலுண்ட அந்தப் பெரியவரின் உபதேசம் நினைவு வர அதன்படி செயலாற்றித் தம்மை அறிந்து தலைவனையும் அறிந்தார்கள். அவர்கள் ஊர் ஊராய்ச் சுற்றுகையில் காவடி ஒன்று சுமந்துசெல்வார்கள். அதில் கூடாரத்திற்கான துணி மணிகள், அம்மிக்கல், சொரக்குடுக்கைகள், மற்றும் பல சாமான்களைக் கட்டித் தூக்கி, "பொதி! பொதி!" என்று கூவிச் செல்வார்களாம். எனவேதான் அவர்களை அனைவரும் 'பொதிச்சாமி' என்று அழைக்கலானார்கள். அவர்கள் அட்டமாச்சித்தி பெற்ற ஞானப்பழம். கூண்டுக்கிளிபோல் தேவி அவர்களிடம் உரையாடிக் கொண்டிருப்பாள். அவர்கள் மக்களிடம் யாசிப்பது நீராகாரமும், பழஞ்சோறுந்தான். அவர்களது குடுக்கையில் இருக்கும் நீராகாரம் நாட்கள் ஆக ஆகத்தான் பன்னீர்போல் மணங்கமழும். அந்நீரும், விபூதியும் சுவாமிகள் மனமுவந்து அருளினால் தீராத நோயும் தீர்ந்துவிடும்.

அவர்கள் கரிவலம்வந்தநல்லூரை அடுத்த பெருமுத்தூரில் ஒருசமயம் தங்கி இருந்தார்கள். அப்பொழுது யாரோ போக்கிரி, சுவாமிகளது உடமைகளைத் திருடிச் சென்றுவிட்டான். தமது அந்திக் காலத்திற்குச் சேகரித்து வைத்திருந்த சிறு பணமும் களவாடப்பட்டது. சுவாமிகள் மனம் வெதும்பினார்கள். இந்த நிகழ்ச்சியைக் கேள்வியுற்ற எங்கள் தந்தையார் அவர்கள்

இராஜபாளையத்திலிருந்து பெருமுத்தூர் சென்ருர்கள். சுவாமிகளைக் கண்டு பேசித் தம்முடன் இராஜபாளையம் அழைத்து வந்தார்கள். அது முதல் தெய்வத்திரு பொதிச்சாமி அவர்கள் எங்கள் இல்லத்திலேயே தங்கலானுர்கள் தமது அந்திக் காலம் வரை.

தெய்வத்திரு பொதிச்சாமி அவர்கள் எங்கள் இல்லம் வந்து சேர்ந்த மறு வருடம் அடியேன் இவ்வுலகில் தோன்றினேன். எனக்குத் தம் பெயரான 'பசுபதி பரமகுரு' என்பதனைச் சூட்டி, தம் திருக்கரத்தால் சேனையும் புகட்டினுர்கள். அந்த மகானின் அருளாசியின் கீழ் நான் வளர்ந்து வந்தேன். என்னை வளர்க்க எங்களருமை அன்னையினும் அரும்பாடுபட்ட என் உள்ளத்திலே குடியிருக்கும் எங்கள் மாரிப் பாட்டியை நான் என்றென்றும் மறவேன்.

எனக்கு ஐந்து வயதில் அம்மகான் அடக்கம் எய்தினுர்கள். தாம் அடங்குமுன் என்னை அருகில் அழைத்து கையில் சங்கு கொடுத்து, ஊதச் சொன்னுர்கள். நான் ஊத முயன்றேன் முடியவில்லை. உடனே சங்கைத் தாம் வாங்கி ஊதிக்காட்டி, "இதோ இப்படி ஊது" என்ருர்கள். நானும் அதன்படியே ஊதினேன். சுவாமிகளும் என் சங்கநாதம் கேட்டுக்கொண்டே அடங்கினுர்கள். அவர்கள் விருப்பப்படியே அவர்களைச் சமாதி வைத்து, பின்னர் ஓர் அழகிய மண்டபமும் கட்டினுர்கள் எங்கள் தந்தையார் அவர்கள். வருடாவருடம் வெகு விமரிசையாய் இன்னிசை முழக்கத்தோடு அன்னதானத்துடன் குருபூஜை வழிபாடு நடத்தி வந்தார்கள்.

என்னுடன் பிறந்தவர்கள் இரு சகோதரர்கள், மூன்று சகோதரிகள். எங்களை நல்லொழுக்கத்தோடு வளர்த்து, கல்வி அறிவு புகட்டி, ஆளாக்கிய விதமே தனிச்சிறப்பு வாய்ந்தது. எங்கள் தந்தையார் அவர்கள், "வீணே மாநாடும், கூட்டமும் கூடி, 'நாட்டையும், நாட்டு மக்களையும் சீர்திருத்துகிறேன்,' எனக் கூறிப் பயனற்ற பல தீர்மானங்கள் நிறைவேற்றி விட்டுத் தூங்குவதில் பலனில்லை. அதைவிட ஒவ்வொருவரும் தம் குடும்பத்தைச் சரிவரக் கவனித்து, தம் மக்கள் ஒவ்வொருவரையும் ஒழுக்க சீலர்களாகவும், அறிவாளிகளாகவும் ஆக்கினுல் நாடும், நம்மவரும் தானே முன்னேறும். பல குடும்பங்கள் சேர்ந்த ஒரு பெருங் குடும்பந்தான் நாடு. எனவே ஒவ்வொருவரும் முதலில் தங்கள் தங்கள் வீட்டைச் சீர் செய்தால் நாடு தானே சீரடையும்," என அடிக்கடி கூறுவார்கள். அதன்படியே எங்கள் ஒவ்வொருவரையும் மருந்தைப் புடம் போடுதல் போல் கண் காணித்து, நல் வழிப்படுத்தி, கல்வி அறிவு புகட்டினுர்கள்.

"கல்வி வேறு. படிப்பு வேறு. புத்தகத்தில் இருக்கும் விஷயங்களை மண்டையில் தேக்கிக் கொள்வது படிப்பு. அது கல்வியாகாது. புத்தியை எப்போதும் இதயத்திடம் பாடம் படித்து அடங்கி நடக்கச் செய்வதுதான் உண்மையான கல்வி. "வித்யா விநய சம்பன்னே" என்று கல்வியையும், பணிவையும் சேர்த்தே சாத்திரங்கள் கூறும். வித்தையுடன் விநய சம்பத்தும் வெகு அவசியம். எனவே தான் வள்ளுவரும்,

> 'உலகத்தோடொட்ட ஒழுகல் பலகற்றும்
> கல்லார் அறிவிலாதார்,'

எனக் கூறினுர். புத்தி இதயத்துக்குப் பணியும் போதுதான் இதயத்தே உள்ள அகவொளி புலனுகும். அதுவே ஆண்டவன். அதை அறிவதே கல்வியின் பயன்.

> 'கற்றதனு லாயபயனென்கொல் வாலறிவன்
> நற்றுள் தொழாஅர் எனின்?'

என்று நம் நாயனுரும் பாடியுள்ளார். அத்தகைய கல்வியைப் பெருக்குவது நூல்கள். எனவே தொன்னூலுக்கு அஞ்சித் தடுமாறும் உளத்தவன் கல்வி கற்கத் தகுதியற்றவன். கண்யமான கட்டுப்பாடுடன், விரிந்த நோக்குடன், பரந்த மனத்துடன், நந்தமிழ்க் கலைப்

பண்புடன் கல்வி கற்றல் வேண்டும். புத்தகப் புழுவாய் மாறி, ஏட்டுச்சுரைக்காய் கறிக்கு உதவாது என்பதுபோல, உலகிற்கு உபயோக மற்றவனாய் விளங்கலாகாது." எனக் கல்வி யின் அருமை பெருமை கூறிக் கல்வி கற்பித் தார்கள்.

"அறையில் ஆடித்தான் அம்பலத்தில் ஆட வேண்டும்," எனக் கூறி உலகில் எவ்விதம் நிற்பது, நடப்பது, பேசுவது என்றெல்லாம் வீட்டிலேயே பயிற்சியளித்தார்கள் எங்கள் கண்கண்ட தெய்வம். "ஒருவனது புகழ் கழுதை கத்தும் தூரமாவது தெரிய வேண்டும். அப்போதுதான் அவன் மனிதனாவான். அதின்றி கேவலம் பூச்சிப் புழுக்களைப்போல் பிறந்து மடிவதால் என்ன பயன்? அதனையே தெய்வப் புலவரும்.

'தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலின் தோன்றாமை நன்று.'

என்கிறார். அதையுணர்ந்து உலகில் பிறந்த ஒவ்வொருவரும் ஏதாவது ஒரு அருஞ்சாதனை செய்து, அழியாப் புகழை நாட்ட வேண்டும். மனதை எதிலும் அதிகமாக ஈடுபடச் செய்து கட்டுப்படுத்திவிடக்கூடாது. அவ்வாறு செய் யின் துன்பமே வரும். பட்டும் படாமலும் இருந்து பழகவேண்டும்," என அறிவுரைகள் கூறி நல்வழிப்படுத்துவார்கள்.

"ஆணும் பெண்ணும் நெருப்பும் வெண் ணெய்யும் போல்வர், தக்க தூரத்தில் இரண்டும் பழகி வந்தால் நலமுண்டு. அளவுமீறி நெருங் கினால் நெருப்பிலே வெண்ணெய் உருகி நிலை மாறும். இது கவிகாளிதாசன் கூறும் உண்மை. அதனைக் கடைப்பிடித்து நடத்தல் வேண்டும்," என மொழிவார்கள்.

நாங்கள் சிறு தவறு புரியினும் வெகுவாகச் சீறிக் கண்டிப்பார்கள். காரணம், தான் செய்த குற்றத்தை உணர்ந்து தானாகவே திருந்த வேண்டும் என்பதுதான். "வண்ணான் துணி யைப் பாறையில் பலமாக அடிப்பது அதைக் கிழிப்பதற்காக அல்ல; அதைத் தூய்மைப் படுத்துதற்கேயாம்," என உவமை கூறி விளக்குவார்கள்.

"மரம் மழுங்கி முத்தினால் தப்பட்டத்துக் காவது ஆகும். ஆனால் மனிதன் மழுங்கினால் மண்ணுக்குத்தான் ஆகும். எனவே மானத் துடன், உணர்வுடன் வாழ வேண்டும். இறங்கு துறையிலேயே நீந்த ஆரம்பித்தால் முட்டிதான் உடையும். நல்ல ஆழத்தில் சென்றபின் நீந்த வேண்டும். ஆரம்பத்தில் ஆடம்பரமாய் வாழ்ந்து, இறுதியில் அல்லல் படல் அறிவீனம். குட்டி ஞானம் குடியைக் கெடுக்கும். எனவே ஒவ்வொருவரும் தன்னைச் சரிவரப் பக்குவப் படுத்தித் தகுதியை உயர்த்திய பின்னரே உலகில் நடமாட வேண்டும். அன்று கண்டது பேசும் உலகம். ஒருவன் உயர்ந்தால் உயர்ந்து விட்டான் என்னும்; தாழ்ந்தால் தாழ்ந்து விட்டான் என்னும். எனவே நாம் தான் நம் நிலையை உயர்த்திக் கொள்ளல் வேண்டும்," என உலகறிவு புகட்டுவார்கள்.

எங்களுக்கு ஒழுக்கம், கல்வி அறிவு புகட்டிய துடன் ஞான மார்க்கமும் சுட்டிக் காட்டினார்கள் தெய்வத் தோன்றலாகிய எங்கள் தந்தையார் அவர்கள்.

"கொல்லன் உலைபோலக் கொதிக்குதடி
யென்வயிறு!
நில்லென்று சொன்னால் நிலைநிறுத்தக்
கூடுதில்லை!
நில்லென்று சொல்லியல்லோ நிலைநிறுத்த
வல்லார்க்குக்
கொல்லென்று வந்தநமன் என்கண்ணம்மா!
குடியோடிப் போகானோ!"

என்ற அழுகினி சித்தர் பாடல் போன்ற பல அரிய பாடல்களைத் தோணாமல் பாடிக் காட்டி மனதில் பதியவைப்பார்கள்.

"சாதாரணமாய் நம் மனம் ஒரு நிலையில் இருப்பதில்லை. இன்று நாவற்பழத்தை நாடும் மனம், நாளை நாரத்தம் பழத்தை நாடுகின்றது. நாடி அதனை அடைந்த பின்னாவது மன நிம்மதி

யுண்டா? அதுதானில்லை. கைக்குக் கிடைத்த பலாப்பழம் கசக்கின்றது. ஆனால் கிடைக்காத களாக்காய் இனிக்கின்றது. இவ்விதம் அமைதி யற்று அலையும் தன்மை அறிந்து வெகுண்ட பெரியார் ஒருவர் தம் மனதைப் பார்த்து, 'மனமெனும் மூடக் குரங்குப் பயலே,' என்று கடிகின்றார். மற்றொருவர், "யாரலைந்தாலும் அகப்பேய் நீ அலையாதே," என்று எச்சரிக் கிறார். இவ்விதம் கட்டுமீறி அலைகின்ற மனதை அடக்கி ஒடுக்கி அமைதிப்படுத்த வேண்டும். அது வெகு கடினந்தான். ஒரு ஊரில் ஒரு தனவந்தர் இருந்தார். அவர் ஒரு அன்ன சத்திரம் கட்டி, சமயத்தொண்டு புரிவோர்க்கு அன்னதானமிட்டு வந்தார். ஒரு நாள் அத்தன வந்தரின் கணக்கர் சத்திரத்திற்கு வந்து வரவு செலவுக் கணக்கைப் புரட்டிப் பார்த்தார். ஏட்டில் அன்றாடமும், 'சும்மா இருக்கிற சுவாமிக்கு சோற்றுக்கட்டி ஒன்று,' என்று குறிப்பிட்டிருந்தது. 'அதென்ன சும்மா இருத் தல்? ஏன் அந்தச் சாமியாருக்கு வீண் சோறு போடுகிறீர்கள்?' எனச் சத்திர நிர்வாகியிடம் கேட்டார். அதற்கு அவர், 'அதோ தூங்கிக் கொண்டிருக்கிறார் சாமியார். அவரையே கூப்பிட்டுக் கேளுங்கள்,' என்றார். உடனே சாமியார் எழுப்பி வரப்பட்டார். 'ஏன் சாமி, ஏதாவது சமயத்தொண்டு புரியாது இவ்விதம் சோம்பலாய்ச் சும்மா இருக்கிறீர்? அப்படி இருந்தால் இங்கு இனி அன்னம் கிடைக்காது," என்றார் கணக்கர். அதற்கு அச்சாமியார் புன்னகைபூத்து, 'அப்பனே! சும்மா இருப்ப தென்ன அத்தனை சுலபமா?' எனக் கேட்டார். 'இதோ, வேண்டுமானால் நான் சும்மா இருந்து காட்டுகிறேன். எவ்வளவு நேரம் சும்மா இருத்தல் வேண்டும்?' என்று வினவினார் கணக்கர். 'அதிக நேரம் வேண்டாம், அப்பனே! ஐந்து நிமிடங்கள் சும்மா இருந்தால் போதும்,' என்றார் சாமியார். அதன்படி கணக்கரும் கண் மூடி மௌனமாய் அசைவற்று அமர்ந்திருந்தார். 'அதுதானே கூடாது, அப்பனே! நீ தற்போது உன் கள்ளக் காதலி யைப்பற்றி நினைப்பது ஆகாது,' என்றார் சாமியார். கணக்கர் சற்று அச்சமுற்று, 'இல்லை, இல்லை, எவ்விதச் சிந்தனையுமின்றி சும்மா இருக்கிறேன்,' எனக் கூறியிருந்தார். 'அப்பனே! நேற்று நீ தோப்புக் குத்தகைத் தொகையில் கையாடிய பணம் பற்றிய விபரம் உன் முதலாளிக்குத் தெரிந்து விடுமோவென எண்ண வேண்டாம்,' என எச்சரித்தார். அதனைக் கேட்ட கணக்கர் திடுக்கிட்டுக் கண் விழித்து, 'ஏது நம் குட்டெல்லாம் அம்பலமாகி விடுமோ?' என அஞ்சி, 'சுவாமிகளே! போதும், போதும்! சும்மா இருப்பதென்பது வெகு கடினம். நீங்கள் ஓர் பழுத்த திரிகால ஞானி. என் தவறைப் பொறுத்து மன்னியுங்கள். எவ்வளவு காலம் வேண்டுமானாலும் நீங்கள் இச் சத்திரத்தில் தங்கலாம்,' எனக் கூறிச் சத்திர நிர்வாகியிடம் சுவாமிகளுக்கு அன்றாடம் ஒரு சோற்றுக் கட்டிக்குப் பதில் இரண்டு சோற்றுக்கட்டி கொடுக்குமாறு ஆணையிட்டார். 'வேண்டாம் அப்பனே! நீ உண்மையை உணர்ந் ததே பரமதிருப்தி. மனம், வாக்கு, காயம் மூன்றையும் அடக்கி ஒடுக்கி சும்மா இருந்து சுகம் பெறுவதென்பது மிக அரிது. ஆனால் முயன்று விடாது பாடுபட்டால் பலனுண்டு,' என வாழ்த்தினார் அச்சாமியார். அக்கணக் கருக்கு ஞானோதயம் ஏற்பட்டது. நாமும் உண்மையை உணருகிறோம்.

"ஆங்காரம் உள்ளடக்கி ஐம்புலனைச் சுட்டறுத்துத்
தூங்காமல் தூங்கிச்சுகம் பெறுவது எக்காலம்?"

என்கிறார் பத்திரகிரியார். அந்நிலையை நாம் எய்திவிட்டால் நம் வாழ்வும் உய்யும்," என உபதேசம் செய்வார்கள்.

"ஆன்மாக்களுக்கெனச் சாத்திரங்கள் வகுத் துள்ள சாதன வழிகள் நான்கு; சரியை, கிரியை யோகம், ஞானம், ஆகியவை, இவற்றுள் முன் னிரண்டைவிட பின்னிரண்டு சிறப்பு வாய்ந் தவை. அவற்றைக் கடைப்பிடித்து இறைவனை அடைதல் வேண்டும். இறைவன் எங்குளான்?

'வானத்தான் என்பாரும் என்க மற்றும்பர்கோன்
தானத்தான் என்பாருந் தாமென்க—
ஞானத்தான்
முன்னஞ்சத் தாலிருண்ட மொய்யொளிசேர்
கண்டத்தான்
என்னெஞ்சத்தான் என்பன் யான்.'

இறைவன் வானத்திலே இருக்கின்ருன், அமராவதியிலே இருக்கின்ருன், பிற இடங்களில் இருக்கின்ருன் என்றெல்லாம் கூறுவோர் கூறட்டும்; ஆனுல் ஐயன் என் நெஞ்சில் 'இமைப்போதும் நீங்காது உறைகின்ருன்,' என்கிருர் காரைக்காலம்மையார்.

'நான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்
வான்பற்றி நின்ற மறைப்பொருள் சொல்லிடின்
ஊன்பற்றி நின்ற உணர்வுறு மந்திரம்
தான்பற்றப் பற்றத் தலைப்படும்தானே!'

என்கிருர் திருமூலர். இவைகளைக் கற்றுணர்ந்து ஒழுகல் வேண்டும்,'' என்பார்கள் எங்கள் தந்தையார் அவர்கள்.

''உப்பு எடுத்துக்கொண்டு வாழ்வது உயிர். உலகமாகிய பாத்தியில், வினையாகிய வெம்மையிலே, உடம்பாகிய உருவம் எடுக்கிறது. அங்கும் இங்கும் திரிந்து உலக வியாபாரத்தில் ஈடுபடுகிறது. எப்போதும் உடம்போடே காணப்படுகிறது. இவ்விதமுள்ள சீவன் இறைவன் திருவருளினுல் சிவஞானம் பெற்றுப் பாசக் கட்டை அறுத்து விடுகிறது. பாத்தியிலும், மூட்டையிலும், பாத்திரங்களிலும் உருவத்தோடு சென்று வந்து கிடந்த உப்பு ஒருநாள் தண்ணீரில் கரைந்து விடுவதுபோல, பலபல உருவங்களை எடுத்து வாழும் உயிர் பாசக் கட்டை அறுத்தபோது இறைவனேடு ஒன்றி விடுகிறது; ஆண்டவனிலே அது கரைந்து விடுகிறது. உப்பை நீர் தனக்குள் அடக்கிக்கொண்டது போலச் சிவன் சீவனை அடக்கிக் கொள்கிருன். சீவனுக்குத் தனியே உருவம் இல்லாமல் மறைந்து போகிறது. வெள்ளை நிறமும், வடிவும் பெற்றிருந்த உப்பு நீரினையே தனக்குரிய வடிவமாகப் பெற்று விடுகிறது போலச் சீவன் சிவசொருபமாகி நிற்கிறது. இவ்விதம் இறைவனேடு ஒன்றுபடுவதே முக்தியாகும். அந்த நிலையில் சீவன் தன் இயல்பை இழந்து சார்ந்த பொருளாகிய இறைவனுடைய மயமாக நிற்கும்.

'அப்பினிற் கூர்மை ஆதித்தன் வெம்மையால்
உப்பெனப் பேர்பெற்று உருச்செய்தது; அவ்வுரு
அப்பினிற் கூடியது ஒன்று ஆகு மாறுபோல்
செப்பின்இச் சீவன் சிவத்துள் அடங்குமே,'

என்பது முதல் தந்திரத்திலுள்ள உபதேசம்,'' என விளக்குவார்கள்.

''பரதம், பண்டிதம், சோதிடம், ஆருடம், கௌணி, பஞ்சபட்சி, சரம், திரிகாலம் ஆகிய எட்டுவித வித்தைகள் மூலம் காலமறிந்து ஒருவர் கூறுதல் கூடும். இவற்றுள் திரிகால ஞானம் சாலச் சிறந்தது. தவறு ஏற்படாது. 'விருத்த வைத்தியர், பால சோதிடர்' என்பார்கள். சோதிடம் கணிப்பதில் புத்தி கூர்மை வேண்டும். காலம் சிறிது மாறிக் கணக்குப் போட்டாலும் தவறு ஏற்படும். உதாரணம், முன்னெரு காலத்தில் மாபெரும் சோதிடர் ஒருவர் இருந்தார். அவருக்கு ஒரு பெண் குழந்தை பிறந்தது. அதன் ஜாதகத்தைத் துல்லியமாய்க் கணிக்க வேண்டும் என்பதற்காக பேறுகாலம் போது மருத்துவச்சியிடம் கூறி பிள்ளை பிறந்ததும் உடனே ஒரு எலுமிச்சம் பழத்தை கதவின் வெளியே உருட்டிவிடச் சொன்னுர். அதன்படி துல்லியமான பிறந்த நேரம் குறித்து சோதிடம் பார்த்தார். அவர் கணக்குப்படி பெண் திருமணமான மறுதினமே விதவை ஆகிவிடுவாள் எனத் தெரிய வந்தது. மிகவும் வருந்தினுர். பெண்ணுக்கு திருமணக் காலம் வந்தது. சாத்திரம் படித்தவர், ஆகையால் பெண்பார்க்க வருபவரிடமெல்லாம் தன் பெண்ணின் ஜாதகக் குறிப்பை எடுத்து விளக்கி, விருப்பமிருந்தால் பெண்ணை மணந்து கொள்ளுங்கள் என்பார். பெண்ணின் தந்தையே இவ்விதம் கூறும்போது யார் அந்தப் பெண்ணை மணக்கத் துணிவார்கள். ஆனுல் ஒரு துணிந்த கட்டை, எங்கு தேடியும் தனக்கு

ஓர் பெண் கிடைக்காத காரணத்தால், திட மாய் முன்வந்தான் அப்பெண்ணை மணக்க. திருமணம் சிறப்பாய் நடந்தேறியது. மாப்பிள்ளை விருந்துண்ட மயக்கத்தால் அயர்ந்து தூங்கினன். பெண் கண் விழித்துக் காத்திருந்தாள். சோதிடர் மகள் சிறந்த புத்திசாலி. தன் வினையை எதிர்த்துப் போரா டத் துணிந்திருந்தாள். திடீரென மாப்பிள்ளை விழித்து "வயிற்று வலி எடுக்கிறது. எனவே வெளிக்குச் செல்ல வேண்டும்," என்ருர். கையில் ஒரு விளக்கை எடுத்துக் கொண்டு மாப்பிள்ளைக்குத் துணையாய்க் கொல்லை வழி ஆற்றங்கறைக்குச் சென்ருள். மாப்பிள்ளைவந்த கடமை முடித்து ஆற்றில் காலடி வைத்தார். உடனே, 'ஐயோ, அப்பா! அம்மா!' என்று அலறலானர். 'என்ன! என்ன!' என்று பதறி ஓடிய அப்பெண்மணி தன் மாப்பிள்ளையின் காலை ஒரு முதலைக் கௌவிக் கொண்டிருப்பதை கண்டாள். சமயோசித புத்தி படைத்த அப் பெண் சடிதில் தன் கையில் இருந்த விளக்கால் முதலையின் முகத்தில் சுட்டாள். சூடு தாங் காது முதலை தன் வாய்ப்பிடியை விட்டது. 'தப்பித்தோம்.' எனக் கூறி மாப்பிள்ளையின் கையைப் பிடித்து வேகமாய் இழுத்து வந்து வீடு நுழைந்தாள். இந்தக் கலவர அதிர்ச்சி யில் மாப்பிள்ளையும், பெண்ணும் நிம்மதியாய் அயர்ந்து தூங்கிவிட்டனர். மறுநாட் காலை வெகு நேரமாகியும் கண் விழித்துக் கதவைத் திறக்கவில்லை. தன் சோதிடத்தில் அபார நம்பிக்கை கொண்ட சோதிடர், "சரி! தன் மாப்பிள்ளையின் உயிர் நீங்கியிருக்கும். அது கண்டு தன் மகளும் உயிர் துறந்திருப்பாள்." என்றெண்ணி ஈமக்கடனுக்காக ஏற்பாடுகள் யாவும் செய்துவிட்டு மணவறைக் கதவை உடைக்க முற்பட்டார். அச்சத்தம் கேட்டு விழித்த மணமக்கள் எழுந்து கதவைத் திறந்து சுகமே வெளி வந்தனர். அதனைக் கண்ணுற்ற சோதிடர் தன் கண்களையே நம்பவில்லை. அப்படியே சம்பித்து நின்றுவிட்டார். ஒரு பக்கம் தன் மகளும், மாப்பிள்ளையும் சுகமே இருக்கிருர்கள் என்ற மகிழ்ச்சி. மறுபக்கம் தன் சோதிட சாத்திரம் பொய்யானதே என்ற வருத்தம். எனவே வைராக்கியத்துடன், தன் மாப்பிள்ளைக்கு ஏற்பாடு செய்த சிதையில் தன் சோதிட சாத்திர ஏடுகளையெல்லாம் போட்டு எரிப்பதென முடிவு செய்தார். தன் ஏடுகளை மனம் வெதும்பி நெருப்பிலிடப் போகும் சமயம் ஒரு பெரியவர் வந்து தடுத்து, 'அக்காரியம் செய்யக் காரணம் என்ன?' வென்று கேட்டுத் தெரிந்தார். உடனே அந்த மருத்துவச்சியை அழைத்துவரச் செய்து விபரம் கேட்டார். அதற்கு அவள் தான் முதலில் குழந்தை பிறந் ததும் எலுமிச்சம்பழத்தை உருட்டினதும், அது கதவு நிலையில் தட்டுண்டு உள்ளே திரும்பிய தென்றும், பின்னர் இரண்டாம் முறை எடுத்து வெளியே உருட்டினதாயும் கூறினுள். அப் பெரியார் சோதிடரைப் பார்த்து, 'அந்தக் கால தாமதத்தைக் கழித்து உங்கள் மகளின் ஜாதகத்தை இப்பொழுது குறியுங்கள்,' என்ருர். சோதிடர் அதன்படி கணக்குப் போட்டு பார்த்து, திருமண முதலிரவு மாப்பிள்ளைக்கு ஆயுட் கண்டம் ஏற்படும். ஆனல் பெண்ணின் மாங்கல்ய பலத்தால் ஒரு அதிர்ச்சியை உண் டாக்கி விலகிவிடும்," எனக் கண்டார். தன் சோதிடக் குறிப்பில் முதலில் ஏற்பட்ட தவறை உணர்ந்து சாத்திரம் பொய்யென்று எண்ணிய தற்கு வருந்தி வந்த பெரியவரிடம் மன்னிப்புக் கோரினர். வந்தவர் ஒரு திரிகால ஞானி. படம் போல் நடப்பது யாவும் காட்சியாய் காண்பவர். எனவே சோதிடத்திலும் திரிகால ஞானம் எவ்வளவு சிறந்ததென விளக்கிச் சென்ருர்." என இவ்விதம் கதைகள் மூலம் ஞானம் போதிப்பார்கள் எங்கள் தெய்வத் தந்தையார்.

நட்பிற்கு இலக்கணம்கூறும்போது, "குற்றம் பார்க்கில் சுற்றமில்லை. சேரிடம் அறிந்து சேரல் வேண்டும். சேர்ந்து பழகியபின் சந்தேகிக்கக் கூடாது.

'தேரான் தெளிவுந் தெளிந்தான்கண் ஐயுறவுந் தீரா இடும்பை தரும்,'

என்ற வள்ளுவர் வாக்கு நினைவில் இருத்தல் வேண்டும். ஆகவே நண்பர்களை வெகு கவனமாய்த்தேர்ந்து எடுத்தல் வேண்டும். ஒருவனது நண்பர்களைக்கொண்டே அவனை இன்னுரென்று மதிப்பிட்டு விடலாம். நட்பில் எப்போதும் மாறுபாடில்லாமல், முடிந்த அளவு நண்பனுக்கு உதவி செய்து அவனைத் தளராமல் தாங்கும் உறுதி வேண்டும். உதட்டளவில் இல்லாத நட்பு உள்ளத்தளவில் இருத்தல் வேண்டும்,'' என்பார்கள்.

''எண்ணித் துணிவது கருமம். எனவே எடுக்காத ஒரு காரியத்தை எடுத்தவனும் கெட்டான். எடுத்த காரியத்தை விட்டவனும் கெட்டான். தீர்க்க யோசித்துத் தன் சக்திக்கு ஏற்றவாறு செயலாற்ற முற்படல் வேண்டும். வீண் ஆசைக்கு அடிமையாகிக் கெட்டழிந்து விடக்கூடாது,'' என எச்சரிப்பார்கள்.

கண்கண்ட தெய்வமாம் எங்கள் தந்தையார் அவர்கட்கு வள்ளுவர், கம்பர் என்றுல் அளவற்ற பற்றும், மதிப்புமுண்டு. அடிக்கடி அவர்களது கவிதைகளைக் கூறி எங்களுக்கு நற்புத்தி புகட்டுவார்கள். ''வள்ளுவர் வைரம் போன்ற உண்மைகளை எழுதிச் சென்ருர். ஆனுல் கம்பரோ அந்த வைரத்தைப் பட்டை தீட்டி திறம்படக் கட்டி வாழ்க்கைக்குப் பொருத்திப் பாடி இருக்கிருர். உவமை கூறுவதில் கம்பருக்கு ஈடு கம்பரேதான். ஆத்மீக ஞான உண்மைகளைக் கூறி அவற்றை நிலை நாட்ட சாதாரண உலக உண்மைகளைத் திறம்படக் கையாளுவதில் அவர் தீரர். தாம் கூறும் உண்மைகள் விளங்க சந்தேகமற உவமையைச் சரியாகக் கட்டி விடுவார். பதில் சொல்ல இயலாது. இராவணனை வென்று சீதையை மீட்டுவர இலங்கைக்குச் செல்ல வழி உதவுமாறு, இராமன் கடலரசனுன வருணனை வேண்டி வரங்கிடக்க, வருணன் உதவாது மறைந்த நிலையில் அவன் மீது சினந்த இலக்குமணனைப் பார்த்து இராமன் கூறுகிருர்:

'மறுமை கண்டமெய்ஞ் ஞானியர் ஞாலத்து வரினும்
வெறுமை கண்டபின் யாவரும் யாரென விரும்பார்
குறுமை கண்டவர் கொழுங்கனல் என்னினும் கூசார்
சிறுமை கண்டவர் பெருமை கண்டலல்லது தேருர்'

வீடுற்ற தத்துவஞானிகள் மீட்டும் மண்ணுலகத்துவரினும் இவ்வுலகத்தார், அந்த ஞானியர்பால் சிறப்பியல்பு ஒன்றும் காணப்படாமையால், அவரை யாரென்று அறிதற்கும் விரும்பார். இந்த அரும் ஆன்மீக உண்மையை வலுப்படுத்தி விளக்க ஒரு சாதாரண உலக உண்மையை உவமையாய் வெகு அழகாய்க் கையாளுகிருர். வந்த ஞானியர் குறியவராகக் காணப்பட்டவர், நெருப்புப்போல் அணுகிஞரை அழிக்கும் ஆற்றலுடையவராயினும் அவர்பால் உலகினர் கூசி நடவார். ஏனெனில் சிறுமை புலப்படக்கண்ட உலகினர், பெருமை புலப்படக் கண்டாலல்லது உண்மை யியல்பு தெளியார். சிறு நெருப்பு பெருநெருப்பாய் மாறி உலகத்தையும், உலகத்தாரையும் சுட்டெரித்தால்தான் உண்மையை உணர்வார்கள். என உவமை கூறி ஆணித்திறமாய் விளக்குபவர் கம்பர்'', என்று வெகு உற்சாகத்தோடு பல கவிதைகள் கூறி விளக்கிப் பாராட்டுவார்கள்.

உலகத்தின் இயல்பு குறித்து ''மாயையில் சிக்குண்டு உழல்வது உலகம். வெளி வேடத்திலும், படாடோபத் தோற்றத்திலும் மயங்கிப் புகழ்ந்து பாராட்டும் உலகம். அது ஓர் பச்சோந்தி, எனவே உலகத்துக்கு ஏற்ப நடக்க வேண்டுமெனில், 'ஆடைபாதி அழகு பாதி,' என விளங்கவேண்டும். அதனையே நம் ஔவைப் பிராட்டியாரும்,

'விரகர் இருவர் புகழ்வாரும் வேண்டும்
விரனிறைய மோதிரங்கள் வேண்டும்—அரையி லொரு
பஞ்சேனும், பட்டேனும் வேண்டும் அவர்கவிதை
நஞ்சேனும் வேம்பேனும் நன்று'

எனப் பாடியுள்ளார்,'' என்று அடிக்கடி கூறுவார்கள்.

"பாத்திரம் அறிந்து பிச்சையிடு, ஆளை அறிந்து புத்திபுகட்டு, மூடருக்கு உபதேசம் செய்தால் செவிடன் காதில் ஊதிய சங்கு போலாம். அவர்கள் கொள்ளும் அர்த்தம் அனர்த்தமாய் முடியும். ஒருசமயம் ஒரு நல்ல பாம்பு தெய்வத்திரு இராமகிருஷ்ணர் அவர்க ளிடம் ஞானோபதேசம் கேட்டு, அதன்படி நடக் கத் தன் புற்றைவிட்டு வெளியே வந்து சாந்த மாய்ப் படுத்திருந்தது. மக்களுக்கு தீங்கு விளைவிக்காது அன்பாய் நடக்க நாட்டமுற்றது. ஆனால் அதற்குமுன் அதுசெய்து வந்த மிரட்ட லைக் கண்டு அஞ்சிவந்த ஒரு மாடுமேய்ப்போன் அப்பாம்பு ஆடாது அசையாது படுத்திருப்பது கண்டு, 'இதுதான் தக்க சமயம் பழிவாங்க', என்றெண்ணிக் கல்லாலும் தடியாலும் நையப் புடைத்தான் அப்பாம்பை. அது சுவாமிகளின் ஞானோபதேசத்தின்படி யாவும் பொறுமை யுடன் வாங்கி இரத்தம் சிந்தி, நா வெளியே தள்ளிக் கிடந்தது. அப்பக்கம் வந்த சுவாமிகள் அந்நாகத்தின் சோக நிலைகண்டு இரங்கி விபரம் விசாரித்துணர்ந்து 'அட, மூடப்பாம்பே! உனக்குப்போய் உபதேசம் செய்தேனே! உன்னை வீணாய் மக்களைத் தீண்டிப் பாபமூட்டை யைக் கட்டிக் கொள்ளாதே என்றுதான் கூறி னேனே தவிர ஆபத்து வரும்போதும், ஒருவன் உன்னைத் தாக்கும்போது வாளாது கட்டின பசுப்போல் இருக்கக் கூறவில்லையே. அவனை நீ தீண்டாது உஸ்ஸென்று படம் எடுத்தாவது பயமுறுத்தித் தப்பித் திருக்கலாமே. வித்தை யுடன் விநயமும் வேண்டும். அதை விடுத்து இவ்விதம் மூடமாய் நடந்து மூடமாகிக் கிடக் கின்றாயே!' என்று வருந்தினர்களாம். ஆகவே மூடருக்கு உபதேசம் வீண்தான். அதேபோல் முரடருக்கு உபதேசம் செய்வதும் தீங்குதான். விவேகசிந்தாமணியில் ஒரு பழம் பாடல்..

'வானரம் மழைதனில் நனையத் தூக்கணம்
தானதற்குரை செயத் தாண்டிப் பிய்த்திடும்
ஞானமும் கல்வியும் நயந்த கேள்வியும்
ஈனருக் குரைத்திடல் இடரதாகுமே'

தூக்கணாங்குருவி அழகிய கூடுபின்னி, அதில் வெளிச்சத்திற்கு மின்மினிப் பூச்சியையும் பிடித்து வைத்து வசதியாய் இருந்தது. அப் போது கடும் மழை காட்டில் பெய்தது. அம் மழையில் நனைந்து துன்புற்றது குரங்கு. அது கண்டிரங்கிய தூக்கணாங்குருவி, 'குரங்காரே! நீர் வனத்திற்கு அரசர்போல் சுற்றித் திரிபவர். என்னைப்போல் நீரும் ஒரு கூடோ, தங்கும் இடமோ வசதியாய் ஏற்பாடு செய்து வைத்தி ருந்தால், இவ்விதம் மழையில் வீணே நனைய வேண்டாமே, என் கூடும் பெரிதாயில்லை. உம்மை அதனுள் தங்கவைக்க. எனவே முன் யோசனையுடன் இனியேனும் ஒரு தங்குமிடம் தேடிக்கொள்ளும்," என்று நல்வழி கூறியது. அதைக்கேட்டு வெகுண்ட குரங்கு, 'நீ சின்னஞ் சிறு குருவி, எனக்கே புத்தி புகட்டுகிறாயா; கூடு கட்டியிருக்கும் திமிர்தானே. இதோ, என்ன செய்கிறேன் பார்,' எனக் கூறித் தாவி ஒரு நொடியில் அத்தூக்கணாங் குருவியின் கூட் டைப் பிய்த்தெறிந்தது. அதேபோல் முரட ருக்கும், ஈனருக்கும் ஞானமும், கல்வியும் புகட் டினால் துன்பந்தான் ஏற்படும்", என அரிய பல உண்மைகளைத் தெளிவுற எடுத்துரைப்பார்கள்.

"நவக்கிரகத்தால் ஏற்படும் வினைவை ஞானி யும் அனுபவித்தே ஆகவேண்டும். கூடுமானால் தன் முயற்சியால், கடும் உழைப்பால் அவற்றின் வேகத்தைத் தணிக்கலாம். ஒரு மகான் குளத் தில் நீராடிக் கொண்டிருந்தார். குளித்து முடித் துக் கரையேற எண்ணியபோது அங்கே சனி பகவான் நிற்கக்கண்டார். 'வந்த காரியம் என்ன?' வென்று அம்மகான் வினவ, தங்க ளுடன் ஏழரை ஆண்டு வசிக்க வந்துள்ளேன்', என்றார் சனிபகவான். 'அப்படியா? நல்லது, இதோ வருகிறேன்', எனக்கூறி நீரில் மூழ்கிய அம்மகான் மூச்சடக்கி ஏழரை ஆண்டு காலமும் அங்கேயே இருந்துவிட்டார். சனி திசை முடி வுற்றதும் நீரினின்று வெளியே வந்தார். "என்ன, என்னுடன் வசிக்கத் தயாரா?" என் றார். அதற்குச் சனிபகவான், "என் காலம் முடிந்துவிட்டது. வருகிறேன். எவ்விதமாயி னும் நான் என் கடமையைச் சரிவரவே ஆற்றி

விட்டேன். மற்றவர்களை உலகில் சுவாசித்துத் திரிந்து இன்னலுற்று மீளச்செய்வேன். ஆனல் உங்களையோ இந்த ஏழரை ஆண்டாகச் சுவாசம் கூட விட முடியாமல் அடித்து விட்டேன். எனக்கு வெற்றிதான்'', எனக்கூறிச் சென்றுராம். எப்படியிருக்கிறது கிரகங்கள் வேலை? நவக்கிரகங்களும் மனித வடிவிலே வந்து அந்தந்த திசை நடப்பதற்கு ஏற்ப ஒருவருக்கு ஆவன செய்வார்கள். அதாவது, ஒருவனுக்குச் சனிதிசை நடக்கும்போது, சனியை ஒத்த குணமுடைய மனிதன் வந்து எல்லா இடையூறுகளையும் செய்வான். அதேபோல் வியாழ திசையில் வைத்தியர் போன்றவர்கள் வந்து ஆறுதல் கூறிக் கவனிப்பார்கள். இவ்விதமே மற்ற கிரகங்களும் மனித வடிவிலேவந்து இயங்கும்'' என்பார்கள்.

எனக்கு வயது குறைவு காரணமாய் அண்ணமலைச் சர்வகலாசாலையில் படிக்க நேர்ந்தது. அப்பொழுது சிறிது அரசியலில் ஈடுபட்டேன். உடனே என்னை அழைத்து, 'அப்பா, பரமகுரு! நான் சொல்வதைச் சரிவரக் கேள். என் மகன் ஒருவன் தேசத் தொண்டாற்றச் சென்றுள்ளான் என்று சொல்வதில் நான் உண்மையில் பெருமையே கொள்வேன். எனவே உன் விருப்பம் அதுவெனில் கூறு. இன்றே உன் மேல் படிப்பை நிறுத்தி, ஒரு விருந்து நடத்தி, அனைவர்க்கும் நீ தேசத் தொண்டனய்ஆகப்போகிருயென அறிவித்து, உனக்கு மாலை சூட்டி மகிழ்வுடன் வழியனுப்புகிறேன். அஃதின்றி ஆற்றில் ஒருகால், சேற்றில் ஒருகால் என வைத்துக் கொண்டு கல்லூரியில் படித்துக்கொண்டே அரசியலில் ஈடுபட நான் விரும்பேன். உன் பிரியம் என்ன?', என்று திட்டவட்டமாய் தெளிவாய் வினவினர்கள். அப்புத்திமதி கேட்டு நானும் ஒழுங்கே படித்து பட்டம் பெற்று இப்பதவியில் இருக்கிறேன்.

என் அண்ண டாக்டர் குருசிரோன்மணி அவர்களும், நானும் ஒருங்கே திருநெல்வேலி இந்துக் கல்லூரியில் பி. ஏ. வகுப்பில் படித்தோம். பரீட்சை யாவும் முடிந்து விடுமுறைக்கு ஊர் செல்லுமுன் எங்கள் தந்தையார் அவர்களுடன் கல்லூரி உதவிப் பிரின்ஸ்பால் திரு பொன்னுசாமிப் பிள்ளை அவர்களைக் காணச் சென்றேம். அவர்கள் எங்களைப் பெரிதும் உபசரித்து நீண்ட நேரம் எங்களுடன் அன்போடு அளவளாவிக் கொண்டிருந்தார்கள். இறுதியில் விடைபெற்றுச். செல்லுகையில், 'சுவாமி! உங்களிடம் ஒரு சிறு சந்தேகம் கேட்க அவா. தாங்கள் தப்பாக நினைக்கக் கூடாது,'' என்ருர். எங்கள் தந்தையார் அவர்கள் புன்னகை பூத்து, ''நீங்கள் தாராளமாய்க் கேட்கலாம்,'' என்ருர்கள். ''எனக்கு இருப்பது ஒரே மகன். அவன் உயர்தரப் பள்ளியில்தான் படிக்கிருன். எனக்கு ஆண்டவன் புண்ணியத்தில் போதுமான ஊதியம் கிடைக்கிறது. இருப்பினும் அவன் செலவுக்கு வசதி செய்யத் திணறுகிறது. ஆனல் உங்களுக்கோ குழந்தைகள் அறுவர். மூவர் நம் கல்லூரியிலும், மூவர் உயர்தரப் பள்ளியிலும் படிக்கிருர்கள். உங்களுக்கோ குறிப்பிட்ட தொழில் ஒன்றுமில்லை. சதா சர்வகாலம் குழந்தைகளுடனேயே இனிது காலங்கழித்துவருகிறீர்கள். உங்கள்குழந்தைகளின் நடை உடையைப் பார்த்தால் ஏதோ ஜமீந்தார் வீட்டுப் பிள்ளைகள் போல் தோன்றுகிறது. இது எப்படி சாமி உங்களால் முடிகிறது?'', என்று ஆச்சரியத்தோடு கேட்டார்கள். இதைக் கேட்டு கலகலவென்று சிரித்துவிட்டு, ''இச்சந்தேகம் பலருக்கும் உண்டு. ஆனல் நீங்கள் துணிந்து அதனைக் கேட்டு விட்டீர்கள். அது ஒன்றும் பிரமாதமில்லை. நீங்கள் எல்லாம் கிணற்றில் துலாப் போட்டுள்ளீர்கள். ஆனல் நானே சமுத்திரத்தில் துலாப் போட்டுள்ளேன். உங்களது நீர் எடுக்க எடுக்க வற்றிவிடும், ஆனல் என்னது அள்ள அள்ள குறைவின்றிப் பெருகும்,'' என்ருர்கள். ''சுவாமி! விளங்கவில்லை, சற்று விபரமாய்ச் சொல்லுங்கள்,'' என்ருர்கள் உதவிப் பிரின்ஸ்பால், ''ஐயா! அரும்பாடுபட்டு அருள் சக்தியை தேடி வைத்துள்ளேன். அந்தப்

பராசக்தி நினைத்த மாத்திரத்தில் எல்லாம் அருளுவாள். 'தெய்வம் புருட வடிவம்' என்பார்கள். அதன்படி என் தேவையைப் பூர்த்தி செய்ய நினைத்த நேரத்தில் மனித வடிவில் உதவிவரும். நீங்களும் உங்கள் உள்ளேயுள்ள சோதியைத் தட்டி உணர்ந்தால் யாவும் சித்தியாகும்,'' எனக்கூறி விடைபெற்று வீடு திரும்பினோம்.

மற்றொரு சமயம் நான் சட்டக் கல்லூரியில் படித்து வரும்போது என் மேடைப் பேச்சையும் நடிப்புத் திறனையும் கண்ட திரைப்பட டைரக்டர் ஒருவர் என்னைத் திரைப்படத்தில் நடிக்க அழைத்தார். என்னை இன்றும், என்றும் காக்கும் ஒரு நற்குணம் என்னவென்றால் எங்கள் தெய்வத் தந்தையார் அவர்களின் விருப்பத்திற்கு மாறாக நடக்காததுதான். ஆகவே திரைப்பட நடிப்பு குறித்து கேட்டபோது, ''கலையுலகில் செல்வதற்கு நீ எம். ஏ. பி. எல். படிக்கத் தேவையில்லை. உன்வழி வேறுஎனவே திரைப்பட நடிப்புத் தேவையில்லை.'' என்று உறுதியாய்க் கூறினார்கள். பின்னர் 1959-ம் வருடம் கொண்டாடிய போலீஸ் நூற்றாண்டு விழாவிற்காக 'உங்கள் நண்பன்' என்ற திரைப்படம் எடுத்தபோது, அதைக் கண்டு களித்த எங்கள் தந்தையார் அவர்கள், 'பரமகுரு தான் பத்து ஆண்டுகளுக்கு முன் அவாவுற்றபடியே திரைப்படத்தில் நடித்தும், தயாரித்தும் விட்டான். படம் நன்றாய் இருக்கிறது. மகிழ்ச்சியே,'' என்று ஆசி கூறினார்கள்.

1948-ல் எனது சட்டப் படிப்பு முடிந்து, போட்டி பரீட்சை எழுதி, டிப்டி சூப்பிரண்டாகத் தேர்ந்தெடுக்கப்பட்டேன். யாவும் எங்கள் தெய்வத் தந்தையார் அவர்களின் திருவருள் தான். என் வேலை நியமன உத்திரவு வரு முன்னரே நான் ஒரு போலீஸ் அதிகாரியாகப் போகிறேன் என்று எங்களருமைத் தாயார் அவர்களிடம் எங்கள் தந்தையார் அவர்கள் கூறிவிட்டார்கள். எனவே அரசாங்க நியமன உத்திரவு எனக்கு ஒன்றும் புதியதாயில்லை.

1949-ம் ஆண்டு ஜனவரி மாதம் முதல் தேதி நான் வேலூர் பயிற்சிக்குப் பயணமானேன். அப்பொழுது எங்கள் தந்தையார் அவர்கள் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி நின்றேன். என் நெற்றியில் அருளோடு விபூதி பூசிப் பேசலானார்கள்:

''உன்னைப் பறக்காட்டியாய் விட்டது. உலகில் நீ உலவும்போது மரக்கிளைகள் போன்ற இடர்களில் உன் சிறகடிபட்டால் அதற்கு ஏற்றாற் போல் சமாளித்துக் கொள்ள முடியும். அதற்கான போதிய கல்வியும், அறிவும் உனக்கு அளித்துள்ளேன். நாளடைவில் உலக அனுபவமே உனக்கு நல்ல பாடம் கற்றுக் கொடுக்கும். எனினும் என் அனுபவம் மூலம் உனக்கு மூன்று அறிவுரைகள் சொல்ல அவா. ஒன்று, உன்னுள் மனச்சாட்சி என்றொன்று உளது. அது நீ செய்வது சரி, தப்பு என்று சதா சுட்டிக் காட்டும். எனவே அதன்படி உணர்ந்து சரியானதை நல்லபடி செய்துவா. பலனைப்பற்றிக் கவலைப் படாதே. இவ்விதம் பற்றின்றிக் கருமம் ஆற்றினால் அதன் விளைவு நல்லதானாலும், தீங்கானாலும் கவலையில்லை. உன் மனம் நிம்மதியாய், திருப்தியாய் இருக்கும். அந்த நிம்மதியும், சாந்தியும் உன்னை மனிதனாய் உலகில் நடமாட ஊக்குவிக்கும். இரண்டாவது, நீ வேலைக்குச் செல்லும் இலாக்கா போலீஸாகும். அது நெருப்புக்குச் சமம். தக்க சிறுதளவாய் இருப்பின் சமையல் செய்தற்கும், குளிர் காய்தற்கும் வீட்டு வெளிச்சத்திற்கும் நெருப்பு உபயோகமாகும். அஃதின்றி அளவு மீறினால் வீட்டையும், ஊரையுமே கொளுத்திப் பொசுக்கிவிடும். அதே போல் போலீஸ் அதிகாரமும் நல்வழியில் உபயோகித்தால்நாட்டுக்கும், நாட்டு மக்களுக்கும் நல்ல பயனளிக்கும். அதில்லாது தீயவழியில் பிரயோகித்தால் எல்லோர்க்கும் தீங்கு விளைவிப்பதுடன் உனக்கும் இடுக்கண் உண்டாக்கும். எனவே உன் போலீஸ் அதிகாரத்தை நல்வழியில் நாலுபேருக்கு நன்மை பயக்கும் வண்ணம் உபயோகி. மூன்றாவது, வெகு

முக்கியமானது. உன் ஊதியத்திற்கு ஏற்றவாறு உன் வாழ்வு நிலையை அமைத்துக்கொள். நியாயப்படி கிடைக்கும் வருமானம் கொண்டு உன் வரவு செலவை நிர்ணயித்துக்கொள். தப்பான வழி சென்று கைநீட்டி கைக்கூலி லஞ்சம் எதுவும் வாங்காதே. ஒழுக்கப் பாதையினின்று விலகாதே. உன் துறையில் எண்ணற்ற வாய்ப்பும், இச்சையும் ஏற்படும். நீ அவற்றைக்கண்டு மயங்கி அடிமையாகி விடாதே. தேவைகள் அதிகம் இருக்கலாம். ஆனால் அவற்றை உன் ஊதியத்திற்கு ஏற்றவாறு சுருக்கிக்கொள். அவ்விதம் நீ நடந்தால் உன் மன நிம்மதியுடன் உன் குடும்பமும் நல்ல நிலையில் திகழும். இல்லையேல் அந்தக் கர்மம் உன்னைக் காட்டிலும் உன் பிள்ளைகளைத்தான் அதிகம் பாதிக்கும். எனவே இவை யாவும் உணர்ந்து நீ நல்லவிதமாய்ப் பணிபுரிந்து நற்பெயர் பெறவேண்டும். அதற்கு எல்லாம்வல்ல அந்த அம்பாள் அருள் புரிவாள்'', என மனமார ஆசி கூறினார்கள். அவ்வறிவுரைகளைச் சிரமேற்கொண்டு சிறிதும் பிசகாது பணியாற்றி வருகிறேன். எவ்விதக் குறையுமில்லை.

நான் அலுவல் ஏற்றுப் பயிற்சி முடித்தபின் எனக்கு வாகனம் அமைத்துக் கொடுத்ததே ஒரு தனிச் சிறப்புத்தான், என் மனதிற்குப் பிடித்த 'ஹில்மேன்' கார் வாங்க முடிவு செய்து, 1950-ல் திரு அனந்தராம கிருஷ்ணன் அவர்களைச் சந்தித்துப் பேசினார்கள். ஆழ்வார் குறிச்சி திரு சுப்பிரமணிய முதலியார் அவர்கள் மூலம் அன்னார் எங்கள் தந்தையார் அவர்கட்கு நல்ல அறிமுகம். எனவே அவர்களிடம் விபரம் யாவும் பேசி முடித்து, 'முதன் முதலில் பரமகுருவுக்கு கார் புதிதாய் வாங்குவதால் அதனை உங்கள் இல்லத்தில் உங்கள் கையாலேயே வழங்குதல் வேண்டும்,' என்று வேண்டினார்கள். அதன்படியே திரு. அனந்தராம கிருஷ்ணன் அவர்களும் தம் இல்லத்தில் தக்க பூஜை முடித்து, நல்லாசி கூறிக் காரை என்னிடம் ஒப்படைத்தார்கள். அது சமயம்,

''ஐயா, உங்கள் கையில் தனரேகையுள்ளது. எனவே நீங்கள் தொட்டது விளங்கும், தொடங்கியது விருத்தியடையும். முன்னர் பஞ்ச பாண்டவர் அஸ்வமேத யாகம் நடத்தியபோது, கிருஷ்ண பகவான் துரியோதனனை மடப்புளிக்குப் பொறுப்பு கட்டினார். ஏற்கனவே பாண்டவர் மீது பொறாமை கொண்டிருந்த துரியோதனன் சாப்பாட்டில் பற்றாக்குறை ஏற்பட வேண்டுமென்று கருதிக் கண்டபடி உணவுச் சாமான்களை எடுத்து ஏவினான். அள்ள அள்ளச் சாமான்கள் பெருகிக்கொண்டே இருந்தன. யாகமும், விருந்தும் வெகு தடபுடலாய் நடந்தேறியது. அவற்றைக் கண்ட துரியோதனன் மனம் புழுங்கினான். அப்போது கிருஷ்ண பகவான், 'துரியோதனா! உன் எண்ணத்திற்கு மாறாகக் காரியம் நடந்ததற்குக் காரணம் நீயேதான். உன் கையிலுள்ள தன ரேகையின் விளைவுதான் சாமான்கள் எடுக்க எடுக்கக் குறைவின்றி பெருகிக்கொண்டே இருந்தன. அதனை உணர்ந்தேதான் நான் உன்னை இங்கே இக்கடமைக்கு நியமித்தேன்,' என்றார். அதே போலத்தான் உங்கள் கைராசியும்,'' என விளக்கினார்கள். பின்னர் அக் காரிலேயே திருக்கழுக்குன்றம் முதலான தலங்களுக்குச் சென்று தரிசனம் செய்வித்து வந்தார்கள். அக்காரும் நன்கு பயனளித்தது.

கண்கண்ட தெய்வத் தந்தையார் அவர்கள் எனக்கு அடுத்து நடத்திய முக்கிய நிகழ்ச்சி எனது திருமணம். சென்னையில் பிரபல மர வியாபாரியான திரு முத்துசாமித் தேவர் அவர்கள் வீட்டில் பெண் பார்க்க என் சகோதர சகோதரிகளுடன் பெற்றோரும் சென்றனர். கனம் அப்பா அவர்களைத் தவிர மற்றவர்களுக்கு பெண், மிகப் பலக்குறைவாய் இருந்ததால், திருப்திக் குறைவுதான். இருப்பினும், எங்கள் தந்தையார் அவர்கள் பெண்ணிற்கு உடல் தேற மருந்தருளி வந்தார்கள். பின்னர் ஒரு மாதம் கழித்துப் பெண்ணைப் பார்க்கச் சென்றார்கள். அதற்குள் பெண் நன்கு தேறி

இருக்கவே, அனைவர்க்கும் பிடித்துவிட்டது. யாவும் எங்கள் தந்தையார் அவர்களின் அருள் தான். பின்னர் என்னிடம் வந்து, "பெண் நல்ல யோகம். அதனால் பின்விருத்தி அதிகம். பல படிகளுக்கு மேல் கைதூக்கிக் காட்டுகிறது. எனவே அப் பெண்ணையே மணம் செய்தல் நலம்," என்றார்கள். அதன்படியே எனக்குத் திருமணமாகி கனம் அப்பா அவர்களின் அருளாசியால் நன்மக்கட்பேறு நால்வர் பிறந்தனர். என் குழந்தைகள் ஒவ்வொருவரும் கருவில் உண்டானதுமே பிறப்பது இது ஆண், இது பெண் எனத் தெளிவாய் முன்கூட்டியே எங்கள் தெய்வத் தந்தையார் அவர்கள் எனக்குக் கூறுவதுண்டு. அது கேட்டு, கருவில் இருக்கும்போது குழந்தைகள் ஒவ்வொன்றிற்கும் பொன்னுராம், கலாமதி, முத்துகுரு, மீனுகுமாரி எனப் பெயர் முன்கூட்டியே அறிவித்து அதில் பந்தயம் கட்டி வெற்றியும் பெற்றிருக்கிறேன். என்னே! அவர்களின் தீர்க்க தரிசனம்!

"கடமையே இலட்சியம், இலட்சியமே கடவுள்," என்று அடிக்கடி கூறுவார்கள். அதன்படியே தாம் வாழ்ந்தும் காட்டினார்கள். தம் தாய், தமையன், மனைவி, மக்கள், அன்பர் ஒவ்வொருவருக்கும் உரிய கடமையை ஆற்றி இலட்சியத்தைக் கடைப்பிடித்த கண்கண்ட தெய்வம் அவர்கள்.

"உண்டாக்கிப் பாலூட்டிவளர்த்த தாயை உமை
யவள் என்று அறிவீரோ?
தாய்க்குமேல் இங்கே ஓர்தெய்வமுண்டோ?"

என்ற பாரதியார் கூற்றைப் பின்பற்றி தாயிற் சிறந்ததொரு கோயிலும் இல்லையெனக் கொண்டார்கள். அவர்களுக்கான கடமையைச் சரிவரச் செய்து, அவர்கள் சிவபதம் அடைந்ததும் சமாதி கட்டி வெகு சிறப்பாய் பூஜை வழிபாடு செய்தார்கள்.

தம் தமையனார் திரு கிருஷ்ணத் தேவர் அவர்கட்கு உறுதுணையாய் நின்று அவர்களை உலகில் உயர்த்தினார்கள். உறவினர்களும், பங்காளிகளும் பகைமை கொண்டு, அவர்களது தாழ்ந்த பொருளாதார நிலைகண்டு ஏளனம் செய்தபோது மிகவும் துக்கமுற்றார்கள் அவர்களது தமையனார். உடனே தம் அண்ணா அவர்கட்கு ஆறுதல் கூறி, "இன்று செல்வச் செருக்குடன் ஏளனம் செய்யும் அவர்கள் சீர்குலைந்து, நீங்கள் பெருஞ் செல்வந்தராகி, உங்களிடம் வந்து அவர்கள் காலில் விழும் காலம் விரைவில் வரும்," என்றருளினார்கள். அதன்படியே தம் தமையனார் அவர்களை ஸ்ரீவில்லிபுத்தூர் சென்று ஆண்டாள் கோவில் செண்பகத் தோப்பை குத்தகைக்கு எடுக்கவைத்து, பின் தெய்வத்திரு பொதிச்சுவாமி அவர்களை கொண்டு தோப்பில் பூஜை நடத்தி தோப்பிற்குக் காவல் கட்டி ஆசீர்வதித்தார்கள். அதற்கு மேல் அவர்களது அண்ணா படிப்படியாய் உயர்ந்து ஒரு லட்சாதிபதி ஆனார்கள். அனைவரும் வந்து மரியாதை செலுத்தினார்கள். பிறகு கால வித்தியாசத்தால் தம் தமையனார் தனது மனைவியையும் இரு மகன்களையும் மனக்கசப்பால் பிரிய நேர்ந்தது. அது சமயம் தம் அண்ணாவின் குடும்பத்தைப் பன்னிரண்டு ஆண்டுகள் பொறுமையுடன் பராமரித்து தம் வாக்கின்படியே மீண்டும் கொண்டுபோய் குடும்பமாய்ச் சேர்த்து வைத்தார்கள். தம் தமையனாருக்கு இன்னல் வரும்போதெல்லாம் முன்னெச்சரிக்கை செய்தும், தீங்குற்ற போதெல்லாம் உடனிருந்து இரவு பகலாய்க் கண் விழித்துக் காத்தும் வந்திருக்கிறார்கள். தம் தமையனாரிடமிருந்து எவ்விதப் பிரதி பலனும் கருதாது தம் கடமையைப் பாரோர் பாராட்டும் வண்ணம் ஆற்றினார்கள் எங்கள் தெய்வத் தந்தையார் அவர்கள்.

அடுத்து தம் மனைவியாருக்கு அவர்கள் ஆற்றிய கடமையை என்னென்று உரைப்பது! எங்கள் அன்பார்ந்த அன்னையார் திருமதி கோமதி அம்மாள் அவர்கள் பொறுமையும், கருணையும், அன்பும் உருவான ஓர் ஒப்புயர்வற்ற

தெய்வப்பிறவி. கண்கண்ட தெய்வமாம் எங்கள் தந்தையார் அவர்கட்குத் தகுந்த தாரமே. தேவி அருள் பெற்ற எங்கள் அன்னையார் தம் விரோதியையும் விருப்புடன் வரவேற்று விருந்து செய்யும் உயர்குணம் படைத்தவர்கள். அவர்களுக்கு நிறைந்ததுதான் தெரியுமே தவிர, குறைந்தது தெரியாது. தம்மை நாடி வருவோர் எல்லோர்க்கும் வாரி அள்ளி வழங்கும் பண்புடையவர்கள். வாயில் இன்சொல்லைத் தவிர கடுஞ்சொல் என்பதே கிடையாது. அத்தகைய அன்பும், பண்பும், குணமும் ஒருங்கே அமையப்பெற்ற அவர்கள் கொடும் நோயுற்றபோதும், மற்றெந்த இன்னலுற்ற போதும் தாமே முன்னின்று, பிறர் உதவி எதுவுமின்றி தம் கடமைகளைச் சரிவர சிறப்புற ஆற்றினார்கள் எங்கள் தந்தையார் அவர்கள்.

கண்கண்ட தெய்வமாம் அவர்கள் தம் மக்களுக்கு ஆற்றிய கடமை எளிதில் எடுத்துரைக்க இயலாதது. ஏற்கனவே குறிப்பிட்டபடி உயர்ந்த கல்வி, ஒழுக்கம், பண்பு யாவும் கசடற கற்பித்தபின் ஒவ்வொருவரது வருங்காலவாழ்க்கையையும் ஒப்பற்ற முறையில் அமைத்துக் கொடுத்தார்கள். குறிப்பாக அவர்கள் எங்கள் ஒவ்வொருவரது திருமணத்திற்காக எடுத்த முயற்சி பாராட்டுதற்கு உரியது. ஒவ்வொரு பெண் குழந்தைக்கும் நல்ல கல்வி அறிவோடு போதிய துணிமணி ஆபரணத்தோடுதிருமணத்தை வெகு சிறப்பாக நடத்தினார்கள். தம் மூத்த மகள் திருமதி சரஸ்வதி அம்மாள் திருமணம் விசேஷமாய்க் குறிப்பிடவல்லது. ஏற்கனவே தெய்வத்திரு பொதிச்சுவாமி அவர்களின் வாக்குப்படியும், வினைப்பயன் படியும் அவளது முறை மாப்பிள்ளைக்கே அவளை மண முடிக்க வேண்டியிருந்தது. இருப்பினும் தம் முயற்சியால் அதனை மாற்ற முயன்றனர், காரணம், அத்திருமணத்தால் பின் விருத்தி இல்லையென்று தோன்றியதால். எத்துணை முயன்றும் இறுதியில் விதி வென்றது. அதுகண்டு எங்களுக்கு ஓர் அரும் அறிவுரை வழங்கினார்கள் எங்கள் தெய்வத் தந்தையார் அவர்கள்:

"ஊழிற் பெருவலி யாவுள மற்றென்று
சூழினுந்தான் முந்துறும்,"

எனப் பாடிய நாயனார்,

"ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்
தாழாது உஞற்றுபவர்,"

என்றார். விதிவலிது எந்தவிதச் சூழ்ச்சியும், யுக்தியும் அதனை முந்த முடியாது. இறுதியில் விதி வெல்லும். அதனைவிட வலிமைவாய்ந்தது ஒன்றில்லை. எனினும் அந்த விதியையும் மறுபுறம் கண்டு வென்றிடுவர் தளராது முயன்று பாடுபடுபவர். தனது விடாமுயற்சியால், அருந்தவத்தால் விதியையும் வெல்லலாம். ஆனால் அந்த வெற்றி அவரவர் முயற்சிக்கு ஏற்றவாறு தன் விதியைப் பொறுத்தவரையில்தான் கிட்டும். தன் பிள்ளையானாலும் அதனுடைய விதியை முயற்சியால் மாற்றியமைக்க ஒரு தந்தையாலும் முடியாது.' இவ்வுண்மையை திருமதி சரஸ்வதி அம்மாள் திருமணம் மூலம் உணர்ந்தேன்," என நடைமுறை நிகழ்ச்சி கொண்டு ஒரு மாபெரும் தத்துவ உண்மையை தெளிவு படுத்தினார்கள். எங்கள் கடைசித் தங்கை திருமதி ராஜேஸ்வரியின் திருமணம் பற்றியும், மற்றொரு தங்கை திருமதி லக்ஷ்மியின் குழந்தைகுறித்தும்கூறுகையில், "நம் பரமகுருவிற்கு வேலை உயர்வு ஏற்பட்டதும், ராஜேஸ்வரிக்குத் திருமணம் நடைபெறும், பின் லக்ஷ்மிக்கும் ஆண் குழந்தை பிறக்கும்," என்றருளினார்கள் எங்கள் கண்கண்ட தெய்வம். அதேபோல் எனக்கு 1958 அக்டோபரில் வேலை உயர்வு ஏற்பட்டது. மறுவருடம் டிசம்பரில் தங்கை ராஜேஸ்வரிக்குத் திருமணம் நடந்தேறியது. 1960 அக்டோபரில் தங்கை லக்ஷ்மிக்கு ஓர் அழகிய யோகமான ஆண் குழந்தை பிறந்தது. இவ்விதம் எங்களுக்குப் பல வகையில் வரும் பொருள் உரைத்து எங்களை வாழவைத்த கண்கண்ட தெய்வத்தை இனி என்று இப்பூவுலகில் காண்போம்!

தம் உற்றார் உறவினருக்கு அருந்துணையாய் நின்றுதவி அருள்புரிந்ததுபோல், தமது அன்பர்

கள் பலருக்கும் அருளாசி அளித்து வந்தார்கள். சாதி, மத, மொழி வேறுபாடின்றி அனைவரையும் ஒன்ருய்ப் பாவித்து, அந்தந்த சீவனின் நிலைக்கு ஏற்றவாறு மதித்து, அன்பு செலுத்தி, அருள்புரிந்து வந்தார்கள். உறவினர், அயலார் என்ற வித்தியாசம் ஏதுமின்றி, தம்மிடம் வருவோர் எல்லோரிடமும் தூய அன்பும், வேண்டிய உதவியும் செய்தார்கள் "எல்லா தானத்திலும் அன்னதானம் மேல். அன்னம் ஒன்றைத்தான் மனிதன் வயிராற உண்டதும் போதும் என்கிருன். மற்ற தேவை எதிலும் அவன் திருப்தி அடைவதில்லை" என விளக்கங்கூறி வந்தோர் அனைவர்க்கும் விருந்து வைத்துக் களிப்பதில் அவர்களுக்கு பெருந்திருப்தி. அவர்களது அருளால் பல குடும்பங்கள் சிறந்தோங்கி வாழ்ந்து வருகின்றன.

எங்கள் தந்தையார் அவர்கள் அரும்பெரும் சித்தர். ஒப்பற்ற திரிகாலஞானி.

"ஊத்தைச் சடலமடி உப்பிருந்த பாண்டமடி
மாத்திப் பிறக்க மருந்தெனக்குக் கிட்டுதில்லை
மாத்திப் பிறக்க மருந்தெனக்குக்
கிட்டுமென்ருல்
ஊத்தைச் சடலம்விட்டு, என் கண்ணம்மா
உன் பாதம் சேரேனே!"

என்ற அழுகினிச் சித்தர் பாடலின் உண்மை விளங்க வாழ்ந்தவர்கள். தம்மைத் தாமே அறிந்து, தலைவனையும் அறிவதுடன், நல்வினை தீவினையாகி இருவினைப் பயனுல் உண்டான ஊத்தைச் சடலத்தை மீண்டும் அடிக்கடி பல பிறவிகளில் எடுத்து உழலுதலை மாற்றிப் பிறப்பதற்குரிய, 'சாகாக்கலை' என்ற மருந்தை அடைந்து பேரின்பமாகிய கண்ணம்மாவின் பாதத்தில் இரண்டறக் கலந்து, ஐக்கியமாகி இன்புற்ருர்கள். எண்ணியது எண்ணியாங்கு எய்தி, சித்து செய்யும் சக்தி பெற்று, முக்காலத்திலும் நடப்பவற்றை முன் கூட்டியே தம்தீர்க்க தரிசனத்தால் அறிந்து, செயற்கரிய சித்துக்களைச் செய்தார்கள். மனிதனை மனிதனுக மதித்து, அவனைத் தெய்வீக மாக்கிப் பேரின்பத்தில் ஈடுபடச் செய்து, மானிட வர்க்கத்தின் ஒற்றுமையையும், மாபெரும் இலக்குகளையும் சித்திக்கச் செய்தார்கள்.

அவர்கள் அட்டமா சித்தி பெற்று, பஞ்ச பூதத்தையும் தாம் சொன்னபடி நடக்கச் செய்ததை நான் அனுபவ வாயிலாக அறிவேன். பல ஆண்டுகட்கு முன் தெய்வத்திரு பொதிச்சாமி அவர்களின் குருபூஜை நாள் இரவு திருவிடைமருதூர் திரு வீருசாமி பிள்ளை அவர்களின் நாதசுரமும், நீடாமங்கலம்திரு மீனுக்ஷிசுந்தரம் பிள்ளை அவர்களின் தவுலும் ஏற்பாடாகி இருந்தது. எங்கள் தந்தையார் அவர்களின் அன்பரான திரு மாயாண்டி அண்ணுவி திரு. மீனுக்ஷி சுந்தரம் பிள்ளை அவர்களை அணுகி, "அண்ணு! இந்த இடம் பெரிது. உங்கள் வித்தையை முழுதும் வெளிக்காட்ட வேண்டும்," என்ருர். அதற்கு பிள்ளை அவர்கள், "அவ்வளவு பெரிய இடமா! சரி, அப்படியாஞல் ஊர்வலக் கச்சேரியின்போது காற்று வேகமாய் அடிக்காது நிற்குமாஞல் என் திறமையைக் காட்டச் சந்தேகமில்லை," என்ருர்கள், "ஐயம் வேண்டாம் சுவாமி அவர்களின் அருளால் காற்று நின்றுவிடும்," எனத் திட நம்பிக்கையால் கூறிவிட்டார் திரு மாயாண்டி அண்ணுவி. இந்த உரையாடல் எங்கள் தந்தையார் அவர்கட்கு அறிவிக்கப்படவில்லை. குறித்த காலத்தில் ஊர்வலக் கச்சேரி தொடங்கியது. ஊர் தேரடிச் சந்தியில் மேளக் கச்சேரி நடக்கலாயிற்று. சில்லென்று காற்று வீசிக்கொண்டிருந்தது. திரு வீருசாமி பிள்ளை அவர்கள் நாதசுரம் வாசித்து நிறுத்திஞர்கள். திரு மீனுட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் தவுலில் ஆவர்த்தனம் தொடங்கிஞர்கள். ஒரு தட்டு தவுலில் அவர்கள் தட்டியதும் வீசிய காற்று நின்றது. நிசப்தம் நிலவியது. திரு. மாயாண்டி அண்ணுவியும் கண்கண்ட தெய்வமாம் எங்கள் தந்தையார் அவர்களை வணங்கிவிட்டுப் பிள்ளை அவர்கட்கு காற்று நின்றது குறித்து சமிக்கை செய்தார். அவ்வளவுதான் வெகு உற்சாகத்துடன், வீராவேசத்துடன் முக்கால் மணி நேரம், தம் பாதம் தரையில் பாவா

வண்ணம், தவுலுடன் ஒன்றி, நந்திபகவானே வந்து நர்த்தனமாடி வாசிப்பதுபோல், கேட்டோர் அனைவரும் மெய்மறந்துநிற்க, அவ்வளவு அழகாய் சொற்கட்டு தாளத்தோடு இசை முழக்கம் செய்து நிறுத்தினார்கள். உடனே தன் கை கூப்பி வணங்கி, "சுவாமி! நான் என்னையும் மறந்து, அனுபவித்து தவுல் வாசித்தது இது மூன்றாம் முறை. முதல் முறை மைசூர் தசராவில் மகாராஜா முன்பு, இரண்டாவது திருவாடுதுறை ஆதீனகர்த்தா முன்பு, மூன்றாவது இதோ இங்கு, இனி எனக்கு இவ்வாய்ப்பு என்று எங்கு கிட்டுமோ, நானறியேன்", என்று உவகையோடு உரைத்தார்கள். இது தம் அன்பர் திடநம்பிக்கையோடு கூறிய உறுதி மொழியை ஞானத்தால் உணர்ந்து வீசும் காற்றை நிறுத்திய விந்தையான சித்து.

மற்றொன்று சமீபத்தில் கடலூரில் நிகழ்ந்தது முன்னர் காற்றை நிறுத்தியதுபோல், இப்போது மழையைநிறுத்தி அருளினார்கள். அன்றிரவு என் பங்களாவில் குற்ற இலாகா டிப்டி இன்ஸ்பக்டர் ஜெனரல் திரு அருள் அவர்கட்கும், மற்றுள்ள மாவட்ட அதிகாரிகளுக்கும் என் பங்களா முன் தோட்டத்தில் எட்டு மணிக்கு விருந்து ஏற்பாடு செய்திருந்தேன். தோட்டத்தில் மின் விளக்கு அலங்காரத்துடன் தடபுடலாய் விருந்து ஏற்பாடு செய்திருந்தேன். மாலையிலிருந்தே வானம் மப்பாய் இருந்தது. இரவு எட்டு மணிக்கு கருமேகம் ஏகமாய்த் திரண்டு, மின்னல் இடியுடன் மழை தூற்றத்தொடங்கியது. பேய்மழைக்கான அறிகுறி தெளிவாய்க் காணப்பட்டது. அப்போது எங்கள் தந்தையார் அவர்கள் எங்கள் தாயாருடன் பங்களா மாடி வராண்டாவில் நாற்காலியில் வீற்றிருந்தார்கள். மிகுந்த சோகத்துடன் நான் அவர்களை அணுகினேன். "நான் இவ்வூர் வந்து முதன் முதல் அளிக்கும் விருந்து இது. பல அதிகாரிகளும், அன்பர்களும் வருகிறார்கள். மழையோ விரட்டிக் கொண்டு வருகிறது. அது வலுத்தால், நான் தோட்டத்தில் ஏற்பாடு செய்துள்ள விருந்து பாழாய்விடும் என் செய்வது? தாங்கள்தான் ஒருவழி செய்யக் கோருகிறேன்," என்றேன். சற்று மௌனமாய் இருந்துவிட்டு, "சரி, கவலைவிடு. உன் விருந்து தடையின்றி நடக்கும். அதுவரை மழையும் நிற்கும். ஆனால் உனது கடைசி விருந்தினர் இங்கிருந்து புறப்பட்டதும் மழை பெய்யும்," என்றருளினார்கள் என் கண்கண்ட தெய்வம். நானும் நிம்மதியாய், வெகு உற்சாகத்துடன் மாடியினின்று கீழே இறங்கிவந்தேன். அவர்கள் அருளியபடி மழையும் நின்றது. விருந்தும் சிறப்பாய் நடந்தது. இரவு பத்தரை மணிக்கு திண்டிவனம் உதவிக் கலெக்டர் திரு ஷெட்டி கடைசியாய்க் கார் ஏறி விடை பெற்றுச் சென்றார். அவரை வழியனுப்பிவிட்டு நான் பங்களாவுக்குள் காலடி எடுத்து வைப்பதற்குள் பயங்கர மின்னல் இடியுடன் பேய்மழை கொட்டியது. இரவு முழுதும் அம்மழை நின்று பெய்தது. என் கண்கண்ட தெய்வத்தின் அருளால் கடும் மழையும் சொன்ன சொற்படி நின்று, பின் பெய்தது. இது என் கண்ணால் கண்டு களித்த சித்து விளையாட்டு. இதைப் போல் சித்துக்கள் எத்தனை எத்தனையோ!

மாபெரும் சித்தரான எங்கள் தந்தையார் அவர்கள் சித்த வைத்தியத்திலும் சிறந்து விளங்கிய சித்தகல்ப சிரோன்மணி ஆவார்கள். "தாமிரத்தில் ஊறல் அற்றால் தன் தேகத்தில் ஊரல் அறும்" என்பது சித்தவைத்தியத்தின் அடிப்படை உண்மை. உடம்பை 'உப்பிருந்த பாண்டம்' என்றார் அழுகிணிச் சித்தர். ஆம், நம் உடம்பைக் கெட்டு விடாது பதஞ் செய்து பாதுகாப்பதற்காக உப்புச் சத்து உடம்பில் இயற்கையாக அமைந்திருக்கிறது. நாம் அன்றாட ஆகாரத்தில் சேர்த்துக் கொள்ளும் சாதாரண உப்பு மட்டுமின்றி வேறு சில உப்புச் சத்துக்களும் உடம்பின் நல் நிலைக்கு இன்றியமையாததாக இருக்கின்றன. நாம் சாப்பிடும் ஊறுகாய் கெட்டுவிடாதிருக்க உப்பு எவ்வளவு முக்கியமோ அவ்வளவு முக்கியம் நம் உடம்பி

லுள்ள உப்பும். அது தக்க அளவை விடக் கூடிவிட்டாலும், குறைந்து விட்டாலும் உடம்பில் கோளாறுகள் உண்டாகிவிடும். அத்துடன் உடம்பிலுள்ள உப்புச் சத்து, சுத்தி ஆகாததாகயிருப்பதால் அதிலுள்ள அசுத்தத் தன்மையாலும் உடலின் நல் நிலைக்கு இடையூறுகள் உண்டாகும். இந்த ஆபத்தி லிருந்து உடம்பைக் காப்பாற்றுதற்கு 'முப்பு' போன்ற சுத்தி செய்யப்பட்ட 'குரு உப்பின்' உதவியால் செய்யப்பட்ட பல்பங்கள் இருக் கின்றன. அவைகளை உட்கொண்டால் நம் உடம்பிலுள்ள அசுத்தமான உப்புச் சத்துக் களும் சுத்தியடைந்து, உடம்பில் ஒருவித குளு மையும், லாவிப உணர்வும், மனச்சாந்தியும் ஏற்பட்டு உடலிலுள்ள நோய்கள் எடுபடு வதுடன், மற்ற புது நோய்களும் வராத சூழ் நிலையும் உண்டாக்கி "யோக நிலைக்கு இழுத்துச் செல்லும்" என்று சித்த வைத்தியத்தின் விளக்கவுரை கூறுவார்கள். தித்திக்கும் பனஞ் சாறிலுள்ள இனிப்பைப் புடமிட்டு மாற்றி உப்பாக்குவதுதான் 'முப்பு'. எங்கள்தந்தையார் அவர்களின் கருணையால் நாங்கள் அந்த 'குரு உப்பை' உட்கொள்ளும் பாக்கியம் பெற்றோம். அரிசி அளவு அந்த உப்பை நாம் நாவிலிட்டால் பனிக்கட்டிபோல் சில்லிட்டு மின்சாரம் பட்டது போல் உணர்வூட்டும். மிதமான உப்புச் சுவை யுடன் உமிழ்நீரில் ஒரு நொடியில் கரைந்து விடும். மூச்சுத்திணறல் நெஞ்சடைப்பு, மார்பு வலி போன்ற இக்கட்டான நிலையில் அக் 'குரு உப்பு' ஒருவேளை உட்கொண்டால் இன்னல் யாவும் மின்னல் வேகத்தில் மறையும்.

இவ்விதம் உயர்வான மருந்துகள் தம் ஞான நிலையில் கண்டறிந்து செய்து வந்தார்கள். தற்கால வைத்தியப்படிப்பை உபயோகமற்ற தெனக் கூறி, "அயல்நாட்டு மருந்தை விற்கும் ஏஜன்டுகள் தான் தற்கால டாக்டர்கள். தாமாக ஒரு மருந்தேனும் அவர்களால் செய்ய இயலாது. அறுவை சிகிட்சையில் வேணுமெனில் நன்கு முன்னேறி இருக்கிறார்கள். ஆனால் நோயறிந்து மருந்து செய்து கொடுக்கத் தெரியாது. நம் நாயனார் கூறியது போல்,

> "நோய்நாடி நோய்முதல் நாடி அது தணிக்கும்
> வாய்நாடி வாய்ப்பச் செயல்."

ஆய்ந்து நோயைக் கண்டுபிடித்து, அதன் மூலம் அறிந்து, அதற்கான மருந்து கண்டு, அதனைக் கைபாகம் செய்பாகம் அறிந்து செய்து, சரிவர வாய்க்கப்பட்டு வைத்தியம் செய்தல் வேண்டும். நாடி அறிந்தவன் நமனறிவான். எனவே தப் பின்றி நாடி பார்க்கக் கற்றுக்கொள்ள வேண்டும். தவிர ஒருவரது விதிப்பயன், விட்ட குறை தொட்ட குறையின் தன்மை ஆயுள்பலம், பெற் றோரின் நிலை யாவும் நன்கு ஆய்ந்து அறிந்த பின்னரே வைத்தியம் செய்தல் வேண்டும். உதாரணம்: சல்லிச்சாமி என்றொரு மகான் திருவனந்தபுரத்தில் இருந்தார். அவர் எவரிட மும் ஒரு சல்லி (தம்பிடிக் காசு)க்கு மேல்யாசகம் வாங்குவதில்லை. எனவே அவர் சல்லிச்சாமி என்று அழைக்கப்பட்டார். அரையில் கோவண மும், கையில் சிறு தப்பட்டமும் தாங்கிக் காட்சி யளிப்பார். ஒருசமயம் அரண்மனைப் பட்டத்து இளவரசுக்கு சுரங்கண்டு கடுமையாய் இருந்தது. திருவனந்தபுரத்தில் மருமக்கட்தாய முறைப்படி நோயுற்ற இளவரசு அப்போதுள்ள அரசரின் தமக்கை மகன். மேலான வைத்தி யர்கள் பலரும் பார்த்தும் சுரம் குறைந்து குண மடைந்த பாடில்லை. நிலைமை நாளுக்கு நாள் மோசமாகிக் கொண்டே வந்தது. அரசரும், அரண்மனையில் உள்ளோரும் ஆழ்ந்த சோகத் தில் மூழ்கினர். திடீரென ஒரு நாள் அந்தச் சல்லிச்சாமி தமது தப்பட்டத்தைத் தட்டிக் கொண்டே காவலர்களையும் மீறித் தாண்டி அரண்மனைக்குள் ஓடினார். சேவகர்கள் பின் தொடர அவர் அரசர் முன் வந்து நின்றார். அரசர் சினத்துடன் பார்க்க, "என்னப்பா, வைத்தியம் பார்க்கிறீர்கள்? அந்தப்பையனின் அப்பன் கடலில் படகு ஓட்டுகிறான். அதனாலே, கடல் சிப்பி எடுத்து வந்து, கடல்நீரில் உரைத் துக்கொடுங்கள். யாவும் குணமடையும், "எனக்

கூறிவிட்டு சல்லிச்சாமி மீண்டும் தம் தப்பட்டத்தைத் தட்டிக்கொண்டே வெளியே ஓடிவிட்டார். அரசருக்கு நடந்த நிகழ்ச்சி வேடிக்கையாய் இருப்பினும், எதற்கும் அம்முறையையும் கையாண்டு பார்க்கலாமே என்றெண்ணி சாமி சொன்ன மருந்தைக் கொடுத்தார்கள். எம்மருந்திலும் பல நாட்களாய்த் தீராத சுரம் ஒரே நாளில் குணமடைந்து இளவரசும் படுக்கையினின்று எழுந்தார். இந்த அதிசயத்தைக் கண்ட அரசருக்கு ஒரு பெரும் சந்தேகம். தம் தமக்கையின் கணவர் அரச குடும்பத்தினர். அரண்மனைவாசி. அப்படியிருக்க அந்தச்சாமி ஏன் தம் மருமகனின் தகப்பன் கடலில் படகு ஓட்டுகிறுன் என்ருர் என்பதுதான், எப்படியும் அச்சந்தேகம் தீர்க்க எண்ணித் தம் தமக்கையை அழைத்து எவ்விதப் பயமுமின்றி உண்மையைக் கூற கட்டளையிட்டார். அவ்வம்மையாரும், 'ஆம், அது உண்மைதான். முன்பு ஒருநாள் நான் தோழியருடன் கடற்கரைக்கு உலாவச் சென்றேன். தோழியர் அப்பால் செல்ல நான் தனித்திருந்தேன். அது சமயம் நல்ல உடற்கட்டுடன் ஒரு மீனவன் அப்பக்கம் வந்தான். அவனது கட்டான காயம் என்னைக் கவர்ந்தது. நான் இச்சைக்கு அடிமையாகி நிலை இழந்து அவனுடன் சேர்ந்தேன் அதில் கருத்தரித்துப் பிறந்தவன்தான் உங்கள் மருமகன், நம் பட்டத்து இளவரசு. என்னை மன்னித்துவிடுங்கள்." என உண்மை கூறி வேண்டிஞர். "சரி, சரி! போனது போகட்டும், இனி இது யாருக்கும் வெளியே தெரியவேண்டாம்," எனக் கூறி மன்னித்தார். இவ்விதம் பிறப்பு மூலம் அறிந்து மருந்து கொடுப்பதுதான் உயர்வான வைத்தியம். இவ்விதம் எத்தனை பேர் வைத்தியம் செய்கிருர்கள்? இப்பொழுதுதான் நோயாளியை ஒரு கேஸ் என்று கூறி உயிரற்றதாய் மதித்து நடத்துகிருர்களே. இந்நிலை கண்டு வருந்துவதைத் தவிர வேறு வழியில்லை," என்று வைத்திய முறை குறித்த ஆணித்தரமான உண்மைகளை அழுத்தமாக உரைப்பார்கள்.

எங்கள் தெய்வத் தந்தையார் அவர்கட்கு இசை என்ருல் எல்லையில்லா இன்பம். "கலைகளுள் தலைசிறந்த இசைக்கலை, யோக நிலையை நொடிப்பொழுதில் கூட்டவும், கலைக்கவும் வல்லது. அன்று ஆனந்தக் கண்ணனின் குழலிசை கேட்டு அண்டசராசரங்களும் அப்படியே மெய் மறந்து அசைவற்று மோனநிலை எய்தினவாம், உண்மை. லயமும் சுருதியும் ஒருங்கே சேர்ந்து நாதப்பிரம்மம் எழும்போது கல்மனமும் கசிந்து கட்டுண்டு விடும். ஒருசமயம் சுடுகாட்டில் யோகநிலையில் நான் அமர்ந்திருந்தபோது, அதிகாலையில் வயல் வேலைக்குச் செல்லும் பெண் ஒருத்தி இனிமையான குரலில் தெம்மாங்கு பாடிக்கொண்டு சென்ருள். அந்த இன்னிசை என் மோன யோக நிலையைக் கலைத்தது. அப்பொழுதுதான் உணர்ந்தேன் இசையின் வலிமையை." எனக் கூறிஞர்கள். தெய்வத்திரு பொதிச்சுவாமி அவர்களுக்கு வருடாவருடம் நடத்தும் குருபூஜையில் பல இன்னிசைக் கச்சேரிகள் ஏற்பாடு செய்வார்கள். அதுசமயம் வந்து கக்சேரி நிகழ்த்தி எங்கள் தந்தையார் அவர்களிடம் அருளாசி பெற்ருர் பலர். அதில் குறிப்பாகக் கருகுறிச்சி திரு அருணுசலம் அவர்கள் ஒருவர் ஆவர். 1954-ம் வருடக் குரு பூஜைக்கு முதன் முதல் கருவை வந்து வாசித்தார்கள். அன்று அவர்களது நாதசுர வாசிப்பு தனிச்சிறப்பு வாய்ந்திருந்தது. இசையுடன் ஒன்றி உருகி நன்கு உழைத்து அனுபவித்து வாசித்தார்கள். நடுப்பகல் பூஜைக்கு முன் நீலாம்புரி வாசித்தார்கள். அதைக் கேட்டு மெய்மறந்து அனுபவித்த எங்கள் தந்தையார் அவர்கள், "இதோ முருகன் மயில் வாகனத்துடன் வந்து விட்டார். வாசிப்பு பிரமாதம் என் மூச்சடங்க வாசித்தீர்கள்." எனக் கூறி மட்டற்ற மகிழ்ச்சியுடன் பூஜை முடித்து விபூதி பூசி, "நீங்கள் வயதில் இளமையெனினும், கலையில் முதிர்ந்துள்ளீர்கள். குருவிற்கும் மிஞ்சிய சீடராய் விளங்குவீர்கள். தமிழ்நாட்டில் மட்டுமின்றி, அகில இந்தியாவிலுமே நீண்ட புகழ் பெறுவீர்கள். நீங்கள் நீடூழி நலத்துடன்

வாழ்ந்து நாதசுரக் கலைக்கும், நம் நாட்டிற்கும் நற்தொண்டு ஆற்ற வேண்டும்;" என மனமு வந்து வாழ்த்தினார்கள். இன்று அன்பர் திரு அருணாசலம் அவர்கள் எங்கள் தந்தையார் அவர்களின் திருவாக்குப்படி அகில இந்தியப் புகழ் எய்திச் சீருடன் சிறந்து வாழ்ந்து வரு கிறார்கள். விரைவில் அவர்கள் அகில உலகப் புகழ்பெறுவார்கள் என்பது திண்ணம். அதற்கு நம் கண்கண்ட தெய்வம் அருள்புரிவார்களாக.

வீட்டிலும், நாட்டிலும் பல வருடங்களுக்குப் பின் நடக்கவிருக்கும் நிகழ்ச்சிகளை முன் கூட் டியே கூறுவார்கள். அதன்படியே பின்னர் அது நடப்பது கண்டு நாம் ஆச்சரியப்படுவோம். 1944-ம் ஆண்டு, "இந்தியா இரு பெரும் தலை வர்களை இழக்கும். அதே சமயம் சுதந்திரமும், பல நன்மைகளும் அடையும். இந்தியப் பெண்மணிகளெல்லாம் கொடியேந்தி உற்சா கத்துடன் நடந்து செல்கின்றனர். பல திட்ட மிட்டு நாட்டு வளம் பெருகும்போது, கொடும் வெள்ளத்தால் கடும் சேதங்களும் நாட்டில் ஏற் படும்," என்றார்கள். அதன்படி முதலில் வங்க சிங்கம் திரு சுபாஷ் போஸை நம் நாடு பர்மா வில் இழந்தது. பின்னர் 1948ல் மகான் காந்தி யடிகளை தில்லியில் இழந்தது. பெண்களின் முன்னேற்றம் நாட்டில் பெரிதும் விருத்தி யடைந்துள்ளது. நாட்டில் பல பயங்கர வெள் ளங்கள் ஏற்பட்டு பெருத்த சேதங்களை விளை வித்துள்ளன. மற்றொரு அதிசய நிகழ்ச்சி பற்றி கூறியுள்ளார்கள். அதாவது, 'நாளடை வில் இந்தியாவும், பாகிஸ்தானும் இணையும்,' என்பது. அதை நாம் பொறுத்திருந்து காண் போம்.

கண்கண்ட தெய்வமாம் எங்கள் தந்தையார் அவர்கள் தமது அந்திக் காலத்தில் என்னுடன் கடலூரில் நான்கு மாதங்கள் வசிக்கும் பாக் கியம் எனக்கு கிட்டியது. எனக்கு ஏற்பட விருந்த இன்னல்களை ஆறக்கட்டவும் தடுக்கவும் என் பிள்ளைகளை நல்வழிப் படுத்தவுமே அவர்கள் கடலூர் எழுந்தருளினார்கள். அவர்கள் கடலூர் வந்தபின் ஆடி, ஆவணி, புரட்டாசி மூன்று மாதங்கள் பௌர்ணமி பூஜை நடத்தி எங்க ளுக்கு அருள் வழங்கினார்கள். ஆடிப் பௌர் ணமி பூஜையன்று, "என்னப்பா, கொலைகாரர் நிறைந்த இடத்தில் உன்னைக்கொண்டுவந்து போட்டுள்ளார்கள். அம்பாளுடன் எவ்வளவோ வாதாடினேன், அவள் அசையவில்லை. உனக்கு இங்குதான் நல்ல பெயரும், புகழும் கிடைக்கப் போகிறதாம். நல்லது, சற்று நிதானமாயும், கவனமாயும் உன் வேலையைப் பார், எதற்கும் அஞ்சவேண்டாம். உனக்கு எவ்வகைத் தீங்கும்ஏற்படாது. "என ஆசி மொழிந்தார்கள். அன்றுடம் என் அலுவல் குறித்து விசாரித்து, அதற்கான தக்க புத்திமதியும் கூறி வந்தார்கள்.

பின் ஆவணிப் பௌர்ணமியன்று, "மூத்த வன் பொன்னுராமை இஞ்சீனியர் படிக்கவை. கலாமதிக்கு 21 வயதுகழித்தேதிருமணம்செய். முத்து குருவைப் பற்றி கவலைப்படாதே. மீறு என்ன படிக்க வைத்தாலும், எவ்வளவு படிக்க வைத்தாலும் நன்றாகப் படிப்பாள்," எனக் கூறினார்கள். நான் அப்போது என் வேலையே குறியாய் சதா அலைந்து கொண்டிருந்தேன். ஒருநாள் என்னை அழைத்து, "நீ எதற்காகப் பாடுபடுவதும், பணம் தேடுவதும்; உன்பிள்ளை குட்டிகளுக்காகத்தானே? பின் ஏன் அவர்களைப் பற்றி சிறிது நேரமேனும் கவனிப்பதில்லை? நாங்கள் எல்லாம் உங்களை எப்படிக் கண்ணுங் கருத்துமாய் வளர்த்தோம்? அதேபோல் நீயும் உன் கடமையைச் செய்தல் வேண்டும்" எனத் தக்க சமயத்தில் என்னைத் தட்டிச் சொல்லி புத்திபுகட்டினார்கள். இது சமயந்தான் நடிகர் திலகம் திரு சிவாஜிகணேசன் அவர்கள் எங்கள் தந்தையார் அவர்களைத் தரிசிக்கும் பேறு பெற்றார். அப்போது, "நீங்கள் எங்களைப் பார்ப்பது உங்களுக்குப் புண்ணியம்; உங்களை நாங்கள் பார்ப்பது எங்களுக்குப் புண்ணியம்," என்று ஆசி கூறினார்கள். நடிகர் திலகம் நடமாடுங் கோயில்களான மக்களின் அளவற்ற தெய்வீக அன்பும், அபிமானமும், பெற்றதாலும்

தாம் ஆத்மீக அருள் சம்பாதித்திருப்பதாலும் இவ்விதம் கூறினார்கள் போலும்.

இறுதியாய் அவர்கள் நடத்திய பௌர்ணமி பூஜை புரட்டாசி மாதந்தான். அடுத்த ஐப்பசிப் பௌர்ணமியன்றுதான் அவர்கள் அடங்கியது. புரட்டாசிப் பூஜை முடிந்து மௌனமானார்கள். மறுதினம் என்னிடம், 'நேற்றுப் பூஜையில் கூட்டம் அதிகமோ?, என்று கேட்டார்கள். ''அப்படி ஒன்றும் இல்லையே. நாங்கள் தானே இருந்தோம்,'' என்றேன் நான். ''அப்படியா? என்னமோ அம்பாள் கலகலவென்று சிரித்து விட்டுச் சென்றுவிட்டாள்,'' எனக் கூறிப் பேச்சை முடித்தார்கள்.

என் தங்கை லக்ஷிமிக்கு 12 ஆண்டுகளுக்குப் பின் எங்கள் தந்தையார் அவர்களின் அருளாசியால் ஓர் ஆண்குழந்தை பிறந்த செய்தி கேட்டு மகிழ்ந்தார்கள். தம் பேரன் நல்ல யோகசாலியென்றும், யானை கட்டிப் போரடிப்பான் என்றும் வாயாரப் புகழ்ந்து வாழ்த்தினார்கள். என் தங்கை ராஜேஸ்வரியை நல்லாசியுடன் தனிக் குடித்தனம் நடத்த செங்கல்பட்டு அனுப்பி வைத்தார்கள். அவளை அனுப்பும்போது, ''இன்னும் எட்டு நாளில் முடிந்தால் என்னை வந்து பாரம்மா,'' என்றார்கள். மறுதினம் என் மனைவி கமலாவுடன் அவர்கள் பேசுகையில் ''மாமா! உங்கள் உடம்பு எப்பொழுது பூர்ண குணமடையும்?'' எனக் கேட்டபோது, ''எல்லாம் இன்னும் பத்து தினங்களில் தீர்ந்துவிடும்'' என்றார்கள்.

அதன்பின் அவர்கள் தம் பேச்சையே நிறுத்தி விட்டார்கள். தம்மைச் சுற்றியுள்ள எதிலும் விருப்போ வெறுப்போ எதுவும் காட்டவில்லை. பற்றற்ற நிலையில் பரமன் தியானத்தில் ஆழ்ந்தார்கள். 1960 நவம்பர் 2ம் தேதி புதன் காலை 5 மணிக்கு என்னை எழுப்பிவரச் சொன்னார்கள். அவர்களிடம் நான் வந்து அமர்ந்ததும், ''பரமகுரு, இனி க்ஷண நேரமும் இங்கு இருக்கக் கூடாது,'' என்றார்கள். அவர்கள் கடலூரில் தங்குவதைத்தான் குறிப்பிடுகிறார்களென எண்ணி, ''ஏன் அப்பா! நீங்கள் இங்கிருப்பது எங்களுக்கு எவ்வளவோ ஆறுதலாயும் பெருமையாயும் உள்ளது. இன்னும் என்ன வசதி வேண்டுமானாலும் நான் செய்து தரக் காத்திருக்கிறேன். பின் ஏன் போக விரும்புகிறீர்கள்?,'' என்று கேட்டேன். அதற்கு அவர்கள் புன்னகை பூத்த வண்ணம், ''இல்லப்பா, சலிப்பு ஏற்பட்டுவிட்டது. இனி தாமதம் கூடாது'', என்று கூறி முடித்தார்கள். பின் நான் என் மனைவி கமலாவையும் எழுப்பி வரச்செய்து, ''என்ன சலிப்பு? எங்கு செல்ல வேண்டும்?,'' என்றெல்லாம் கேட்டேன், ஆனால் அவர்கள் மௌனமாய்ப் புன்னகை புரிந்து தம் வலக்கை விரல்களால் கட்டிலின் ஓரத்தில் தாளம் போட்ட வண்ணம் இருந்து விட்டார்கள். அவ்வளவுதான் யாவும் அடக்கிக் கொண்டார்கள்.

மறுதினம் வியாழன் எந்தவித மாறுதலும் இல்லை. அவர்களும் பேச முயலவில்லை. டாக்டரை வரவழைத்து இனிமா கொடுத்து தம் வயிற்றைச் சுத்தம் செய்து கொண்டார்கள். பின் 4-11-60 வெள்ளியன்று காலை 8 மணிக்கு ஒரு கண்ணாடிக் கோப்பை நிறையப் பால் வாங்கி அருந்தினார்கள். அன்று நடுப்பகல் 12-10 மணிக்கு இராகு காலம் தாண்டி நிம்மதியாய் அடங்கினார்கள். என் குடும்பமும், நானும் அது சமயம் அருகிலிருந்து ஏங்கி நின்றோம். கடலூரினின்று கருவை அடைந்து அங்கு திருக்கோவில் சமாதி கொண்டார்கள் எங்கள் கண்கண்ட தெய்வம். அங்கு இங்கு என்னாதபடி எங்கும் வியாபித்து நின்று நம் அனைவர்க்கும் தம் அருளாசியை அளவிலாது வாரி வழங்கி வருகிறார்கள் நம் கண்கண்ட தெய்வம்.

''கருவையம் பதியில் வாழ்ந்து கருணையின் வடிவமாகிப்
பெருமனை யறத்தில் நின்றும் பெறற்கருந்தவங்களாற்றி
இருவினை வென்றே யென்றும் இன்பமாம் சமாதிகொண்ட
பொருவில் பொன்னையசாமி பூங்கழல் போற்றி போற்றி''.

## பக்தியும் முக்தியும்

கோவில்களுக்குச் சென்று பூஜிக்கும்போது, "சக்தி கொஞ்சம்; பக்தி அதிகம்" என்று சொல்லிச் செலவை, பூஜைக் குரிய மிக முக்கிய மான அம்சங்களுக்குச் செய்து, பக்தியைக் கூட்டி, உருக்கமாகவும், ஓர்மையாகவும் சாமியைக் கும்பிட வேண்டும்.

பக்தி மார்க்கத்தில் சாதாரணமாகச் சாமி கும்பிடுகிறவர்களுக்கும், ஆத்ம முக்தி பெற்று சித்தர் நிலை அடைந்தவர்கள் கோயில் சென்று தெய்வ வழிபாடு செய்வதற்கும் வித்தியாசம் உண்டு. கோவில்கள் ஒவ்வொன்றிலும் சித்தர்கள் சமாதி கொண்டிருப்பதால்தான் அவற்றிற்கு அவ்வளவு மகிமை. ஆகவே சித்தர் நிலை அடைந்தவர்கள் கோயில் களுக்குச் சென்றால், தூங்காமல் தூங்கும் யோக நிலையிலோ, அல்லது மனதை ஓர்மைப்படுத்தி ஞான திருஷ்டி நிலையிலோ அக்கோவில்களில் அடக்கம் கொண்ட சித்தர்களின் அப்போதைய யோக நிலையின், 'படியை' ஆராய்ந்து இன்புறுவார்கள்.

## கண்டதும் கேட்டதும்

திரு. பெ. க. செல்லக்கனி, சிவகாசி

சுவாமி அவர்கள் வாழ்க்கை, இல்லறத்தி லும் ஆத்மீக உயர்வுடன் வாழலாம் என்பதற்குச் சிறந்ததோர் எடுத்துக் காட்டு. அவர்கள் மனைவி மக்களோடு வாழ்ந்தார்கள்; சுகதுக்கங் களை முழுதும் அநுபவித்தார்கள்; தமக்கு நடக் காதெனத் தோன்றிய காரியங்களுக்கும், உலகத்தோடு ஒட்ட ஒழுக வேண்டும் என்ப தற்காக எல்லோரையும் போல் முயன்றார்கள். ஆயினும், வெற்றியோ, தோல்வியோ இன் பமோ, துன்பமோ எவற்றையும் தம்மை பாதிக்க விடவில்லை.

வந்திருப்பவர்களின் தராதரம் அறிந்துபேசி அனுப்பும் சிறப்பியல்பு, அவர்களுக்கு உண்டு. அகில உலக விவகாரங்களிலிருந்து, கரிவலம் வந்தநல்லூர் பஞ்சாயத்துத் தகராறுகள் வரைக்கும் எல்லா விஷயங்கள் பற்றியும் பேசுவார்கள். ஆனால் அவர்கள் ஆப்த நண் பர்களிடம் பேசுகின்ற பேச்சேதான். திரு வெங்கட்ராமய்யர், திரு கோபாலய்யர் போன்ற சிஷ்யர்களிடம் ஆத்மீக மார்க்கங்களைப் பேசினால், நேரம் போவதே தெரியாது. தம் மனத்திற்குப் பிடிக்காதவர்கள் யாராவது "சுவாமி, இப்படிச் செய்யலாமா, இந்த வித மாகச் செய்தால் இன்ன பலன் கிடைக்குமா?" என்று கேட்டால், "என்ன ஐயா, இங்கே ஜோஸ்யமா சொல்கிறோம்? உங்களுக்குத் தெரியாத விஷயம் யாருக்குத் தெரியும்?" என்று சொல்லி மழுப்பிவிடுவார்கள்.

கம்ப ராமாயணத்தில் மிகுந்த ஈடுபாடு உண்டு. கதையை நம்பினாலும், நம்பாவிட்டா லும், கம்பன் காட்டியிருக்கும் கடவுட் தத்து வத்திற்காவது படிக்கவேண்டும்" என்பார்கள்.

"தோள் கண்டார் தோளேகண்டார்
தொடுகழற் கமலம் அன்ன
தாள் கண்டார் தாளே கண்டார்
தடக்கை கண்டாரும் அஃதே

வாள் கண்ட கண்ணூர் யாரே
வடிவினை முடியக் கண்டார்
ஊழ் கண்ட சமயத் தன்னூர்
உருவு கண்டாரை ஒத்தார்.''

''தோள் கண்டார் தோளே கண்டார்........ என்ற பாடலின் ஈற்றடியான 'ஊழ் கண்ட சமயத்து அன்னூர் உருவு கண்டவரை ஒத்தார்' என்பதை மிகவும் ரசித்து அடிக்கடி விமர்சனம் செய்வார்கள். ''இங்கே சமயம் என்பதைக் காலம் என்றே கொள்ள வேண்டும்'' என்பார்கள். ''விட்டகுறை தொட்டகுறையாக இறைவனது அருட்காட்சி அடையும்போது நிகழும் நிலையைச் சொல்லியிருக்கிருர் கம்பன். கடைக்கண் பார்வையிலேயே ஆண் மகனின் முழு உருவத்தையும் எடை போட்டு விடும் பெண்களே தோளைக் கண்டதும் அதையே பார்த்துக் கொண்டிருப்பார்கள்? மனப் பண்பு உணர்ந்த கம்பனு அப்படிச் சொல்லியிருப்பான்? இராமனது தோற்றம் இறைவனது திருஉருவக் காட்சி. அதைக் கண்ட பக்தர்களின் பரவச நிலையையல்லவா இங்கு எடுத்துக் காட்டுகிருன் கம்பன்'' என்று விவரிப்பார்கள்.

உண்மையான நண்பர்கள் கஷ்டப்பட்டால் ''ஐயா, விதியின் பயனை அனுபவித்துவிடுவது நல்லது, தைரியமாயிருங்கள்; ஒன்றும் செய்யாது. அவதார புருஷனுகிய அந்த இராமனே அவ்வளவு கஷ்டப்பட்டு இருக்கும்போது, நாம் எம்மாத்திரம்?'' என ஆறுதல் கூறுவார்கள்.

ஒரு தடவை எங்கள் நண்பர்களில் ஒருவர் மிகவும் கஷ்டப்பட்டுக்கொண்டிருந்தார். அப்போது மற்ருெருவர், ''சுவாமி யாராவது செய்வினை ஏதும் செய்திருப்பார்களா?'' எனக் கேட்டார். அதற்கு, ''அப்படியெல்லாம் நாம் பாதிக்கப்பட வேண்டுமானுல், நம்முடைய நம்பிக்கையும் மனோ தைர்யமும் என்ன ஆவது? இதற் கெல்லாம் பயப்படக் கூடாது'' என்ருர்கள்.

நான் அவர்களை முதன் முதலில் சந்தித்தது 1939 ஆம் ஆண்டு கோடை விடுமுறையில். விபூதி பூசிவிட்டு, ''ஐயா உடம்பை நன்கு கவனித்துக்கொள்ளுங்கள்'' என்ருர்கள். அப்போது அவர்கள் சொன்னதன் கருத்தை நான் கிரகித்துக் கொள்ளவில்லை. பின்னர் சுமார் ஈராண்டுகள் Fungus என்னும் நோயால் மிகவும் அல்லற்பட்டு, அவர்கள் என்னை நேரில் பார்க்காமலேயே என் அண்ணுச்சி அவர்கள் வசம் கொடுத்தனுப்பிய மருந்திஞல் பூரண குணம் பெற்றேன்.

அவர்கள் கொடுக்கும் மருந்தை அமிர்தம் என்றே சொல்லலாம். எவ்வித பத்யமும் இருக்காது. நமக்குப் பிரியமானதை எல்லாம் சாப்பிட்டுக்கொள்ளலாம் என்பார்கள். தங்க பஸ்பம், ரசச்சுன்னம் போன்ற பெரிய பெரிய மருந்துகளை, குழந்தைகளுக்கும் கொடுக்கும் வண்ணம் வெகு பக்குவமாகச் செய்து தருவார்கள். கர்ப்பத்தோடு ஒட்டிய வியாதிகளைத் தீர்ப்பதில் நிபுணர்.

ஆரம்பத்தில் சத்ரு—மித்ரு முறையான ஆயுர்வேத வகைகளையே பின்பற்றிஞர்களாம். 'சுவாமி வந்தார்கள், உடனே குணமாயிற்று' என்னும் வகையில் நொடிப்பொழுதில் சுகமாகுமாம். ஆனுல், அந்த மருந்துகளிஞல், வியாதி குணமான பின்பும் உடம்புக்கு உண்டாகும் ஊறுகள் பலவெனக் கண்டு, சித்த வைத்திய முறைகளைக் கைக்கொண்டார்கள். சித்த வைத்தியத்தின் மூலக் கருவான உப்பைக் கண்டுபிடிப்பதற்காக அவர்கள் பட்ட சிரமமும், செய்த செலவும் கணக்கில் அடங்கா. பனை மரத்தைக் 'கற்பக தரு' என்பார்கள். உலோகங்களை பஸ்பப்படுத்துவதற்காக அவர்கள் கந்தகாமிலம் தயாரிக்கும் முறையே தனிப்பட்டது. திருவருட் கிருபையால், தாம் கண்டு, கேட்டு, அறிந்து, தேர்ந்த நல்ல முறைகள் யாவற்றையும் வகைப்படுத்தி எழுதி வைத்திருக்கிருர்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

நோய்நாடி நோய்முதல் நாடி அதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல்

என்னும் குறட்பா அவர்கள் விரும்பி அடிக்கடி எடுத்துக் காட்டுவதாகும். "வைத்தியம் செய்யும் வகையை இதைவிட யாராலும் விளக்கமாகவும், ரத்னச் சுருக்கமாகவும் சொல்ல முடியாது" என்பார்கள்.

"வைத்தியம், ஜோஸ்யம் போன்ற சாஸ்திரங்கள் மனிதருக்கு ஊக்கமும், மனோதைரியமும், நன்னம்பிக்கையும் உண்டாக்க ஏற்பட்டவை. அவற்றைத் தகாதவழியில் உபயோகித்து, மக்களிடத்தில் பீதியை உண்டாக்கிப் பணம் பறிப்பது அதர்மம்" என்பது அவர்கள் கருத்து.

தாம் கண்டுபிடித்த மருந்துகளின் தரத்திற்கும், செலவுக்கும், சிரமத்திற்கும் தகுந்தவாறு வசதியுள்ளவர்களிடம் பணம் வாங்கினுலும், இல்லாத ஏழைகளுக்கு இலவசமாய்க் கொடுத்துவவதிலே அவர்கள் இன்பம் கண்டார்கள்.

ஒரு தடவை என் நெருங்கிய பந்துக்களில் ஒருவருக்குச் சரும வியாதிக்காக மருந்து செய்து கொடுத்தார்கள். அவரும் பல ஆண்டுகளாக அதனுல் அவதிப்பட்டு, வேறு பல மருந்துகள் சாப்பிட்டும் குணமாகாதிருந்தார். மருந்தைக் கொடுக்கும்போது அம்மா அவர்கள் "சுவாமியை நம்பிச் சாப்பிடுங்கள் ஐயா, நிச்சயம் குணமாகி விடும்" என்றுர்கள். அதற்கு சுவாமி அவர்கள் "நம்பிக்கை இல்லாவிட்டால் மருந்து குணமாகாதென்று அர்த்தமா?" என்று கேட்டுவிட்டுச் சிரித்தார்கள்.

காலமறிந்துதான் மருந்து கொடுப்பார்கள். எனது வாழ்க்கையின் இரண்டாவது கண்டத்தின்போது, "பதினெட்டு மாதங்கள் பொறுத்துக்கொள்ளுங்கள். நம்மிருவருக்கும் போதாத நேரம். அது கழிந்ததும் நானே மருந்து தயாரித்து வருகிறேன். அதுவரைக்கும் தைரியமாயிருங்கள். இடையில் எந்தவிதமானபாதகமும் நேராது" என எழுதினுர்கள். பின்னர், எழுதியபடியே ஒரு வாரம் எங்களுடன் வந்து தங்கியிருந்து, மருந்து தயாரித்துக் கொடுத்ததை என்றும் மறக்க முடியாது.

எப்போதும் இதய சுத்தமாக இருக்க வேண்டும் என்பார்கள். கள்ளங் கபடற்ற உள்ளார்ந்த அன்பு கொண்டவர்களைக் கண்டதுமே, அவர்கள் முகத்தில் அலாதியான ஒரு மகிழ்ச்சி தோன்றும். அப்படிப்பட்டவர்களுடன் அவர்கள் பேசும்போது, பேச்சில் இருக்கும் உற்சாகமும், ஒங்காரமும் அவர்களுடன் பழகினவர்களுக்கே தெரியும்.

"நாம் அந்தரங்க சுத்தமாய், யாருக்கும் துரோகம் செய்யாமல், கஷ்டப்பட்டு உழைத்தால், யாராவது பெரியவர்கள் தாமே ஆகர்ஷிக்கப்பட்டு, நாம் முன்னேற உதவுவார்கள்; அப்படி உயர்வது சாசுவதமான ஏற்றமுடைத்திருக்கும். உண்மை உழைப்பின்றி, பகட்டினுலும் பித்தலாட்டத்தினுலும் ஏற்படும் உயர்வுகள் நீர்மேல் குமிழிபோல் நிலையற்றதாகும். பின் வாரிசுகளுக்கும் தங்காது," என்பார்கள்.

இருதய சுத்தமான வாழ்க்கைக்கு மகாத்மா காந்தியடிகள் வாழ்க்கையை உதாரணமாகச் சொல்வார்கள். "எப்படிப்பட்ட அறிவின் மேதையானுலும், அவருடைய ஆத்ம பலத்திற்கு முன் எதிர் நிற்க முடியுமா?" எனக் கேட்பார்கள்.

இந்தியாவின் சுபிட்சத்தில் திடமான நம்பிக்கை கொண்டவர்கள். இரண்டாவது மகாயுத்தம் நடந்துகொண்டிருந்த போது, "இந்தியாவுக்குத் தீங்கு ஒன்றும் நேராது. தெய்வ கன்னிகைகள் காத்து நிற்கிருர்கள்," என்று சொல்வார்கள். அவர்களுக்கு மிகவும் வேதனை கொடுத்தது இந்தியா துண்டாடப்பட்டு பாகிஸ்தான் பிரிந்து போனது. இந்தத் தலைமுறையில் இல்லாவிட்டாலும், எதிர்காலத்தில் ஒருநாள் இந்தியாவுடன் பாகிஸ்தான் மீண்டும் சேர்ந்தே தீரும்," என அடிக்கடி கூறுவார்கள்.

தமிழ் நாட்டில் ஏழைக் குழந்தைகளுக்காக இலவசப் படிப்பும், மதிய உணவும் ஏற்பாடு செய்திருப்பதை எண்ணி எண்ணிமகிழ்வார்கள். உற்ற நண்பர்களிட மெல்லாம் அவற்ருல் உருவாகிக் கொண்டிருக்கும் சமுதாய விழிப் பைப் பற்றி வியந்து வியந்து பேசுவார்கள். தம் குழந்தைகளின் படிப்புக்காகத் தம் சொந்த ஊர், பந்துக்கள் யாவரையும் விட்டு விட்டு பாளையங்கோட்டையிலேயே பல ஆண்டுகள் தங்கி வசித்தவர்களல்லவா?

"நம் கோயில்களிலெல்லாம் ஒழுக்கம் நிறைந்த நல்ல கலாசாலைகளை நிறுவி, பருவ மறியாப் பாலகர்களுக்கு வேத முறைப்படி ஓது வித்து, அவர்களைக் கொண்டே கோயில்களில் பூஜை, அர்ச்சனைகளை நடத்துவித்தால், கோயில்கள் தாமே தெய்வ சாந்நித்யம் பெற்று விளங்கும்" என்பார்கள்.

தம் குருவான பிரம்மஸ்ரீ பொதிச்சுவாமி அவர்களுக்குக் கோயில் கட்டி முடிப்பதைத் தம் வாழ்நாளின் குறிக்கோளாகக் கொண்டு செயலாற்றினுர்கள். அந்தக் கோயிலிலும் சிலை ஏதும் அமைக்காது, பராசக்தி பீடமாகவே அமைத்தார்கள். அதற்குக் காரணம் எல் லாரும் சாதி வித்தியாசமின்றித் தாம் தாமே பூவிட்டு, பூஜை செய்து கொள்ளலாமென்பதே நாற்பத்து மூன்று கோணங்கள் அமைந்த அந்தப் பராசக்தி பீடத்தின் தன்மையைப் பற்றியும், அதன் சக்தியைப் பற்றியும், அதை ஆகம முறைப்படி நிறுவினதைப் பற்றியும் அவர்கள் என்னிடம் விவரித்துக் கூறியது என்றும் மறக்க முடியாதது. தமது வாழ்க் கையின் பாதிசக்தியை அதற்கே அர்ப்பணித்து விட்டார்கள் என்பேன்.

கர்நாடக சங்கீதத்தில் மிகவும் பிரியம் உண்டு. தேர்ந்த நாதஸ்வர வித்வான்கள் வாசித்தால், தம்மை மறந்து அதில் லயித்து விடுவார்கள். இதனுல் பொதிச்சுவாமி அவர் கள் குருபூஜை என்ருல், சிறந்த நாதஸ்வர இசையும் அங்கு உண்டு என்பது வழக்க மாயிற்று.

இப்படி எத்தனை எத்தனையோ இன்ப நினை வுகள் எழுகின்றன. அவை யாவும் சொல்லி முடியாதன. திருவருட் கிருபையால் ஒரு பெரிய மகானின் தொடர்பு கிடைத்தது அரும் பெரும் பேறே. என் வாழ்க்கையின் இரண்டு பெரிய கண்டங்களில் உடனிருந்து உறுதி தந்தார்கள். எமது திருமணத்திற்கு ஆறு மாதங்களுக்கு முன்னரே, இப்படிப்பட்ட சம்பந் தம் விரும்பி வருகிறதெனச் சொல்லியதோடு திருமணத்திற்கும் நேரில் வந்திருந்து ஆசீர் வதித்தார்கள். 1957ல் எங்கள் செல்வன் ஜெயராஜ் பிறந்த நாளன்றும், 1959ல் என் பிறந்த நாளன்றும் எங்கள் வீட்டிற்கு வந்து, தங்கியிருந்தது என்றும் நினைவை விட்டகலா. இவை போன்ற இன்னும் பல நல்ல விசேஷங் களைத் தாமே இருந்து நடத்திவைக்க விரும்பி னுர்கள். ஆனுல், அதற்குள் சூழ்நிலையில் உண் டான சலிப்பினுல் அடக்கம் எய்த நேரிட்டது. எனினும் அவர்கள் விரும்பிய யாவற்றையும் வருங்காலம் துலங்கச் செய்யும் என்ற நம் பிக்கை உண்டு.

தான் நடத்தும் விசேடங்களில் கூடுமான அளவு வருகிறவர் களுக்கு வசதிகள் செய்திருப்பார்கள். ஆனுல் வருகிறவர்களைத் தனிப்பட்ட முறையில் உபசரிக்க விடமாட்டார்கள். ஏனென்ருல் வருகிறவர்கள், தங்களின் சொந்த வீட்டு விசேடமென்று கருதி, ஏற்பாடு செய்திருக்கும் வசதியைக் கூடுமான அளவு தாங்களே பயன்படுத்திக் கொண்டு, சில அசௌகரிய மிருந்தால் அதையும் பொருட்படுத்தாமல், விசேடத்திற்குத் தனிச் சிறப்புக் கொடுக்க வேண்டுமென்பது, சாமிகளின் உயர்ந்த கருத்து. ஆகவே அவர்கள் நடத்தும் விசேடங்களில், யார் சொந்த வீட்டார்? யார் விருந்தினரென்று கண்டு பிடிக்க முடியாமல், எல்லோருமே ஒரு குடும்பத் தினரென்ற தெய்வீகத் தோற்றமும், ஒருவித இனிமையும் காணப்படும்.

# பிள்ளைக் கலிதீர்த்த பெருமான்

திருமதி இலட்சுமி, உறையூர்

ஒரு நாள் காலை வேளை. என் அன்புச் செல்வன் திரு. பொன்னுரத்தினத்தை நீராட்டினேன். அவனுக்கு ஆடை அலங்காரம் செய்து அழகு பார்த்துக் கொண்டிருந்தேன். குழலிலும் மென்மையான மழலைச் சொல்லாலே என்னை 'அம்மா வா' என்று என் கைகளைப் பிடித்துக்கொண்டு அவன் வீட்டிற்குள் அழைத்துச் சென்றான். அவனது அன்புப்பிடியிலே நான் பின் தொடர்ந்து சென்றேன். அவன் சென்று நின்ற பூஜை அறையைக் கண்டவுடன் என்னை அறியாமலேயே என் உள்ளத்தில் உணர்வும் அன்பும் பெருகின. கண்களிலே கண்ணீர் பொங்கியது. இம் மாநிலத்திலே மணிவிளக்காய் அறிவுக் களஞ்சியமாய் அவதரித்தார்கள் எங்கள் தந்தை அவர்கள். மக்களின் இருள் வாழ்வைப் போக்கினார்கள். மனம் நொந்து, நோயால் நல்வாழ்வு இழந்தோர்க்கு ஆறுதல் அளித்து அவர்களுடைய நோயை குணப்படுத்தி மீண்டும் மனைவி மக்களோடு அவர்களைச் சேர்த்து வைத்து அருள் வழங்கும் வள்ளல் அவர்கள். அன்புச் சுடராய்த் தோன்றினார்கள் தொல்லையான பல சூழ்நிலைகள் வரினும், தன் இளமைப் பருவத்தை ஞான வழியில் செலுத்தினார்கள். கடுந் தவம் ஆற்றி நாடே புகழும் யோகி ஆனார்கள்.

சிவந்தமேனி; பளபளக்கும் சரிகை ஆடைகள் அச்செம்மேனியை மூடி அழகு செய்யும். புனிதமான பார்வை. பூப்போல் மலரும் புன்னகை. இவைகள் எப்பொழுதும் குளிர் முகத்திலே நிறைந்திருக்கும். அவர்கள் தாம் எங்கள் தந்தை தவத்திரு பொன்னையா சுவாமிகளாகும். அத்தெய்வத்தின் திருப்படத்திற்கு முன் தான் என்னை என் மகன் அழைத்துச் சென்றான். அப்பிஞ்சு உள்ளத்திற்கு தாத்தாவின் மேல் எவ்வளவு பக்தி!

தினமும் மக்களால் இதயம் கனிந்து வணங்கப்படும் தெய்வமாகிய எங்கள் தந்தையைப் பெற்றெடுத்த பெருமையும், புகழும் எங்களுடைய பாட்டி திருமதி இலட்சுமி அம்மையைச் சேரும். தென்னாடு போற்றும் தெய்வமாக ஒரு மகனைப் பெற்றெடுத்தார்கள் என்றால் அவர்களும் முற் பிறவியில் தவவலிமையுடையவர்களாய் இருந்திருப்பார்கள் என்பதில் ஐயமில்லை. தம்முடைய தாயாரின் நினைவாக அவர்களுடைய பெயரை வைத்து என்னை இலட்சுமி என்று அன்போடு அழைத்து வந்தார்கள். நான் உருவத்திலும், செய்கையிலும் எங்களுடைய தாயாரைப் போல் இருப்பதால் மிகவும் அன்பாக நேசித்து வந்தார்கள். அவர்கள் எங்களுடைய தாயாரை அழைத்து "கோமதி! லட்சுமியைப் பார்த்தாயா? உன்னைப் போலவே இருக்கிறாள். பண்போடும், செல்வத்தோடும், நீ சிறந்து விளங்குவதைப் போல் இவளும் ஒரு குறையும் இல்லாது வாழ்வாள். மாமியார் போற்றும் மருமகளாக மனை நிறைந்திருப்பாள்," என்று நான் இளமையாய் இருக்கும் போதே எங்களுடைய தாயாரிடம் சொல்லி மகிழ்வார்கள். என்னோடு பிறந்த ஆண்களையும், பெண்களையும் அருமையாகப் படிக்க வைத்தார்கள். அவர்கள், "பெண்கள் பத்துவரை படிக்க வேண்டும். அப்போது தான் வாழ்க்கைக்கு வேண்டிய அரிய விஷயங்களை தெரிந்து கொள்ள முடியும், குடும்பத்தையும் சீராக நடத்த முடியும். நம் நாட்டிலே எல்லாப் பெண்களும் பத்தாவது வகுப்பு வரை படித்தால் நம் நாடு சீரோங்கி வளரும் சமுதாயமும் வலுப்பெறும். வாழ்க்கையிலே கணவன், மனைவி ஒருவருக்கொருவர் பொருந்தி வாழும் தன்மை தானே ஏற்படும். இதனால் இல்லறம் இனிமை பெறும். குழந்தைகளையும் அறிவாளிகளாய் வளர்க்க முடியும்" என்று பல முத்தான கருத்துக்களைச் சொல்லி எங்களைப் படிக்க வைத்தார்கள்.

எல்லோரும் பள்ளிப் படிப்பை முடித்து கல்லூரிக்குச் சென்றார்கள். நானோ படிப்பில்

கொஞ்சம் கவனம் இல்லாமல் இருந்தேன். ஆகையால் ஐந்தாம் படிவத்திலேயே என்னை நிறுத்திவிட்டார்கள். மற்ற சகோதர சகோதரிகளுக்கு கல்லூரிப் படிப்பு மட்டுமல்லாமல் வீட்டில் சங்கீதம் கற்பிக்கவும் ஏற்பாடு செய்தார்கள். எனக்கோ சங்கீதம் வராது என்பது அவர்களுக்குத் தெரியும். ஆகையால் வீட்டில் நான் சும்மா இருக்கக் கூடாது என்பதற்காக ஓவியம், தையல் முதலியவை கற்பதற்காக ஒரு பெண் ஆசிரியை ஏற்படுத்தி, அக்கலைகளைக் கற்கச் செய்தார்கள். ஓவியமும், தையலும், என் மனதைக் கவர்ந்தன. குழந்தைகளை அவைகள் விரும்பும் வழிகளிலே விட்டுத்தான் அறிவுக் கலை வளர்க்க வேண்டுமென்று சொல்வார்கள். அவர்களுடைய ஒப்பற்ற இக் கொள்கைகளை என் மூலமே நான் தெரிந்து கொண்டேன். ஓவியத்திலும், பூத்தையலிலும் நான் நன்கு தேர்ச்சி பெற்றேன். நான் வரைந்த படங்களையும், பூ வேலைகளின் வனப்பையும் கண்டு என்னை மிகவும் பாராட்டினார்கள். நான் அவர்களிடம் ஓவியம், தையல் தேர்வுக்குச் செல்லவேண்டும் என்றேன். ஆனால் அவர்கள் அதற்கு மறுத்தார்கள். மறுத்தற்குரிய காரணங்களையும் சொன்னார்கள். "இலட்சுமி! தெளிந்த மனதிலே திருப்தி ஏற்பட்டால் தேர்வு எதற்கு? மனதிற்கு பயத்தை உண்டாக்குவதற்குத்தான் தேர்வு வைப்பது. அப்பொழுதுதான் மாணவர்கள் தேர்வுக்காகப் பயந்து கல்வியை கவனமாகக் கற்பார்கள். ஆனால் உனக்குத் தேர்வு தேவையில்லை," என்று என் உள்ளத்திற்கு உறுதி மொழி கொடுத்தார்கள்.

ஒரு நாள் காலை பத்து மணி இருக்கும் ஒரு பெரிய மிராசுதார் காரில் வந்து எங்கள் வீட்டில் இறங்கினார். எங்கள் தந்தை அவர்களின் திருவடிகளிலே தலை வணங்கிய அவரை அன்போடு வரவேற்று அவரது நலத்தையும் விசாரித்து அருள் புன்னகை புரிந்தார்கள். திடீரென்று மிராசுதார் ஆச்சரியப்பட்டு "சுவாமிகளே! தங்கள் கையிலே இருக்கும் படம் மிக அழகாக இருக்கிறதே. இதை என்ன விலைக்கு வாங்கினீர்கள்" என்று கள்ளம் கபடமில்லாமல் கேட்டார். அதற்கு சிரித்துக் கொண்டே "இதை ஐம்பது ரூபாய்க்கு வாங்கினேன்" என்று கேலியாகச் சொன்னார்கள் எங்கள் தந்தை அவர்கள். "சுவாமிகளே! இதை எழுதியவர் அன்பும், அடக்கமும் உடையவராய் இருக்க வேண்டும்" என்றார் மிராசுதார். "ஐயா! இந்தப் படத்தை நன்றாகக் கவனித்துப் பார்த்தீர்களா?" என்று அவரிடம் கேட்டார்கள். "ஆமாம் சுவாமி. ஒரு குரங்கு கையிலே தராசு வைத்திருக்க இரண்டு பூனைகள் ஏக்கத்தோடு பார்த்துக்கொண்டிருக்கின்றன." என்று சொன்னார் மிராசுதார். "ஐயா! இரண்டு பூனைகள் ஒரு பாலாடைக் கட்டியைத் திருடின. அதை அவைகள் பங்கிடுவதில் சண்டையிட்டுக் கொண்டன. அச் சண்டையைத் தீர்ப்பதற்கு ஒரு குரங்கு வந்து சேர்ந்தது. பூனைகளும் அக்குரங்கை நீதிபதியாக இருக்கக் கேட்டுக் கொண்டன. கையிலே ஒரு தராசு வைத்துக் கொண்டு அக்குரங்கு தந்திரமாக இப்பாலாடைக்கட்டியைச் சமமாக பங்கிட்டுக் கொடுப்பதுபோல் பாவனைசெய்து அக் கட்டியைத் தின்று தீர்த்தது. பாவம் பூனைகள் இரண்டும் ஏமாந்து வெட்கப்பட்டு ஓடின. இதே போல் திருட்டுத் தனமாக சம்பாதித்தவர்களுடைய திரண்ட சொத்து குரங்கு போன்ற கொடியவர்களால் நிச்சயமாகச் சூறையாடப்படும். அறத்தால் வருகின்ற செல்வமே என்றும் வாழ்க்கையில் நிலைத்து நிற்கும். நிம்மதியைத் தரும் இது பஞ்ச தந்திரக் கதையை விளக்கும் படமாகும் என்றார்கள்.

"சுவாமிகளே! எனக்கு நல்ல புத்தி கற்பித்தீர்கள். ஏழை, எளியவர்களைத் துன்புறுத்தி அநியாயமாக வட்டி வாங்கி பணம் சம்பாதித்து விட்டேன். இலட்சக்கணக்கான பணமிருந்தும் என் மனதிலே அமைதியில்லை. சுவாமிகளே! என் குடும்பம் நிலை பெற்று வாழ வழி கூறுங்கள். செய்த தவறை நான் உணர்ந்து

விட்டேன்,'' என்று சொல்லி சுவாமிகளின் திருவடிகளில் விழுந்து வணங்கினுர்.

அதற்கு அவர்கள் ''ஐயா! உம்முடைய பாவங்கள் இன்ருேடு தொலைய ஆரம்பிக் கின்றன. நாள்தோறும் நாலு சாதுக்களுக்கும், ஏழைகளுக்கும் உணவு கொடுத்து உபசரியுங் கள். அதோடு ஆண்டுக்கொரு முறை ஐநூறு ஏழைகளுக்கும், சாதுக்களுக்கும் உணவும், உடைகளும் கொடுத்து ஆதரியுங்கள். அவர் களுடைய அன்பைப் பெறுங்கள். குடி தண் ணீர்க் கிணறு ஒன்றை வெட்டுங்கள். உங்கள் கிராமம் முன்னேற ஒரு பள்ளிக்கூடம் கட்டுங் கள். இத்தகைய சமூகத்திற்கு வேண்டிய காரியங்களைச் செய்தால் உம் வாழ்க்கை நல் வழியில் திரும்பும். பிள்ளைக் குட்டிகளும் சுகம் பெறுவார்கள்,'' என்று திருவாய் மலர்ந்தருளி னுர்கள்.

இதைக் கேட்ட அவர் கண்ணீர் மல்கி, ''சுவாமிகளே! தாங்கள் சொல்கிறபடி செய் யச் சித்தமாயுள்ளேன். நூறு ரூபாய் தருகி றேன் இப்படத்தை எனக்குக் கொடுத்து விடுங்கள். இது என்னுடைய வாழ்க்கையை மறுமலர்ச்சியாக்கிய படம். இப்படத்தை வரைந்தவர் யாரென்று சொல்லுங்கள், தெரிந்துகொள்ள வேண்டும்,'' என்றுசொல்லி நூறு ரூபாய் நோட்டை எடுத்து எங்கள் தந்தை அவர்களிடம் கொடுக்கமுயன்ருர். ஆனுல் அதை வாங்க மறுத்து சிரித்துக் கொண்டே, ''பண்ணையாரே இந்தப் படம் ஐம்பது ரூபாய் என்று விளையாட்டுக்குச் சொன்னேன். உம்முடைய வாழ்க்கையை வேறு விதமாகத் திருப்பிய இப்படத்தை வரைந்தது என் மகள் லட்சுமிதான்,'' என்று சொல்லி என்னை அழைத்தார்கள்.

''சுவாமிகளே! இந்தக் கருத்துள்ள படத்தை வரைந்தது நம்ம லட்சுமியா? ஒரு பக்கம் குழந்தைகளுக்கு சங்கீத சிட்சை, மற்ருெரு பக்கம் ஓவியம், தையல் கலை. தங்கள் குடும்பத்தையே கலைக்கூடமாக்கி விட்டீர் களே!'' என்று ஆச்சரியப்பட்டார்.

அவ்வுரையாடல்களைக் கேட்டுக் கொண்டி ருந்த நான் எங்களுடைய தந்தையார் அழைக் கும் குரலைக் கேட்டவுடன் ஓடோடிச் சென்று அவர்கள் அருகில் நின்றேன். அங்கு அமர்ந் திருந்த பண்ணையார் என்னைப் பார்த்து, ''இலட்சுமி, நீ மிகவும் கெட்டிக்காரப் பெண். உள்ளத்திலே அடக்கமும், அன்பும் உள்ள நீ குடும்பத்தின் பொன் விளக்காய்த் திகழ்வாய். நீ போட்ட படத்தால் என் வாழ்க்கைச் சுழலை மாற்றிவிட்டாய்'', எனப் பாராட்டினுர். நான் அவரைப் பணிவுடன் வணங்கினேன்.

சில ஆண்டுகள் கழிந்தபின் என்னுடைய மாமனுர் என்னைப் பெண் பார்ப்பதற்காக வந்திருந்தார்கள். அப்பொழுது எங்களுடைய தந்தையார் அவர்கள் நான் வரைந்த பல அழகிய படங்களையும், பூத் தையல் போட்ட விநோதமான துணிகளையும் என் மாமனுரிடம் காண்பித்தார்கள். அவைகளைப் பார்த்த என் மாமனுர் அவர்கள் அளவில்லா ஆனந்தத் தோடும், ஆச்சரியத்தோடும், ''ஆகா இந்தப் படங்களும், பூத்தையல் வேலைகளும் மிக அழகாக இருக்கின்றன. எனக்கு வாய்க்க இருக்கும் மருமகள் அறிவும், ஆற்றலும் உள்ள சரியான கலைமணிதான்'', என்று என்னைப் பார்த்து பெருமைப் பட்டார்கள். இதற்கெல்லாம் காரணம் எங்கள் தந்தை அவர்கள் ஊட்டி வளர்த்த அன்பும் அறிவு மேயாம்.

1949-ம் வருடம் எனக்கு திருச்சி உறை யூரில் சிறப்பாகத் திருமணம் நடந்தது. திருமணம் முடிந்தவுடன் எங்கள் தந்தைய வர்கள் என்னை அழைத்து, ''லட்சுமி குடும் பத்தை நன்ருய் நடத்தி நற்பேறு பெறும் கடமையில் இருக்கிருய். காலத்தைக் களிப் பாக்கிக் கணவனேடு கண்குளிர வாழ வேண்டும். இல்லறத்திலே பண்பும் பயனும்

வளரவேண்டும். அதைப் பெறுவதற்கு கணவனோடு ஒன்று சேர்ந்து ஒத்துழைக்கவேண்டும். மனையறமும், மாண்பும் குடும்பப் பெண்ணுக்கு அமைதல்வேண்டும். நீயோ பெரிய குடும்பத்தில் வாழ்க்கைப் பட்டிருக்கிறாய். நான் வளர்த்த அருமை பெருமைகள் யாவும் அக் குடும்பத்தார் உணரவேண்டும். அதற்குத் தக்கவாறு நீ நடந்துகொள்ளவேண்டும். படித்தபெண் நீ. அதிகம் நான் உனக்குச் சொல்லவேண்டியதில்லை. கற்ற அறிவாலும், கலையாலும் குடும்பத்தை அழகுபடுத்து," என்று கூறி ஊர் சென்றார்கள்.

ஒரு சமயம் எங்கள் தந்தை அவர்கள் உறையூருக்கு வந்திருந்தார்கள். அப்போது என்னுடைய கணவர் நான் செய்த சிறு தவறு ஒன்றை அவர்களிடம் கூறிவிட்டார்கள். இதைக் கேட்ட அவர்கள் பெரிதும் சினந்து என்னைக் கடுமையாகக் கண்டித்தார்கள், 'லட்சுமி, இம் மாதிரிச் சிறு தவறுகளை இனி வாழ்க்கையிலே வராது பார்த்துக்கொள்ள வேண்டும். கணவரிடம் மிகப் பணிவோடு நடந்து அவர் அன்பைப் பெறவேண்டும். கணவர் ஒரு கழுதையின் தலையைத் தொட்டால் நீயும் தலையைத் தொடவேண்டும். வாலைத் தொட்டால் நீயும் அவ்வாறு செய்தல் வேண்டும். நேர் மாறாகச் செய்தல் கூடாது. அவைகள் நமக்குச் சங்கடமாகத் தெரிந்தாலும் வீட்டுக்காரர் விருப்பப்படியே நடக்க வேண்டும். அப்போதுதான் குடும்பத்திலே எவ்விதச் சச்சரவும் ஏற்படாது," என்று எனக்கு அறிவுரைகள் கூறினார்கள். வாழ்க்கையிலே தமது குழந்தைகள் சிறு தவறுகள் செய்தாலும் அவர்களுடைய மனம் பொறுக்காது. காரணம், அச் சிறு தவறே பெருந் தவறு செய்யும் வழியில் தன்னை வளர்த்து விடும்; அதனால் தீமைகள் பெருகும்; ஆகவே முளையிலேயே அவைகளைக் கிள்ளியெறிய வேண்டும் என்பது அவர்களுடைய கருத்து. "நான் செல்லமாகவும், அன்பாகவும் உங்களைப் பிறந்த வீட்டில் வளர்த்தாலும், வாழ்க்கையில் நீங்கள் புகுந்த வீட்டில் அவைகளை மறந்து அக் குடும்பத்திற்கு ஏற்றவாறு நடக்க வேண்டும்," என்று அடிக்கடி கூறுவார்கள்.

அன்றாடம் எங்கள் வாழ்க்கைக்குவேண்டிய அரிய கருத்துக்களைச் சிறு சிறு கதைகளாகக் கோர்த்துக் கூறுவார்கள். அவைகள் அத்தனையும் எங்கள் வாழ்க்கைக்கு வழி காட்டியாய் விளங்குகின்றன. ஒரு நாள் என்னை அழைத்து, "லட்சுமி, நீ யோகக்காரி. உனக்குச் சகல செல்வமும் நிறைந்திருக்கும். குழந்தைக்கும் குறைவில்லை", என்று ஆசியாய் திருவாய் மொழிந்தார்கள். அதனைக் கேட்டு என் இதயம் இன்புற்றது. அவர்களின் திருவாக்குப்படியே என் குடும்பத்தில் செம்மையாய் நடந்து என் கணவர், மாமியார், மற்றுள்ள உறவினர்களால் 'நல்லவள்' எனப் போற்றப் பெற்றேன். இதற்கெல்லாம் அடிப்படைக் காரணம், எங்கள் தந்தை அவர்களின் நல்லறிவுரைகளேயாகும்.

ஐந்தாண்டுகள் ஓடின. என் வாழ்க்கையில் நிம்மதியில்லை. எனக்கு குழந்தை பிறக்காதது பெருங் குறையாகவே இருந்தது. "உனக்குக் குழந்தைக்குக் குறைவில்லை," என்று சொன்ன எங்கள் தந்தை அவர்களின் திருவாக்கிலே நம்பிக்கை தளர்ந்தது. அதனால் என் மனம் வாடியது. பிள்ளையில்லாக் குறை தீர இராமேஸ்வரம் முதலிய புண்ணிய தலங்களுக்கு என் கணவரோடு சென்று வழிபட்டு வந்தேன். அவ்வாறு கோயில், குளம் சென்றும் எங்கள் வாழ்க்கையிலே புதிய மாற்றம் ஒன்றும் ஏற்படவில்லை.

எனது நிம்மதியற்ற நிலையைக் கண்டறிந்த எங்கள் தந்தை அவர்கள், 'லட்சுமி, உனக்குத் திருமணமாகிப் பன்னிரண்டு ஆண்டுகள் கழித்துத்தான் குழந்தை பிறக்கும், மனதிலே கலக்கம் வேண்டாம். அண்டையிலுள்ளோர் பழித்துப் பேசுவார்கள் என்று அஞ்சாதே, விநாய

கரை வழிபட்டு வா. விரைவில் யானை கட்டிப் போரடிக்கும் ஓர் ஆண் மகவைப் பெறுவாய்,'' என்று கடிதம் எழுதியிருந்தார்கள்.

அதன்படியே நான் இருந்தேன். திருமண மாகிப் பன்னிரண்டாம் ஆண்டு கழித்த வுடனே எனது உடலிலே ஒரு மாறுதல் ஏற் பட்டது. இதைக் கண்ட என் மாமியார் பயந்து ஏதோ வியாதி போலும் என்று எண் ணினார்கள். நானே ஒரு குழந்தைக்குத் தாயா கப்போகிறேம் என்று இன்புற்றேன். எங்கள் தந்தை அவர்களின் திருவாக்குப் பலிக்கப் போகிற தென்று கனவு கண்டேன். ஆனால் என் மாமியாரும், மற்றோரும் வேறுவிதமாய்ச் சொல்லக் கேட்டவுடன் பயந்து நடுங்கினேன். கருத்தரித்த பெண்ணுக்கு ஏற்படக் கூடிய மசக்கை, வாந்தி முதலிய தோற்றங்கள் எது வும் எனக்கு ஏற்படவில்லை. எனவே கரும்பாய் இனித்த இதயம் வேம்பாய்க் கசந்தது. இரு தலை மணியன் போல் என் உள்ளம் அங்கும் இங்கும் அலைந்தது. உடனே எங்கள் தந்தை அவர்களுக்கு இது குறித்து விளக்கமாய்க் கடிதம் எழுதினேன். அதில், "என் மனப் புயலைப்போக்க எனக்குத் தேமதுரக் குழந்தை தந்து என் வாழ்க்கையில் தென்றல் வீசச் செய்யுங்கள்,'' என்று வேண்டினேன்.

எங்கள் தந்தை அவர்கள் என் கடிதம் கண்டு பௌர்ணமி பூசை முடித்து எனக்குப் பதில் எழுதினார்கள். அதில், "லட்சுமி, உலகம் பலவிதம், அதன் வழியிலே மனதைச்செலுத்தி வீணே கவலைப்படாதே, ஏற்கனவே கூறியபடி உனக்கு மகன் பிறக்கப் போகிறான். உள் ளத்தை ஓர் மனப்படுத்து. அவ்வாறு குழந்தை பிறந்ததும் நீ நம் பொதிச்சுவாமி கோயிலுக்கு நாற்பது நாள் கழித்து ஒரு விநாயகர் சிலை செய்துவை. சீராகப்பெருகும் உங்கள் வாழ்வு,'' என அருளியிருந்தார்கள்.

அந்த அருட் கடிதங் கண்டவுடன் எனக்கு குழந்தை பிறக்கும் என்ற உறுதி ஏற்பட்டது. அதுவும் ஆண்பிள்ளை என்றறிந்ததும் மட்டற்ற மகிழ்ச்சி உண்டானது. நம்பிக்கையில்லா என் மாமியார், மற்றோர் விருப்பப்படியே என்னை ஒரு பெண் டாக்டரிடம் காட்டினார்கள். சோதனை செய்துவிட்டு அந்த டாக்டர், 'அம்மா, உங்களுக்கு வியாதி ஒன்றுமில்லை, ஐந்துமாதக் கர்ப்பமாய் இருக்கிறீர்கள் நீங்கள். உடம்பைக் கவனமாய்ப் பார்த்துக் கொள்ளுங் கள்,'' என்றார். அது கேட்டு என் மாமியா ருக்கு சிறிது நம்பிக்கை. எனினும் அருகிலுள்ள சிலர், "காயா, பழமா வென்று பார்ப்போமே! அவர்கள் தகப்பனார் ஆண் குழந்தை பிறக்கு மென வாக்களித்தார்களாமே! அதையுந்தான் பார்ப்போமே!'' என்று ஏளனம் செய்தார்கள். ஆனால் நான் அதை ஒன்றும் பொருட்படுத்த வில்லை.

என் அண்ணா திரு பரமகுரு அவர்களிடம், "லட்சுமிக்கு இப்பிரசவம் கடினமாயிருக்கும். எனவே மதுரை பெரிய ஆஸ்பத்திரியில் வைத் துத்தான் பார்க்கவேண்டும்,'' எனக் கூறினார் கள் எங்கள் தந்தை அவர்கள். அதன்படியே நான் மதுரை பெரிய ஆஸ்பத்திரியில் சேர்க்கப் பட்டேன். மிகவும் சிரமப்பட்டு பிரசவித்துக் குழந்தையும், நானும் பரிபூரண சுகமடைந் தோம். என்னைக் குறை கூறியவர்களும், ஏளனம்செய்தவர்களும் என் செல்வனை வியப் போடு பார்த்துப் புகழ்ந்தனர். அவர்கள் என் னிடம், "லட்சுமி, உன் தந்தை அவர்களின் சொல் வேதமாகும். அவர்கள் உண்மையி லேயே ஒரு தெய்வப் பிறவிதான்,'' எனக் கூறிப் போற்றினார்கள். குலக்கொடி தழைக்கக் குழந்தைச் செல்வம் அருளிய அவர்கள் திரு வருளை நினைத்துக் கோடிக் கும்பிடு போட் டேன். பேதலித்த என் வாழ்க்கைக்கு அவர் கள் பிள்ளைக்கலி தீர்த்த பெருமானே யாகும்.

அவர்கள் என் செல்வனுக்குப் பொன்னுரத் தினம் எனத் தம் பெயரையும், என் மாமனார் பெயரையும் சேர்த்துப் பெயர் வைத்தார்கள். அப்போது அவர்கள் கடலூரில் இருந்தார்கள். குழந்தை பிறந்த பதினெட்டாம் நாள் என்

மகனுக்கு வேண்டிய நகைகளை வாங்கி என் அண்ணா திரு பரமகுரு அவர்களிடம் கொடுத்து, "எல்லோரும் போய் லட்சுமியின் செல்வ மகனைப் பார்த்து வாருங்கள்," என்று கூறி அனுப்பினார்கள். அதன்படியே என் அண்ணா அவர்களும், அண்ணியார் திருமதி கமலா அவர்களும், மற்றோரும் வந்து என் செல்வனைப் பார்த்து நகைகள் அணிவித்து அகமகிழ்ந்தார்கள். எல்லோரது வருகையும் எனக்கு இன்பமூட்டியது.

ஒரு மாதங் கழிந்தபின் என் செல்வனை எங்கள் தந்தை அவர்களின் திருவடிகளிலே போட்டு ஆசீர்வாதம் பெறவேண்டும் என ஆசையோடு எண்ணிக் கொண்டிருந்தேன், ஆனால் என் ஆசை நிராசையாகி விட்டது. எனக்கு பிள்ளையில்லாக் குறை தீர்த்த அவர்கள் பிள்ளை பிறந்த இருபத்திமூன்றும் நாளே சமாதியாகி மக்கள் வணங்கும் மங்காத்தெய்வமானார்கள். எனக்கு வேண்டிய செல்வங்கள் யாவும் கொடுத்து நல்வாழ்வு அளிக்கும் அந்தப் பிள்ளைக்கலி தீர்த்த பெருமானை நான் என்றென்றும் என் இதயக் கோயிலில்வைத்து வழிபட்டு வருகிறேன்.

---

# என் தெய்வீகத் தந்தை

திரு P. குமரப்பன், B. A., வலையபட்டி

தவத்திரு பொன்னையா சுவாமி அவர்கள் எனக்கு உற்ற நண்பர் மட்டுமல்ல, தந்தையுமாவார்கள். அத்தவத் திருவுடையார் தெய்வ அருள் நிரம்பப் பெற்றிருந்தார்கள். தந்தையாகவும், தெய்வமாகவும் எனக்குக் காட்சி அளித்தார்கள். அவர்கள் அருள் பெற்றேன். அவர்கள் எனக்கு உற்ற நண்பராகவும், ஆசிரியராகவும், குருவாகவும், தந்தையாகவும், தெய்வமாகவும் விளங்கினார்கள். அவர்கள் உறவு எனக்குக் கிடைத்தது என் பெரும் பாக்கியமே. இப் பேற்றினை நினைக்குந்தோறும் நான் பேரானந்தமும் பெருமிதமும் அடைகின்றேன்.

அவர்கள் பண்பு மிக்கவர்கள். அவர்களிடம் நான் அறிந்து கொண்டது பல்கலைக் கழகத்தில் அறிந்து கொண்டதினும் அதிகமாகும். அன்பும் பண்பும் செல்வத்துள் எல்லாம் தலையாயது என்பதை வாழ்ந்து காட்டினார்கள். அன்போடு அறிவு புகட்டினார்கள். கடிந்த சொல் கண்டறியாதவர்கள். எப்போதும் புன்முறுவலோடு காட்சி அளிப்பவர்கள். அவர்களைக் கண்ட மாத்திரத்திலே கவலைகள், கோபம், வேறு ஆசைகள் யாவும் பறந்தோடிவிடும். இதை நான் அனுபவத்தில் கண்டிருக்கிறேன்.

பேச்சு வன்மை படைத்தவர்கள் தன் பேச்சால் நாம் இருக்கிற இடம், ஊர் யாவையும் மறக்கச்செய்துவிடுவார்கள். வேறு உலகிற்கே நம்மை அழைத்துக் கொண்டு போய் விடுவார்கள். நீண்ட நேரத்திற்குப் பின்தான் சுய உணர்வு பெறுவோம். அத்தகைய பெரும் ஆற்றல் படைத்தவர்கள். ஒருமுறை சென்னையிலிருந்து திரும்பிவரும்போது ரயிலில் கூட வந்தவர்களில் அனேகர் அவர்கள் பேச்சிலே ஈடுபட்டு தங்களையும் மறந்து தாங்கள் போக வேண்டிய ஊர் நிலையங்களில் இறங்க மறந்து பல நிலையங்கள் தாண்டி அதன்பின் உணர்வு பெற்றுத் திரும்பலானார்கள். அப்படி மறந்ததற்காக அவர்கள் அனைவரும் இப்படி ஒரு வாய்ப்புக் கிடைத்ததே என்று அகமகிழ்ந்து சென்றார்கள். வரும் வழியில் மதுரை சந்திப்பில் குறைந்தது ஒரு மணி நேரம் வண்டி நின்றிருக்கலாம். விருதுநகர் வரும் சமயம் "இன்னும் மதுரையே வரவில்லை, சுவாமி"

என்றேன். சொன்ன மறு நிமிடம் வண்டி நின்றது. எட்டிப் பார்த்தேன். விருதுநகர் நிலையமாக இருந்தது. எப்படி மதுரை நிலையத்தை நான் காணவில்லை என்று நான் ஆச்சரியமுற்றேன். இதில் ஆச்சரியப்படுவதற்கு என்ன இருக்கிறது. சென்னையிலிருந்து திருநெல்வேலி வரும் வரை சாப்பிடவே இல்லையே. சாப்பிட விருப்பமில்லாமல் இல்லை. பசி இல்லாமல் இல்லை. சாப்பிட வேண்டுமென்பதையே மறந்து விட்டோம் அவ்வளவு கவர்ச்சி அவர்களுடைய பேச்சில், பொருள் செறிந்து விளங்கும், ஞானம் மிளிரும்.

சுவாமிகள் ஒரு தீர்க்க தரிசி. அவர்களைத் திரிகால ஞானி என்று சொல்வது மிகப் பொருத்தமாகும். என் வாழ்வில் நான் கண்டு அனுபவித்த பல நிகழ்ச்சிகளிலே ஒரு சில மட்டும் இங்கு குறிப்பிட விரும்புகிறேன். அனைத்தும் எழுதுவதென்றால் இவ்வேட்டில் இடம் இருக்காது.

என் மகன் பழனியப்பனுக்கு இப்போது வயது 15. அவன் பிறப்பதற்கு சில மாதங்களுக்கு முன் அப்போது என் மனைவி ஏழு மாதக் கர்ப்பிணி. திடீரென நோயுற்றாள். இரண்டு மூன்று திங்களிலே கவலைக்கிடமான நிலையை அடைந்தாள். எல்லோரும் பயந்தே போனோம். நான் அது சமயம் தூத்துக்குடியில் இருந்தேன். அவள் தந்தையாரிடமிருந்து நான் உடனே ஊர் திரும்ப வேண்டுமென்றும், உடனே வந்தால்தான் என் மனைவியைக் காணும் பேறுவது கிடைக்கும் என்றும், நம்பிக்கையே இல்லாது கடிதம் வந்தது. கடிதம் கிடைத்ததும் 'கோ' வென்று கதற வேண்டும் போலிருந்தது. மனம் ஒன்றையும் நாடவில்லை. மிகச் சஞ்சலமடைந்தது. வந்த கடிதத்தை எடுத்துக்கொண்டு என்ன செய்வதென்று புரியாது என்னையுமறியாமல் பாளையங்கோட்டைக்குச் சென்றேன் சுவாமிகளிடம். நான் கவலையோடு வந்திருக்கிறேன் என்பதை பார்த்ததும் கண்டு கொண்டார்கள். ஆனால் அது குறித்து ஒன்றும் கேட்கவில்லை. வேறு விஷயங்கள் பேசி விட்டு 'சாப்பிடுவோம்' என்றார்கள். சாப்பிட்டோம். அறையில் இருவருமாகப் படுத்தோம். சுவாமிகள் தூங்காமல் தூங்கிவிட்டார்கள். எனக்கோ தூக்கம் கொள்ளவில்லை. 'துக்கமான செய்தியை ஏன் சொல்லுவோம்,' என்று சுவாமிகள் ஒன்றும் சொல்லவில்லை போலும் என்ற நினைப்பு எனக்கு உண்டாகி விட்டது. அதனால் துக்கம் அதிகரித்தது. இரவு மூன்று மணி இருக்கும். சுவாமிகள் எழுந்து உட்கார்ந்தார்கள். நானும் எழுந்து அவர்கள் முன் உட்கார்ந்து கொண்டேன். "என்னய்யா தூங்க வில்லையா?" என்றார்கள். "தூக்கம் வரவில்லையே, சுவாமி," என்றேன். "ஐயா, அழகான ஆண் மகவு பிறந்து, குழந்தை தாயிடம் பால் குடித்துக் கொண்டிருப்பதைப் பார்க்கிறேன். ஆகையால் ஒன்றும் பயப்பட வேண்டாம். தங்கள் மனைவிக்கு குணமடைவதுடன், ஆண் மகவும் பிறக்கப் போகிறது" என்று கூறினார்கள். மெய் சிலிர்த்தது. ஆனந்தக் கண்ணீர் வடித்தேன். வீடு சென்றேன். சுவாமிகளின் அருள் வாக்கால் திடங் கொண்டேன். மனைவிக்கும் மற்றவர்க்கும் தைரியம் சொன்னேன். ஒரு வாரத்தில் எல்லோரும் ஆச்சரியப்படும்படியாக என் மனைவி குணமடைந்தாள். மூன்று மாதங்கள் சென்றன. அழகான ஆண் மகவும் பிறந்தது. சுவாமி அவர்கள் ஆசியால் இன்றும் திடகாத்திரத்துடன் ஒன்பதாம் வகுப்பில் படித்துக் கொண்டிருக்கிறான் என் மகன் பழனியப்பன். சுவாமி அவர்களின் தீர்க்கதரிசனத்தை என்னென்றுரைப்பேன்?

வீட்டில் பிரசவ நேரத்தில் மற்றொரு நிகழ்ச்சி. குழந்தை பிறந்த வீடு. பிறந்து மூன்று நான்கு நாட்கள் இருக்கும். என் மனைவி ஆசையால், அவள் பெற்றோருக்கும் தெரியாமல் குழந்தைகளின் உதவியால் நெய்ப் பலகாரங்களை கொண்டு வரும்படிச் செய்து சாப்பிட்டு விட்டாள். உடனே மப்பு

உண்டாகி ஆகாரம் செல்லாமல் தலைவலி ஏற்பட்டு ஓவென்று சதா அலற ஆரம்பித்து விட்டாள். இரண்டு மூன்று நாள் இரவு தூக்கமே இல்லை. குழந்தைக்கு அதனுல் பால் இல்லாமல் போய்விட்டது. குழந்தை வேறு சதா அழுதுகொண்டே இருந்தது. டாக்டர்கள் வந்தார்கள். மருந்து கொடுத்தார்கள். ஊசிபோட்டார்கள். பார்லி ஆகாரந்தான் கொடுக்க வேண்டும் என்ருர்கள். கொடுத்தோம். ஒன்றும் குணமாகவில்லை. மூன்ருவது நாள் டாக்டருக்கே நம்பிக்கை போய்விட்டது. உடனே மதுரைக்கோ திருப்பத்தூருக்கோ பெரிய டாக்டரிடம் கொண்டு போக வேண்டியதுதான் என்றும் தாமதமானுல் உயிருக்கு ஆபத்து என்றும் சொன்ஞர்கள். டாக்டர் சொன்னதும் பயம் எங்களைக் கவ்விக் கொண்டது. இந்த நிலையில் நான் எப்போது துயரம் அடைந்தாலும் அதை என் தெய்வீகத் தந்தை சுவாமி அவர்கள் அறிந்து எனக்கு உதவி செய்து அருள் புரிவார்கள் என்பதற்கு எடுத்துக்காட்டாக என் மனைவி நோயுற்ற மூன்ரும் நாள் ரிஜிஸ்தர் தபாலில் கடிதம் ஒன்றும், மூன்று வேளை மருந்தும் சுவாமிகள் அனுப்பியிருந்தார்கள். கடிதத்தைக் கண்டதும் ஆனந்தக் கண்ணீர் வடித்தேன். அவர்கள் தீர்க்க தரிசனத்தை எண்ணி எண்ணி வியந்து மகிழ்ந்தேன். அவர்கள் நட்பு எனக்குக் கிடைத்த வாய்ப்பையும் பேற்றினையும் நினைந்து பேரானந்தமும் பெருமிதமும் அடைந்தேன். அவர்கள் கடிதத்தில் எழுதியிருந்ததை அறிந்தால் யாருமே ஆச்சரியப்படாமல் இருக்கமுடியாது. "இத்துடன் அனுப்பியிருக்கும் மருந்தை தேனில் மூன்று நாளைக்கு மூன்று வேளையில் கொடுங்கள். ஒன்றும் பயப்படவேண்டாம். தங்கள் மனைவி பூரண குணம் பெறும்" என்று எழுதியிருந்தார்கள். மூன்றுவேளை மருந்துதான் கொடுத்தேன். மதுரைக்கோ திருப்பத்தூருக்கோ எடுத்துச் செல்லவில்லை. டாக்டர்கள் யாவரும் அதிசயிக்கும்படியாக மூன்றே நாளில் குணம் பெற்ருள் என் மனைவி. குழந்தைக்கும் நிறைய பால் கிடைத்தது. எல்லோரும் பேருவகை எய்தினேம். இதே போன்று என் வாழ்க்கையில் எத்தனையோ நிகழ்ச்சிகள்.

மற்ருென்று என் இரண்டாவது மகன் பிறப்பதற்கு நான்கு ஐந்து மாதங்களுக்கு முன், ஏற்கனவே பெண் குழந்தைகள் நான்கு உடையவனுதலால் ஐந்தாவதும் பெண் குழந்தையானுல் என் செய்வோமென மனச் சஞ்சலமடைந்து சுவாமிகளிடம் தெரிவித்தேன். அவர்கள் உடனே, "யோகக்காரன் வரப்போகிருன், அய்யா' பெண் குழந்தை என்று பயப்படுகிறீர்களே! பிறக்கப் போகிறது பையன். அதோடு அவன் பெரிய யோகக்காரன்" என்று சொன்ஞர்கள். பேரானந்தம் அடைந்தேன். சுவாமி அவர்கள் கூறியதுபோல பையன் பிறந்தான். பிறந்ததுமுதல் யோகமாகவும் இருக்கிறது என்பதை பெருமிதத்துடன் இங்கு கூற விரும்புகிறேன். அவன் பிறந்த நாள் முதல் தொழில் முறைகள் யாவும் முன்பு இருந்ததைவிட விசேஷமாக நடைபெற்று வருகின்றன. இதை எண்ணும்போது சுவாமி அவர்கள் திரு உருவம் தினசரி என் மனக் கண்முன் நிற்பதைக்கண்டு களிக்கின்றேன்.

இந் நிகழ்ச்சி சென்ற ஆண்டில் நிகழ்ந்தது. என் மூத்த மகள் சாரதா 'கலைச் செல்வி' பட்டம் பெற்றிருக்கிருள். பண்பு நிறைந்த பெண். கபடமற்ற வெள்ளை உள்ளம் படைத்தவள். அவளுக்கு நல்ல படித்த பையனுகவும், அழகான பையனுகவும் கணவன் அமைய வேண்டுமென்பது எங்கள் விருப்பம். செல்வம் மிகுந்த இடங்களில் பெண் கேட்டார்கள். எனக்கு அங்கு கொடுக்க விருப்பமில்லை, மறுத்துவிட்டேன் படித்த பையனுக உள்ள இடம் இரண்டு பார்த்தோம். இரண்டில் எங்கு செய்வது நலம், எது முடியும் என்பது தெரியாமல் பலவாருக சிந்தித்துக்கொண்டே இருந்தோம். ஒன்றும் முடிவுக்கு வரமுடியவில்லை. இரண்டு இடமுமே பிடித்திருந்தது.

முடிவுபெற ஓடினேன் சுவாமிகளிடம். "திரு மகள் சாரதா திருமண விஷயமாய் வந்தேன்," என்றேன். அவர்கள் பின்வருமாறு சொன்னார் கள். அது மனிதவாக்கா, தெய்வவாக்கா பாருங்கள். "அண்ணாமலை யூனிவர்ஸிடியில் படிக்கும் தெக்கூர் பையனுக்கே பேசி முடியுங்கள். அதுதான் முடியும். இரண்டு மூன்று மாதத்திலே திருமணம் சிறப்புற நடக்கும். அவர்கள் வாழ்க்கை நலமாய் நடை பெறும். சீருடனும் சிறப்புடனும் வாழ்வார்கள். வாழை பூத்துக் காய்த்துச் செழித்து வளர்ந்து நிற்கும் காட்சியைக் கண்டேன். அதேபோல் இத் தம்பதிகளும் எல்லாச் செல்வமும் நிறையப் பெற்று இனிது வாழ்வார்கள்" என்று அருளி னார்கள். முடிவு செய்வதறியாமல் திகைத்த எங்களுக்கு நல்ல வழி ஒன்றினைக் காட்டினார் கள். அவர்கள் காட்டிய வழி சென்றோம். அவர்கள் குறிப்பிட்ட இரண்டு மாதத்திலே திருமணம் இனிது நிறைவேறியது. திருமணம் நடந்தபோது சுவாமி அவர்கள் சிறிது நலம் குன்றி இருந்தார்கள். அதனால் அவர்கள் நேரில்வர இயலவில்லை. ஆசி அனுப்பியிருந் தார்கள். திருமணத்திற்குப் பின் மணமக்களு டன் போய் சுவாமி அவர்களை கடலூரில் தரிசித்து ஆசிபெற்று வந்தோம். அது எங்கள் பூர்வ புண்ணியமே!

சுவாமி அவர்கள் பூத உடல் மறைந்தது. ஆனால் அவர்களது அருளுடல் அன்றுபோல் இன்றும் என்றும் எங்களுடனே இருந்து எங்களுக்கு வேண்டிய ஆறுதல்களை அளிக் கிறது என்பதை மிக்க மகிழ்வுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

## மனிதத் தெய்வம்

**கலைச்செல்வி. திருமதி சாரதா**

சாந்த குணமும் தயாள சிந்தையும்
காந்த சக்திபோல் கவரும் பார்வையும்
பெற்ற உத்தமர் பேரன்பு மிக்கவர்
நல்லவர் களையே நண்பராய்க் கொண்டவர்
நல்லவ ரல்லா நயவஞ் சகரையும்
அறிவின் திறமையால் ஆன்றவ ராக்குவர்
பொன்னையா சுவாமியெனும் பொற்பெயர் பூண்டவர்
நாடு போற்றும் நன்மக்கள் ஈன்ற
ஈடிணை இல்லா எழில்மிகு மன்னர்
அருங்குணக் குன்றும் அன்பின் உருவாம்
மதிப்புயர் தாயை வாழ்க்கைத் துணைவியாய்
அடைந்த அன்பர் அருட்பெருஞ் ஜோதி
அன்பின் சிகரம் அறிவின் பேரொளி
தன்னலம் கருதாத் தனிப்பெரும் ஒண்சுடர்
வாழ்க்கை என்னும் மகிழ்வுக் கடலிலே
அறமெனும் தோணியை அன்பெனும் துடுப்பால்
செலுத்திய சீலர் சீர்மிகு வள்ளல்
இப்புவி மீது இவரொரு தெய்வம்
மக்கள் போற்றும் மனிதத் தெய்வம்
இவருட லில்லை எனினும் இவர்புகழ்
மறையா தென்றும் வளமுடன்வளர்கவே.

# வாழ்விற்கு வழிகாட்டும் வான்பொருள்

திரு வெங்கடசுப்பிரமணியம், M. A., B. E., M. Sc. (Minn), சிவகாசி

எனக்கு 6—7 வயதிலிருந்து கனம் பொன்னையா சுவாமியவர்களுடன் பேசிப் பழக வாய்ப்புக்கிடைத்தது. அப்பொழுது அவர்கள் அடிக்கடி சிவகாசி வருவார்கள். எங்கள் வீட்டில் தங்குவார்கள். அவ்வமயம் அவர்களைத் தரிசிக்க வரும் அவ்வூர் பிரமுகர்கள், பழம், பால், கற்கண்டு முதலியன கொண்டுவருவார்கள். அப்பெரியவர்களின் குழுவில் நான் ஒருவனே சிறுபாலகன். ஆகவே நான் வேண்டுவனவற்றை இஷ்டம்போல் சாப்பிடுவதில் சுவாமியவர்கள் எனக்கு அதிகமான சலுகை காட்டுவார்கள். சில சமயங்களில் நான் அவர்களுக்கு என் பாடங்களைப் படித்துக் காட்டுவேன். "குதிரைக்குச் சந்தோஷம் வந்தால் கனைக்கும்" என்று என் இரண்டாவது பாட புத்தகத்திலிருந்து அவர்களுக்கு வாசித்துக் காண்பித்தது இன்னும் என் நினைவிலிருக்கிறது.

பின்னால் சுவாமியவர்கள் சிவகாசியில் வந்து அதிக நாட்கள் தங்குவதில்லை. ஆதலால் நான் கல்லூரி சேரும்வரை அவர்களின் தொடர்பு அநேகமாக இல்லையென்றே சொல்லலாம். மதுரையில் அமெரிக்கன் கல்லூரியில் சேருவதற்கு முன்னால் பாளையங்கோட்டை புதுப் பேட்டைத் தெரு வீட்டில் சந்தித்தபொழுது 'கணக்கு எடுத்துப் படி' யென்று சொன்னார்கள். மேலும் எனக்கு முதல் முறையாக அவர்கள் கைப்பட ஒரு பாட்டிலில் மருந்தும் கொடுத்தார்கள். நான் உயர்நிலைப் பள்ளியில் சரித்திரத்தைச் சிறப்புப் பாடமாக எடுத்திருந்தேன்.

1938 மார்ச் மாதத்தில் நான் டைபாயிட் ஜுரத்தில் மதுரையில் அமெரிக்க மிஷன் ஆஸ்பத்திரியில் 20 நாட்கள் அவதிப்பட்டேன். என்னுடன் என் தந்தையும் தன் தாய் மாமனுடன் வேறு உதவியின்றி மிகவும் கஷ்டப் பட்டார்கள். அப்பொழுது ஒரு நாள் இரவு தூக்கத்தில் சொப்பனத்தில் சுவாமியவர்கள் என்னிடம் வந்து ஒரு சட்டையைக் கொடுத்து "இதைப் போட்டுக்கொள். எழுந்திரு. சும்மா படுத்திருக்காதே" என்றார்கள். மறு நாளிலிருந்து ஜுரம் விலகிவிட்டது.

1939ல் ஒரு சமயம் சுவாமியவர்கள் தம் குழந்தைகளுடன் ஸ்ரீவில்லிபுத்தூரில், தம் தமையனார் வீட்டில் இருந்தார்கள். அப்பொழுது அவர்களை மாடியில் சந்திக்க வாய்ப்புக்கிடைத்தது. அவர்களுடன் இருந்த வேறு யாரோ ஒருவர் என்னைப்பற்றி விசாரித்தார். அதற்கு சுவாமியவர்கள் அளித்த பதில் என் பிற்கால வாழ்க்கையின் முன் குறிப்பாகவே இருந்தது. "அவருக்கு (எனக்கு) இப்ப எங்கே கலியாணம். இங்கே படிக்கிறது போதாதென்று சீமை யெல்லாம் போய்ப் படிக்கப் போகிறார். அதன்பின்தான் அவர் கூடுகட்டி குஞ்சுபொரிக்க யோசனை பண்ணுவார்" என்றார்கள். அதிலிருந்துதான் 'நாம் வெளிநாடு செல்வோம்' என்ற எண்ணம் என்னுள்ளே வளர ஆரம்பித்தது.

மதுரையில் பிரபல புத்தக வியாபாரியான கோபாலகிருஷ்ணக் கோனாரின் தமையனாருக்கு உடல் நலக்குறைவின் காரணமாய், சுவாமியவர்கள் அவர்களது சொக்கிகுளம் பங்களாவில் தங்கியிருந்து அவர்களைக் கவனித்து வந்தார்கள். நான் அவ்வமயம் அடிக்கடி மதுரை போகும் பொழுது சுவாமியவர்களைச் சந்திப்பது வழக்கம். இதுசமயம்தான் கோவில் பட்டியிலிருக்கும் சுவாமியவர்களின் ஆப்த அன்பர்களில் பிரதமரான கோபாலய்யரவர்களின் ஏகபுத்திரியான செல்லம்மாள் பிரசவித்து மிகவும் உடல்நிலை கவலைக்கிடமாயிருந்தது. கோபாலய்யரவர்களும் நானும் சொக்கிகுளம் சென்று சுவாமியவர்களை கட்டாயம் கோவில்பட்டி வரவேண்டுமென்று வற்புறுத்தினோம். அதற்கு அவர்கள் அது ஒரு பெரிய கண்டமென்றும், வியாழன் கழியட்டும், வருகிறேனென்றார்கள். அதற்கு முன்பே செல்லம்

மாளின் ஆத்மா சாந்தி யடைந்துவிட்டது. பிற்காலத்தில் அச்சம்பவத்தைப் பற்றிப் பேசுகையில் அந்தக் குழந்தை ஒரு நல்ல ஜீவனென்றும், கொஞ்சம் விட்டகுறை தொட்டகுறையினுல் இப்பிறவி யெடுக்க வந்த தென்றும் கூறினுர்கள்.

மேற்கூறிய சம்பவம் நடப்பதற்கு ஓரிரு வருஷங்களுக்கு முன் நானும் கோபாலய்யரும் சுவாமியவர்களைத் தரிசிக்க திருப்பரங்குன்றம் சென்ருேம். சுவாமியவர்கள் விசாகத்திற்கு திருப்பரங்குன்றம் வரப்போவதாகத் தகவல் கிடைத்தது. அவ்வளவுதான். எங்கே, எப்பொழுது வருவார்கள். எவ்விடம் தங்குவார்கள் முதலிய ஒரு விவரமும் தெரியாது. ஆயினும் அவர்களைத் தரிசிக்க வேண்டு மென்ற ஒரே ஆவலினுல் கோபாலய்யரும் நானும் சிவகாசியிலிருந்து கிளம்பிவிட்டோம். திருப்பரங்குன்றத்தில் விசாகத்தன்று விலாசம் தெரியாத ஒரு நபரை எப்படிக் கண்டுபிடிப்பது? ஜனத்திரள் கோவிலுக்குள்ளும் வீதிகளிலும் கரைபுரண்டு ஓடியது. நாங்கள் காலை 9 மணியிலிருந்து பிற்பகல் 2 மணி வரை தேடித்தேடிக் கடைசியில் மனம் சோர்ந்து, "சரி, இவ்வளவு தான். அதிர்ஷ்டமில்லை" யென்று திரும்பி ஊர் செல்ல இரயில் நிலையம் போய்க்கொண்டிருக்கும்பொழுது, எங்களையே உற்று நோக்கிய ஒருவர், "நீங்கள் சுவாமிகளைப் பார்க்க வேண்டுமா, வாருங்கள்" என்று எங்களை ஒரு சந்து வழியாகக் கூட்டிச் சென்ருர் ஓர் விடுதிக்கு, அங்கு சுவாமியவர்களைச் சந்தித்து அவர்களுடன் அதிக நேரம் பேசக் கூடிய வாய்ப்புக் கிட்டியது. முதலில் அன்று காலை சிவகாசியிலிருந்து புறப்படும்பொழுது என் தகப்பனுர், "விசாகக் கூட்டத்தில் அவர்களை எங்கடா உங்களால் கண்டுபிடிக்க முடியும்? சமுத்திர மணலில் கடுகைக் கண்டுபிடிக்க முடியுமா?" வென்று அரை மனத்துடனேதான் எனக்கு அனுமதி யளித்தார்கள். ஆனுல் நாங்கள் சுவாமியவர்களைச் சந்தித்ததைக் கேட்டு எங்களைவிட அவர்கள் அதிகக் களிப் புற்ருர்கள்.

பின் நான் தாம்பரத்தில் கிறிஸ்தவக் கல்லூரியில் வாசித்துக் கொண்டிருந்தேன். 1940-ல் தை மாதச் சமயத்தில் சுவாமியவர்கள் வட இந்திய பிரயாணத்தை யொட்டி சென்னையில் தங்கியிருந்த பொழுது, நம்பியாரவர்களுடன் காரில் தாம்பரம் வந்து என்னை என் வகுப்பில் சந்தித்தார்கள். பின்பு என்னுடன் ஹாஸ்டல் அறைக்கு வந்து சிறிது நேரம் தங்கிச் சென்ருர்கள்.

நான், கல்லூரியில் படிக்கும் பொழுது ஒவ்வொரு கோடை விடுமுறையிலும் சுவாமியவர்களை பாளையங்கோட்டையில் சந்தித்து அவர்களது ஆசி பெறுவது வழக்கம். அதுபோல் 1941 கோடை விடுமுறையில் தரிசிக்கச் சென்ற பொழுது நான் 1942 மார்ச் மாதம் எழுதப்போகும் கடைசி M. A., பரீட்சையில் நிச்சயமாய் இரண்டாவது பிரிவில் தேர்ச்சி கிடைக்குமென்றும், முயன்ருல் முதற் பிரிவில் தேர்ச்சி கிட்டு மென்றும் கூறினுர்கள். அவர்களது ஆசியின்படி இரண்டாவது பிரிவிலேயே தேர்ச்சி கிடைத்தது.

1942 ஜுன் மாதம் M. A., பரீட்சை தேர்தல் செய்திகள் வெளியான பின் சுவாமியவர்களைத் தரிசிக்க பாளையங்கோட்டை சென்றிருந்தேன். என்னை உடனே சென்னை சென்று இஞ்சினியரிங் கல்லூரியில் சேரச் சொன்னுர்கள். எனக்கு நம்பிக்கையே யில்லை. இஞ்சினியரிங் கல்லூரியில் சேர்வதற்கு மே மாதமே மனுச் செய்து கொள்ள வேண்டும். மேலும் அப்பொழுது சண்டைக் காலமாதலால் ஜுன் மாதத்திலேயே கல்லூரி துவக்கி விட்டார்கள். இதை யெல்லாம் சுவாமியவர்கள் ஏற்றுக் கொள்ள வில்லை. "இங்கிருந்து கொண்டு அத்தைப் பாட்டிக் கதை பேசாதே. சென்னை போய் பிரயத்தனம் செய் உனக்குக் கட்டாயம் கிண்டி கல்லூரியில் இடங் கிடைக்கும். நீ பின்னுல் இஞ்சினியராய் வேலை செய்வது

இன்று என் கண் முன்னல் பார்க்கிறேன். உடனே போ" வென்று உத்தர விட்டார்கள். அவர்களது ஆசியின் பலத்தால் இஞ்சினியரிங் கல்லூரியில் இடங் கிடைத்தது.

இஞ்சினியரிங் கல்லூரியில் படிக்கும் பொழுது 1944 ஜனவரியில் டைபாயிட் ஜுரம் கண்டு சென்னையில் ராயபுரம் ஆஸ்பத்திரியில் இருக்க நேர்ந்தது. அப்பொழுது சுவாமியவர்கள் பவளக்காரத் தெருவில் திரு குமரப்பன் இருந்த விடுதியில் தங்கி யிருந்தார்கள். உடனிருந்தவர்கள் கோவில்பட்டி திரு கோபாலய்யரவர்களும், எனது தந்தையாரவர்களும் ஆவர். அப்பொழுது சுவாமியவர்கள் இரண்டு நாட்களுக் கொருமுறை ஆஸ்பத்திரிக்கு வந்து என் உடம்பைத் தன் கையால் தடவிக்கொடுப்பார்கள். மேலும் குழாயடிக்குச் சென்று எனக்கு ஒரு கோப்பை குளிர்ந்த நீர் குடிக்கக் கொண்டுவருவது போல் தானே போய் அதில் ஆஸ்பத்திரி நர்ஸ், டாக்டர் முதலியவர்களுக்குத் தெரியாமல் குழாயடியிலேயே தன் சொந்த மருந்தை (பிரம்ம உப்பு, பஸ்பம், முதலியன) கலந்து கொண்டு வந்து தன் கையால் எனக்கு ஊட்டுவார்கள். ஆஸ்பத்திரியில் நோய் குணமடைந்த பின் டாக்டர் கொடைக்கானல் அல்லது உதகை சென்று இரண்டு மாதங்கள் தங்க வேண்டு மென்ருர்கள். என் நோயினுல் ஏற்கனவே என் தந்தை அதிகப் பணக் கஷ்டத்திலிருந்தார். சுவாமியவர்கள் அதெல்லாம் வேண்டாமென்றும், "நீ ஆஸ்பத்திரியை விட்டு வெளியே வா. பின் உன்னை நான் கவனித்துக் கொள்கிறேன்," என்ருர்கள். ஆஸ்பத்திரியிலிருந்து நேரே இஞ்சினியரிங் கல்லூரி விடுதிக்கே என்னை அழைத்துச் சென்ருர்கள். கனம் சுவாமியவர்களும், திரு செல்லக்கனியும் கூடவந்தார்கள். போகும் வழியில் காலை இள வெய்யில் என் மேல் படக்கூடாதென்று சுவாமியவர்கள் சென்னை மவுண்ட் சாலையில் காரை நிறுத்தி அவர்கள் உட்கார்ந்த இடத்தை எனக்குத் தந்து என் மேல் வெய்யில் படாமல் செய்தார்கள். விடுதி சென்ற பின் தினமும் காலை மாலை இரு வேளைகளில் ஒரு அரிசி எடை மருந்து தருவார்கள். பின்பு 3 மணிக்கு ஒரு முறை விருந்து போல் ஆகாரம் தந்து நேரில் இருந்து நான் உண்பதை கவனிப்பார்கள். உற்சாக மூட்டுவார்கள். என் தந்தை இதைப் பார்த்து பயப்படுவார்கள். சுவாமிகள் அதைப் பொருட்படுத்தமாட்டார்கள். வந்து சேர்ந்த முதல் வாரத்தில் எனக்களித்த ஆகாரத்தின் விபரமாவது: காலையில் 5 மணிக்கு 2 முட்டை, பால், பின்பு 7-30க்கு விடுதியில் கிடைக்கும் சிற்றுண்டி, 9-30க்கு பழங்கள், 12-30க்கு விடுதிச் சாப்பாடு, 4 மணிக்கு சிற்றுண்டி, 7-30க்கு பொரித்த முட்டையுடன் சாப்பாடு, இரவில் 10 மணிக்கு பால் பழம். ஒரு வாரத்திற்குள் சாதாரணமாக எழுந்து நடக்க ஆரம்பித்து விட்டேன். விடுதியில் சுமார் 10-15 நாட்களே யிருந்தார்கள். எனினும் இந்த நோய் சம்பந்தமாய் என்னுடன் ஒரு மாதத்திற்கு மேலேயே தங்கினுர்கள். இன்னும் அதிக நாட்கள் தங்கி யிருப்பார்கள். ஆனல் பாளையங்கோட்டையில் குழந்தைகளுக்கு ஏதோ தேர்வு ஆதலால் அவர்களை உற்சாகப் படுத்துவதற்காக பாளையங்கோட்டை சென்ருர்கள். விடுதியில் நான் சுவாமியவர்கள் பக்கத்தில் படுத்திருப்பேன். இரவில் எப்பொழுதாவது எழுந்திருக்கும் பொழுது சுவாமியவர்கள் படுக்கையில் உட்கார்ந்து கண்மூடி தியானத்திலிருப்பார்கள். ஆனல் நான் வெளியில் போய்விட்டு திரும்பிவரும் பொழுது படுத்துக் கொண்டு குறட்டை விடுவார்கள். யாரறிவார் அவர்கள் பெருமையை! நான் ஆஸ்பத்திரியிலிருந்து வெளி வரும் பொழுது என்னல் நிற்கவும் முடியாது. ஆனல் சுவாமிகள் அருளால் ஒரு மாதத்திற்குப் பின் என் உடம்பு பழைய நிலையை அடைந்து பார்த்தோரை பிரமிக்க வைத்தது.

பவளக்காரத் தெருவில் இருக்கும்பொழுது தாம் சுவாமியவர்கள் தம் பற்களை யெல்லாம்

பிடுங்கி விட்டுச் செயற்கைப் பல் கட்டிக் கொண்டார்கள். ஏதோ ஓரிரு பற்கள் ஆடின தால் எல்லாவற்றையும் பிடுங்கி யெறிந்து விட்டார்கள். பின்பு இரண்டு மூன்று நாட்கள் நீராகாரம் உட்கொண்டு அநேகமாக முழு நேரமும் கண்மூடி மௌனியாயிருந்தார்கள். பின்பு எல்லோரும் ஆச்சரியப்படும்படி, பல்லைப் பிடுங்கின மூன்று நாட்களில் சாம்பார், ரசம் முதலியன சாப்பிட ஆரம்பித்து விட்டார்கள். அதைப்பற்றி விவரிக்கையில் கண்மூடி மௌனி யாய் யோக நிஷ்டையிலிருக்கும் பொழுது அமுத நீர் பெருகிப் பற்களின் ஈருகளை நன்ருய் நனைத்து விடும். அதனுல் வலியொன்றுமிராது யென்ருர்கள்.

நான் ஆஸ்பத்திரியிலிருக்கும்பொழுது அங்கு என் ஆப்த நண்பர் ஒருவரின் தம்பி க்ஷயரோகத்தால் அவதிப்பட்டார். அதைப் பற்றி சுவாமியவர்களிடம் சொன்னேன். அவ ரைப் பற்றிப் பேசவேண்டா மென்றும், அவர் நடைபாதையிலிருக்கிருரென்றும் சொன்ஞர் கள். அதேபோல் அந்தப்பையன் விரைவில் இறந்துவிட்டான்.

முதல் முறை அமெரிக்கா போவதற்கு முன் 1946 நவம்பர் மாதத்தில் மெடிக்கல் சர்டிபிக் கேட் வாங்கவேண்டி யிருந்தது. மதுரை D. M. O. பரிசோதனை செய்து ஹெர்னியா ஆப்ரேஷன் செய்துகொள்ள வேண்டு மென்று சொன்ஞர். அப்பொழுது நான் அமெரிக்கா போக வேண்டிய கப்பலை எந்தச் சமயமும் எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். இந்த இக்கட்டான நிலையில் கனம் சுவாமியவர் களிடமே எப்பொழுதும் போல் சரணடைந் தேன். அவர்கள் என்னுடைய கப்பல் தை பிறந்துதான் வருமென்றும், பயப்படாமல் தைரியமாய் மதுரை ஹார்லி நர்சிங் ஹோமி லேயே ஆப்ரேஷன் செய்துகொள்ள வேண்டு மென்றும் உத்தரவிட்டார்கள். மேலும் ஆப்ரேஷன் ஆனபின் ஆஸ்பத்திரியிலேயே என்னுடன் இரண்டு மூன்று நாட்கள் தங்கி யிருந்தார்கள். ஆப்ரேஷன் நடக்கும்பொழுது கூட ஒருவரும் இல்லை. தன்னுணர்வுடனேயே ஆப்ரேஷன் நடந்ததால் வலி தாளாது "பொன்ஞு, பொன்ஞு," வென்று கதறினேன். ஆப்ரேஷன் செய்து கொண்டிருந்த டாக்டர் ராமசுப்பிரமணியம். "யாரப்பா அந்த பொன்ஞு வென்பவர்." என்று விசாரிக்க, "அவர் என்னுடைய ஏசுநாதர்." என்று பதில் கூறினேன். டாக்டர் ராமசுப்பிரமணியம் பின்பு சுவாமியவர்களை நேரில் சந்திக்க விரும் பிஞர். ஆஞல் சுவாமியவர்கள் ஆப்ரேஷன் அறையில் நடந்தவற்றை யறிந்த பின், அவ ரைச் சந்திக்க விரும்ப வில்லை. டாக்டரால் சுவாமியவர்களை சந்திக்கவும் முடியவில்லை பின்பு அமெரிக்கா (1947) போகையில் சென்னை சென்ட்ரல் ரெயில் நிலையம் வரை வந்து வழியனுப்பிஞர்கள். அப்பொழுது ஆப்ரேஷன் ஆகி உடல்நிலை பூரணகுணம் ஆக வில்லை. ஆகவே என்னை உற்சாகப்படுத்து வதற்கு வேண்டுவன செய்தார்கள்.

நான் அமெரிக்காவிலிருந்து திரும்பிய பொழுது சுவாமியவர்கள் பெருமாள் புரத்தில் சொந்த பங்களாவில் குடிவந்துவிட்டார்கள். 1949 செப்டம்பர் 20-ம் தேதி மாலை சிவகாசியி லிருந்து வேலையை ஒப்புக்கொள்ள பவானி சாகர் செல்லும்பொழுது ரெயில் நிலையம்வரை வந்திருந்து வழியனுப்பிஞர்கள். பின்பு 1950 மே 27-ல் திருப்பரங்குன்றத்திற்கு தம் குடும் பத்துடன் என் திருமணத்திற்கு வந்திருந்து எங்களை ஆசீர்வதித்தார்கள். வேலையில் சேர்ந்த பின்பும் சிவகாசி செல்லும் பொழுதெல் லாம் கருவை அல்லது பெருமாள்புரம் சென்று சுவாமியவர்களைத் தரிசித்து அவர்களது ஆசி பெற்றுச் செல்வதுதான் வழக்கம். அவர்களது சந்நிதானத்தில் வாய்மூடி மௌனியாய்ச் சிறிது நேரம் அமர்ந்திருந்தாலே மனதிற்கு ஒரு சாந்தியும் அமைதியும் கிடைக்கும்.

வேலைக்குப் போகுமுன் சுவாமியவர்கள் கூறிய புத்திமதி:—"இதுவரை உன்னைக் கஷ்டப்

பட்டுப் படிக்கவைத்து அதில் நல்லதேர்ச்சி பெற்று நல்ல வேலையில் அமர்வதற்குப் போகிறாய். இனி உன் அன்றாட வாழ்க்கையில் தோன்றும் பிரச்னைகளை உன் பகுத்தறிவையும் கல்வி, கேள்வி ஞானத்தையும் பயன்படுத்தித் தீர்த்துக்கொள்ளவேண்டும். அதுவே உன்னைப் படிக்கவைத்ததின் நோக்கமாகும். எதெற்கெடுத்தாலும் பெற்றோரையோ அல்லது என்னையோ கேட்கக் கூடாது. முக்கியமான பிரச்னைகளைகலந்தாலோசித்துக்கொள்ளலாம். மேலும் எந்த நிலையிலும் "இந்த சூழ்நிலையில் நான் (சுவாமியவர்கள்) என்ன செய்திருப்பேன் அது போல் நாமும் செய்வோம் என்று செய்ய நினைக்காதே. இது ஸ்பெஷல் வண்டி; சில சமயம் சக்கரம் இருக்காது. சில சமயம் வண்டி ஓட்டி இருக்காது, சில சமயம் எண்ணெயிருக்காது, சில சமயம்வண்டியேயிருக்காது. ஆனால் வண்டி ஓடும்." இதன் விளக்கம் சுவாமியவர்களுடன் பழகினவர்களுக்குத்தான் தெரியும்.

ஒரு சமயம் சுவாமியவர்கள் தேவாரத்திற்குப் போயிருந்தார்கள். அவர்கள் வரவின் ஞாபகார்த்தமாக அவர்களது அதிதி திரு அழகர் ராஜா அவர்கள் (ஏலக்காய் தோட்டத்தின் அதிபர்) தோட்ட வேலைக்காரர்களுக்கு விடுமுறை யளித்திருந்தார். அதை அந்தத் தொழிலாளிகள் விளையாட்டிலும், கேளிக்கையிலும் கழித்தார்கள். இதைக் கண்டு பக்கத்துத் தோட்டத்தின் அதிபதியான ஒரு ஆங்கிலேயர் என்னவென்று ராஜா அவர்களைக் கேட்க, அதற்கு, 'எங்கள் எஸ்டேட்டிற்கு ஒரு சுவாமியவர்கள் வந்திருக்கிறார்கள். அவர்களுக்கு மரியாதை செலுத்துவதற்காக இன்று எல்லோருக்கும் விடுமுறை" யென்றார். தானும் அந்தச் சுவாமியைத் தரிசிக்க வேண்டுமென்றும், மறுநாள் மாலை தேநீர் விருந்திற்கு அவர்களை அழைத்து வருமாறு அந்த ஆங்கிலேயர் கூற, அதை ராஜா ஒப்புக்கொண்டார். அதன்படி மறுநாள் மாலை எல்லோரும் அங்கு சென்றனர். அந்த ஆங்கிலேயர் ஒரு சடைமுடி, காஷாய தாரியை எதிர்பார்த்திருந்தார். ஆனால் அதற்கு மாறாக சுவாமிகள் சில்க் சட்டை, அங்கவஸ்திரம், அணிந்து அழகாய்க் காட்சியளித்தார்கள். சுவாமியவர்களின் நடையுடை பாவனை யெல்லாவற்றையும் கண்டு அந்த ஆங்கிலேயர் பெருத்த ஏமாற்ற மடைந்தார். இருந்தாலும் அதை வெளியில் காட்டிக்கொள்ளவில்லை. தேநீருக்குப் பின் சில ஆங்கிலப் பாடல்களை இசைத்தட்டு மூலம் பாடவைத்து அதை தமிழில் சுவாமியவர்களுக்கு விமரிசனம் செய்து வந்தார். அதில் ஒரு பாட்டு ஒரு பெண் அயல் தேசம் சென்று பணம் சம்பாதித்துக்கொண்டு வந்தபின் உன்னைத் திருமணம் செய்துகொள்கிறேன் என்று சொல்லிச் சென்ற தன் காதலனை நினைத்து மனமுருகிப் பாடின பாட்டாகும். இதைச் சொன்னபின் சுவாமியவர்கள் அந்த ஆங்கிலேயரைப் பார்த்து, "உங்கள் காதலியும் அதேபோல் உங்களுக்குக் கடிதமெழுதி யிருக்கிறாளே. அவள் உங்களையே நினைத்துக் கொண்டிருக்கிறாளே, நீங்கள் பதில்கூடப் போடவில்லையே," என்றார்கள். இதைக் கேட்டவுடன் அந்த ஆங்கிலேயர் ஆச்சரியத்தினால் சுவாமியவர்களின் கைகளைக் கண்களில் ஒத்திக்கொண்டு ஒரே உற்சாகத்தினால் கூத்தாடினார். உண்மையாகவே அவரது காதலியும் அவருக்கு அதே போல் கடிதம் எழுதியிருந்தாள். பின் மறுமுறை அதே தோட்டத்திற்கு சுவாமியவர்கள் சென்றபொழுது அந்த ஆங்கிலேயர் தம் காதலியுடன் கணவனும் மனைவியுமாக தாய் நாட்டிலிருந்து வந்திருந்தார். முன் போல். ஆனால் இப்பொழுது தன் மனைவியுடன், சுவாமியவர்களுக்குத் தேநீர் விருந்து அளித்து அகமகிழ்ந்தார்கள். இது சுவாமியவர்களே எனக்கு நேரில் சொன்ன குறிப்பு.

இறுதியாய் நான் சுவாமிகளை தரிசித்தது கடலூரில் அவர்களது இரண்டாவது குமாரர் போலீஸ் சூப்பிரண்டெண்ட் திரு பரமகுரு அவர்களின் பங்களாவில், அன்று ஆனந்தமாய்க் காட்சியளித்தார்கள் சுவாமிகள். அது சமயம் அவர்களிடம் நான் வேண்டிய வரம், "வாழ்விலும்தாழ்விலும், இன்பத்திலும் துன்பத்

திலும், இப்பிறவியிலும் மறுபிறவியிலும் உங்களை நான் என்றென்றும் மறவாது இருத்தல் வேண்டும்." என்பதுதான். மனமுவந்து அவ் வரம் வழங்கி அருளி, நாம் அருந்திய பாலில் மீதியை எடுத்து அளித்துப் பருகச் சொன் னார்கள். சுவாமிகள் அன்புடன் அளித்த அந்த ஞானப் பால் உண்டு என் உள்ளத் தெளிந்து உவகை கொண்டேன்.

நம்மிடையே பிறந்து, நம்முடன் உண்டு களித்து, உறவாடி, தூங்காமல் தூங்கி வந்த அந்த அருட்பெருஞ் சோதி இன்று மறைந்து விட்டது. இல்லை, அந்தச் சோதி நம் ஊனக் கண்களுக்குத் தெரியாமல் போய்விட்டது. ஊன்றிப் பார்த்தால் அங்கிங் கெனாதபடி எங்கும் பிரகாசமாய்த் தெரியும் வாழ்விற்கு வழிகாட்டும் அந்த வான்பொருள்.

---

# தீர்க்கதரிசி

**திரு P. K. S. A. ஆறுமுக நாடார், சிவகாசி**

தவத்திரு பொன்னையா சுவாமிகள் ஒரு மகோன்னத சித்தரும், ஞானியுமாவார்கள். அவர்கள் பல வருடங்களுக்குப் பிறகு நிகழப் போகும் நிகழ்ச்சிகளை முன்னதாகவே உணர்ந்து உரைக்கவல்ல தீர்க்கதரிசி ஆவர். புற்றுநோய் போன்ற எந்தப் பெருநோயிலும் தீர்ப்பதில் வல்லவர்கள். அவர்களுக்குத் தெரியாத நோயோ, அவர்களால் தீர்க்க முடியாத நோயோ இல்லை எனலாம். எந்த நோயை யும் எளிதில் போக்கி விடுவார்கள். நோய் இன்னது என்பதைத் தெளிவாக உணர்வதில் மேதை. அவர்கள் தமது குடும்பத்தோடு வாழ்ந்து வந்தார்கள் எனினும் அவர்களை நாங் கள் ஒரு துறவி என்றே கருதி வந்தோம். இதனை ஓர் எடுத்துக்காட்டு மூலம் விளக்கு வேன்.

வசிஷ்டர் மனைவி அருந்ததி அம்மையார் கங்கை நதியின் மறுபுறத்திலிருந்த விசுவாமித் திரருக்கு உணவு எடுத்துச் சென்று அளிப்பது வழக்கம். ஒரு நாள் அவ்வாறு செல்லுகையில் கங்கையில் வெள்ளம் கரைபுரண்டோடியது. அதனால் அதைக் கடக்க முடியாத அம்மையார் வசிஷ்ட மகரிஷியிடம் மீண்டும் சென்று செய்தி சொல்ல அந்த மகரிஷி 'நான் ஒரு நித் திய பிரம்மச்சாரி என்பது உண்மையானால் நதி உனக்கு வழிவிடும்' என்று சொல்லி அனுப் பினார். வெள்ளம் உச்ச நிலையை அடைந்தி ருந்தபோதிலும் மகரிஷி திருவாக்குப்படி கங்கை வழிவிட அந்த அம்மையார் நதியைக் கடந்துசென்று விசுவாமித்திரருக்கு உணவு அளித்தார். பிறகு அங்கிருந்து திரும்புகையில் வெள்ள மிகுதியைக் கண்டு விசுவாமித்திர ரிடம் திரும்பிச்சென்று தன்னிலையைக்கூற அம் முனிவர் 'நான் ஒரு உபவாசி என்பது உண்மையானால் அந்நதி வழிவிடும்' எனக் கூறினார். வெள்ளம் மிகுதியாக வந்த அந் நிலையில் அந்நதி அம்மையார் செல்வதற்கு வழிவிட்டதாதலின் வசிஷ்டரிடம் அம்மையார் வந்து சேர்ந்தார்.

இதிலிருந்து நாம் உணரும் ஓர் தத்துவம் உண்டு. வசிஷ்டர்தம் மனைவியாகிய அருந்ததி அம்மையாரை நோக்கி "நீ என் மனைவியாகி னும், நான் பற்றற்று எல்லாப் பொருள்களை யும் இறைமயமாகக் கண்டு இன்புற்று வாழ் கின்றேன்" என்று கூறினார். இது பல்லாயிரக் கணக்கான ஆண்டுகளுக்கு முன் நடந்தது. இத் தத்துவத்திற்கு நமது இந்து வேதங்களும் சாத்திரங்களும் முக்கியத்துவம் அளித்து வருகின்றன.

இவ்விரு பிரம்மரிஷிகளின் மறு நிலைக்கும், சொல்லுக்கும் சான்றாகத் திகழ்கிறார்கள், நம் தவத்திரு பொன்னையா சுவாமிகள்.

1920-ம் ஆண்டில் நான் முதல் முதலாக நம் சுவாமிகளுடன் தொடர்பு கொண்டேன். நான், எனது ஒன்றுவிட்ட சகோதரர் திரு. P. S. இராமசாமி நாடாருடன் ஞாயிறு தோறும் இராஜபாளையத்தில் மேற் கோடியில் இருந்த சுவாமிகள் இருப்பிடம் சென்று சந்திப்பது வழக்கம். எப்பொழுது சென்றாலும் அங்கு குறைந்தது நான்கு மணி நேரமாவது சுவாமிகளோடு பொழுது போக்குவதுண்டு. அப்பொழுது பேச்சு யாவும் மதத்தத்துவ விளக்கமாகவே இருக்கும். அவர்கள் உரை யாற்றிய உபதேசங்களில் சில இன்றும் என் நினைவில் இருக்கின்றன. நான் அவற்றை பின்பற்றியே ஒழுகுகின்றேன். அவர்கள் அப்பொழுது உரைத்தவை எல்லாம் இன்று உண்மை என்பதை உணர்கின்றேன். அவர் கள் ஒரு புலவரோ அல்லது பல்கலைக் கழக பட்டதாரியோ இல்லையென்றும், இந்து மதத் தின் உயரிய தத்துவத் தெளிவும், பண்புநிறை புலமையும் வாய்ந்தவர்கள் என்பதும் குறிப் பிடத் தக்கது.

அவர்களோடு தொடர்ந்து பலமணி நேரம் உரையாடிக் கொண்டிருப்பினும் அலுப்போ, சலிப்போ, களைப்போ ஏற்படுவதில்லை.

எங்களுக்கு எழும் ஐயம் திரிபுகளைப் போக்கிக்கொள்ள எண்ணி அவர்களிடம் நாங்கள் பலமுறை செல்வதுண்டு. ஆனால் அவர்களிடம் சென்றதும் எங்கள் உள்ளத் தில் உள்ளதை வெளிப்படுத்தாது அவர்கள் முன் அமருவோம். எங்களிடமோ, பிறரி டமோ அவர்கள் ஏதாவதொரு பொருள்பற்றி சொல்லி வரும்போது எங்கள் உள்ளத்தில் உள்ள ஐயம் திரிபுகளுக்கு வேண்டிய விளக்கம் தானாகவே நாங்கள் வியப்புறும் வண்ணம் கிடைக்கும். இதுதான் அவர்களுடைய தெய் வீகத் தன்மை வாய்ந்த தனிப்பெரும் ஆற்றல்.

1923-ம் ஆண்டில் ஓர்நாள் நாங்கள் சுவாமி களிடம் சட்டசபைத் தேர்வுபற்றிப் பேசிக் கொண்டிருந்தோம். திரு. S. P. A. சிதம்பர நாடார் அவர்களும் சுவாமிகளிடம் வந்து அளவளாவுவது வழக்கம். அவர் சென்னை சட்டசபைக்கு மதுரை மாவட்டத்திலிருந்து ஒரு அபேட்சகராகப் போட்டியிட்டார். ஒரு நாள் நாங்கள் அன்றாறு தேர்தல் முடிவு பற்றி சுவாமிகளிடம் உரையாடிக்கொண்டி ருந்தபோது சுவாமிகள் திடீரென்று என்னைப் பார்த்து "சட்டசபையில் ஆசியனரின் நியமன அங்கத்தினராவதற்கு நீங்கள் முயற்சி செய்யுங்கள்" என்று அருளினார்கள். நான் அது முடியாத செயலென்று கூறினேன். ஆனால் சுவாமிகள் உறுதியாய் "நீங்கள் சட்ட சபையில் ஓர் அங்கத்தினராக நியமிக்கப்படு வீர்கள் என்பது திண்ணம். ஆதலால் சென்னை சென்று அதற்கான முயற்சி செய் யுங்கள். எளிதில் கைகூடும்" என்று வற்புறுத் தினார்கள். சென்னை செல்வதற்கு ஒரு நாளை யும் குறிப்பிடச் சொன்னார்கள். ஆனால் துரதிஷ்டவசமாக அந்தக் குறிப்பிட்ட நாளில் எனது குழந்தைக்கு உடல், நலம் இல்லாமல் போயிற்று. அதனால் போக முடியவில்லை. என் சென்னைப் பயணத்தில் குறியாக இருந்த சுவாமிகள் நான் சென்னை செல்லாதது கண்டு நேராக எனது வீட்டிற்கு வந்தார்கள். "ஏன் போகவில்லை?" என்று கேட்டார்கள். வீட்டின் செய்தியை நான் சொல்ல "இன்றிரவே குழந்தை நலமடையும். சென்னை செல்ல இன் னும் ஏதாவது தங்களுக்கு தடையுண்டா?" என்று கேட்டார்கள். நான் ஒன்றும் சொல்ல முடியாமல் ஒத்துக்கொண்டேன். "நீங்கள் சட்டசபை அங்கத்தினராக நியமிக்கப்படுவ தையும், இந்நகரத்தார் மிகவும் கோலாகலமாய் தங்களை வரவேற்பதையும் நான் காண்கிறேன்" என்று சுவாமிகள் கூறினார்கள். அவர்கள் திருவாக்குப் பலித்தது. இதுபோல் எத்த னையோ அரிய அற்புதங்கள் அவர்கள் காலத் தில் நிகழ்த்தியுள்ளார்கள்.

1957-ல் எனக்கு அறுவை சிகிச்சை நடந் தது. அரிய பெரிய மருத்துவ நிபுணர்கள்

இரத்தத்தைச் சோதித்து புற்றுநோய் எனத் தீர்மானித்தனர். ஆனால் சுவாமிகளோ ஓர் பஸ்பம் (மருந்து) கொடுத்தார்கள். மூன்று மாதங்கள் அதைச் சாப்பிட்டேன். அதன் பின் மருத்துவ நிபுணர்கள் என்னையும் என் இரத்தத்தையும் பரிசோதித்து, புற்றுநோய் அறவே அகன்றுவிட்டதென ஆச்சரிய முற்றனர். அந்நோய் மாயமாய் மறைந்தது இதற்காக நானும் என் குடும்பத்தினரும் என்றென்றும் சுவாமி அவர்களுக்கு கடமைப் பட்டுள்ளோம்.

சுவாமிகள் பூதஉடல் நீத்து இறைவனுடன் இரண்டறக் கலந்த நாள் தான் நவம்பர் 4, 1960. சுவாமிகள் மறைவு அவர்களது மக்களைவிட சித்த வைத்தியத்திற்குத்தான் பேரிழப்பு. சுவாமிகள் பனஞ்சாற்றிலிருந்து முப்பு முறையாக கண்டுபிடித்து வைத்திருந்தார்கள். அதுவே காயகல்பம். அவர்களுக்கு இம்மண்ணுலகில் மறுபிறப்பு என்பதொன்றில்லை. அவர்கள் ஆத்மா சாந்தி அடைவதாகுக. அவர்கள் ஆத்ம சக்தி என்றென்றும் நமக்கு அருள் புரிவதாகுக.

சுவாமிகள் தனது தீர்க்க தரிசனத்தால் கண்டு தேர்ந்த அரும்பெரும் சித்த வைத்திய முறைகள் அவர்களது வழித் தோன்றல்கள் வாயிலாக மென்மேலும் வளர்ந்து சிறந்தோங்கி நாட்டில் அனைவருக்கும் நன்மை பயக்கவேண்டுமென்பது எனது பேரவா. இதனை நிறைவேற்றுவதன் மூலம் சுவாமிகளின் அருள் ஒளியை உலகெங்கும் பரவச் செய்தவர்களாவோம்.

புதுக்கோட்டை, காலஞ்சென்ற கஞ்சிராவித்துவான் கனம் தக்ஷிணாமூர்த்தியா பிள்ளை அவர்கள், சுவாமிகளின் ஆத்ம நண்பர். ஒரு சமயம், தெய்வத்திரு பொதிச் சுவாமியின் குருபூஜைக் கச்சேரிக்கு வந்திருந்தபோது, தனது சீடர் திரு தக்ஷிணாமூர்த்தி ஆசாரி அவர்களுக்கு விபூதி பூசும்படி வேண்டினார்கள். சுவாமிகள் மௌனம் சாதித்துச் சும்மா இருந்தார்கள். பிள்ளை அவர்கள் மறுபடியும் வற்புறுத்த, "நான் விபூதி பூசினால், தங்களின் வித்தை முழுதும், தங்களின் சீடருக்கு வந்துவிடும், பூசட்டுமா?" என்றார்கள். பிள்ளை அவர்கள் மௌனமாக இருந்தார்கள். சீடருக்கும் விபூதி பூசப்படவில்லை. சுவாமிகளின் பல சித்துகளில் இந்த ஆற்றலும் ஒன்று.



# திருவருட் செயல்

திரு A. V. சுப்பிரமணிய முதலியார், ஆழ்வார்குறிச்சி

தவத்திரு பொன்னையா சுவாமிகள் இராஜ பாளையம் ஈன்றளித்த பெரியார் ஆவார்கள். அவர்கள் தம் இளமையிலேயே சாஸ்திரங்களை நன்கு கற்றும், தர்க்கம் முதலிய கலை ஞானங் கள் கை வரப்பெற்றும் சிறப்புடன் விளங்கி னார்கள். பல பெரியார்களுடனும் வேதாந்தி களுடனும், பல ஆண்டுகள் திருமணமாகியும் துறவியாகவே வாழ்ந்து வந்தார்கள்.

சுவாமி அவர்கள் திருவனந்தபுரத்திற்குச் சமஸ்கிருதம் படிக்க வந்தார்கள். அதே காலத்தில் தான் காலஞ்சென்ற இராவ்சாகிப் சக்கரபாணி நம்பியார் அவர்களும் பட்டப் படிப்பிற்காக அங்கு வந்திருந்தார்கள். சுவாமி அவர்களும், காலஞ்சென்ற திரு சக்கரபாணி நம்பியார் அவர்களும் நானும் 1918-ல் இருந்தே திருவனந்தபுரத்தில் குருநாதர் ஜனுப் மொகமத் கான்சாகிப் அவர்களுடன் இருந்து அவர்கள் எடுத்துரைக்கும் அரிய கருத்துக் களைக் கேட்டு மகிழும் பாக்கியம் கிடைத்தது. சில நாட்கள் இரவில் குருநாதரின் திவ்விய மொழிகளைக் கேட்டுக் கொண்டிருக்கும்போது காலை ஐந்து மணிக்கு வழக்கமாக வெடிக்கும் பீரங்கிக் குண்டொலி கேட்டு, "விடிந்துவிட் டதே! போய்ப் படுத்து ஒய்வு எடுத்துக் கொள்ளுங்கள்" என்று குருநாதரவர்கள் சொல்லிய பிறகே ஒய்வெடுக்கச் சென்றிருக் கிறோம். ஒரு நாள் சுவாமி அவர்கள் ஊர் போய் இல்லறத்தைத் திறம்பட நடத்தி இம்மை இன்பத்தையும், மறுமை இன்பத்தையும் அடையுமாறு குருநாதன் ஆணையிட்டார்கள். குருநாதரின் ஆணையைச் சுவாமிகளும் தலை மேற்கொண்டார்கள்.

எங்கள் குருநாதர் ஆதியில் திருவனந்தபுரத் தில் டவுன் போலீஸ் இன்ஸ்பெக்டராக இருந் தார்கள். அவர்களுக்கு திருவனந்தபுரத்தைச் சேர்ந்த நல்லதோர் குடும்பத்திலேயே கல்யாணமாகியிருந்தது. அவர்கள் அந்தக் காலத்தில் ஆயிரம் ரூபாய்க்குக் குதிரையும் வண்டியும் வைத்திருந்தார்கள். ஒரு சமயம் பாக்தாத்தில் பிறந்து நபிநாயகம் வழித் தோன்றலான தவத்திரு செய்யது முகம்மது அவர்கள் திருவனந்தபுர சமஸ்தான விருந்தின ராய் வந்தார்கள். அவர்களை பரிசோதித்துக் கவனிக்க போலீஸ் இன்ஸ்பெக்டராக எங்கள் குருநாதர் நியமிக்கப்பட்டிருந்தார்கள். அவர்கள் தம் அலுவல் முடிந்ததும் அம்மகா னிடம் சென்று தம் வாழ்வு உய்ய உபதேசம் வேண்டி நின்றார்கள். எங்களது குருநாதரின் வேண்டுகோளைச் செவி மடுத்த மகான் செய்யது முகம்மது அவர்கள், "வேலையை ராஜி னாமா செய்துவிட்டு வந்தால் சிஷ்யனாக எடுத் துக்கொள்கிறேன்" என்றார்கள். எங்கள் குரு நாதர் அதற்கிசைந்து ஒரு தினத்திற்குள் குதிரையையும் வண்டியையும் விலைக்குக் கொடுத்துவிட்டு, வேலையையும் ராஜினாமா செய்துவிட்டு மகான் செய்யது முகம்மது அவர் களை வந்து சந்தித்தார்கள். அவர்கள் தம் முடன் தங்குமாறு ஆணை பிறப்பித்து, உபதே சம் செய்து, எங்கள் குருநாதரை தம் சிஷ்யன் ஆக்கிக்கொண்டார்கள். அதுமட்டு மல்லாமல் வீட்டில் இருந்தபடியே முன்னர் வேலை பார்த்து வந்த காலத்தில் கிடைத்ததைப் போல் திரு வருளால் வருமானம்கிடைக்குமென்று திருவாய் மலர்ந்தருளி, திராவக நீராலும் முப்புவாலும், மற்ற முறையாலும் உலோகங்களைச் சுத்தி செய்து நீற்றுவதற்கும் லோகங்களிலிருந்து சத்து எடுத்து நீற்றிக்கொடுக்கும் சித்த முறை களையும் செய்து காட்டியும் உதவினார்கள். எங்கள் குருநாதர் உயர்ந்த நிலையில் மதபேத மற்று, சித்தருடையவும், ஞானிகளுடையவும் நூல்களை நன்கு கற்றறிந்து தாம் அனுபவிப்ப துடன் உலகத்தாருக்கும் அவைகளின் உட் பொருளை விளக்கியும் வந்தார்கள்.

சிறிது காலத்திற்குப் பின், குருநாதரின் அருமைச் செல்விக்குத் திருமணம் திருவனந்த புரத்தில் நடந்தது. திருமணத்திற்கு இராஜ

பாளையத்திலிருந்து தவத்திரு பொன்னையா சுவாமி அவர்களும், அழகர் ராஜா அவர்களும், அம்பய்ய ராஜா அவர்களும், நாதசுர வித்வான் மாயாண்டி அண்ணாவி, நான்கு தவுல்களுடனும் வந்திருந்தார்கள். சுவாமிகள் அழைத்து வந்திருந்த நாதசுர வித்வானும், நான்கு தவுல் வித்துவான்களும் நன்கு உழைத்து எல்லோரையும் மகிழ்வித்தார்கள். திருவனந்தபுரம் சாலை பஜாரில் பட்டணப்பிரவேசம் போகும் போது, காலஞ்சென்ற மகாராஜா மூலந் திருநாள் அவர்கள் "நள்ளிரவில் அருமையாகவும் இனிமையாகவும் மேள தாளங்கள் முழங்குவதைக் கேட்டேன். யார் வீட்டுக் கல்யாணம்? பெருங் கூட்டமாக இருந்ததே" என்று தன்னிடம் கேட்டதாகவும் அதற்குத் தான் விவரம் சொன்னதாகவும் மறுநாள் சர்வாதிகாரி எங்களிடம் சொன்னார்கள். திருவருள் எங்கள் குருநாதரின் மகள் திருமணத்தை இவ்வாறு சிறப்பாக நடத்தி வைத்தது.

சுவாமி அவர்கள் தம் பிள்ளைகளை ரிஷிவேலியில் படிக்க வைத்திருந்தார்கள். பின்னர் பாளையங்கோட்டையிலுள்ள சேவியர்ஸ் உயர் நிலைப் பள்ளியிலும், ஹாஸ்டலிலும் தம் ஆண் குழந்தைகளைச் சேர்த்தார்கள். நானும் எனது ஆண் குழந்தைகளைச் சேவியர்ஸ் ஹைஸ்கூலிலும், ஹாஸ்டலிலும், பெண் குழந்தையை கான்வெண்டிலும் சேர்த்தேன். நாங்கள் இருவரும் ஒருவரையொருவர் கலக்காமல் ஒரே முடிவுக்கு வந்து சேர்த்தபின் விவரம் கண்டோம்.

> புணர்ச்சிப் பழகுதல் வேண்டா உணர்ச்சிதாம்
> நட்பாங் கிழமை தரும்.

என்ற பொய்யாமொழியை உணர்வில் கொண்டோம். இதுவும் திருவருட் செயல்தான் என்று நினைத்து மகிழ்ந்தோம். பிறகு பெண்குழந்தைகளின் படிப்பையும், பிள்ளைகளின் உடல் நலத்தையும் கருதி, எல்லோரும் குடும்ப சகிதமாக பாளையங்கோட்டையில் வீடு எடுத்திருந்தோம். சுவாமிகளும் பக்கத்துத் தெருவில் வீடமர்த்தியிருந்தார்கள். நான் இயல்பாக, தேவைக்குப் போதவில்லை என்று சேர்ந்தாற்போல் இரண்டு வீடுகள் வாடகைக்கு எடுத்து வசதியாக வைத்திருந்தேன்.

நான் திருவனந்தபுரம் சென்றிருந்தேன். அச்சமயத்தில் திடீரென்று தாமிருந்த வீட்டைக் காலிசெய்ய நேர்ந்ததால், உடனடியாக வசதியான வீடு கிடைக்காமல் சுவாமிகள், நான் பக்கத்தில் வசதிக்காக எடுத்து வைத்திருந்த காலி வீட்டில் தற்காலிகமாக வந்து குடியேற என்னிடம் கேட்பதற்காக வந்தார்களாம். நான் ஊரில் இல்லை என்றறிந்ததும் என்ன செய்வது என்று திகைத்தபோது, எனது பிள்ளைகளும், வீட்டம்மாவும் அன்பாகப் பேசி, உடனடியாக வந்து குடிபுகும்படியாகச் செய்திருந்தார்கள். நான் ஊர் திரும்பியதும் நாங்கள் இருப்பதைப்போல் ஒருவர்க்கொருவர் அன்புடன் இரு குடும்பங்களும் இருப்பதைக் கண்டு மிகவும் மகிழ்ச்சியடைந்தேன். திருவருட்செயலைப் பாருங்கள்!

பெருமாள்புரத்தில் எங்களிருவருக்கும், திரு சக்கரபாணி நம்பியார் அவர்களுக்கும் புதிய வீடுகள் அமைத்து சுவாமிகளின் மூத்த மகன் சிரஞ்சீவி டாக்டர் குருசிரோன்மணிக்கு மறுவீடும், எனது பெண் செல்வி சீனியம்மாளுக்கு மறுவீடும் சிறப்பாக நடத்தினோம்.

சுவாமியவர்களுடைய மகள் திருவளர் செல்வி சரசுவதியம்மாளுக்கு வத்ராயிருப்பில் வெகு சிறப்பாகத் திருமணம் நடைபெறுவதற்கு முன், சுவாமிகளின் தமையனார் ஸ்ரீவில்லிபுத்தூர் திரு கிருஷ்ணத் தேவர் அவர்கள் வீட்டில் நிச்சயதாம்பூலம் நடைபெற்றது. திரு கிருஷ்ணத் தேவர் அவர்கள் சுவாமிகளைப் பார்த்து "நிச்சயதாம்பூலத்தைச் சுருக்கமாக வைத்துக் கொள்வோம்," என்று சொல்ல, சுவாமிகளும் தம் தமையனாரின் விருப்பப்படியே நடைபெறட்டும், என்றிருந்து விட்டார்கள். என் சகோதரர்கள், நண்பர்கள் சூழ நாங்கள் இருபதுபேரும் அதிகாலையில்

ஸ்ரீவில்லிப்புத்தூர் புகை வண்டி நிலேயத்தில் இறங்கி, வண்டியமர்த்தி சுவாமியவர்களின் தமையனுர் வீடு போய்ச் சேர்ந்தோம். நாங்கள் சேர்வதற்கும், செல்வி சரசுவதியம்மாளே நிச்சயதாம்பூலம் செய்யப் புதுப் புடவை கட்டி, அழைத்து உட்கார்த்துவதற்கும் சரியாய் இருந்தது. குழந்தை என்னைப் பார்த்து, "அதோ! ஆழ்வார்குறிச்சி அப்பா வந்துவிட் டார்கள்," என்று மகிழ்ச்சியோடு சொன்னுள். நாங்களும் நல்ல சமயத்தில் வந்து சேர்ந்த மைக்கு மகிழ்ந்தோம். சுவாமிகள் தம் தமைய ஞரையழைத்து, "பார்த்தீர்களா! திருவருட் செயலே! நிச்சயதாம்பூலத்தைச் சுருக்கமாக நடத்த நினைத்தீர்களே. வரவேண்டியவர்கள் வந்து விட்டார்கள். இனி நடக்கவேண்டிய சடங்குகள் நடக்கட்டும்." என்று புன்முறுவல் தவழும் முகத்துடன் மகிழ்ச்சியோடு சொன் ஞர்கள்.

திருமணம் வத்ராயிருப்பில் நடந்த போது நிகழ்ந்த இரு பெரும் வியப்பான நிகழ்ச்சிகள்: முகூர்த்த சமயத்தில் பெண்டிர் தலேயில் சூடு வதற்கென்று, மதுரையிலிருந்து அன்பர் திரு இராஜகோபால் நாயுடு அவர்கள் ஒரு லாரி நிறைய பூவாரங்களேயும், செண்டுகளேயும் கொண்டு வந்து மலேபோல் குவித்துவிட்டார் கள். மாலேவரை அள்ளி அள்ளிக் கொடுத்துக் கொண்டே இருந்தார்கள். நாதசுவர வித்து வான் திரு வீராசாமிப் பிள்ளேயும், திரு மீனுட்சி சுந்தரம் பிள்ளேயும் நான்கு தவுல் வாத்தியங் களுடன் இரவு ஒன்பது மணிக்கு ஆரம்பித்து காலே நான்கு மணி வரை, அடாது மழை பெய்தாலும் விடாது வாசித்து எல்லோரையும் மகிழ்ச்சி வெள்ளத்தில் ஆழ்த்திஞர்கள். அந்த ஊரிலே இவ்வளவு பெரிய திருமணம் நடை பெற்றதே இல்லே என்று அவ்வூர் உயர்நிலேப் பள்ளியில் நடைபெற்ற தேநீர் விருந்திலும் கச்சேரியிலும் கலந்து கொண்ட அன்பர்கள் வாயாரப் புகழ்ந்தார்கள். அதேபோல் தமது திருவளர் செல்வர்கள் டாக்டர் குருசிரோன் மணிக்கும், திரு பரமகுருவிற்கும், செல்விகள் திருமதி இலட்சுமிக்கும், திருமதி இராஜேஸ் வரிக்கும் வெகு சிறப்பாக திருமணம் முடித்து மகிழ்ந்தார்கள்.

பாளேயங்கோட்டையில் உயர்நிலேப்பள்ளியி லும், கல்லூரியிலும் சுவாமியவர்களின் இரு மக்களும், எனது இரு மக்களும் ஒரே காலத் தில் உடன் பயின்றதைப் போல, திருவருட் செயலால் இரு குடும்பத்துப் பிள்ளேகளுக்கும் சென்னேயிலேயே அலுவல் கிடைக்கப் பெற்றுத் தொடர்புற்று இருந்தார்கள்.

சுவாமிகள் தெய்வத்திரு பொதிச்சுவாமி களின் சமாதியை அவர்கள் அருளிச் சென்ற வாறே சிறந்த வேலேப்பாடுகளுடன் கரிவலம் வந்தநல்லூரிலே தானே முன்னிருந்து பதிஞ யிரச் செலவில் சிறப்பாகக் கட்டி முடித்து குரு பூஜையும் நடத்திஞர்கள்.

சுவாமிகள் காயகல்பங்களால் உடல் கேடுற்று அழியாது நிலேபெறச் செய்து உயி ருடன் ஒன்றுபடுத்தி அதன் வாயிலாகத் தன்னே அறிந்து தலேவனே அறிந்தார்கள். மூல உப்பு முறை அறிந்து சுவாமிகள் தாமிரம் முதலிய சிறந்த மருந்துகள் செய்து உபயோ கித்தும், அன்பர்களுக்கு வழங்கியும் வந்தார் கள். "உடம்பினேப் பெற்ற பயனுவதெல்லாம் உடம்பினில் உத்தமனேக் காண்," என்ற ஔவைப்பிராட்டியின் வாக்கிற்கு எடுத்துக் காட்டாய்த் திகழ்ந்தார்கள் சுவாமிகள்.

சுவாமி அவர்கள் அடங்கிய நாற்பதாவது நாள் நடந்த குருபூஜையில் மிகவும் சிறப்பாக ஒரு பக்கத்தில், சுவாமிகளின் திருவாக்கின்படி அவர்களின் பணியாள் ஒருவனுக்குச் சுவாமி களின் சமாதியின் முன்பு, பெருங்கூட்டத் துடனும், மேளதாளத்துடனும் திருமணம் நடைபெற்றது. மறுபக்கம், பக்தர்களின் கூட்டம், வித்துவான்களின் கச்சேரி முழக்கம் ஆராதனே, அபிஷேகம் அலங்காரம் முதலியன வும், ஆயிரக்கணக்கான மக்கள் அகம் மகிழ அன்னம் பாலித்தலும், சாதுக்களுக்குக் காவி

யாடைகள் வழங்கப் படுவதுமாகிய காட்சிகள் புகழோடு தோன்றி மறைந்து நித்தியராய் விளங்கும் தவத்திரு பொன்னையா சுவாமிகளின் அருஞ்செயல்களை உறவினர், அன்பர், நண்பர் எல்லோருக்கும் எப்போதும் நினைவூட்டும் நிலையில் இருந்தன. இவற்றைத் திருவருட் செயல் எல்லோருக்கும் தெளிவுறக் காட்டியது.

---

மிகப்பெரிய வித்வான்களான காலஞ்சென்ற திரு தக்ஷிணாமூர்த்தியா பிள்ளை அவர்கள், காலஞ்சென்ற திரு மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள், திரு வீராசாமி பிள்ளை அவர்கள், திரு கார்குறிச்சி அருணாசலம் அவர்கள் போன்றவர்கள் சுவாமிகள் நடத்தும் தெய்வத்திரு பொதிச்சுவாமியின் குருபூஜைக்கு வந்து வாசிப்பார்கள். அவர்கள் எல்லோருக்குமே போக்குவரத்துச் செலவுக்கு மட்டுமே கொடுப்பார்கள். ஆனால் மேல்குறித்த பெரிய வித்துவான்கள் எல்லோருமே, உண்மை உழைப்புடன், தன்னையும் மறந்து, தனக்குத்தானே அனுபவித்து வாசிப்பதுடன், சுவாமிகளையும் யோக நிலையில் உச்ச நிலை அடைந்து பேரின்பம் அனுபவிக்கச் செய்யும் விதத்தில் வாசிப்பார்கள். சுவாமிகள் இந்த மெய் மறந்த நிலைக்கு வரும் அளவுக்கு குருபூஜைத் தினத்தன்று, வாசித்து வெற்றி பெற முடியாவிட்டால், மறுதினம் இருந்து, வாசித்து அந்த நிலை பெறச் செய்து, இன்புற்று ஆசி பெற்றுச்செல்வார்கள். ஆகவே சுவாமிகளின் தெய்வீக சங்கீதத்தின் ரசிகத்தன்மை, 'உயர்ந்த சங்கீத உரைகல்,' என்பது உன்னத வித்துவான்களின் கருத்து. இந்த இலக்குவை விட்டு, பணத்தை மட்டும் முக்கியமாகக் கருதிப் பேரம் பேசும் வித்துவான்களை, தான் நடத்தும் விசேடங்களில் கலந்து கொள்ளச் சம்மதிக்க மாட்டார்கள்.

---

## அடியேனை ஆளாக்கிய அருட்சோதி

திரு பொ. கிருஷ்ணமூர்த்தி, கருவை

தென்றலின் இனிமையையும், மலரின் மணத்தையும், குளிர் அருவிகளின் ஓசையையும் சோலைமயில்கள் ஆடும் ஒய்யாரக் காட்சியையும், கருங்குயில்களின் கானிசையையும், பச்சைக் கிளிகளின் மழலை மொழியையும் கண்டு, கரையில்லா மகிழ்வைப் பெறுகிறோம். இன்புறுகிறோம். ஆனால் படைத்தவன் யாவன்? அவன் அருள் பெறுவது எங்ஙனம்? என்பதை நாம் சிந்திக்க மறந்து விடுகிறோம். சிந்தித்தோம் இல்லை. இயற்கை எழிலின் அரவணைப்பிலே அகப்பட்டோருக்கு அன்பு வழிகாட்டும் ஆண்டவனின் அருளை, பெருமைகளை எவ்வாறு அறிய முடியும்? ஆகையால் யாவரும் உலகப்பொருள் மேலுள்ள பற்றைக் குறைத்து அறநெறி வழியிலே செல்லும் அறிவைப் பெருக்குவதே சால வழியாகும்.

இச்சிறந்த வழியே இச்செகத்தினைப் படைத்த ஆண்டவனின் அடிகளை அடைவதற்கு ஏதுவாகும். இவ்வரிய வேதாந்தக் கொள்கைகளை இளமையிலே ஊட்டி இறைவனிடம் கொள்ளும் பக்தி மார்க்கத்தையும் அளித்து, நாத்தீகம் பெருகி நல்வழியை ஒழிக்கும் இக்காலத்தில் பரம்பொருளின் பக்தியைப்போதித்து நல்லவனாக நற்பண்புள்ளவனாக வளர்த்து என்னை ஆளாக்கிய பெருமை அகல்விளக்காகிய அருட்சோதி எங்கள் தந்தை தவத்திரு பொன்னையா சுவாமிகளையே சாரும். இன்றும் சுவாமிகள் மகன் சின்னச்சுவாமி என்று என்னை

அழைக்கிறார்கள் என்றால் அவர்களின் பெயரும் புகழும் தான் என்னே!

ஆறு குழந்தைகளாகப் பிறந்தோம் இவ் வழகு நிறை செல்வருக்கு. இதில் ஆற்றல் மிகும் ஆண்கள் மூன்று. அடக்கமுள்ள பெண்கள் மூன்று. சினம் என்பதையே சிறிதும் காணாது சிவந்து மலர்ந்த சிரித்த முகத்தோடு கருணை உள்ளத்தோடு என் சிந்தையிலே கவலையைத் தேக்காது சீராட்டி செல்வமாக வளர்த்தார்கள். பண்பை அள்ளி ஈந்தார்கள். படிக்க வைத்தார்கள். பைந்தமிழ் நூல்களின் அரிய பெருமைகளை உணர்த்தினார்கள். உலக அறிவியலைக் கற்றுத் தந்தார்கள். உண்மையாளனாக ஊக்கமுள்ளவனாக திகழவேண்டுமென்ற உயரிய உபதேசங்களை என் உள்ளத்திற்கு ஊட்டினார்கள். இவ்வளவு அரிய குணத்தோடு குழந்தையாகிய என்னையும் எனது மூத்த சகோதர சகோதரிகளையும் வளர்த்தார்கள் என்றால் வாழ்க்கையின் இலக்கணம் நன்கு கற்றுத் தேர்ந்து இருந்தார்கள் என்றுதான் கூற வேண்டும்.

"தந்தை மகற்காற்றும் நன்றி அவையத்து
முந்தி யிருப்பச் செயல்"

என்கிற வள்ளுவரின் வாய்மொழியை நிருபித்துச் சிறப்பாக குழந்தைகளை வளர்த்து தனக்கு நிகரில்லை என்பதையும் இந்நீள் உலகத்திற்கு காட்டிவிட்டார்கள். மருத்துவத்தில் சிறந்த டாக்டராக்கினார்கள் என் அண்ணா மூத்தவரை. மாநிலத்தில் எழும் பூசல்களைப் போக்கி மக்களைக் காக்கும் போலீஸ் அதிகாரியாக்கினார்கள் எனது அடுத்த அண்ணாவை. மனஞ்சரியும் மக்களின் துயர்களைப் போக்கி மக்களுக்குச் சேவை புரியும் தொண்டனாக, ஊராட்சி மன்ற உதவித் தலைவராகவும் ஆக்கிவைத்தார்கள் என்னை என் தந்தையார் சுவாமிகள். ஆண்களில் கடைசிப் பையனாகவும், வீட்டில் கடக்குட்டியாகவும் யான் இருந்ததால் என்னுடைய தந்தையார் அவர்கள் எல்லாச் சலுகைகளையும் கொடுத்தார்கள்.

அன்பாகவும், செல்லமாகவும் என்னைப் பாராட்டினார்கள். வளர்ந்தேன் உலகம் தெரியாத பிள்ளையாக. ராஜா ராஜா என்று ஆசையோடும், அருமையோடும் பக்கத்திலே, அழைத்து உட்கார வைத்துக் கொள்ளுவார்கள். அப்போது யான் விரும்பிக் கேட்கின்ற தின்பண்டங்களெல்லாம் மலைபோல் வந்து குவியும். இன்னும் நினைத்தால் என் கருவிழிகள் கண்ணீர் பொழியக் காத்திருக்கின்றன. அன்போடு வளர்த்த அப்பைந்தமிழ் செல்வரைப் பறிகொடுத்தோம். பதறித் துடித்தோம். பார் புகழ சமாதி கொண்டு திருக்கோயில் கொண்டார்கள் அவர்கள்.

நான் பள்ளி சென்று படிக்கின்ற காலம் வந்தது. பள்ளிக்குச் சென்றேன். ஆனால் அங்கிருக்க பயந்துகொண்டு வீட்டிற்கு ஓடிவந்து விடுவேன். அப்போது என்னுடைய தந்தையார் அவர்கள் என்னுடைய மனதை மாற்றி, "ராஜா, இனி பள்ளிக்கூடத்தில் அடிக்கடி மிட்டாய், லட்டு எல்லாம் கொடுப்பார்கள். உனக்கு நிறையக் கொடுக்கச் சொல்லியிருக்கிறேன். போய்ப்படி" என்று சொல்லி என்னை ஏமாற்றிவிடுவார்கள். இதற்குப்பின் பள்ளிக்குச் செல்லத் துவங்கினேன். அதை முடித்து உயர்நிலைப் பள்ளியை அடைந்து கற்கலானேன்.

இப்பருவத்தில் எங்கள் வீட்டில் நடந்த நிகழ்ச்சிகளைக் கூறவிரும்புகிறேன். எப்போதும் என் தந்தையைக் காண்பதற்காக கூட்டம் வீட்டில் நிறைந்து கொண்டேயிருக்கும். வருகின்ற அன்பர்களின் கைகளிலே ஆரஞ்சுப்பழங்களும் எலுமிச்சம்பழங்களும் இருந்து கொண்டே இருக்கும். அடிகளார் வந்தவுடன் எல்லோரும் எழுந்து பக்தியோடு வணங்கி, கொண்டுவந்த பொருள்களைத் தாங்கள் ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று சொல்லி அவைகளை வீட்டிலுள்ள என் அன்னையாரிடம் கொடுப்பார்கள்.

இப்படி வருகின்றவர்கள் பழக்கூடைகளோடு வருவதைக் காணும் என் தந்தை

யவர்கள் கேலியாக, "என்ன பழ வியாபாரமா? மார்க்கெட் சரியாக இருக்கிறதா? ஏது நம்ம வீட்டையே சந்தைக்கூடமாக்கி விட்டீர்கள் போலிருக்கிறதே!" என்று சொல்லுவார்கள். இதைக் கேட்ட மற்றவர்கள் பூரித்து புன்னகை புரிவார்கள். இப்படி அவர்கள் கூறியதற்குக் காரணம் உண்டு. சந்தையிலே பழங்கள் கிடைக்கும். அதுபோல் இங்கு கூடுபவர் களுக்கு கனிவளமுள்ள கருத்துரைகள் கிடைக் கும் என்று உவமையாகப் பேசுவார்கள் சுவாமிகள்.

ஒருநாள், ஒருவயதான கிழவர் பழக்கூடை யோடு வந்து என் தந்தையாரின் காலில் விழுந்து வணங்கி, தேம்பித் தேம்பி சிறுபிள்ளை போல் அழத் தொடங்கிவிட்டார். இதைக் கண்டு பரிதாபப்பட்ட நான் அது ஆனந்தக் கண்ணீர் என்று தெரிந்து கொண்டேன். அக் கிழவர் என் தந்தையாரிடம், "சுவாமி என் மகளைப் பிழைக்க வைத்து விட்டீர்கள். இவளும் போய் விடுவாளோ என்று புலம்பினேன். புண் ணியவானே அவள் பூவும், மஞ்சளோடும் வாழ உயிர் மீட்டுக் கொடுத்தீர்கள். சுவாமி! அடியேனுல் இயன்ற காணிக்கையைப் பெற்றுக் கொள்ளுங்கள்," என்று சொல்லி கத்தை கத்தையாக ருபாய் நோட்டுக்களை கொடுத் தார்.

உடனே சுவாமிகள் அக்கிழவரைப் பார்த்து, "உடனே இங்கிருந்து கிளம்பிவிடும். பணத் திற்காகவா மருந்து கொடுத்தேன்? பாவம் பழகியவன் அருமை மகளைப் பறி கொடுக்கக் கூடாது என்பதற்காகத்தான் மருந்து கொடுத் தேன். அவளுக்கு மாப்பிள்ளை தயாராகி விட் டான். இந்த பணத்தைக் கொண்டு அடுத்த மாதமே உம் மகளுக்குக் கல்யாணம் செய்து விடும்" என்று சொன்னுர்கள். அதைக் கேட் டுப் பிரமித்த அக்கிழவன் சுவாமிகள் காலில் விழுந்து வணங்கி பணத்தை எடுத்துக் கொண்டு அவர்களிடம் விடைபெற்றுச் சென் ருர். இப்படி ஏழை எளியவர்களுக்கு வேண்டிய உதவிகளைச் செய்து அவர்களுடைய மனக் கவலையை போக்குவார்கள் என் தந்தையார் அவர்கள்.

என் உயர்நிலைப் படிப்பு முடிந்தவுடன் நான் சென்னையில் செங்கல்வராயன் தொழிற்கல் லூரியில், எலக்ட்ரிக் இஞ்சீனியரிங் படிக்கத் தொடங்கினேன். அங்கு பாடமும் பயிற்சியும் மிகக் கடுமையாக இருந்தன. அந்த நேரங் களில் எனக்கு எத்தனையோ ஆறுதல் கடிதங் களை என் தந்தையார் அவர்கள் எழுதுவார்கள். அத்தனையும் தேனிலே துவைத்த பலாச் சுளை போல் இனிக்கும். பின்னர் நான் பயிற்சி முடிந்தவுடன் மேட்டுப் பாளையத்திலே வேலை பார்க்க தொடங்கினேன். அவ்வேலை என் மனதிற்குப் பிடிக்காததால் கரிவலம்வந்த நல்லூர் வந்து சேர்ந்தேன்.

சில நாட்கள் கழித்து என்னுடைய தந்தை யவர்கள் உயர்ந்த ஒரு பொறுப்பை என் கை யிலே கொடுத்தார்கள். நாற்பதினுயிரம் பண முள்ள பெட்டிச் சாவியை என் கையிலே கொடுத்து, "ராஜா வீட்டுக் காரியங்களையும், விவசாயங்களையும் கவனிக்க வேண்டிய பொறுப்பு உன்னைச் சேர்ந்தது." என்று சொல்லிவிட்டார்கள். இச்செயலைக் கண்ட எனக்கு அச்சத்தைத் தவிர வேறென்றும் தோன்றவில்லை

"என்னடா, நேற்று வரை படித்துக் கொண் டிருந்தோம், ஒன்றும் தெரியாத நம்மை திடீ ரென்று இக்காரியங்களில் இறங்கச் சொல்லி பணப் பொறுப்பையும் கொடுத்துவிட்டார் களே" என்ற தயக்கத்தால் திகைத்தேன். திகில் ஒரு பக்கம் மனதைக் கவ்வினுலும் என் தந்தை யார்களுடைய அருளால் ஆற்றல் ஒருபக்கம் வளரத் தொடங்கியது. குருவி தலையிலேப் பனங்காய் வைத்தாற்போல் இருந்தது என் னுடைய நிலை. இதையறிந்த என்னுடைய தந்தையார் அவர்கள் மிகவும் அன்பாக "ராஜா கலவரப்படாதே. எளிதாக எல்லா வேலைகளை யும் செய்ய முடியும் என்று நினைக்காதே.

கஷ்டப்பட்டுக் கடினமாக உழைக்கவேண்டும். இம்மாதிரியான பயிற்சிகளைப் பெற்றால்தான் வருங்கால வாழ்க்கையை செம்மைப்படுத்த முடியும். கற்பாறைகளைச் சிறு உளிகொண்டு அடித்தால்தான் கவர்ச்சி பொருந்திய சிற்பங்களைக் காண முடியும். அதுபோல் வாழ்வில் வளர்கின்ற துன்பங்களைத் தூசியாக்கினால் தான் நல்வாழ்வு பெற முடியும். இப்போது யான் கொடுத்துள்ள பொறுப்புகளைக் கவனித்து வெற்றிபெற்றால் உன் வாழ்வில் படரும் ஒளிச் சுடரை அளவிடமுடியாது," என்று மொழிந்தார்கள். "இளங்கன்று பயமறியாது. வெள்ளை உள்ளத்தினனாக நல்லது கெட்டது என்பதைத் தெரியாதவனாகவளர்ந்த நீ நல்வழியில் திரும்பி, மக்களோடு மக்களாகிப் பழகி, வெளி உலகத்தைப் பற்றித் தெரிந்து, வாழும் முறையைக் கற்றுக்கொள்ளவேண்டும்" என்று புத்தி புகட்டுவார்கள்.

இப்படி தந்தையாரவர்களின் ஆணைப்படி வீட்டுக் காரியங்களையும், விவசாயத் தொழிலையும் கவனிக்கலானேன். புதிய புதிய எண்ணங்களே என் இதயத்தில் தளிர் விட்டு முளைத்தன. தாவியோடி எதையும் செய்யலாம் என்கிற புதிய உற்சாகத்தைப் பெற்றேன்.

பக்கத்துக் கிராமத்திலுள்ளமக்கள் ஒருவரோடொருவர் சண்டையிட்டுக்கொண்டு அவ்வழக்கைத் தீர்ப்பதற்காக எங்கள் வீட்டிற்குத் தந்தையை நாடி வருவார்கள். சுவாமிகள் எது சொன்னாலும் அவர்கள் வேதமாகப் போற்றுவார்கள். சிக்கலான வழக்குகளை ஒருநொடியிலே தீர்த்து வைப்பார்கள். இப்படி வருகின்றவர்கள் பகையை மறந்து சமாதானமாகி, என் தந்தை அவர்களின் சொற்படி கேட்டு மகிழ்வார்கள். இப்படிக் கிராம வழக்குகளை எனக்குச் சுட்டிக் காட்டி அதனால் விளைய இருந்த தீமைகளைக் கூறுவார்கள். "கிராமங்களில் ஒருவரையொருவர் புரியாது எழுகின்ற அறிவிலிச் செயல்களே ஆபத்தில் வந்து முடிகின்றன. கிராமங்களில் அறியாமைகள் மிதமிஞ்சிக்கிடக்கின்றன. இதை மாற்றுவதற்கு, அரசாங்கம் பள்ளிகளை ஏராளமாக உண்டாக்கவேண்டும். உண்டாக்குவார்கள்" என்பார்கள்.

அவர்களின் வாக்குப்படி இன்றைக்கு எந்தக் கிராமத்தை எடுத்துக்கொண்டாலும் ஆரம்பப் பள்ளிகள் இல்லாத இடமில்லை. பள்ளிக்குப் பிள்ளைகளை அனுப்பப் பயந்த காலம் மறைந்து இப்போது பள்ளிகளில் பிள்ளைகளைச் சேர்க்க இடமில்லாமல் தவிக்கிறார்கள் பெற்றோர்கள்.

இப்படியிருக்கின்ற காலத்தில் என் தந்தை யாரவர்களோடு பாசத்தோடு பிணைக்கப்பட்டிருந்த தெய்வத்திரு பசுபதிபரமகுரு பொதிச் சுவாமிகளின் சமாதிக்கு ஆலயத்திருப்பணி செய்யத் தொடங்கினார்கள். அக்குருவுக்குச் செய்யவேண்டிய கட்டிடத் திருப்பணியை என் தந்தையாரவர்களின் ஆலோசனைப்படி நான் செய்யத் துவங்கினேன். இரவு பகலாக வேலைகள் மும்முரமாக நடக்க ஆரம்பித்தன. பக்கத்துக் கிராமமக்கள் மிக ஆர்வத்தோடு சுவாமிகளின் சொல்லுக்குப் பணிந்து பயபக்தியோடு இத்திருப்பணி வேலையில் ஈடுபடலானார்கள்.

வண்டி வண்டியாகக் கற்கள் வந்து குவிந்தன. வண்ணச் சிற்பிகளின் சிற்றுளியோசை கேட்கத் தொடங்கின. எப்பொழுதும் ஆரவாரமும், தொழிலாளர்களுடைய பேச்சொலிகளும் எழுந்து கொண்டேயிருக்கும். என்னுடையதந்தையவர்கள்ஒருஆசனத்தில் அமர்ந்துகொண்டு எல்லோருக்கும் ஆலோசனை கூறிக்கொண்டும், தொழிலாளர்களை உற்சாகமூட்டிக்கொண்டும் இருப்பார்கள். தொழிலாளர்களும் அவர்களுடைய யோசனையை மிக ஆவலுடன் கேட்பார்கள். ஏனென்றால்அவர்கள்கூறுகின்றபடி செய்தால் சிறந்த தொழில் மேதைகளாக ஆகலாம் என்கிற எண்ணந்தான். நான் கட்டிட வேலைகளுக்கு வேண்டிய சாமான்களையும் கருவிகளையும் சிற்பிகளுக்கு அட்டியின்றித் தயார் செய்து கொடுப்பேன்.

இப்படி வேலை பார்த்து வந்த சிற்பிகள் ஒரு நாள் முன்பணம் கேட்டார்கள். அப்போது மிகச் சலிப்போடு நான் அவர்களிடம் "இப் போதுதானே, சம்பளம் போட்டோம். அதற் குள் முன் பணம் கேட்கிறீர்களே?" என்று சொன்னேன். இதைக் கேட்ட சுவாமிகள், "ஒரு மன்னன் காலையில் கோயிற் திருப்பணி நடக்கும் கலைக் கூடத்தைப் பார்வையிட்ச் சென்றான். அங்கு அழகியசிற்பங்களைச் செதுக் கிக்கொண்டிருந்தான் தலைசிறந்த சிற்பி ஒரு வன். முகப்பொலிவோடும், புன்னகையோடும் காட்சியளிக்கும் சிற்பங்களைக் கண்டு மன்னன் புகழ்ந்து பாராட்டினான். அகமகிழ்ந்து அம் மன்னன் அரண்மனைக்குப் போய்ச் சேர்ந்தான். பின்னர் வழக்கம்போல் மாலையில் அத்திருப் பணிக் கூடத்திற்கு வந்தான். பிற்பகல் செய் யப்பட்ட அங்குள்ள சில சிற்பங்கள் வாட்டத் தோடு கூடியசோக முகபாவத்துடன் அமைந்து இருப்பதைக் கண்டு திடுக்கிட்டான். இம்மாறு தலுக்கு யாது காரணம் என்று சிற்பியை பார்த் துக்கேட்டான் அதற்கு அவன், "மன்னா! இச் சிற்பங்கள் எல்லாம் நெய்கேட்டு அழுகின்றன" என்று கூறிவிட்டுத் தன் வேலையைக் கவனிக்க லானான். அரண்மனைக்குச் சென்ற மன்னன் மந்திரியைக் கூப்பிட்டு, சிற்பி கூறிய பதிலுக்கு விளக்கம் என்ன என்று ஆராயுமாறு பணித்தார். மந்திரி சிற்பக்கூடம் சென்று எல்லா விவரங் களையும் தெரிந்துகொண்டு மன்னனிடம் வந்து, "மன்னா! அந்தச் சிற்பி தன் மகனிடம் நண்பகல் உணவுக்காக அரண்மனைக்குப்போய் நெய் வாங்கி வரச் சொல்லியிருக்கிறார், ஆனால் அரண்மனையில் "நெய்யில்லாது சிற்பி சாப்பிட மாட்டாரோ?" என்று ஏளனமாக இல்லையென்று சொல்லிவிட்டார்கள். அதை அவன் தந்தை யிடம் அப்படியே சொல்ல, அச்சிற்பி மிகவும் மனம் கவலைப்பட்டு வருந்திக் கொண்டே சிலை களைச் செதுக்கியிருக்கிறான். அவன் உள்ளத் தின் தன்மையே பிற்பகல் அவன் செதுக்கிய சிலைகளாகப் பிரதிபலிக்கின்றன. இவ்வாறு மந்திரி மன்னனிடம் கூறினான். இதைக் கேட்ட மன்னன், அச்சிற்பிக்கு வேண்டிய வசதிகளைச் செய்யுங்கள், கேட்டதைக் கொடுங்கள் என்று கட்டளையிட்டார். அதுபோன்று தொழிலாளி வருந்தினால் துவங்குகின்ற சிற்பக் கோயிலின் கலை கெட்டுவிடும். பொங்கியமனதோடு அவர்கள் வேலை செய்தால்தான் கலைக்கூடம் பொலிவுடன் திகழும். ஆகையால் சிற்பிக்கு வேண்டிய வசதிகளைச் செய்வது உன் கடமை யாகும். எவ்வளவு பணம் கேட்டாலும் கொடு இல்லையென்று சொல்லாதே" என்று என் தந்தையார் அவர்கள் என்னிடம் ஒரு கதை மூலம் ஓரரிய கருத்தை விளக்கினார்கள்.

மூண்டெழுந்தது முனிவனின் கோயில். காண்போர் கவர்ச்சியுறும் வண்ணம் கட்டிய தால் எல்லா சிற்பிகளுக்கும், தொழிலாளர் களுக்கும் புத்தாடைகளைப் பரிசாகக் கொடுத்து அவர்கள் களிப்படைய கனிவான விருந்தும் நடத்தினார்கள் என் தந்தையாகிய சுவாமிகள். பணிவோடு அக்கோயில் கட்ட உதவியாக இருந்த என்னை பாராட்டினார்கள், ஆசீர்வாதம் செய்தார்கள்.

காலம் உருண்டோடியது. உயிருக்கு விருந் தருளிக்கும் எத்தனையோ அதிசயங்கள் நடந் தன. கூறுவதற்கு இயலாதவைகள் அவை. யான் என் தந்தையரின் பயிற்சியிலே வெற்றி பெற்றுத் தனித் தொழில் ஆரம்பிக்க அவர் களிடம் அனுமதி பெற்று விட்டேன். என் வீட்டிற்குப் பக்கத்திலுள்ள செவ்வல் தரையில் ஒரு டூரிங் சினிமாக் கொட்டகையைப் போட் டேன். எப்பொழுதும் கொட்டகையில் கூட் டம் நிரம்பிக் கொண்டேயிருக்கும். நல்ல படம் நடக்கும் போது அறிவுத் தெய்வம் என் தந்தையாரவர்களும், அமுதக் கலசம் என்னு டைய அன்னையாரும் படம் பார்க்க வருவார் கள். அவர்கள் இருவரும் படம் பார்த்து ரசிக் கும் தன்மை பக்கத்திலுள்ளவர்களுக்கு இனி மைதரும். படம் பார்த்து முடிந்து வீட்டிற்குச் சென்றதும் என்தந்தையாரவர்கள் என் அன்னை யைப் பார்த்து "கோமதி! படம் எப்படி?

அந்தக் கூட்டம் நல்லா இருக்குதா?'' என்று கேலியோடு கேட்பார்கள். அதற்கு என் அன்னை யாரவர்கள், ''பரவாயில்லை சுவாமி! நல்ல வசூலாகும், ராஜா வரட்டும் கேட்போம்'' என்பார்கள். என் அன்னையாரவர்கள் கூறியதைக் கேட்டு என் தந்தையாரவர்கள் சத்தமிட்டு சிரித்து விடுவார்கள். ''கோமதி! நான் பணத்தைப்பற்றிக் கேட்கவில்லை. சினிமாப் படத்தைப்பற்றித் தான் கேட்டேன். மகனுக்குப் பணம் வசூலாகட்டும் என்று அக்கரையாய் இருக்கிருயே? இருக்கட்டும், இருக்கட்டும்'' என்று நகைச்சுவை ததும்ப பேசுவார்கள். இதைக்கேட்டு இதயங் குளிர்வேன் யான். மகனுடைய முன்னேற்றம் மேலும் மேலும் வளர வேண்டு மென்று விரும்பியது மாதாபிதாவின் மனம். இந்நிலையில் கொட்டகையிலே அவ்வப்போது ஏதாவது கூச்சலும் குழப்பங்களும் குதித்தெழும். இதை அப்படியே அடக்கி அமைதி படுத்திவிடுவேன். இதனுல் எத்தனையோ எதிர்ப்புகள் எரிமலைபோல் வெடித்து வந்தன. என்னுடைய தந்தையாரவர்களுடைய அருள் அத்தனையும் தவிடுபொடியாக்கும். விடிந்து எழுந்தால் விவகார மில்லாது இருக்காது. ஜோதி விளக்காகிய என் தந்தையாரவர்களின் முன்னுல் இவ்விவகார மெல்லாம் பறந்தோடிவிடும். இப்படி வருகின்ற அக்கப் போர்களில் எதிர் நீச்சலடித்து எழுந்தேன். என் தந்தையாரவர்கள், ''பொதுத்துறை வணிகம் செய்வோர்களுக்கும், மக்களுக்கு பொதுத் தொண்டு புரியும் தொண்டனுக்கும் ஏதாவது விவகாரங்கள் இருந்து கொண்டே யிருக்கும். அதைச் சமாளிப்பவன் தான் தீரன்'' என்று அடிக்கடி எனக்கு உற்சாக மூட்டுவார்கள்.

இப்படியாக என் வாழ்க்கையிலே யெழுகின்ற நெருப்புக் காற்றைக் குளிர் தென்றலாய் மாற்றி யிருக்கிருர்கள். மாண்பு மிகும் என் தந்தையாரவர்கள் பக்கத்திலே இருந்து பாய்ந்து வருகின்ற துயர் வெள்ளங்களை அணைக் கட்டி எனக்குப் பக்கபலமாய் நின்று கணக்கில் லாத உதவிகள் செய்திருக்கிருர்கள்.

கொட்டும் மழையிலே மின்னல் வானைப் பிளந்தது. பேய்க்காற்று பீறிட்டெழுந்து ஓலமிட்டது. விதியும் விளையாடியது. சீறியெழுந்த பயங்கரகாற்று சினிமாக் கொட்டகையைத் தரையோடு தரையாகச் சாய்த்துவிட்டது. பரிதாபகரமான இந்நிகழ்ச்சி நடந்த நாளன்று நான் லைசென்ஸ் வாங்குவதற்காகத் திருநெல்வேலி சென்றிருந்தேன். பல சூழ்நிலைகளிலும் தலைநிமிர்ந்து நின்ற அக்கொட்டகை பெருஞ் சேதத்திற்குள்ளாகியது. அலங்கோலமான அக்காட்சியைக் கண்ட என் தந்தையாரவர்கள் சிறிதும் கவலைப்படாது முகமலர்ச்சியோடு இருந்தார்கள். எதிர்பார்த்திருந்த குள்ளநரிக் கும்பல்கள் குறிவைத்த வலையிலே பட்டதடா புள்ளிமான் என்று எக்களித்தன. உடனே அவர்கள் சினிமாக் கொட்டகை காற்றிலே அடியோடு சரிந்துவிட்டது என்று தந்தி அடித்தார்கள் திருநெல்வேலி மாவட்டக் கலெக்டருக்கு. குன்றுமணிச் சுடராகிய என் தந்தையாரவர்களின் அருட் சோதி அந்த அவல நிலையைப் போக்க வேலை செய்யத் தொடங்கியது. கொட்டகை சரிந்த செய்தியைக் கேட்ட உள்ளூரிலும் பக்கத்துக் கிராமங்களிலும் உள்ள ஆயிரக் கணக்கான மக்கள் ஒன்றுதிரண்டு சுவாமிகளின் குடும்பத்திற்கு ஏற்பட்ட ஆபத்து நமக்கும் ஏற்பட்டதுதான் என்று மனதிற் கொண்டு உதவ வந்து சேர்ந்தார்கள். கொட்டகையைச் சரிப் படுத்தும் வேலைகள் மிகத் துரிதமாக நடக்கத் தொடங்கின. இந்நேரத்தில் சாரல் மழையும் விடாது பெய்து கொண்டே யிருந்தது. பெய்யும் மழையிலே நனைந்து கொண்டு வேலை செய்கிற மக்களுக்கு உற்சாக மூட்டினுர்கள். என் தந்தையார். அவர்களுடைய அருள் சக்தி திரண்டுவந்தமக்களுக்கெல்லாம் ஊக்கத்தைக் கொடுத்தது. வாயுவேகமாக அவ்வேலைகளை முடிக்கத் தூண்டியது. என்ன, விந்தையிலும் விந்தை ஒருபகல், இரண்டு இரவுகளிலே சினிமாக் கொட்டகைப் புதிதாக நிர்மாணிக்கப்பட்டது. மூன்றும் நாள் காலை எட்டு மணிக்கெல்லாம் கொட்டகையைப் பார்வையிட சங்கரன்

கோயிலில் முகாமிட்டிருந்த டிப்டி கலெக்டர் அவர்கள் கருவை வந்தடைந்தார்கள். கண்கவரும் கொட்டகையைக் கண்ட டிப்டி கலெக்டர் அவர்கள் மிகவும் ஆச்சரியப்பட்டார்கள். "சில சூழ்ச்சிக்காரர்கள் தான் இப்படித் தந்தியடித்திருக்கிறார்கள். கொட்டகை மிக அழகாயுள்ளது. மக்களுக்கு வேண்டிய வசதிகளோடும் அமைந்திருக்கிறது" என்று சொல்லி லைசென்ஸையும் அந்த நேரத்திலேயே வழங்கினார்கள்.

இவ்வரிய செயல்கள் தெய்வ சங்கல்பத்தால் தான் நடந்தன என்றுதான் சொல்ல வேண்டும். திருநெல்வேலியிலிருந்து நான் ஊர் வந்து சேர்ந்தேன். என்றும் இருப்பது போலவே கொட்டகை எனக்குக் காணப்பட்டது. பின் என் தந்தையாரவர்கள் நடந்தவைகளைச் சொல்லக் கேட்டுத் துடித்தேன். பெற்ற மகனிடம் கொண்ட பாசம் பேரிடி மழையில் விழுந்த கொட்டகையை மீண்டும் புதியதாய் எழவைத்தது என்னுடைய தந்தையாரவர்களுடைய அருள்வடிவம். இவ்வாறு எனக்கு ஏற்பட்ட பெருஞ் சங்கடங்களைத் தன் அருள் சக்தியால் போக்கி என்னைத் தேற்றித்தெம்பு உண்டாக்குவார்கள்.

இதேபோன்ற மற்றொரு நிகழ்ச்சியை நினைவு படுத்த விரும்புகிறேன். சினிமாக் கொட்டகைக்குப் பத்தடி தூரத்தில் ஏராளமான கூரை வீடுகள் இருந்தன. ஒருநாள் அக்கூரைக் குடிசைகளிலே திடீரென்று தீப்பிடிக்கத் தொடங்கியது. சினிமாக் கொட்டகையும் தீயில்பட்டு விடுமோ என்ற ஐயம் எனக்கு எழுந்தது. முப்பதினாயிரம் பெறுமான அச்சொத்து தீக்கிரையாகி விடுமோ என்று வருந்தலானேன். என் நிலையைக் கண்ட என் தந்தையாரவர்கள் அமைதியாக "இத் தீ நமக்கு ஒரு தீங்கும் ஏற்படுத்தாது. கவலைப்படாதே! இத் தீ காற்றில் திசை மாறி ஓடிவிடும்," என்று சொன்னார்கள். என்ன ஆச்சரியம்! அடித்த காற்று திடீரென்று திசை மாறியடித்தது. தீயின் வேகம் இருந்த இடம் தெரியாமல் அணைந்தது. இதன் மூலம் காற்று, நெருப்பு, தண்ணீர் முதலிய பஞ்ச பூதங்களையும் தன் சக்தியால் எளிதில் வெல்லும் ஆற்றலுடையவர்கள் சுவாமிகள் என்பது தெளிவானது.

இங்ஙனம் எத்தகைய துன்பங்கள்வரினும் கலங்காத நெஞ்சமுடைய என் தந்தையாரவர்கள் சிரித்துக்கொண்டே எவ்வினையையும் தீர்ப்பார்கள்.

"இடுக்கண் வருங்கால் நகுக அதனை
அடுத்தூர் வதஃ தொப்பதில்"

என்ற வள்ளுவம் கொண்ட இதயமல்லவா என் தந்தையாரவர்கள்.

ஒருநாள் ஆயிர ரூபாய் பெறுமான மாடுகள் பூட்டிய எங்களுடைய வண்டி சினிமா விளம்பரம் செய்து வரும்பொழுது, ரயில் வண்டியிலே அடிபட்டு அந்த மாடுகள் இரண்டும் இறந்தன. வண்டியிலுள்ளோர் தப்பிவிட்டனர். வண்டிக்காரனே மூர்ச்சையாகி எழுந்திருக்கவில்லை. அதைக் கண்டவர்கள் சுவாமிகளிடம் தலைவிரிகோலமாய் வந்து செய்தியைச் சொன்னார்கள். வண்டியோட்டியின் தாயார், "சுவாமி!...எனக்கு ஒரே மகன்தான். ஆஸ்பத்திரியிலிருக்கும் அவன் பிழைத்துக்கொள்வானா? நீங்கள்தான் காப்பாற்ற வேண்டும் சுவாமி," என்று கண்ணீர் வடித்துக் கதறினாள். அவளுடைய பரிதாபத்தைக் கண்ட என் தந்தையாரவர்களுக்கு இரக்கம் பிறந்தது "அம்மா உன்னுடைய மகனுக்கு ஒருவித ஆபத்தும் இல்லை. இப்பொழுது இங்கேயே வருவான்," என்று கூறினார்கள். தம்முடைய ஆயிரம் ரூபாய் மதிப்புள்ள இருகாளைகள் ரயில் வண்டியில் அடிபட்டு மடிந்து போயினவே என்ற கவலையின்றி கதறுகின்ற அத்தாயின் துன்பத்தைத் துடைத்தார்கள் என்றால் எவ்வளவு இரக்கம் அவர்கள் இதயத்தில் படிந்திருக்க வேண்டும்? அவர்களின் வாக்குப்படியே வண்டியோட்டியும் சுகமே வந்து சேர்ந்தான்.

தெய்வத்திரு பசுபதிபரமகுரு பொதிச் சுவாமிகளின் குருபூஜை வந்து சேரும். வீட்டிலுள்ளோர், மற்றும்பலர் ஆச்சரியப்படுவார்கள். குருபூஜைக்கு இன்னும் நான்கு நாள்தான் இருக்கின்றன. அதற்கு வேண்டிய அலங்காரப் பந்தல்கள், ஒளி விளக்குகள், சமையலுக்கு வேண்டிய பொருள்கள் எல்லாம் வந்து சேரவில்லையே என்று கவலைப்படுவார்கள். அதைக் கண்ட என் தந்தையார் அவர்கள், "ஓகோ! பொதிச் சுவாமி அவர்களின் குருபூஜை நடக்க இருக்கிறதோ!" என்று தெரியாததுபோல் பேசுவார்கள். இன்னும் இரண்டு நாட்கள் தான் இருக்கும் பூஜைக்கு, அப்போதுதான் என் தந்தையார் அவர்கள் "செண்புகபுரத்துக்காரர்களும், புதூர்காரர்களும் தயாராக வண்டி கட்டி சமையலுக்கு வேண்டிய காய்கறிகள், வாழை இலைகள் விறகுகள் முதலியவைகளை ஏற்றிக்கொண்டு வருகிறார்கள். அலங்காரக் கொட்டகை போடுபவனும் இப்போது வந்து விடுவான். மேளதாளக் கச்சேரி வித்துவான்கள் வண்டி ஏறிவிட்டார்கள். இன்று சாயங்காலம் வந்துவிடுவார்கள்," என்று கூறுவார்கள். அதன்படியே எல்லோரும் மாலையிலேயே வந்து சேர்ந்துவிடுவார்கள். கொட்டகை வேலை ஒருபக்கம் துரிதமாய் நடக்கும், மறுபக்கம் சமையலுக்கு வேண்டிய பொருள்கள் எல்லாம் வண்டி வண்டியாக வந்து மலைபோல் குவிந்துகொண்டிருக்கும். இவ்வாறுவேலைகள் கனவேகமாய் நடந்து குருபூசையும் வெகு விமரிசையாய் நடைபெறும். இதை மக்கள் கண்டு களிப்பெய்துவார்கள். பூசைக்கு வந்த மக்களுக்கும், அன்பர்களுக்கும், பக்தர்களுக்கும் அருளுடன் இன்னிசையும் அறுசுவை விருந்தும் அளிக்கப்படும். அதனைக் கண்டு அனைவரும் அதிசயப்படுவர்.

தெய்வ அருள் நிறைந்த தந்தையாரவர்களுக்கும், அன்னைக்கும் எப்பொழுதும் பக்கத்திலிருந்து அந்தக் காலத்தில் பணிவிடை செய்கின்ற வாய்ப்பு எனக்குக் கிடைத்தது என்றால் அது யான் செய்த பாக்கியமே! எனக்குற்ற பல பூசல்களைத் தீர்த்து, அருள் குணமளித்து, இவ்வுலகிலே வாழும்முறை தொடுத்துக் கொடுத்து என்னை ஆளாக்கிய பெருமை அவ்வருட்சோதியின் மகிமையேதான். தந்தையாரவர்கள் வாக்குப்படியேபொதுநலத் தொண்டனானேன். ஊராட்சிமன்ற உபதலைவரானேன். என் தந்தையார் அளித்த பயிற்சிதான் இன்றும் எங்கள் வீட்டுக்குத் தேடிவருகின்ற வழக்குகளைத் தீர்த்து பாமரர்களுக்கு நல்வழி கூற ஊன்றுகோலாய் இருக்கிறது. "சாமி மகன் சின்னச்சாமி இருக்கிறார். அங்கு சென்றால் தான் நம் வழக்குத் தீரும்," என்பார்கள் கிராம மக்கள். அவ்வாறு அவர்கள் கூறக் காரணம் என்னவென்றால் என் தந்தையவர்களைப் போற்றித் துதித்த பற்றுத்தான்.

கனிவோடு வளர்த்து அடியேனை ஆளாக்கிய அருட்சோதியாம் என் தந்தை அவர்கள் சமாதியாகிக் கருவையில் திருக்கோயில் கொண்டார்கள். அங்கமே துடிக்க வருத்தமுற்றேன். ஆற்றாத்துயருற்றேன். ஆனால் அவர்களுடைய ஆத்மச் சுடரும், அன்புத்திடமும் என்னையும் எங்கள் குடும்பத்தையும், ஆத்ம அன்பர்களின் குடும்பங்களையும் என்றென்றும் நிலைபெறச் செய்து நிறைந்த அருளைக் கொடுக்கும் என்று உறுதி கொள்கிறேன்.

---

# நீங்கா நினைவுகள்

திரு ராஜகோபால் நாயக்கர், தேவாரம்

செந்தமிழ் நாட்டின் மேற்கு எல்லையில் உள்ளதும், கேரள நாட்டின் வடகிழக்கு எல்லைக்கு மிக நெருங்கி யிருப்பதுமான தேவாரம் என்னும் எங்கள் கிராமத்தில், மகேஸ்வரி விலாச ஏலத்தோட்டத்தின் சொந்தக்காரரான, த. அ. கு. அழகர்ராஜா அவர்களது இல்லத்தில், சுமார் 40 ஆண்டுகளுக்கு முன், நமது மதிப்புக்குப் பெரும் பாத்திரமாகிவிட்ட தவத்திரு பொன்னையாசுவாமி அவர்களை, முதல் முதலாகச் சந்திக்கும் வாய்ப்பு ஏற்பட்டது.

பொன்னொளிர் மேனி, நடுத்தர உயரம் தவத்தால் குவிந்து குளிர்ந்த திருக்கண்கள், மலர்ந்தமுகம், அருள் ஒழுகும் இனிய சொற்கள் சிறிய புன்முறுவல் இவையாவும் ஒருங்கு சேர அன்றுகண்ட காட்சி மறக்க இயலாததுடன் அவர்களிடத்தில் ஒரு தனிப்பட்ட இன்னதென்று விவரிக்க இயலாத ஏதோ ஒரு மகா சக்தி உள்ளுறைந்திருக்கிறதென்ற எண்ணமும் உண்டாயிற்று.

அவர்களைச் சந்திக்கக்கிடைக்கும் வாய்ப்பை இழந்துவிடாமல் இருந்துவரலானேன். தேவாரத்துக்கு வருடத்தில் மூன்று நான்கு தடவைகளேனும் திரு ராஜா அவர்கள் இல்லத்துக்கு வருவார்கள். வரும்போதெல்லாம் மாதக் கணக்கில் தங்குவார்கள். அவர்களது கனிந்த பேரன்பு தேவாரத்துப் பிரமுகர்களைக் கவர்ந்தது. எல்லோரும் அவர்களிடத்தில் தனியன்பு பாராட்டி மரியாதை செய்யும் நிலைவளர்ந்தது.

அவர்களைச் சந்தித்த யாரும் அவர்களிடத்தில் ஒரு தெய்வீக சக்தி பரிணமித்துக்கொண்டிருப்பதைக் கண்டார்கள்.

சுவாமியவர்கள் தேவாரத்திற்கு வந்து விட்டால் அவர்களைச் சுற்றிச் சதா சபையோர்கள் கூட்டம் நிறைந்திருக்கும். அவர்களுக்கும் ஆனந்தம் உண்டாகிவிடும். தெளிந்த ஞானமும் பக்தியும் நிறைந்த அவர்களது கருத்துக்கள் யாரையும் கவர்ந்து தன் வசப்படுத்த வல்லவை யானதால், இரவு பகல் எந்த நேரத்திலும் யாராவது முக்கியஸ்தர்கள் அவர்களுடன் இருந்துகொண்டே யிருப்பார்கள். பராசக்தியின் பெருமையைப் பேச ஆரம்பித்து விட்டால் அவர்களுக்கும் பேச்சை முடிக்க விருப்பமிராது. கேட்பவர்களும் அந்த அன்பு மதுவுண்டு மயங்கி அவர்களைவிட்டு நீங்க மனமில்லாதவர்களாக, நேரம் போவது தெரியாமல் குடும்ப வேலைகள் உணவு நேரம் முதலியவற்றையும் மறந்துவிடுவார்கள். இவ்விதம் அவர்களுடைய கனிந்த சொற்கள், அருட்பார்வை, இளம் புன்முறுவல் இவைகளில் மயங்கிப் பலரும் இருந்த நாட்கள் பலப்பல.

தேவாரத்தில் பிரமுகர்கள் பலரும் அவர்களுடைய அருட் பார்வையால் கவரப்பட்டாலும், விசேஷமாக நிழல்போலப் பெரும்பாலும் அவர்களை விட்டு நீங்காதிருந்தவர்களில் முக்கியமாகக் குறிப்பிடத் தக்கவர்கள், திருவாளர்கள் பங்காரு ராஜா அவர்கள், வேணுகோபாலய்யரவர்கள், ராமமூர்த்தி ஐயரவர்கள், ரெங்கசாமி நாயக்கரவர்கள், கொண்டுலு செட்டியாரவர்கள், S. R. காமாக்ஷி செட்டியாரவர்கள், அழகப்பிள்ளை அவர்கள், லோகநாயகம்பிள்ளை அவர்கள் முதலியோர் ஆவர். இவர்களெல்லாம் ஊண் மறந்து, உறக்கம் சுருக்கி சுவாமி அவர்களைவிட்டு நீங்காதிருப்பவர்கள்.

இவர்களைத் தொடர்ந்து பல பிரமுகர்களும் அடிக்கடி வந்து சந்தித்து உரையாடிச் செல்வார்கள்.

தேவாரத்துக்கு தென் மேற்குப் புறத்தில் காற்றின் வல்லமையால் நிர்மாணிக்கப் பெற்ற மணற்குன்றுகள் சூழ்ந்த கடலைக் காடுகள் உண்டு. தினமும் மாலை நேரங்களில் உலாவுவதற்கு சுவாமிகள் சென்றால் அவர்களைச் சுற்றி நிழலெனத்தொடரும் ஒரு அன்பர்குழாம். எல்லோருமாக மணற்குன்றுகளில் உட்கார்ந்து பேசுவார்கள். அரசியல், தெய்வீகம் தனிப்

பட்ட ஞானிகள் சரிதம் முதலிய பல விஷயங்கள் பேச்சில்வரும். நேரம்போவது தெரியாது. நிலாக் காலமாகிவிட்டாலோ கேட்கவேண்டாம். இரவு 9, 10 மணி நேரம்வரை சங்கம் கலையாது.

தேவாரத்துக்குத் தென் திசையில் சுமார் 16 மைல் தூரத்திலுள்ளதும், தமிழ்மாமுனிவராம் அகத்தியர் தங்கித் தவமியற்றும்பேறு பெற்றுள்ளதும், உலகத்தாரின் பெரு மதிப்பைப் பெற்றுள்ளதுமான பொதிகை யென்னும் சுருளி மலைக்கு அன்பர்களுடன் சென்று அங்கு சில நாட்கள்தங்கிதியானத்தில்ஈடுபட்டு சுவாமிகள் வருவதுண்டு. சில சமையங்களில் ஜாலமலை (தேவாரத்துக்கு தென் கிழக்குத் திசையில் உள்ளது) க்கும், ஊருக்கு மேல்புறமுள்ள தலையூற்று என்னும் தீர்த்தத் தொட்டிக்கும் குழாத்துடன் சென்று இன்புற்று வருவார்கள்.

சுவாமியவர்கள் அன்பர்களுடன் அளவளாவிக் கொண்டிருக்கும்பொழுது இடையில் தியானத்தில் ஆழ்ந்து மௌனமாகிவிடுவார்கள். பல சமயங்களில் ஒன்றிரண்டு மணி நேரத்தில் அந்நிலை மாறிச் சகஜநிலைக்கு வந்துவிடுவார்கள். சிலசமயங்களில் அந்தத் தியான நிலையிலேயே பூரணமாக லயித்துவிடுவார்கள். பழகிய நண்பர்களுக்கெல்லாம் அவ்விதச் சூழ்நிலை பார்த்துத் தெரிந்து கொண்டதால் ஒருவர் இருவராக மாறி மாறிப் பக்கத்தில் இருக்க மற்றவர்கள் தங்களது உணவு முதலிய காரியங்களைக் கவனிக்கச் சென்று வருவார்கள். சுவாமியவர்கள் தியான நிலை வளர்ந்து கொண்டே இரவு பகல்கள் சென்று இரண்டு மூன்று தினங்கள் அன்னமும் நீருமின்றியே தன்னை மறந்த தியான நிலையிலேயே அவர்கள் இருந்ததை தேவாரத்தில் பல தடவைகள் அன்பர்கள் கண்டிருக்கிறார்கள். இவ்வித சந்தர்ப்பங்களிலெல்லாம் தியானநிலை கலைந்து உலக உணர்ச்சிக்கு வரும்போது மெதுவாகப் பேச ஆரம்பிப்பார்கள். அப்போது தியான நிலையில் அவர்களுக்குக் கிடைத்த ஆனந்த அனுபவமெல்லாம் பேச்சாக வெளிவரும். பேச்சு முடிந்த பின்னரே தாகத்துக்கும் பசிக்கும் வேண்டியதைக் கொடுப்பார்கள். அப்போதுதான் மலர்ந்த முகத்துடன் உட்கொள்வார்கள்.

சுவாமிகள் எப்போது யாருடன் பேசினாலும் பெரும்பாலும் அன்னை பராசக்தியின் மகிமை, அன்னையின் அருள்பெற்ற தெய்வத்திரு பொதிச்சாமிகளின் பெருமை இவைகளே நிறைந்திருக்கும், அன்னை வழிபாடும், குருநாதரின் தொண்டுமே அவர்களை ஆட்கொண்டிருந்தன.

அவர்களுடைய அன்புக்குப் பாத்திரமானவர்களின் முகம் சோர்ந்திருக்கக் கண்டால் அவர்களை அதுபற்றிப் பெரும்பாலும் கேட்காமலேயே கண்களை மூடித் தியானத்தில் ஆழ்ந்துவிடுவார்கள். சிறிது நேரத்தில் அவர்களுடைய முகம்மலரும், புன்முறுவல் காணும். கண்ணைத் திறந்ததும் பேச ஆரம்பிப்பார்கள். அவர்களுடைய துயரம் தீர்வதற்கான மார்க்கங்களை அன்னை பராசக்தி அவர்களுக்குத் தெளிவுபடுத்திய பதிலாகவே அவர்களுடைய பேச்சு வெளிவரும். இப்படியே எத்தனையோ தடவைகள் நடந்ததுண்டு.

நோயுற்றவர்கள் அவர்களிடம் வந்து தங்களது சிரமங்களைக்கூறி மருந்து கேட்பார்கள். உடனே கண்கள் மூடும். தியானநிலை கூடும். புன்சிரிப்புத் தவழும். அன்னையின் ஆணை கிடைத்திருக்கக்கூடும் போலும், பெட்டியைத் திறப்பார்கள். அதிலிருந்து மிகச் சிறியதாக வேறொரு பெட்டி. அதற்குள்ளாக வெல்வெட்டால் சுற்றி வைக்கப்பட்ட மிகச் சிறிய மருந்து பாட்டில். அவர்கள் அதை வைத்திருக்கும் பாங்கைப் பார்த்தாலே மருந்தின் மதிப்புத் தெரியவரும். நோயாளிக்குநம்பிக்கை ஏற்பட்டுவிடும். பாட்டிலைத் திறந்து அரை அரிசி எடை இருக்கும்படியாக 2, 3 பொட்டலங்களை அழகாக மடித்துக் கொடுப்பார்கள். சாப்பிட்டவுடனே நோய் தீர்ந்துவிடும்.

ஒரு சமயம் திரு அழகர்ராஜா அவர்களுக்கு மூல உபத்திரவம் இருந்தது. அதற்காக சுவாமியிடம் மருந்து கேட்டார்கள். அதற்கான மருந்துகள் கைவசமில்லை யென்றும், மதுரை யிலிருந்து மருந்துகளை வாங்கி வந்தால் செய்து கொடுப்பதாகவும் சொன்னார்கள் சுவாமிகள். உடனே மதுரைக்கு ஆள் அனுப்பி மருந்துகள் வந்து சேர்ந்தன. வாங்கி வந்த மருந்து மதிப்பு சுமார் 500-600 ரூபாய்களுக்கு இருக்கலாம். மலை காடு முதலிய இடங்களி லிருந்து பச்சிலைச் சுமைகள் வந்து சேர்ந்தன. சாறுகள் பிழியவும் மருந்துகள் அரைக்கவும் தினம் 10, 20 ஆட்கள் வேலை செய்தார்கள். பலவகைகளிலுமாகப் புடமிட்ட மருந்துகள் தயாராயின. இவ்விதமாக இரண்டு மாதங்கள் ராஜா அவர்களின் மேற்கு வீடு ஒரு சித்தரது ஆஸ்ரமமாகத் தோற்றமளித்தது. அதன் பின் னர் $\frac{1}{4}$ ராத்தல் முதல் 4 ராத்தல் வரை பிடிக் கக் கூடிய கண்ணாடி பாட்டில்கள் 60, 70 பாட் டில்களில் அந்த மருந்துகளை நிறைத்தார்கள். தோதகத்தி மரத்தாலான அழகிய பெரிய பீரோ ஒன்று தயாராயிற்று. வேலைகள் முடி வானதும ராஜா அவர்கள் எஸ்டேட்டில் பொறுப்பான பதவி வகித்திருந்த திரு தனுஷ் கோடி ராஜாவை அழைத்து ஒவ்வொரு பாட் டிலிலும் உள்ள மருந்தின் பெயர், அவை தீர்க் கும் நோய்கள், வயதுக்குத் தக்கப்படி கொடுக்க வேண்டிய அளவு இவை குறித்துத் தமிழில் விவரமாக எழுதி ஒவ்வொரு பாட்டிலிலும் ஒட்டும்படி சொன்னார்கள். மொத்தமாகப் பார்த்தால் அது ஒரு வைத்திய சாலைக்குரிய தும்; எந்த நோயையும் தீர்க்கக்கூடிய சக்தி படைத்த மருந்துகளும் ஆக அது இருந்தது. மருந்து தயாரித்தானதும் ஒரு அரை அவுன்ஸ் பாட்டிலில் பாதிக்கும் குறைவாக உள்ள பாட் டில் ஒன்றை திரு ராஜா அவர்களிடம் கொடுத்து தினமும் அரிசி எடை வீதம் சாப் பிட்டு வரும்படி சுவாமி சொன்னார். ஒரு வாரத்தில் மூலநோய் தீர்ந்து விட்டது. பீரோ நிறையமருந்துகள் அப்படியே இருந்தது பற்றி ராஜா அவர்களும் மனதில் எண்ணியிருந் தாரேதவிர சுவாமியைக் கேட்கவில்லை. சுவாமி கள் ஒரு நாள் சொன்னார்கள்:- "ஐயா, நோய் கருமத்தின் விளைவு. கருமம் தீருவதற்குப் பல வித நல்லகாரியங்கள் செய்ய வேண்டுமென் பது பெரியோர்கள் கண்ட துணிவு. நீங்கள் பெரிய பணக்காரர்கள். உங்களுடைய பணத் தால் ஆன இந்த மருந்துகள் பலருடைய நோயைத் தீர்க்கும் போது அவர்களுடைய நல்ல பிரார்த்தனை உங்கள் நோயை குணப் படுத்தும் என எண்ணினேன். அதற்காகவே உங்கள் பணமும் உங்கள் உபசாரத்துக்குக் கடமைப்பட்ட எனது முயற்சியும் கலந்து இந்த மருந்துகள் தயாராயிற்று. நீங்கள் யார் கேட்டாலும் மருந்துகள் இனமாகக் கொடுக் கும்படி தனுஷ்கோடி ராஜாவிடம் சொல்லுங்கள் நீங்களும் கொடுங்கள்" என்று சொன்னார்கள். ராஜா அவர்களும் அன்புடன் ஒப்புக்கொண்டு கொடுத்து வந்தார்கள். ஆயிரக்கணக்கான வர்களுக்குக் கொடுத்தும் இன்னும் ஏராளமாக அவர்களிடம் மருந்துகள் மீந்திருக்கிறது.

சுவாமி அவர்கள் பெரும்பாலும் வெண்மை யான வேஷ்டி, துண்டு, சில்க் சட்டையே தரிப் பார்கள். ஒரு நாளேனும் காஷாயம் அணிந்த தில்லையாயினும் அவர்களைக் கண்ட யாரும் துறவிக்குரிய மரியாதை செலுத்தி வந்ததை எல்லோரும் அறிவார்கள். மனைவி, மக்கள், சுற்றம் உள்ள பூரணமான இல்லறவாசியா யிருந்தாலும், உள்ளத்தில் துறவு பூண்டு அன்னையின் தியானத்தில் ஈடுபட்டு ஜனகரைப் போன்று ராஜயோகியாகத் திகழ்ந்தார்கள். அவர்களுடைய குடும்பத்தார்கள் எல்லோரை யும் தன்னைப்போலவே தெய்வீக வாழ்வு வாழும்படி செய்திருக்கிறார்கள்.

சங்கரன்கோவில் தாலுகாவின் சுற்றுப் புறங்களில் தெய்வீக ஒளி பரப்பி அன்னையின் அனுபூதியடைந்த அவர்களது மதிப்புக்குரிய தெய்வத்திரு பொதிச்சாமி அவர்கள் சுமார் 15, 16 ஆண்டுகளுக்கு முன்பு மகாசமாதி

அடைந்துவிட்டார்கள். குருபக்தியில் சிரத்தையுள்ள நமது சுவாமிகள் தெய்வத் திருபொதிச்சாமி அவர்களின் சமாதியில் ஸ்ரீசக்ர பீடம் ஒன்றை அமைத்து விழா நடத்தினுர்கள். விழாபூர்த்தியான ஐந்தாண்டு காலத்தில் நமது சுவாமிகளும் அன்ன பராசக்தியின் அருள் ஒளியிலும், குருநாதரான பொதிச்சாமிகளின் தெய்வீகத்திலும் கலந்து நமக்கெல்லாம் தோன்ருத் துணையாயிருந்து வருகிருர்கள்.

ஏழை, பணக்காரர், கலைஞர்கள் உயர்ந்தவர், தாழ்ந்தவர் எனப்பாராது யாரிடத்தும் இன்முகம் காட்டிக் கருணைபூத்த அந்தத்திரு முகம், புறத்தில் இனிக்காணக் கிடைக்காதாயினும் அகத்தில் எல்லோரிடத்திலும் என்றும் நீங்காது விளங்கி வருகிறது.

வாழ்க அவர்களது கருணை! வளர்க அவர்களது அருள்!

## போற்றி வாழ்வோம்!

புலவர்மணி, வித்துவான், மதுரை தி. கி. சுந்தரமூர்த்தி

தேசுமிகு வடிவுடையார் செந்தமிழில்
அறவுரைகள் செப்ப வல்லார்,
மாசகலக் கதைமூலம் மாண்பொருள்கள்
வரலாற்ருே டிசைத்துக் கூறிக்
காசினியோர் பிணிநீக்கிக் காலத்தின்
நிகழ்ச்சிமுன் கழறி வாழ்ந்த
தேசிகனும் பொன்னையா சுவாமிபதம்
சிந்தையினி லிருத்து வோமே!

# செயற்கரிய சித்துக்கள்

திரு இ. நீ. நக்கீரமுல்லைப்பாண்டியன், இராசபாளையம்.

பழம் பதியாகிய நம் பாண்டிமா மண்டலம் இம்மண்ணையும், பொன்னையும், விரும்பாது துறவறத்தில் மூழ்கி, தூயசக்தி படைத்த பல தெய்வச் சித்தர்களை ஈன்றுள்ளது. சித்தர்கள் என்போர் தவமிருந்து தன் நிழல் துன்பங்களைக் களைவதோடு பிறர் துன்பங்களையும் துடைக்க வல்லோராவர். அகிலம் சூழ் ஆசையினை அறவே யொழித்து, தன் அகம் அடக்குவதே யோகம் என்பர். ஆனால் இதை அடக்குவான் வேண்டி முயல்வது கடினமே. அக்கடின யோகம் புரிந்து வன்புகழோங்கும் ஒரு வல்ல சித்தரை இராசபாளையம் இப்பாருலகிற்குப் பரிசாக ஈந்தது.

### தவமிகு சித்தர்கள்

சித்தர்கள் விண்ணையும் மண்ணையும் தங்கள் மங்காத ஞானத்தால் அளந்தவர்கள். எண்ணையும் எழுத்தையும் மறை தவமும் எழில் ஏடாகக் கண்டவர்கள். வெண்ணிலாச் சுடர் கதிர்போல் விலையிலாக் கருத்துக் குவியல் களுக்கு அவர்கள் ஓர் அவதாரம். எண்ணிலாப் பிணிகளுக்கும், பேயுள்ளம் கொண்டவர்களுக்கும் கிடைத்த ஓர் மருந்தருவி. கண்ணிலா சமுதாயத்தின் கடுந்துயர் போக்கிக் கனிவோடு கேட்பதை கணக்கின்றி வழங்கும் கற்பகத்தரு. அத்தகைய தவச் செல்வமும், தண்டமிழ்ப் புலமையும் கொண்ட சித்தர்தான் தவத்திரு

பொன்னையா சுவாமிகள். பல்லாண்டு கடுந் தவம் புரிந்து கண்ட ஞானத்தால் பலப்பல சித்துக்களை இப்பாரிடை தெளித்துத் தெய்வ மானார்கள்.

**சித்தர்களின் செயல்கள்**

சித்தர்களின் செயல்களை மதுரைக்கலம்பகத் திலே சிறப்பாகக் கூறப்படுகிறது.

"குரும்பை வெம்முலை சேர்மது ரேசர்பொற்
கோபுரத்திற் கொடிகட்டு சித்தர் யாம்
கரும்பை முன்புகல் லானைக் கிடுஞ்சித்தர்
கையிற் செங்கல் பசும்பொன்ன தாக்கினேனோம்
இருந்த வீடும் வறும்பாழ தாமவர்க்
கெருத்துக் கொட்டிலும் பொன்னேய்ந்
திடச்செய்தோம்
அருந்த னங்நமக் கோதன மேயப்பா
ஆட கத்துமற் றுசையவ் வையர்க்கே."

மதுரை சொக்கநாதரது உமாதேவியின் பொற்கோபுரத்தில் கொடி நாட்டவல்ல சித்தி பெற்ற ரசவாதிகளாவோம் நாங்கள். முன்பு கல்யானைக்குக் கரும்பை உண்ணும்படி செய்த வல்ல சித்தராகியசோமசுந்தரரது கையிலுள்ள செங்கல்லைப் பசும் பொன்னுக்கினேம். அவர் கையில் வில்லாக உள்ள மேருமலையையும் பொன்மலையாகச் செய்தோம். அவருடைய எருத்துக் கொட்டிலையும் பொன் கூரையாக்கி னேம், என்பதே மேற் குறித்த பாட்டின் பொருள்.

**தெய்வத்திரு சுவாமிகள்**

இதுபோன்று சுவாமிகள் இளமையிலேயே எட்டு வகையான சித்துக்களைக்கற்று இந்த ஞாலத்திலே சிறந்த ஞானியாகத் திகழ்ந்தார் கள். சுவாமிகளும், அவர்களுடைய நண்பரா கிய திரு தாதாசாமி என்பவர்களும், வாசுதேவ நல்லூர் அருகில் கோடாங்கிபட்டிக்கு அண் மையிலுள்ள சாயமலையில் பலதிங்கள் தங்கி பலவகையான மூலிகைகளைக் கண்டுபிடித்து ஒளி வீசும் தங்கம் செய்தார்கள்.

"தீயினுள் தெறல் நீ, பூவினுள் நாற்றம் நீ
கல்லினுள் மணியும் நீ, சொல்லினுள் வாய்மை நீ
அறத்தினுள் அன்பு நீ, மறத்தினுள் மைந்து நீ
வேதத்து மறை நீ, பூதத்து முதலும் நீ
வெஞ்சுடர் ஒளியும் நீ, திங்களுள் அளியும் நீ"

என்று மாண்புடைய மக்களாலும், நற்செல் வர்களாலும், புலவர்களாலும், நல்லறிஞர் களாலும் தெய்வத் திருவுடையார் என்று நெடுங்கரங் குவித்து வணங்கிப் போற்றும் சுவாமிகள் இப்பாரில் தோன்றிய ஒரு வெண் ணிலா. அந்நிலவின் சுடர்பட்டோர் சூழ்ச்சி, பொறாமை, வஞ்சகம் இவைகளை விட்டொழிப் பர். சுவாமிகளின் மலர்ப்பாதங்களில் விழுந்து வணங்கி வேதனைச் சுமைகளை வேரோடு களைவர்.

**சுவாமிகளின் துறவுவழி**

சுவாமிகள் மறக்குடியில் பிறந்து, மாவீரராய் இளமையில் திகழ்ந்து பின் மாமுனிவரானார் கள். இவர்களுடைய தாயார் திருமதி இலட்சுமி அம்மையார் சுவாமிகள் பதினேழாம் வயதிலே யேத் துறவியாகும் வழிகளைக் கடைப் பிடிப்பது கண்டு, "மணவாழ்வு செய்து மகிழ்வோடு மனையறம் நடத்தாது தன் மகனார் சாமியார் கூட்டங்களோடு பின் தொடர்ந்து செல்கின் றாரே" என்று ஏங்கிக் கவலையில் ஆழ்ந்தார்கள்.

**பெருமாள் கோவிலிலே சுவாமிகள்**

சோலைகள் சூழ் பெருமாள் கோவிலிலே சுவாமிகள் முன் மண்டபத்திலமர்ந்து இரவு நிஷ்டையில் அமர்வார்களே யானால் பின் எப் பொழுது கண் விழிக்கிறார்கள் என்று சொல்ல முடியாது. தன் மகனார் துறவி யானாலும் கூட அவருக்கு வேண்டிய உதவிகளை அத்தா யுள்ளம் செய்துதான் வந்தது. வைகறையிலே யெழுந்து அவ்வம்மையார் நீராடி, ஈரச்சேலை யணிந்து பெருமாள் கோயிலுக்குச் செல்வார் கள். ஆங்கு மூன்று வெள்ளைக்கல்லை அடுப்பாக வைத்து, ஒரு சிறிய பாத்திரத்திலே பச்சரிசியை யும், பாசிப்பருப்பையும் இட்டுச் சமையல்செய்து அதிலே நெய்யையும் கலந்து சுவாமிகளுக்கு உணவு தயாரிப்பார்கள். நள்ளிரவு மணி யொன்றுக்கு நீராடிப் பூசைதனை முடித்து,

நிஷ்டையில் நாடோறும் உட்காரும் சுவாமிகள், கதிரவன் பவனிவந்தபின் பத்து அல்லது பதி னென்று மணிக்குத்தான் கண்விழிப்பது வழக் கம். சுவாமிகளுடைய தாயார் தன் மகனுர் கண்விழிக்கும் வரை அம்மண்டபத்திலே மிகப் பயபக்தியோடு நிற்பார்கள். கண்விழித்த சுவாமிகள் தம் அன்னையைக் கண்டதும் திடுக் கிட்டு, "அன்னையே! நெடு நேரம் நின்று கொண்டிருக்கிறீர்களே. கால்கள் வலிக்க வில்லையா? உட்காருங்கள்," என்று அன்போடு சொல்லுவார்கள். இவ்வார்த்தைகளைக் கேட்ட அத்தாயின் மனம் மகிழ்ச்சியடையும். அன் போடு அன்னை உருட்டித் தரையில் படைக்கும் உணவை சுவாமிகள் தமது கைகளைப் பின்புற மாகக் கட்டிக் கொண்டு, கால்களை மண்டியிட்டு வாயால் கவ்வி உண்பார்கள். பின்னர் ஞான மார்க்கப் பாடங்களில் தம் மனதைச் செலுத்து வார்கள். இரவு ஒன்பது மணியாகிவிட்டால் கோயிலுக்கு வந்து இவர்களுடைய தாயார் இவர்களுக்குப் பால் காய்ச்சிக் கொடுப்பது வழக்கம். இவ்வாருக சுவாமிகளுடைய தாயா ரவர்கள் தன் மகனுருக்கு இனிய சேவை செய்து வந்தார்கள். இங்ஙனம் சுவாமிகள் பல மாதங் கள் அப்பெருமாள் கோயிலிலே தங்கி யோக முறைகளைக் கைக் கொண்டார்கள்.

### சிங்கிலிபட்டியிலே சுவாமிகள்

பெருமாள் கோயிலிலே தங்கியிருந்த சுவாமி கள் திடீரென்று சிங்கிலிபட்டிக்குச் சென்றுவிட் டார்கள். அங்கு பிரசித்தி பெற்ற மடத்தி லுள்ள தவத்திரு முத்தானந்த சுவாமிகளோடு தங்கி வேத நூல்களை ஆராய்ச்சி செய்து வந்தார்கள். நம் சுவாமிகளுடைய தாயா ரவர்கள் அவர்களுக்கு மாதம் பதினைந்து படி அரிசியும், பத்து ரூபாயும் அனுப்பி வந்தார்கள். இப்படி வருங்காலையில் தன் மகனுருடைய நினைவு வந்த காரணத்தால் அந்த அம்மையா ரவர்கள் சுவாமிகளைப் பார்க்க சிங்கிலிபட்டிக் குச் சென்ருர்கள். தம் தாயாரைக் கண்ட சுவாமிகள் பணிவோடு வணங்கி வரவேற்ருர் கள். சுவாமிகள் "தாயே! ஒரு வார்த்தை சொல்லியனுப்பியிருந்தால், நான் வர மாட் டேனு? ஏன் தங்களுக்கு இவ்வளவு சிரமம்?" என்ருர்கள். அவ்வம்மையார், "சுவாமி! இங்கு இருந்தது போதும். ஊருக்குப் புறப்படு. உனக்குத் திருமணத்திற்கு வேண்டிய ஏற்பாடு களைச் செய்து கொண்டிருக்கின்றேன், இந்தத் தடவையும் ஏமாற்றிவிடக் கூடாது." என்று கூறலானுர்கள். இக்கண்டிப்பான வார்த்தை களைக் கேட்ட சுவாமிகள், தம் தாயாரை ஏமாற்ற நினைத்து, "தாயே! எனக்குத் திருமணம் செய் வதிலே எந்தவிதத் தடையுமில்லை. ஆனல் நான் படிக்கிற வக்கீல் படிப்பு இருக்கிறதே, அது முடிய இரண்டாண்டுகளாவது ஆகும். இது முடிந்தவுடன் உங்கள் சொற்படியே நடக்க இருக்கிறேன்." என்று குழைவாகப் பேசி தம் தாயாரை ஏமாற்றிவிட்டார்கள். சரி தன்னு டைய மகனுரின் வக்கீல்ப் படிப்பு முடியட்டுமே, பின்னர் பார்த்துக்கொள்ளலாம்," என்று முடிவு செய்து தன் மைந்தரிடம் விடைபெற்றுக் கொண்டு சுவாமிகளுடைய தாயார் இராசபா ளையம் திரும்பினுர்கள்.

### சிங்கிலிபட்டியிலே அதிசயச் சித்து

சிங்கிலிபட்டியிலே வாழும் செல்வர்கள் சொக்கம்பட்டி, நெற்கட்டுஞ்செவ்வல் என்னும் மறக்குல ஜமீனைச் சேர்ந்த உறவினர்களாகும். இந்நிறைச் செல்வர்களாலும், ஊர்மக்களாலும் சுவாமிகள் நன்கு மதிக்கப் பெற்ருர்கள். இங்ஙனம் வாழ்ந்து வருங்காலையில் சிங்கிலி பட்டியிலே ஓர் அதிசயமான நிகழ்ச்சி நடந் தேறியது. ஒளிவீசும்விலை உயர்ந்த நாகரத்தின முத்தொன்றை அம்மடத்துப் பெரிய சுவாமிகள் மிக அருமையாகப் பாதுகாத்து வந்தார்கள். அதை ஒரு ஜமீன்தார் அவர்களுக்குப் பரிசாகக் கொடுத்துச் சென்ருர்கள். தெய்வருள் கொண்ட பெரிய சுவாமிகள் இவ்வாறு அம் முத்தைப் பாதுகாத்து வருவதை எவரும் அறிந் திலர். ஏன்? நம் சுவாமிகளுக்குக் கூடத் தெரியாது. ஒரு நாள் சுவாமிகள் பக்கத்துக் கிராம மக்கள் பக்தியோடு அழைக்கவே, அவர்கள் அக்கிராமத்திற்குச் சென்றிருந்

தார்கள். சுவாமிகள் வெளியில் சென்ற நேரம் பார்த்து, அதிகாலையில் நான்கைந்து முரட்டுத் திருடர்கள் சிங்கிலிபட்டி மடத்திற்குள் நுழைந்து, பெரிய சுவாமிகளை அடிக்கவே அவர் மடியிலே கட்டி வைத்திருந்த நாகரத்தினமுத்து கீழே விழுந்தது. லட்சக் கணக்கான பணம் பெறும் அம்முத்தைக் கண்டதும், அச் சுவாமி களிடமிருந்து பறித்துக் கொண்டு, அவரை வேதனைப்பட அடித்துக் கீழே சாய்த்து விட்டு ஓடிவிட்டார்கள். அடிபட்ட வேதனை பொறுக்க முடியாத பெரியசுவாமிகள் "ஐயோ என் முத்து பறிபோனதே, படுபாவிகள் அதைப் பறித்துக் கொண்டு போய்விட்டார்களே," என்று இரவு முழுவதும் அலறிக் கொண்டிருந்தார்கள். மறு நாள் மடத்திற்கு திரும்பிய நம் சுவாமிகள் பெரியசுவாமிகளின் நிலையைக்கண்டும், நடந்த சம்பவங்களைக் கேட்டும் மனம் வருந்தினார்கள். இவ்வாறு மோசம் செய்தவர்களை சும்மா விட லாகாது என்றெண்ணி, "சுவாமிகளே! தங்க ளுக்குத் துன்பமுறுத்தி, முத்தைப் பறித்துப் போன அதே திருடன் இங்கு வருவான் பாருங் கள். விலை உயர்ந்த அம் முத்து கண்டிப்பாய்த் திரும்பக் கிடைக்கும். இம்மடத்திற்கு வந்த வுடன் அவன் வாழ்வும் இங்கேயே முடிந்து விடும்," என்று கடுங்கோபத்துடன் நம் சுவாமி கள் பெரிய சுவாமிகளிடம் கூறினார்கள். மடத் திலே களவு போன செய்தியையும், சுவாமிகள் திருடர்களால் அடிபட்ட நிகழ்ச்சியையும் கேட்டு மக்கள் திரண்டு வந்து பெரிய சுவாமி களுக்கு ஆறுதல் சொல்லி, 'திருடர்களைப் பிடிக்க முயற்சிக்கிறோம்,' என்று வாக்குறுதி யளித்தார்கள். நம் சுவாமிகளோ உடனே நிஷ்டையில் அமர்ந்து, இரண்டு மணி நேரம் கழித்து கண் விழித்தார்கள். அப்போது பயங்கரமாக அலறிக் கொண்டு ஒரு முரடன் ஓடிவந்து நம் சுவாமிகளின் திருப்பாதம் விழுந்து வணங்கி, "சுவாமி! இனி என்னால் வேதனை தாங்க முடியாது. யாரோ, சவுக்கு கொண்டு என்மேல் அடிப்பதுபோல் இருக் கிறது. உடல் முழுதும் நாகவிஷம் ஏறுகிறது. சுவாமி! என்னைக் காப்பாற்றுங்கள். நாகரத் தின முத்தை யெடுத்தவன் நான்தான்," என்று சொல்லி வாய்க்குள்ளிருந்த முத்தைக் கக்கி னன். நம் சுவாமிகள், "அப்பா! பெரிய சுவாமிகளின் பெருமை தெரியாது அவர்களை அடித்து, முத்தை எடுத்துக் கொண்டு போய் விட்டாய். உடன் வந்தோர் பங்கு கேட்பர் என்பதற்காக அதை வாயில் அடக்கிக் கொண் டாய். நஞ்சிலே விளைந்த முத்து அது. எனவே அதே உன்னைக் கொல்லும் எமனாகி விட்டது. உனக்கு விதியும் இன்றோடு முடிந்து விட்டது," என்று அவனிடம் கூறினார்கள். சுவாமிகள் பேசி முடித்தவுடன் அத்திருடன் "ஐயோ" என்று அலறிக் கீழே விழுந்து ஆவி துறந்தான். இக்காட்சியினைக் கண்ட பெரிய சுவாமிகள் தம் மேலாடையால் தம் கண்களை மறைத்துக் கொண்டார்கள். இந்நிகழ்ச்சியைக் கண்ட மக்கள் நம் சுவாமிகளின் சித்து விளையாட்டைக் கண்டு அதிசயித்து அவர்களின் திருவடிகளை வணங்கித் திருநீறு வாங்கி அணிந்து கொண் டேகினார்கள். சுவாமிகளுடைய இச்சித்து மயத்தைக் கண்ட சிங்கிலிபட்டி பெரிய சுவாமி கள் அவர்களை சேர்த்து கட்டிக் கொண்டு ஆனந்தக் கண்ணீர் வடிய "சுவாமிகளே! நான் இம்மடத்திற்குச் சேர்த்து வைத்த சொத்து இம் முத்துத்தான். வேறு எதுவும் இல்லை," என்று சுவாமிகளைச் சுட்டிக் காட்டிக் கூறினார் கள். இவ் வார்த்தைகளைக் கேட்ட சுவாமி களின் கண்களிலே கண்ணீர் பொங்கி மறைந் தது. இப்படிச் சுவாமிகள் சிங்கிலிபட்டியிலே அதிசயச்சித்து புரிந்து மக்களுடைய உள்ளங் களிலே மாசற்ற தெய்வமானார்கள்.

### சுவாமிகளின் இல்லறம்

இவ்விதம் ஒன்றரை யாண்டுகள் சிங்கிலி பட்டியிலே கழித்தபின் தம் தாயின் பிடிவாதத் தால் இராசபாளையம் திரும்பி மாதர்குல மாணிக்கமாம் ஒரு ஏழுவயதுப் பெண்ணான திருமதி கோமதியம்மையாரை திருமணம் செய்து கொண்டார்கள். பின்னர் தென்னை

சூழ் திருவனந்தபுரம் சென்று வடமொழி கற்க லானுர்கள். திருவனந்தபுரம் கல்லூரியிலே பல்லாண்டு சுவாமிகளுடைய வாழ்க்கை கடந் தது. பின் அவர்களின் குருமகான் மஸ்தான் அவர்களின் திருவாக்குப்படியே இராசபாளேயம் திரும்பி, சிவகிரிப் பக்கத்தில் விசுவநாதபுரிச் சத்திரத்திலிருந்த தம் மனைவியாரை அங்குள்ள ஆற்றிலே ஏழு ஊற்றுத் தோண்டி நீராடிவந்து புத்தாடை அணியச் செய்து, பூசை முடித்து இல்லறம் நடத்தலானுர்கள்.

### சுவாமிகளின் அடயோகம்

தமது உடல், தலே, கைகள், கால்கள் வேரு கத் துண்டு துண்டாக வெட்டியது போல் சித றிக் கிடக்க நிஷ்டையில் இருந்து மீண்டும் உறுப்புக்களே ஒன்று கூட்டி யெழுவது அடயோ கம் என்பர் சித்தர்.

சுவாமிகளுடைய தாயாரவர்கள் ஓர் நாள்த் தன் மைந்தரைக் காண்பதற்காக பூஜை அறைக் குச் சென்ருர்கள். அங்கு அவர்கள் கண்ட காட்சி உள்ளத்தைக் குமுறச்செய்தது. சுவாமி களுடைய தலே, கை, கால்கள், வேருகத்துண்டு துண்டாகக் கிடந்தன. அதனைக் கண்டவுடன் சுவாமிகளுடைய அன்னேயார் பயந்து அலறி மயங்கி விழுந்தார்கள். பின்னர் சுவாமிகள் தம் அடயோக நிஷ்டையைக் கலேத்து விட்டு, வெளியே வந்து தமது தாயாருக்கு மருந்து கொடுத்து ஆறுதல் சொல்லித் தெளிய வைத் தார்கள். இப்பயத்தினுல் சுவாமிகளுடைய தாயாரின் உடலிலே வெப்பம் உண்டாகி பொக் களங்களாகக் கிளம்பின. சுவாமிகள் பல நாட் கள் மருத்துவம் செய்து, தமது தாயாருக்கு உள்ளத்திலே ஏற்பட்ட அச்சத்தையும், உடலில் ஏற்பட்ட பொக்களங்களேயும் போக்கினுர்கள். இங்ஙனம் சுவாமிகள் அடயோகத்தில் சிறந்து இந்த அவனி வாழ் மக்களின் இடர் போக்கும் இன்ப ஒளியாய் விளங்கினுர்கள்.

### போலிச்சாமியாரை புது மனிதராக்கியது

அன்பர்களாலும், மக்களாலும் போற்றித் துதிக்கப் பெற்ற சுவாமிகளுடைய நற்புகழைக் கேள்விப் பட்ட பல துறவிகள் இவர்கள் மேல் பொருமை அடைந்தனர். "இவர் என்ன மக் கள் வணங்கும் ஒப்பற்ற சுவாமிகளா! இவரி டம் என்ன சக்தி இருக்கிறது?" என்று ஒருசாமி யார் இறுமாப்புக் கொண்டார். அவர் தன்னிட முள்ள குறளி வித்தையால் சுவாமிகளேச் சோதனை செய்ய வேண்டும் என்ற செருக்கோடு குறளியை ஏவிவிட்டார். அன்று நடுப்பகல் சுவாமிகளுடைய மனைவியார் மொட்டை மாடி யிலே காயவைத்த நெல்மணியை அள்ளுவதற் காக ஏழுமாதக் கர்ப்பமாகிய அவர்கள் ஏணி வழியாக மேல்மாடிக்குச் சென்ருர்கள். என்ன அநியாயம்? திடீரென்று அவர்கள் மேல்மாடியி லிருந்து ஏணிவழியாகக் கீழே விழுந்தார்கள். இவ்வாறு விழுவதைக் கண்ணுற்ற சுவாமிகளு டைய தாயார் :"ஐயையோ, என்ன இது? ஏழு மாத சூலிக்கா இந்த ஆபத்து" என்று அலறி அடித்துக் கொண்டார்கள். இதற்குள் சுவாமி களுடைய மனைவியார் மகிழ்வோடு யெழுந்து, ஒரு துளிக் காயமுமின்றி நடக்கலானுர்கள். சிறிது நேரங்கழித்து அறையில் நிஷ்டையில் இருந்த சுவாமிகள் சிரித்த முகத்தோடு வெளியே வந்து தம் தாயாரிடம் "அன்னேயே ஆத்திரப்படாதீர்கள். கோமதிக்கு ஒன்றும் செய்யாது. வெந்நீர் வைத்து ஊற்றுங்கள் சரியாகி விடும்," என்ருர்கள். பின்னர் தம் மனைவியாரை அழைத்து, "இன்று மாலே ஒரு சாமியார் இங்கு வருவார். அவருக்கு விருந்து வைக்க வடை, பாயாசத்தோடு உணவுதயாரி" என்று சுவாமிகள் சொன்னுர்கள். மாலேயில் அவர்களேத் தரிசனம் செய்ய வந்த அன்பர்கள் சுவாமிகளோடு அன்பு கலந்து உரையாடிக் கொண்டிருந்தார்கள். அந்த நேரத்தில் ஒரு சாமியார் சுவாமிகளேக் கண்டு, சில வார்த்தை கள் சொல்ல வேண்டுமெனக் கூறி வந்தார். அவரைக்கண்ட சுவாமிகள் நேர்முகமாக இருந்து விருந்து வைத்து வரவேற்ருர்கள். "நாம் செய்த தவறுக்காக மன்னிப்புக் கேட்க வந்திருக்கிருேம், இவர்களோ விருந்து வைத்து உபசரிக்கிருர்கள்," என்று அச்சத்தோடு பேச

யெழுந்தார். அதற்குள் சுவாமிகள் "நீர் வந்த விஷயம் எனக்கு நன்ருய் தெரியும். எந்தப் புற்றில் எந்தப் பாம்பு இருக்கிறது" என்று உமக்குத் தெரியுமா? வீட்டோடு இருக்கிற என் வழி வேறு. கருப்பு வேலை கற்றுள்ள உம் வழிவேறு. நீர் தெரிந்த குறளிவித்தை ஞானமார்க்கத்திற்கே முதல்படிதான். அது தெரியாமல் எல்லாம் கடந்து நிற்கிற ஆளிடம் வந்து விஷப் பரீட்சை செய்யலாமா? உம் அளவில் உதாரணத்திற்கு வேண்டுமென்ருல் இதோ பாரும்" என்று கூறித் தனது வலது தொடையைக் கையால் தட்டினுர்கள். இவ்வாறு தட்டியவுடன் குறளிக்காரச் சாமியாரோ தனது வலது தொடயைத் தடவிய வண்ணம் "ஐயோ! காந்தலும் எரிச்சலும் தாங்க முடியவில்லையே, சுவாமிகளே! தங்கள் அருள் சக்தி தெரியாமல் நான்செய்த பிழையைப் பொறுத்தருளி, மன்னித்து விடுங்கள்," என்று காலில் விழுந்து சுவாமிகளைக் கெஞ்சிக் கூத்தாடினுர். சுவாமிகள் கருணைகூர்ந்து தண்ணீர் கொண்டு தம் தொடையைக் கழுவ, குறளிக்காரச் சாமியாரது அல்லல் நீங்கியது. "உமக்கு இனி இச் சக்தி பிரயோசனப்படாது. இதோ இந்த ஏட்டிலுள்ள மூலிகைகளைப் படித்து, வைத்தியம் செய்து பிழைத்துக் கொள்ளும்;" என்று சுவாமிகள் அருளினுர்கள். அச்சாமியார் சுவாமிகளின் திருப்பாதங்களை வணங்கிப் புதுமனிதராய் எழுந்து சென்ருர்.

### சோளக்காட்டிலே மல்லிகை மணம்

சுவாமிகள் தம் நண்பர்களுடன் ஓர் நாள் மாலையில் ஒரு சோளக்காட்டிலுள்ள கிணற்றில் குளிக்கச் சென்ருர்கள். அனைவரும் நீராடிக் கரையேறினுர்கள். கடைசியாய்ச் சுவாமிகள் மகிழ்வுடன் நீராடி வெளியே வந்ததும் திடீரென மல்லிகை மணம் குப்பென்று வீசியது. வந்த நண்பர்கள் மிகவும் ஆச்சரியப்பட்டு, "நாம் வரும்போது இல்லாத மல்லிகை மணம் இப்போது திடீரென்று எப்படி இந்தச் சோளக் காட்டில் வந்தது!" என்று சிந்திக்கத் தொடங்கினுர்கள். ஒருவேளை சோளப்பயிர்களோடு இம்மல்லிகைக் கொடியும் படர்ந்து மலர்ந்திருக்குமோ என்றெண்ணி அக்காட்டிலே தேடலானுர்கள். ஆனுல் சுவாமிகள் புன்னகையோடு கிணற்றுமேலே வந்ததும், அவர்களைப் பார்த்து "என்ன தேடுகிறீர்கள்?" என்று ஒன்றும் தெரியாதது போல் கேட்டார்கள். அவர்கள், "சுவாமிகளே! திடீரென்று இச்சோளக் காட்டில் மல்லிகை மணம் வீசுகிறது. மல்லிகைச் செடி சோளப்பயிரோடு கலந்திருக்குமோ" என்று தேடுகிரேம் என்ருர்கள். அதைக் கேட்ட சுவாமிகள் சிரித்துக்கொண்டே "இத் தென்றலோடு மல்லிகை மணமும் கலந்து வீசினுல் நீங்கள் மகிழ்வீர்கள் என்று பராசக்தி ஏற்படுத்தியுள்ளாள்" என்ருர்கள். சுவாமிகளுடையசித்தின் சக்தியைக் கண்டு அந்நண்பர்கள் அதிசயித்து அகங் குளிர்ந்தார்கள்.

### தீராத நோய் தீர்ந்தது

இராசபாளையத்தில் சுவாமிகளின் அன்பர் ஒருவருடைய மகனுக்கு காசநோய் ஏற்பட்டு முற்றியிருந்தது. அதைக் குணப்படுத்த எந்த வைத்தியராலும் முடியவில்லை. தன் மகன் பிழைக்க மாட்டானே, என்ன செய்வது என்று வருந்திக் கடைசியில் சுவாமிகளிடம் வந்து "சுவாமிகளே! அருள் புரியுங்கள். என் மகனைத் தாங்கள் தான் காப்பாற்ற வேண்டும். காச நோயால் மூச்சுவிட முடியாமல் திணறுகிருன். எல்லா வைத்தியர்களும் அவனைப் பார்த்துக் கையை விரித்து விட்டார்கள். சுவாமிகளே! எனக்கு இருப்பது ஒரே ஒரு பையன் தான். அவனை எப்படியாவது பிழைக்கவைத்து என் குடும்பத்தின் தீராத்துயரைப் போக்குங்கள்" என்று சுவாமிகளின் திருவடிகளை வணங்கிக் கண்ணீர் விட்டார். அவருடைய பரிதாபத்தைக் கண்ட சுவாமிகள் மனம் கசிந்து "கவலை வேண்டாம். இரவில் வந்து உம் பையனைப் பார்க்கிறேன். ஒரு கவுளி வெற்றிலை வாங்கி வையுங்கள்" என்று திருவாய் மொழிந்தார்கள். அந்த அன்பர் மனம் தெளிந்து சுவாமி

களுக்கு வணக்கம் செலுத்தி விட்டுப் போனார். எப்போதும் சுவாமிகள் நண்பரொருவரை அழைத்துக் கொண்டு வைத்தியம் செய்வதற்கு இரவில் செல்லுவதுதான் வழக்கம். அது போலவே சுவாமிகள் நீண்ட கோட்டும், தலைப் பாகையும் அணிந்து, கையிலே தடியை எடுத்துக்கொண்டுதன் நண்பரோடு அந்த நோயாளி வீட்டிற்கு இரவில் புறப்பட்டார்கள். அங்கு சென்றவுடன் அவ்வீட்டு அன்பர் மிகப் பயபக்தியோடு ஒருதட்டில் ஒரு கவுளி வெற்றிலை, பாக்கு முதலியவைகளை வைத்து சுவாமிகளை வரவேற்றார். அவர்கள் நோயாளியைப் பாராது, வீட்டுத் திண்ணையிலே அமர்ந்து வெற்றிலை போட்டுக் கொண்டு, தன் நண்பரோடுவேதாந்தம் பேசலானார்கள். அதைக் கண்ட அவ்வீட்டு அன்பர் சுவாமிகள் தன் மகனைக்காணாது வெளியிலேயே அமர்ந்து விட்டார்களே என்று கவலைப் பட்டார். ஆனால் அப்போது வீட்டிற்குள் ஓர் அதிசய சம்பவம் நடந்தது. சுவாமிகள் பலமணிநேரம் வெற்றிலை போட்டு, வெற்றிலை எச்சிலைக் கீழே துப்பத்துப்ப, வீட்டிற்குள் மூச்சு விட முடியாமல் தவிக்கும் நோயாளியெழுந்து தொண்டை புகைந்து கோழை கோழையாகக் கபத்தைக் கக்கலானான் விடியற்காலம் ஐந்து மணியானவுடன், சுவாமிகள் அவ்வீட்டுக் காரரைப் பார்த்து, "இந்த ஒரு வேளை மருந்தைக் கொடுங்கள். பையன் சிறிது நேரத்திலே யெழுந்து பசிக்கிறது என்பான். அவன் கேட்பதை வேண்டிய மட்டும் கொடுங்கள். முட்டையும், பாலும், சேர்த்துக் கொடுங்கள். நோய் தீர்ந்து விட்டது," என்று கூறினார்கள். வீட்டுக்கார அன்பர் களிப்போடு பெருமூச்செறிந்து சுவாமிகளின் திருப்பாதங்களிலே விழுந்து வணங்கி ஆனந்தக் கண்ணீர் வடித்தார். பின் சுவாமிகள் தன் நண்பரோடு இல்லம் அடைந்தார்கள். அவர்களின் திருவாக்குப் படியே சிறிது நேரங் கழித்தவுடன் அப்பையன் யெழுந்து பசி பொறுக்க முடியாது கதறி உணவு கேட்டான். உடனே அப் பையனுக்கு வேண்டிய உணவுகளைக் கொடுத்து அவனுடைய பசியைப் போக்கினார்கள். அத்துடன் அந்தத் தீராத நோயும் தீர்ந்தது. சுவாமிகளுடைய திருவருளைக் கண்டு அனைவரும் ஆச்சரியப்பட்டார்கள். நோயாளிகளுடைய மன அமைதிக்காக பேருக்கு ஒருவேளை மருந்தைக் கொடுத்து சிக்கி முக்கிக் கல்லைத் தட்டுவது போல தன் தூய திருவருளால் எந்த நோயாயினும் நொடிப் பொழுதிலே தீர்த்து வைக்கும் ஆற்றல் படைத்தவர்கள் நம் சுவாமிகள்.

### மனமில்லாப் புகைப்படம் வெறும் படமானது

கோவிந்தன் நாயர் என்பவர் இராஜபாளையத்தில் ஒரு சமயம் தாசில்தாராய் இருந்தார். அவர் நம் சுவாமி அவர்களிடம் மிக்க அன்புடையவர். நெருங்கிய பழக்கமுள்ளவர். அவர் அலுவல் காலம் முடியவே இராஜபாளையத்திலிருந்து மாற்றலானார். அது சமயம் சுவாமி அவர்களுடன் சேர்ந்து ஒரு புகைப்படம் எடுக்க அவாவுற்றார். சுவாமி அவர்களுக்குப் புகைப்படம் எடுப்பதில் மனமில்லை. அவர்கள் எவ்வளவோ மறுத்தும் வற்புறுத்திப் புகைப்படம் எடுக்கப்பட்டது. என்னே விந்தை! புகைப்படம் பிரதி வந்தபோது சுவாமிகள் அவர்கள் இருந்த இடம் காலியாய் இருந்தது. அவர்களது நிழல் உருவம் அப்படத்தில் விழவில்லை. சுவாமி அவர்களின் மனமில்லாது எடுக்கப்பட்ட புகைப்படம் வெறும் படமானது கண்டு வியந்தனர் அனைவரும்.

### திருவாக்கு பொய்க்காது

வத்திராயிருப்பில் ஒரு நாள்க் காலை பிடில் திரு கருப்பண்ணத் தேவர் அவர்கள் வீட்டின் மாடியிலே சுவாமிகள் தங்கியிருந்தார்கள். அப்போது ஒரு சாமியார் ஆவேசத்தோடு மாடிக்கு வந்தார். அவரைக் கண்ட நம் சுவாமிகள் இருக்கையை விட்டு எழுந்து, சுவாமிகளே! வாருங்கள். இருக்கையில் உட்காருங்கள் என்றார்கள். ஆனால் அச் சாமியார் உட்கார மறுத்து நின்ற வண்ணமே, "யாம் உம்மோடு சமயிருப்பு இருந்து பேசத் தகுதியற்றவர். நீர், இல்லறம் நடத்திக்

கொண்டு துறவியென்று கூறி ஏன் ஊரை ஏமாற்றுகிறீர்? துறவிக்குள்ள தகுதி உம்மிடம் ஏதாவது உள்ளதா?" என்று படபடவென்று கடிந்தார். அதற்கு நம் சுவாமிகள், "சுவாமிகளே! கோபம் வேண்டாம். சற்று இளைப்பாறி விருந்துண்ணுங்கள். பின்னர் யாவும் விவரமாகப் பேசலாம்," என்று வேண்டிக்கொண்டார்கள். வந்தவர், "உம்மோடு விருந்துண்டு நாம் பேச விரும்பவில்லை. யாம் வந்தது உம்மை எச்சரிக்கவே. இனியேனும் துறவி என்ற கோலத்தோடு ஊரை ஏமாற்றாதீர். எனக்கு வேலையிருக்கிறது. நான் கீழே போகிறேன்," என்றார். அதைக் கேட்ட சுவாமிகள் "சுவாமிகளே! அத்துணை அவசரப்பட வேண்டாம். இன்னும் கொஞ்ச காலம் இங்கு இருந்துவிட்டுப் போங்கள்," என்றார்கள். வந்த சாமியாரோ, "முடியவே, முடியாது. இதோ நான் கீழே போகிறேன்," என்றார். அதற்குச் சுவாமிகள், "அதுதான் உங்களுக்கு விருப்பம் என்றால் சரி, கீழேயே போங்கள்," என்று புன்னகையோடு புகன்றார்கள். அதி வேகத்துடன் மாடியை விட்டுக் கீழே இறங்கிய அந்தச் சாமியார் நடைப்படியில் கால் இடறிக் கீழே வீதியிலே விழுந்து உயிர் துறந்தார். தாம் எவ்வளவோ கூறியும் கேளாது கீழே செல்கிறேன் என்று சொன்ன சாமியாரை, "கீழேயே போங்கள்," என்று நம் சுவாமிகள் கூற அங்ஙனமே அவர் பிணமாகி பூமிக்குள் செல்ல நேர்ந்தது. சுவாமிகளின் திருவாக்கு என்றும் பொய்க்காது.

### மணம் முடித்து மரணம் வென்றது

தேவாரத்தில் ஒரு பிரபல உணவிவிடுதியின் அதிபருக்கு ஒரே மகன். அம்மகன் திடீரென நோயுற்று மரணப்படுக்கையில் இருந்தார். பார்த்த பல வைத்தியர்களும் கைவிட்டு விட்டனர். எனவே பதறி அழுதுகொண்டு சுவாமி அவர்களிடம் முறையிட்டார் அவ் விடுதிக்காரர். அவருக்கு சுவாமி அவர்களிடம் பேரன்பும், பெருமதிப்பும் உண்டு. எனவே அவரது துயர்கண்டு இரக்கமுற்ற சுவாமி அவர்கள் தியானத்தில் ஆழ்ந்தார்கள். சிறிது நேரங் கழித்துக் கண்விழித்து வந்தவரிடம், "ஐயா, உங்கள் மகனுக்குக் கண்டிருப்பது மருந்தால் குணமாகும் நோயல்ல. விதிப்பயனால் விளைந்த கண்டபீடை. எனவே அது நீங்க மருந்து மட்டும் போதாது. மாங்கல்ய பலமிக்க ஒரு மங்கையை அவருக்கு மணமுடித்தால் அப்பலத்தால் அவர் உயிர் பிழைப்பார்," என்றருளினார்கள். அதற்கு அவர், "என் மகன் இந்நிலையில் இருக்கும்போது அவனுக்கு யார் பெண் தருவார்கள்?" என ஐயுற்றார். "ஏன் சமீபத்தில் விதவையாகி வந்துள்ள தங்கள் தங்கையிடமே ஒரு பெண் இருக்கிறதே! அவள் மாங்கல்ய பலம் மிக்கவள். அவளையே மணம் முடித்தால் மரணம் நீங்கும். ஒருவேளை உங்கள் தங்கை ஏழை என்றெண்ணுகிறீர்களோ?" என்றார்கள் சுவாமிகள். "இல்லை, இல்லை! இத்தருணத்தில் அதனை நினைவூட்டினீர்களே என்றெண்ணி மகிழ்ச்சி. இதோ உடனே ஏற்பாடு செய்கிறேன்," என்று கூறிச் சென்று, ஆவன செய்து, சுவாமி அவர்கள் முன்னிலையிலேயே படுத்த படுக்கையாய் இருந்த தன் மகனுக்குத் திருமணம் நடத்திவைத்தார். சுவாமி அவர்களும் தமது கைப்பட அப்பையனுக்கு மருந்து அளித்தார்கள். மணம் முடிந்த மறுதினமே நோய் மாறிக் குணமடைந்து அப்பையனும் சுகமே குடும்பம் நடத்தலானார். இவ்விதம் மணம் முடித்து மரணம் வென்ற சுவாமி அவர்களின் சித்தின் மகிமை கண்டு யாவரும் மகிழ்ந்தனர்.

### சுவாமிகளின் மற்போர்

சேத்தூர் ஜமீன்தாரவர்கள் ஒரு திருவிழாவிற்கு சுவாமிகளை அன்போடு அழைத்திருந்தார்கள். சுவாமிகளும், ஜமீன்தாரவர்களும் ஓர் அலங்கார மேடையில் அமர்ந்திருக்க மற்போர் தொடங்கியது. வந்தோரை யெல்லாம் கீழே தள்ளித் தோற்கடித்து வெற்றி பெற்றான் வடநாட்டு மல்லனொருவன். "அவனை வெல்லு

தற்கு யாருமில்லையா?'' என்று சினங்கொண்டார் சேத்தூர் ஜமீன்தாரவர்கள். பாயும் புலியென சுவாமிகள் அம்மல்லனோடு பாய்ந்து போரிட்டு அவனைக் கீழே வீழ்த்தி வெற்றி பெற்றார்கள். சவால் விட்ட வடநாட்டு மல்லன் சுவாமிகளின் பாதங்களிலே சரணடைந்தான். ''கண் மூடித் திறப்பதற்குள் அவன் கையை முறுக்கிக் கீழே தள்ளி வெற்றி பெற்று விட்டீர்களே, எப்படி சுவாமி? நீங்கள் வெற்றி பெறுவீர்கள் என்று நான் நினைக்கவேயில்லை'' என்றார் ஜமீன்தாரவர்கள். புன்முறுவலுடன் சுவாமிகள், ''ஜமீன்தாரே! உங்களுடைய வீரர்களை என்ன சோத்துப் பிண்டம் என்று நினைத்து விட்டீர்களா? அவ்விதம் நினைக்காதீர்கள். அந்த வடநாட்டான் மற்போரிலே திறமையுள்ளவனுயிருந்தாலும், சில யோக முறைகளையும், மந்திர சக்தியையும் கற்றிருக்கிறான். அம்மந்திர சக்தியே உங்கள் வீரர்களை வீழ்ச்சியுறச் செய்தது. ஆனால் என்னைக் கண்டவுடன் அம்மந்திர சக்தி இருந்த இடம் தெரியாது மறைந்துவிட்டது. எனவே அவன் எளிதில் வீழ்த்தப்பட்டான்'' என்றார்கள். தமது சீரிய சித்தின் சக்தியால் பிறரிடத்திலுள்ள சக்திகளையும் அறிந்து சுவாமிகள் இவ்விதம் செயற்கரிய சித்துக்கள் பல புரிந்தார்கள்.

#### கருவையிலே சுவாமிகள்

சுமார் முப்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன் தெய்வத்திரு பொதிச்சுவாமியவர்கள் தம் இல்லம் வந்துசேர, இரு சுவாமிகளும் கருவையடைந்தார்கள். இத்திருவிடத்தில்தான் தீங்கனிவாய்ச் சொல்லும் தீந்தமிழ்ப் புலமையுடைய சுவாமிகளுடைய தெய்வச் சித்துக்களும் திக்கெட்டும் பரவியன. புலவர்களும், மக்களும், அறிஞர்களும் திரண்டு வந்தார்கள் சுவாமிகளிடம்.

பலாச்சுளைச் சாறெடுத்து
　பைந்தமிழ்ச் சொற்பாகுகோர்த்து
நிலாவெனக் குளிர்முகம்
　நீந்தியாட நெடுஞ்சிரிப்பில்

உலாவண்டுரும் அன்புமலராரந்
　தொடுத்து வந்தோருக்குக்
கலாதேவியருள் பூண்டு
　கனிவாயளிப்பான் கவின்.

கனிமழைபெய்யும் கார்முகில்கள்
　கருமையாய்க் கூடியேப்
பனிவாடையடிக்கும் பல்திசையில்
　பகருமவர் செஞ்சொல்லுரையிலே

இனிமைதவழ் தென்றலும்
　தெம்புடனெழும் தேமதுரமாய்
நனிசீரவர் நல்லுரை கேட்கத்
　தவங்கிடப்பர் பல்லோர்.

#### காளிசாத்தான் மலையிலே சுவாமிகள்

சுவாமிகள் இம்மலைக்கு அண்மையிலுள்ள ஒரு கிராமத்திற்கு ஓர் நாள் சென்றிருந்தார்கள். ஆங்குள்ள அன்பரான நிலக்கிழார் ஒருவர் தன் இல்லத்தில் சுவாமிகளைத் தங்க வைத்து விருந்தளித்து உபசரித்தார்கள். அது சமயம் ஒரு வயதான கிழவி அலறித் துடித்தழுது கொண்டு தெருவிலே ஓடிவந்தாள். சுவாமிகள் அக்கிழவியை அழைத்து வரச் செய்து என்னவென்று வினவினார்கள். அவள் தன் ஒரே மகன் பாம்பு கடித்து இறந்துவிட்டதாகவும், அவனைப் புதைத்துவிட்டு வருவதாகவும் கூறிப் புலம்பினாள். அவளைப்பார்த்தால் பைத்தியம் கொண்டவள்போல் இருந்தது. இதற்குள் அவளுடைய மகனைப் புதைத்துத் திரும்பும் பல ஆட்களும் வந்து சேர்ந்தார்கள். சுவாமிகள், ''இறக்காதவனைப் புதைத்து விட்டீர்களே! உடனே அப்புதைத்த பையனை தோண்டியெடுத்து வாருங்கள்,'' என அந்த ஆட்களிடம் கூறினார்கள். ஆச்சரியத்தோடு அவர்கள் கொண்டுவர, சுவாமிகள், இரண்டு மணி நேரம்வரை நிஷ்டையில் இருந்து, அப்பிணத்தை உயிர்கொண்டெழச் செய்தார்கள். பாம்பு கடித்து மாண்டவனுக்கு உயிர் கொடுத்து எழச்செய்த அவர்களுடைய சித்து சக்தியின் அருமையே அருமை. திக்கற்றுத் தேம்பிப் புலம்பிய அக்கிழவி மனங்குளிர்ந்து தன் மகனைச் சேர்த்து கட்டிக்களிப் படைந்தாள். சுவாமிகளின் திருவடிகளிலே பலமுறை

விழுந்து கைதொட்டுக் கண்ணில் ஒற்றி வணங்கினுள். இவ்வாறு அவர்கள் இதயத்திலே எழுகின்ற இரக்கம் செயற்கரிய பல சித்துக்களைப் புரிந்தது.

**கருவையில் சமாதி**

இவ்விதம் தவத்திரு பொன்னையா சுவாமிகள் எட்டுவகைச் செயற்கரிய சித்துக்களைச் செய்து கருவையில் சமாதி எய்தி மக்கள் வணங்கும் தெய்வமானுர்கள். தென்பாண்டிக் கருவையிலே பயனுள்ள சித்துக்கள் படைத்த அத்தெய்வம் தொழுதோர் அனைவரையும் வாழ வைக்கும், வாழ வைக்கிறது.

---

# அருட் பெருஞ் சுடர்

திரு R. அழகப்ப பிள்ளை, தேவாரம்

உலகில் மக்கள் தோன்றுகின்றனர், உறைகின்றனர், மறைகின்றனர். சிலரே பிறவியின் பயனை உணர்ந்து தொண்டுகள் செய்து பேரும் புகழும் எய்துகின்றனர். அத்தகைய பெரியார்களை உலகம் என்றும் மறப்பதில்லை அவர்களே மெய்ஞானச் செல்வர்களாவர். நம் நாட்டில் எத்துணையோ அருள்ஞானச் செல்வர்கள் தோன்றியுள்ளனர். மக்களுக்கு அவர்கள் செய்த தொண்டுகள் மிகப்பல. அத்தகு பெரியாருள் ஒருவராக விளங்கியவரே அருட்பெருஞ்சுடர் பொன்னையா சுவாமிகள் ஆவர்.

பைந்தமிழ் வளர்த்த பாண்டிவள நாட்டில் இராமநாதபுரம் மாவட்டத்தைச் சார்ந்த சீர் மிகும் இராஜபாளையத்தில் தோன்றி, யாதும் ஊரே யாவரும் கேளிர் என்ற முதுமொழிக் கேற்ப வாழ்ந்து, கரிவலம் வந்த நல்லூரில் அடங்கியவர்கள் நம் சுவாமிகள்.

நல்ல உருவும் திருவும் உடையவர்கள். உண்மையும் உரனும் வண்மையும் வளனும் வாய்க்கப் பெற்றவர்கள். இறை பணி செய்வதில் ஈடுபாடுடையவர்கள். சக்தி பூஜை செய்வதில் தலைசிறந்தவர்கள். மருத்துவத்திலும் ஜோதிடத்திலும், சங்கீதத்துலும் சுவாமிகட்குத் தேர்ந்த ஞானமுண்டு, எடுப்பும் தோற்றமும் மிக்க ஆடை அணிவதில் ஆர்வம் மிக்கவர்கள். சுவாமி விவேகானந்தர் மீண்டும் அவதரித்து வந்துள்ளரோ என எண்ணுமாறு இருக்கும் அவர்கள் உடையணியும் காட்சி, சிறந்த இல்லறத் துறவி.

வரும்பொருள் உரைத்தல் மந்திரிக் கழகு என்பர். ஆனுல் சுவாமிகள் நடந்தன, இனி நடப்பன என்னும் இரு கால உணர்வையும் முன்னறிந்து கூறும் திருவருள் நலம்பெற்றவர்கள். அவர்களோடு பழகிய நண்பர் பலரும் அதனை அறிவார்கள்.

சுமார் முப்பத்தெட்டு ஆண்டுகளுக்கு முன் தேவாரத்தில் மகேஸ்வரி விலாசம் திரு த. அ. கு. அழகர் ராஜா அவர்கள் இல்லத்தில் சுவாமிகள் தங்கி இருந்த காலம். ராஜா அவர்கள் சுவாமிகளிடம் பேரன்புடையவர்கள். இங்கிருக்கும்போது தான் என்னைப்போன்ருரைத் தம் உரையாலும் செயலாலும் கவர்ந்து கொண்டார்கள் சுவாமிகள். அவர்களோடு கலந்து உரையாடி மகிழும் பேறு அதிலிருந்து பல ஆண்டுகள் எனக்கு கிட்டிற்று.

ஓர் நாள் அழகர் ராஜா அவர்கள் கவலை தோய்ந்த முகத்துடன் காணப்பட்டார்கள். காரணம், ஏலக்காய் வாணிகத்தில் பெரும் நட்டம் ஏற்பட்டதே. எவ்வாறு நட்டத்தைச் சமாளிப்பது என்ற ஏக்கம் ராஜா அவர்களைப் பற்றிக் கொண்டது. இதனை உணர்ந்த சுவாமிகள் ராஜா அவர்களை நோக்கி "நீங்கள் கவலைப்படும் காரணத்தை நான் அறிவேன். கவலையை விடுங்கள். வியாபாரத்தில் லாபம் வருவதும் நட்டம் வருவதும் இயற்கை. இன்று முதல் ஏலக்காய்களை உடன் விற்காமல் சேர்த்து வைக்கவும். ஏலத்தோட்டத்தில் ஒரு தீவிபத்து ஏற்படும். அதிலிருந்து உங்களுக்கு நல்ல

காலம் வரப்போகிறது. கடவுளை நம்பினோர் கைவிடப்படார்" எனக் கூறினார்கள். ராஜா அவர்களும் சுவாமிகள் சொற்படியே நடந்தார்கள். தீவிபத்து ஏற்பட்டது. திடீரென ஏலக்காய் விலை ஏறிற்று. இருந்ததை விற்கத் தொடங்கினார்கள். கடன் போக லட்சக் கணக்கான ரூபாய் லாபம் கிடைத்தது. சுவாமிகள் கூறிய நல்லகாலம் வந்துவிட்டது. சான்றோர் வாக்கு பலிக்கும் என்பர். அது போல சுவாமிகள் வருவதை அறிந்து உரைக்கும் மாண்புடையவராக விளங்கினார்கள். எல்லோரும் சுவாமிகள் வாக்கிற்குப் பெரு மதிப்பு தந்து போற்றினர்.

தவத்திரு சுவாமிகளோடு உரையாடுங்கால் நல்ல சன்மார்க்கமும் நல்ல நெறிகளையும் பெரியோர் கூறிய அறநெறிகளையும் உணரலாம். திருவள்ளுவர், கம்பர், காளிதாஸ், ராமகிருஷ்ணர் போன்ற பெரியார்களைப் பற்றி கூறி மகிழ்விப்பார்கள். உபமானக் கதைகள் கூறுவார்கள். தவறாது பூசை செய்வார்கள். சக்தி பூசையே இவர்களுக்கு உகந்ததாய் இருந்தது. நோயாளர் பலருக்கு திருநீறு தருவார்கள். அதனால் மக்கள் நோய் நீங்கி இன்பம் பெற்றனர். இத்தகைய நன்மைகளைச் செய்து வந்த சுவாமிகளோடு நான் கலந்து மகிழ்ந்த சில நிகழ்ச்சிகளை மட்டும் இங்கே நினைவுக்காக எழுத விரும்புகிறேன்.

1927-ல் மீண்டும் சுவாமிகள் தேவாரம் வந்தார்கள். அவ்வூரிலுள்ள திருவாளர்கள் அழகப்பபிள்ளை, ரெங்கசாமி நாயக்கர், லோகநாயகம் பிள்ளை, சீனிவாசகம் பிள்ளை பலரையும் அழைத்துக்கொண்டு ஊருக்கு மேற்கே உள்ள மணல்மேட்டிற்குச் சென்று சாத்திர கருத்துக்களை கூறி வருவார்கள். திரு சீனிவாசகம் பிள்ளையை பாரத, ராமாயண பாடல்களை படிக்கும்படிச் சொல்லி கேட்டு மகிழ்வார்கள். தேவாரம் ஜமீன்தார் அவர்களால் கட்டப்பெற்ற குமரவேல் தீர்த்தத் தொட்டிக்கு அதிகாலை 5 மணிக்குப் போய் நீராடி வருவார்கள். மலைவளம், குன்றுக் காட்சி முதலியவற்றைப் பார்த்து ரசித்து உவமானக் கதைகள் மூலம் விளக்குவார்கள்.

1929-ல் திருவாங்கூர் ராஜ்யத்திலுள்ள ராஜா அவர்கள் ஏலத்தோட்டமாம் கள்ளிப் பாறைக்குச் சென்றார்கள். அங்கு வனாந்தரங்களின் இயற்கை அழகைக் கண்டு, ஈடுபட்டு தனிமையில் இனிமை கண்டார்கள். காட்டில் தனிமையாக யோகாப்பியாசம் செய்துவந்தார்கள். மலை உச்சியில் உள்ள கதவுக்கல் மலைக்குச் சென்றார்கள். அங்கு கதம்ப வண்டுகள் கூட்டம் அதிகம். அவ்விடத்தில் கதவுக் கல்லின் உச்சியில் ஓர் துவாரம் இருக்கிறது. அத்துவாரத்தில் முனிவர்களால் செய்யப்பட்ட ஆயிர முழம் நீளமுள்ள சங்கிலி ஒன்று உள்ளது. அங்கே நண்பர்களுடன் சுவாமிகள் சென்று பார்வையிட்டார்கள். தவழும் கதம்பவண்டுக் கூட்டங்கள் இடையே சென்றார்கள். பின் கதவுக் கல் உச்சியில் உள்ள சங்கிலியை சுவாமி அவர்கள் இழுத்து கீழே விட்டார்கள். அதன் பேரொலி கேட்டு மகிழ்ந்தோம்.

1930-ம் ஆண்டில் காங்கிரஸ் பொதுக் கூட்டம் ஒன்றில் தலைமை வகித்தார்கள். 1935-ம் வருடத்தில் சுவாமி அவர்களுடன் சுருளி மலைக்குப் போய் மூன்று பனை உயரம் பிரமாண்டமாக தண்ணீர் விழும் நீர்விழ்ச்சியில் வெள்ளியாற்றில் நீராடி, அங்குள்ள முருகன் கோவிலில் தரிசனம் செய்தோம். கோயில் அருகே கைலாச குடகு உள்ளது. சுவாமிகள் அதனுள் நுழைந்து குகைக்குள்ளிருந்த மண்ணும் பூவும் எடுத்துக் கொண்டு வந்து எங்களிடம் கொடுத்தார்கள். மண் விபூதியாகவும், பூ தங்கபஸ்பமாகவும் மாறியது கண்டு வியந்தோம். இது ஓர் அரிய சம்பவம்.

1937-ல் கொடைக்கானல் போய் திரு கிருஷ்ண நாயுடு பங்களாவில் தங்கி பேரீசம் நட்சத்திரபங்களா முதலியவைகளை சுவாமி அவர்கள் பார்வையிட்டு திரும்பிவரும் வழியில்

கும்பக்கரையில் நீராடி சுவாமி தரிசனம்செய்து விட்டு பெரியகுளம் வந்து சேர்ந்தோம்.

1939-ம்ஆண்டில் திருவாங்கூர் ராஜ்யத்தில் ஆங்கிலேயர் காலத்தில் பல மலைகளையும் வனாந் தரங்களையும் பன்னிரண்டு மைல் நீளத்தில் வளைக்கப்பட்டு தண்ணீர் தேக்கம் அமைத்து இருக்கும் தேக்கடி பெரியாறு அணைக்கட்டிற் குச் சென்றோம். இயந்திரப்படகு ஏறிகுளத்தில் போகும் சமயத்தில் இருபுறமும் காட்டு மிரு கங்களைக் கண்டும், வனாந்தரங்களில் இயற்கை எழிலைப் பார்த்தும் மெய்மறந்தார்கள் சுவாமி கள். பின் அணைக்கட்டை பார்த்துவிட்டு, சற்று இளைப்பாறி கொண்டிருக்கும் சமயம் சுவாமி அவர்களின் பெயரை அணைக்கட்டில் ஞாப கார்த்தமாக எழுதி வைத்தேன். பின் சிற் றுண்டி அருந்திவிட்டு தேவாரம் வந்து சேர்ந் தோம்.

1940-ம் ஆண்டு உத்தமபாளையத்துக்கும் கோம்பைக்கும் இடையே உள்ள சாவமலைக்கு சுவாமி அவர்களும் நாங்களும்போயிருந்தோம். அங்கு சுவாமி அவர்கள் பெருமாளை தரிசனம் செய்துவிட்டு முனிவர் அடங்கிய இடத்தைப் பார்த்தும், சில மூலிகைகளையும் கற்களையும் எடுத்துக்கொண்டும் வந்தார்கள்.

1940-ம் ஆண்டிலிருந்து 1955 வரை தேவாரம் வந்து மாதக் கணக்கில் இருப்பார் கள். வழக்கம் போல் மாலை ஐந்து மணிக்கு மேல் ஊருக்கு மேற்கே உள்ள மணல்மேட் டுக்குப்போய் வேதாந்த விஷயங்கள் சர்ச்சை கள் நடக்கும். அதைக் கேட்டுக் கொண்டிருப் போம். சுவாமி அவர்கள் பசித்தோர் முகம் பார்த்து இரங்குபவர்கள். எனவே ஏழை மக்க ளுக்குச் செல்வர்களைக் கொண்டு நல்லுணவு படைக்குமாறு செய்து வந்தார்கள்.

செல்வம் கொண்ட திரு த. அ. கு. அழகர் ராஜா அவர்கள் இவ்வுலகை விட்டு விண் ணுலகு எய்தினார்கள். அதற்காக சுவாமிகள் ராஜா அவர்களின் ஒரே குமாரர் திரு செல் லப்ப ராஜாவிடம் சொல்லி தன் தந்தையின் பத்தாம் நாள் கிரியைக்கு சுமார் இருபது கலம் அரிசி சமையல் செய்து போடும்படி செய்தார் கள். பத்தாயிரம் மக்களுக்கு மேல் சாப்பிட் டார்கள். சுவாமி அவர்கள் ஆனந்தம் அடைந் தார்கள்.

சுவாமி அவர்கள் புகழொடுதோன்றி, பொலி வொடு வாழ்ந்து, மக்கள் துயர்நீக்கி, நலம் பெருக்கி அருட்சுடராய் விளங்கியதை என் வாழ்நாளில் என்றும் மறக்க முடியாது. சுவாமிகள் புகழ் வளர்க! அருட்சுடர் பொன் னையா சுவாமிகள் திருவடிக்கு என் வணக்கம்.

---

## ஒப்பற்ற உத்தமர்

திரு பெருமாள் தேவர், இராசபாளையம்.

ஆத்மீகத் துறையிலே வல்லவர் என்று ஜெயக் கொடி நாட்டிய அருளாளர் தவத்திரு பொன்னையா சுவாமிகள் ஆவர். ஆசையை வெறுத்துத்தள்ளி அறிவைப் பெருக்கி ஆத்ம ஞானம் கண்ட பெரியார் அவர்கள். அன்பின் வழியேஉயர்நிலைநின்று தன்னை நாடி வருகின்ற மக்களுடைய அவதிகளைப் போக்கி அன்புரை வழங்குவார்கள். இவ்வுரைகளைக் கேட்கின்ற பக்தர்கள் வாழ்க்கைக்கு வேண்டிய பலமான சக்திகளை யெல்லாம் பெறுவர். இப்படி அவர் களுடைய அன்பு வழியிலே வாழ்ந்தவர்கள் நிறைந்த செல்வம் பெற்றிருக்கிறார்கள். இன்றும் பெற்றுக்கொண்டிருக்கிறார்கள். கல்வி கேள்வியிலே சுவாமியவர்கள் மிகக் கெட்டிக் காரர்களாவார்கள். ஆத்மீகம் அரசியல், விஞ் ஞான சம்மந்தப்பட்ட எந்தக் கேள்வியிலும் சரி, எந்தநேரத்திலும் சட்டென்று சூடாகவே பதில் சொல்லுவார்கள்.. அதிலே தமாஷான

பேச்சுக்களும்கேட்பார்கள் சந்தோசப்பட கலந்தேவரும். வேடிக்கையாகப் பேச அவர்கள் தொடங்கிவிட்டால் இரவில் சென்றவர்கள் விடிந்த பின்தான் வீட்டிற்கு வரமுடியும். அம் மகானின் சொல்வன்மையைக் கேட்டால் காலமும் தெரியாது, கணக்கும் தெரியாது, கண்ணிற்கு உறக்கமும் வராது. கடலில் வருகின்ற கப்பல்களுக்குக் கரைசேர வழி காட்டியாய் எப்படிக் கலங்கரை விளக்கு இருக்கிறதோ அதேபோன்றுதான் திக்கற்ற ஏழை எளியவர்களுக்குத் துன்பக்கடலைப் போக்கி வாழ்க்கையின் கரைசேர நல்விளக்காய் இருந்தார்கள். புலம்பி வருகின்ற பாமரர்களுக்கு நல்லது கெட்டது சொல்லி அவர்களுடைய உள்ளத்திலே குடிகொண்டிருக்கும் பொல்லாங்கைப் போக்கிப் புனிதப்படுத்துவார்கள். இவ்வளவு ஒப்பற்ற உத்தமரை நான் சந்தித்த காலம் எதுவென்றால் என் ஏழு வயதிலேதான், பால்ய பருவத்திலிருந்தே பரம்பொருளின் சக்திகளைப் பெற்ற சுவாமிகளோடு எனக்குப் பழகும் அரிய வாய்ப்பு கிடைத்த தென்றால் அது என் வாழ்க்கைக்குக் கிடைத்த பெரும் புதையல் என்றே தான் சொல்லவேண்டும்.

தன்னை விட்டுச் சாமியாராகி விடுவார்களோ என்று பயந்த சுவாமிகளுடைய தாயார் அவர்களுக்குத் திருமணம் செய்து வைத்தால் தான் எப்போதும் தன்னோடு இருப்பார்கள் என்று கருதி திருமணத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்ய முயன்றார். அதன் படியே சுவாமிகளுக்கும், அவர்களுடைய மூத்த தமையனார் கிருஷ்ணத் தேவரவர்களுக்கும் ஒன்றாகவே திருமணம் நடந்தது. இந்தத் திருமணத்தில் ஏழுவயதுச் சிறுவனாகிய நான் சுவாமியவர்களைச் சந்திக்கும் பாக்கியம் பெற்றேன். சுவாமிகளுக்கு மணப்பெண்ணாக அமைந்த திருமதி கோமதிக்கும் வயது பார்த்தால் ஏழுதான். இதை கல்யாணத்திற்கு வந்த மக்கள் மிக வேடிக்கையாகப் பேசத் தொடங்கினார்கள். "இந்த அழகான மாப்பிள்ளைக்கு ஏழுவயதுப் பெண்தானா கிடைத்தது! அதுவும் சாமியாராக வீட்டைவிட்டு வெளியேறிய இவருக்கு அவருடைய தாயார் கல்யாணத்தைச் செய்து வைத்து விட்டார்களே, கெட்டிக் காரிதான்" என்று பேசினர். அக்கூட்டத்தில் இன்னும் சிலர் "இந்தச் சாமியாரை நம்பி எப்படிப் பெண் கொடுத்தார்கள். இவர் இன்னும் கொஞ்ச நாளில் எங்காயாவது ஓடி விடுவாரே! பாவம் இந்தச் சின்னப் பொண்ணு என்ன செய்யும்? தகப்பனார் வீட்டில் இருக்கவேண்டியது தான்" என்று பேசிக் கொண்டார்கள். இவ் வார்த்தைகளைக் கேட்ட சுவாமிகளுடைய தாயாருக்குக் கோபம் ஒரு பக்கம் இருந்தாலும், தன்னைத் திறமை யுள்ளவள் என்று சொல்லுகிறார்களே என்று சந்தோஷப்பட்டு கொண்டாள்.

சில நாட்கழித்து சுவாமிகள் பெண்ணைவிட்டு விட்டுத் திருவனந்தபுரத்திற்குச் சென்று விட்டார்கள். இதைக் கண்ட சுவாமிகளின் தாயார் என்ன செய்வது என்று தெரியாமல் ஆத்திரப் பட்டார்கள். "ஊர் ஜனங்கள் பேசியபடியே நம் மகன் ஊரை விட்டுப் போய்விட்டானே" என்று மனம் வருத்தப்பட்டார்கள். தன் ஆசை மகனைத் தேடி அவர்களும் திருவனந்தபுரம் சென்றார்கள். அங்கு சுவாமிகளோ தம் தாயாருடைய கோபத்தை அன்புச் சொற்களால் அகற்றினார்கள். தன்னுடைய மகன் காலேஜில் சேர்ந்து சமஸ்கிருதம் படிக்கிறார். பல பெரிய மனிதர்களோடு தொடர்பு கொண்டிருக்கிறார் என்பதைக் கண்டு மிக மகிழ்ச்சியோடு சுவாமிகளுடைய தாயார் இராசபாளையம் திரும்பினார்கள். திருமதி கோமதியம்மாளோ பயந்து கொண்டு மாப்பிள்ளை வீட்டில் இராமல் தன் தகப்பனார் வீட்டிற்கிச் சென்று விட்டார்கள்.

சில ஆண்டுகள் கழித்து சுவாமியவர்கள் இராசபாளையம் திரும்பினார்கள். அவர்கள் சம்மந்தபுரத்திலுள்ள பெருமாள் கோயிலில் தங்கியிருந்து புராணங்களைப் பற்றி சொற் பொழிவாற்றிக் கொண்டிருந்தார்கள். இதனைக் கேட்ட ஊர் மக்கள் அந்தக் கோயிலில் நிறைந்

திருந்தார்கள். நானும் சுவாமிகளுடைய சின்ன மாமனர் திரு குமாரசாமித் தேவரும் திருமதி கோமதி யம்மாளுடைய முத்த அண்ணனுகிய திரு பழனியாண்டித் தேவரும் பெருமாள் கோயிலில் பிரமாதமாகச் சொற்பொழிவாற்றும் சுவாமிகளைக் காணச் சென்றோம். அந்தக் கூட்டத்திலுள்ள வயதான பெரிய மனிதர்கள் கையைக் கட்டி, வாய் பொத்தி, மௌனியாய் அமர்ந்து அவர்களுடைய பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்தார்கள். இக்காட்சியைக் கண்ட எங்களுடைய உள்ளம் ஏதோ சில உணர்ச்சிகளால் ஆட்கொள்ளப்பட்டு மெய் சிலிர்த்தது. ஊசி போட்டால் அக்கூட்டத்தில் அவ் ஊசியின் சப்தத்தைக் கேட்கலாம். அவ்வளவு அமைதியாக உட்கார்ந்து சுவாமிகளுடைய இனிய பேச்சில் தங்களையே மறந்திருந்தார்கள் மக்கள். இதன் மூலம் சுவாமிகளுடைய இனிய பேச்சில் யாவரும் மயங்குவர் என்று தெரிகிறது. கூட்டம் முடிந்தவுடன் நாங்கள் சுவாமிகளை குருசாமி கோயிலிலுள்ள தேவர் மடத்திற்கு வந்து ஆத்மஞான உபதேசம் செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொண்டோம். அதன்படியே அவர்களும் ஒப்புக்கொண்டார்கள்.

குருசாமி கோயிலிலுள்ள தேவர் மடத்திற்கு சுவாமிகள் வந்து சேர்ந்தார்கள். திருவிழாக் கூட்டம்போல் மக்கள் சுவாமிகளுடைய உயர்ந்த உபதேசங்களைக் கேட்க குழுமியிருந்தார்கள். அந்த மடத்தில்தான் ஒரு அதிசயமான நிகழ்ச்சி ஒன்று நடந்தது. ஒரு செல்வந்தர் நெடுநாளாக வயிற்று வலியால் மிகவும் சங்கடப்பட்டார். ஆயிரக்கணக்கான பணம் செலவழித்தும் அவ்வியாதி தீரவில்லை. இதனுல் வாழ்க்கையிலும் வெறுப்படைந்து தம் மனைவி மக்களைக்கூட மறக்க முயன்ருர். நாள் முழுவதும் வியாதியால் வேதனைப் படுகின்ற அவர் சுவாமிகளுடைய பேச்சைக் கேட்பதற்கு முன்னராக உட்கார்ந்திருந்தார். சுவாமிகள் புன்முறுவலோடு அவரைப் பார்த்து, "இந்தப் பழங்களையும் பாலையும் சாப்பிடுங்கள்" என்று சொல்லிக் கொடுத்தார்கள். என்ன சாப்பிட்டாலும் வயிற்றுவலி வருகின்ற அவர் சுவாமிகளுடைய சொல்லைத்தட்டாமல் அப்பழங்களையும்பாலையும் சாப்பிட்டார். அங்கு இருந்த அவருடைய நண்பர்கள் "இந்த கூட்டத்திற்கு இவர் வந்ததே அதிசயம். வயிற்று வலியோடு இந்தப் பழங்களை எப்படிச் சாப்பிட்டார்? இன்னும் கொஞ்ச நேரத்திலே வயிற்று வலியால் அலறப் போகிருர்" என்று பேசினுர்கள். சுவாமிகள் ஆத்ம ஞானத்தைப்பற்றி பேசத் தொடங்கினுர்கள். மக்கள் மிகக் கவனத்தோடு சுவாமிகளுடைய இனிய பேச்சைக் கவனிக்கத் தொடங்கினுர்கள். சுவாமிகளுடைய பக்தரான அந்தச் செல்வருக்குத் திடீரென்று வயிற்றுவலி உண்டாகிவிட்டது. அதைப் பொறுக்க முடியாமல் திண்டாடினுர். முகத்தைச் சுழித்தார். அவரால் அவ்வேதனையைத் தாங்கமுடியவில்லை. இதை தன் ஞான திருஷ்டியால் கண்ட சுவாமிகள் தன் குளிர்ந்த கண்களால் அவரை உற்று நோக்கிவிட்டு, மீண்டும் சொற்பொழிவாற்றத் தொடங்கிவிட்டார்கள். இப்பொழுது திடீரென்று சுவாமிகளுடைய தொண்டையிலிருந்து கனத்த நாதம் எழுந்தது. அந் நாதம் அவர்களுடைய பேச்சோடு கலந்து இனிய அருவி ஓசையாய் யெழுந்தது. இவ்வோசையைக் கேட்ட அச் செல்வர் சிறிது நேரம் மயக்க மடைந்து பின் தெளிந்தார். என்ன ஆச்சரியம்! அச்செல்வருடைய தீராத வயிற்று வலி இருந்த இடம் தெரியாமல் மறைந்தோடியது. இதைக்கண்ட அவர்கள் சுவாமிகளின் திருப்பாதங்களைத் தலை வைத்து வணங்கித் தேம்பித் தேம்பியழுதார். தனக்கு நல்வாழ்வளித்த தெய்வமே என்று ஆனந்தக் கண்ணீர் வடித்துக் கூறினுர். சுவாமிகள் அச்செல்வரைப் பார்த்து "ஐயா, கவலைப்படாதீர்கள். மனைவி மக்களை மறந்து, நேற்று இரவு, தற்கொலை செய்ய முயன்றிரே! அது பாவமில்லையா? முற்பிறப்பில் நீர் செய்த அடாத செயலே இதற்குக் காரணம். இன்ரோடு உமது வயிற்று வலி தீர்ந்தது. நான்கு துறவிகளுக்கு தினந்

தோறும் உணவளித்து, தர்மம் செய்து வாருங்கள்'' என்று திருவாய் மலர்ந்தருளினுர்கள். கூடியிருந்த ஜனங்கள் எல்லாம் சுவாமிகளுடைய அற்புத வேலையைக் கண்டு வரிசையாக எல்லோருமே திருப்பாதம் வணங்கத் தொடங்கி விட்டார்கள். சுவாமிகளுடைய சொற்பொழிவு முடிந்தவுடன் அச்செல்வர் சுவாமிகளைத் தன் இல்லத்திற்கு அழைத்துச் சென்று விலை உயர்ந்த பொன்னுடை போர்த்தி நல்விருந்தளித்து மரியாதை செய்தார். சுவாமிகள் மிக மகிழ்ச்சியோடு அச்செல்வருடைய மனைவி மக்களுக்கு ஆசீர்வாதம் செய்து விபூதி கொடுத்தருளினுர்கள். இன்றும் அக்குடும்பம் செல்வம் பொங்கி செழிப்பாய் வாழ்கிறது என்ருல் சுவாமிகளுடைய அருட்சக்தியே காரணமாகும். இந்நிகழ்ச்சியின் மூலம் சாமிகளுடைய இனிய பேச்சு பக்தர்களுடைய நோயை மருந்தில்லாது குணப் படுத்தும் என்று தெரிகிறோம்.

திருமதி கோமதியம்மாளுடைய சின்ன மாமனும், அவர்களுடைய மூத்த சகோதரராகிய பழனியாண்டித் தேவரும் சுவாமிகளிடம் சென்று ''சுவாமிகளே தாங்கள், கோமதியை அழைத்துச் செல்ல வேண்டும், அவள் பருவம் அடைந்துவிட்டாள், அவளோடு சேர்ந்து வாழ வேண்டும்'' என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள் ''இன்னும் கொஞ்சநாள் ஆகட்டும். உலகத்தின் விவரம் அவளுக்குத் தெரிந்த பின் அழைத்துச் செல்கிறேன்'' என்று சொல்லி விட்டு மீண்டும் திருவனந்தபுரம் சென்று விட்டார்கள்.

இவ்வாறு சுவாமிகள் எத்தனையோ அற்புதச் செயல்களைச் செய்திருக்கிருர்கள். நான் அவைகளைக் கண்டிருக்கிறேன். உணவு உண்ண முடியாது வயிற்றுக் கோளாருல் பல ஆண்டுகள் சங்கடப்பட்ட எனக்கு நல்மருந்து கொடுத்துக் குணப்படுத்தியிருக்கிருர்கள். ஒரு தடவை என்னுடைய மனைவி நோயால் மயக்கம் ஏற்பட்டு மிகவும் துடிதுடித்தாள். நான் சுவாமிகளிடம் சென்று திருப்பாதம் பணிந்து என்னுடைய நிலையைச் சொன்னேன். உடனே சுவாமிகள் அந்த நேரத்திலே புறப்பட்டு என் வீட்டிற்கு வந்து, இரவு முழுவதும் கண்விழித்து என்னுடைய மனைவியின் மயக்கத்தைப் போக்கி நம்பமுடியாமல் இருந்த அவளுடைய உயிரை மீட்டுக் கொடுத்து காலையில்தான் வீடுசென்ருர்கள். இப்படி என் குடும்பத்தின் இன்னல்களைப் போக்கி இனிய வாழ்வு ஈந்த அத்தெய்வ மகனுர் கருவையிலே சமாதியாகி திருக்கோயில் கொண்டார்கள். அவர்களுடைய அருள் என்றும் எங்களுக்கு நன்மை அளிக்கும் என்று உறுதி கொள்கிறேன்.

---

# எனது அன்புத் தெய்வம்

திருமதி இராஜேஸ்வரி, சின்னமன்னூர்.

கவிதைகளிலும் புராணங்களிலும் உள்ள தெய்வத்தைப்பற்றி அல்ல நான் கூறுவது. என்னையும் என் உடன் பிறந்தவர்களையும் நல்ல பண்புள்ளவர்களாக வளர்த்து, எங்களுடனேயே பேசும் தெய்வமாக இருந்து தற்சமயம் எங்கள் எல்லோரையும் மீளாத்துயரத்தில் ஆழ்த்தி விட்டுப் பிரிந்த சமாதி நிலை அடைந்து நாங்கள் அனுதினமும் தொழுது வரும் எங்களின் பூஜைக்குரிய தெய்வமாக மாறிய எங்களின் அருமை தந்தையார்தான் நான் போற்றி வணங்கும் எனது ''அன்புத் தெய்வம்''.

''அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்'' என்ற ஔவையின் மொழிக் கேற்ப எனது அன்னையும் பிதாவும் மனித தெய்வங்கள்தான். என் தந்தையார் ஒரு இல்லறத்துறவி. பல காலமாய் மனதைப் பக்குவப்படுத்தி ஒரு நிலைக்கு கொணர்ந்துள்ளார்கள். தனிமையில் தியானத்தில் அமர்ந்து விட்டார்களென்ருல் எவரும்

அவர்களை அணுக இயலாது. மூன்று, நான்கு தினங்கள் ஆகினும் உணவு உட்கொள்ளமாட்டார்கள். அவர்கள் சிறு வயது முதல் துறவறத்தில் பற்றுக் கொண்டவர்கள். இல்லற வாழ்க்கையில் ஈடுபட்ட பின்னரும் துறவறத்தை மேற்கொண்டிருந்தார்கள். இல்லறத்தில் துறவறத்தை மேற்கொள்வது கடினம். ஏனெனில் வாழ்க்கை துணைவியும் அதற்கு ஏற்ப அமைய வேண்டும். என் அன்னை எனது தந்தையாரின் மனம்போல நடந்து அவர்களுக்கு வேண்டிய பணிகளை உள்ளம் உவந்து சலிக்காது பொறுமையுடன் செய்து சகல விதத்திலும் அவர்களுக்கு உறுதுணையாக இருந்த உத்தமி.

மனிதருக்கு இயற்கையில் தீயகுணமும், நற்குணமும் கலந்துதான் இருக்கும். பிறக்கும் பொழுதே நல்லவராகவோ, தீயவராகவோ பிறந்து விடுவதில்லை. வளர்க்கப்படும் விதத்தில்தான் மாறுபடுகிறார்கள். எனக்கு மூன்று சகோதரர்களும், இரு சகோதரிகளும் இருக்கிறார்கள். என் சகோதரர்கள் இப்பொழுது உயர்பதவியில் நற்பெயருடன் விளங்கக் காரணம் அருமை தந்தையாரின் வளர்ப்புத்தான். சிலர் சூழ்நிலையாலும், தகாத நண்பர்களின் சேர்க்கையாலும் கெட்டுவிடுவார்கள். என் சகோதரர்கள் சேர்க்கையால் கெட்டு தீயவழிகளில் சென்றுவிடாதவாறு தந்தையார் அடிக்கடி பல புத்திமதிகளை கூறிக்கொண்டே இருப்பார்கள். அவர்கள் கூறும் அறிவுரைகளை மனதிற் கொண்டு அதன்படி நடக்கவும் செய்வோம். அவர்கள் நல்லுரைகள் கூற ஆரம்பித்து விடின் காலம் கடருவதே தெரியாது. கணீர் என்ற குரலில் தங்கு தடையின்றி கூறிக் கொண்டே இருப்பார்கள். சகோதரர்களும் இருக்கையில் கூட அமராது, எவ்வளவு நேரமாகினும் நின்று கொண்டே அவைகளைக் கேட்டுக் கொண்டிருப்பார்கள். சலன புத்தியுடன் இராது, மன உறுதியுடன் நேர் போக்காக இருக்க வேண்டும் என்றும் கூறியுள்ளார்கள். மேலும் மனச்சாட்சியை மதிப்பவன் வாழ்வில் அநீதிகள் நிகழாது. ஆகவே ஒவ்வொருத்தரும் மனச்சாட்சிக்கு மதிப்பு கொடுத்து வாழ வேண்டும் என்பதும் அவர்களின் கருத்து. இதன்படி அவர்கள் நடந்தும் காட்டியுள்ளார்கள். சகோதரர்களுக்கு அறிவுரை கூறுவது போன்று நாங்கள் சகோதரிகள் மூவரையும் அமரச் செய்து எங்களுக்கு மணமாகுமுன் எவ்வாறு ஒழுக்கமுடன் இருக்க வேண்டும். பின்னர் மணமானபின் இல்வாழ்க்கையில் எவ்வாறு பண்புடன், பொறுமையாக நடக்க வேண்டும் என்பது பற்றியும் கூறியுள்ளார்கள். பொதுவாக உலகில் தந்தையர் குழந்தைகளைப்படிக்கவைக்கவும், அவர்களுக்கு வேண்டுவன செய்யவும்தான் செய்வார்கள். ஆனால் இவ்வாறு அறிவுறைகள் கூறி மக்களை நல்ல பண்புள்ளவர்களாக ஆக்குவதையே குறிக்கோளாகக் கொண்டுள்ள தந்தையைக் காண்பது அரிது.

அவர்களின் பேச்சிலும், நடவடிக்கையிலும் ஞானமும், பெருந்தன்மையும் ஒளி வீசும். தன் வாழ்க்கையைபிறர்நலனுக்காகவே அர்ப்பணித்தார்கள். பிறருக்கு மனதாலும் தீங்கு நினைக்க மாட்டார்கள். தனக்கென வாழாது பிறர்க்கென வாழ்ந்த உத்தமர். அவர்கள் பராசக்தியின் அருள்பெற்ற சித்த வைத்தியத்திலும் சிறந்து இருந்தார்கள். இதனால் எங்கள் குடும்பத்தாரைவிட சுற்றத்தாரும் நண்பர்களும் தான் பயனை அதிகம் அடைந்தார்கள். அவர்கள் வாழ்நாளில் பெரும் பகுதியை பிறருக்கு தன்னால் எவ்வகையினுலெல்லாம் உதவ முடியுமோ அவ்வாறே மனமகிழ்வுடன் சலியாது உதவி செய்தார்கள். பெண்பிள்ளைகளை பிரியமுடன் வளர்த்தார்கள். ஆணை அடித்தும் பெண்ணைப் போற்றியும் வளர்க்க வேண்டும்; ஆனால் நல் போதனைகள் இருவருக்கும் அவசியம் எனப் புகலுவார்கள். பெண்ணைப் போற்றி வளர்க்கக் காரணம் எல்லா பெண்களுக்கும் இல்வாழ்க்கை இனிதாய் அமைந்து விடுவதில்லை; ஒரு சிலருக்குத்தான் அமையும்; ஆதலால் பெண்கள் இல்வாழ்க்கை ஏற்கும் முன்னரும் எதற்காக துன்பத்தில் உழல வேண்டும்? என்பார்கள்.

நல் வாழ்க்கைக்கு வேண்டியவை நல்ல பண்புள்ள மனம், இரக்கம் பிறரைப் புண்படப் பேசாத தன்மை என்றும் கூறுவார்கள். "தீயினுற் சுட்ட புண் உள்ளாறும், ஆருதே நாவினுற் சுட்ட வடு" என்ற திருக்குறள்படி தீப் புண்ணைவிட கொடியதாகிய நாவினுற் சுடும் சொற் புண்ணை பிறருக்கு நாம் ஏற்படுத்தாமல் இருக்க நாவடக்கம் வேண்டும் என்பார்கள். உலகில் உள்ளவரை பிறருக்கு உதவியாக, ஆறுதலாக இருக்க வேண்டும் எனச் சொல்லுவார்கள். இதன்படிதான் அவர்களும் இருந்தார்கள்.

அவர்கள் சில நாள் உடல் நலமின்றி இருந்தார்கள். அச்சமயம் தன்னுல் பிறருக்கு தொல்லையும், கஷ்டமும் உள்ளதே என வருந்தினுர்கள். மற்றவர்களுக்கு பாரமாகத் தான் இருக்கக்கூடாது என்ற எண்ணம் அவர்கள் மனத்தில் உதித்ததும் அவர்களாகவே அவர்கள் ஆன்மாவை குறைத்து சமாதி நிலை அடைந்து விட்டார்கள். அவர்களின் இறுதி காலத்திற்கு முன் சில மாதங்கள் அவர்களுக்கு இரவும் பகலும் இடைவிடாது பணிவிடை செய்யும் கிடைத்தற்கறிய பாக்கியம் எனக்குக் கிட்டியது. அச்சமயம் நான் அவர்களுக்கு பொறுமையோடு குறைவின்றி அவர்கள் மனம் மகிழ பணிவிடைகளை நிறைவேற்ற எனக்கு உதவியது, அவர்கள் என்னை வளர்த்த விதமும் அவர்களின் பொன்னுன அறிவுரைகளும்தான். அறிவு மிக்க தந்தையின் அன்புப் பராமரிப்பில் அதிக நாள் வாழ்ந்தவள் நான். என்னைத்தான் அவர்கள் அருகிலேயே வைத்து சீராட்டிப் பாராட்டி மற்ற குழந்தைகள் ஐவரைக் காட்டிலும் அதிக அன்புடன் வளர்த்தார்கள். அவர்கள் என்னை இவ்வாறு அன்புடன் வளர்த்ததற்கு நான் அவர்களுக்கு வேண்டிய பணிகளை மகிழ்வுடன் செய்து என் கடமையைச் சரிவர நிறைவேற்றியது என் மனதிற்கு மிகவும் நிம்மதி. என் கடமையை நான் அவர்கள் உள்ளம் உவகை அடையச் செய்து அவர்களிடமிருந்து நல்லாசியும் பெற்றேன். அவர்களின் நல்லாசியே என்னை என்றும் காக்கும்.

என் தந்தையாரும் ஒரு கடமை வீரர். கடமையை நிறைவேற்றும் பொழுது சொந்த விருப்பு வெறுப்புகளுக்கு இடம் தரக் கூடாது என்றும் கூறுவார்கள். அதன்படி அவர்கள் மனைவிக்கு, குழந்தைகளுக்கு, உறவினர்களுக்கு நண்பர்களுக்கு குறித்த காலத்தில், காலம் தவருது சந்தோஷமுடன் தன் கடமையைச் செய்தும் உள்ளார்கள்.

இவ்வாறு பல சிறப்புகளுடன் சிறந்து விளங்கிய எங்களது ஞானத் தந்தை எங்களைவிட்டு அகன்றுவிட்டார்கள். இனி என்று காண்போம்! எங்கு தேடினும் காண்பதற்கு முடியாத உயரிய பொக்கிஷம். அன்பின் உறைவிடம். அறிவின் பிறப்பிடம் இவ்வளவு உயரிய தந்தையை கிடைக்கப் பெற்ற நாங்கள் பாக்கிய சாலிகள்தான். இருப்பினும் இவ்வளவு விரைவில் அவர்களை நாங்கள் இழக்க நேரிட்டது எங்களது துர்ப்பாக்கியந்தான். அவர்களின் பிரிவுத் துயரை தாங்கும் சக்தி இதயத்திற்கு இல்லை. பிரிவைத் தாங்காது இதயம் குமுறுகிறது. புறக்கண்ணுல் அவர்கள் திரு உருவை காண முடியாவிடினும் அகக்கண்முன் அவர்கள் தோற்றமளித்துக் கொண்டுதான் இருக்கிருர்கள். அவர்களின் திரு உருவம் மறைந்துவிடினும் அவர்களது அன்பு உள்ளம் என்றும் எங்களுடன் தான் இருக்கும். எங்களை விட்டு அகலாது. எங்கள் வாழ்க்கையில் ஏற்படும் இன்னல்களை நீக்கி எங்களுக்கு இன்பம் அளிக்க அம்மனம் துணை புரியும். அவர்கள் கூறியுள்ள பொன் மொழிகளும், அறிவுரைகளும் கல்லின் மேல் எழுத்துப் போல் மனதில் ஆழப்பதிந்து அழியாது உள்ளன.

எனது அன்புத் தெய்வத் தந்தை என்றும் எங்களுக்கு உறுதுணையாக இருந்து, உதவி புரிந்து, உறுதி கொடுத்து காப்பாற்றுவார்கள்.

## சுவாமிகளின் அருள் மொழிகள்

பிறக்கும் குழந்தைகளில், ஆண் குழந்தைகள் தாயைப் போன்ற சாயலும், பெண் குழந்தைகள் தகப்பனைப் போன்ற சாயலுமாக மாறி அமைவது அக்குழந்தைகளுக்கு ஒரு கவர்ச்சி. அக் குழந்தைகள் பின் வாழ்க்கையில் ஆதிக்கத்துடனிருக்கும்.

✵ ✵ ✵

'அரணை முளை படைத்தவர்' என்பார்கள். அரணை யென்ற பிராணி, ஒருவரைக் கடிப்பதுபோல் விரைந்து சென்று அன்னார் பக்கம் நெருங்கியதும் ஒன்றும் செய்யாது திரும்பிவிடும். அதேபோல் சிலர் தாங்கள் எடுத்த காரியம் வெற்றியடையும் தருணத்தில் முயற்சியை நிறுத்திக் காரியத்தைக் கைக்கொள்ளாது விட்டு விடுவார்கள்.

---

# தற்காலப் புத்த பிரான்

திரு ஊமைத்துரைத் தேவர், புதூர்.

புதூர் ஊமைத்துரை என்றாலே போக்கிரித்தனத்திலே முதல் நம்பர் என்பார்கள். வாசுதேவநல்லூர் வட்டாரக் கிராமங்களுக்கு நான் போய் விட்டால், சத்தம் ஒடுங்கி வாய் மூடிக் கிடக்கும். மனிதனுக்கு இருக்க வேண்டியவைகள் அன்பு, அறிவு, அறம் முதலியவைகளாகும். ஆனால் என்னிடத்தில் இருந்தவைகள் களவு, கொள்ளை, கொலை முதலியனவாகும். வாலிப முறுக்கிலே யாருக்கும் கட்டுக்கடங்காமல் களவு வேலைகள் செய்து கொண்டிருந்தேன். போலீசார் என்னைத் தேடாத இடம் இல்லை. அவ்வளவு பேர் வாய்ந்த மனிதனாக இருந்தேன். பிச்சுவா எப்போதும் இடுப்பிலே இருக்க யாருஞ் செய்யாத முரட்டுக் காரியங்களில் ஈடுபட்டு இரும்பு நெஞ்சங் கொண்டவனாக இருந்தேன். இப்படி போக்கிரிகளிலே நம்பர் ஒன்று என்று இருந்த என்னை புத்தகம் தூக்கிப் படிக்கும் அளவிற்குப் புதிய மனிதனாக ஆக்கிய பெருமான், நான் வணங்கும் தெய்வம், தற்காலப் புத்தர்பிரான் தவத்திரு பொன்னையா சுவாமிகளேயாகும். அறவழித் தலைவனாகிய அவர்கள் என் அற்பத்தனங்களை நீக்கி யோக்கியனாக்கினார்கள், என்றால் என்குல தெய்வமான வடகாசியம்மன் அளித்த பாக்கியமே பாக்கியம்.

"சித்து விளையாடும் செம்மேனித் திருமகனும்
முத்துக் கடல்போல் ஞானத்தில் பெரியவனும்
பித்துப் பிணியாளருக்குப் பேரான மருத்துவராம்
கொத்து மலரெனச் சிரித்திடும் ஞானக் கோவேந்தனும்
செஞ்ஞாயிறு ஒளிபோல் சுடர் விடுமாம் முக மதிலே
அஞ்சாத ஏறுபோல் ஆற்றுவாராம் அறிவுரையே
துஞ்சிய மனமுடையோர்க்கு துயரோட்டும் தூமணி விளக்காம்
வெஞ்சுரம் கண்டோருக்கு வழிகாட்டும் வெண்ணிலவாம்"

ஏதோ எனக்குத் தெரிந்த கருத்துக்களை வைத்து ஒரு பாமாலையாக எழுதியிருக்கிறேன். இவ்வாறு தமிழின் சுவையை எனக்கு ஊட்டி பல புராணங்களைப் படிக்கும்படி செய்தது அத்தெய்வ உள்ளம்.

1932 ஏப்ரல் மாதம் நான்காம் நாள் நான்கு ஆண்டு சிறை தண்டனைக்குள்ளாகி சிறையிலே அடைபட்டேன். சிறையிலே

அடைபட்ட நான் செய்த தீயச் செயல்களை யெல்லாம் நினைத்து வருந்திக் கண்ணீர் விட்டேன். அப்போதுதான் சுவாமிகளுடைய அரிய பெருமைகளை எல்லாம் கேள்விப்பட்டேன். அத்தெய்வச்செல்வரிடம் சென்ருல்தான் நாம் நல்வாழ்வு பெறமுடியும் என்பதை உணர்ந்தேன்.. கொலைத் தொழிலிலே ஈடுபட்ட வால்மீகி ஒரு காவியம் எழுதும் புலவனாக மாறினான். அது போன்று அடியேனுக்கும் நல்வழி வழங்கி யோக்கியனாக மாற்றுவார்கள் என்று எண்ணத் தொடங்கினேன். இவ்வாறு சிறையிலே நான் துன்பப்பட்டுக்கொண்டிருக்கும்போது, சங்கரன் கோயிலிலே ஒரு முறை கண்ட அவர்களுடைய சாந்த முகம் எனக்கு நள்ளிரவு வேளைகளில் தோன்றி என்னுடைய மனதிற்கு நிம்மதியளித்தது.

அதன்படியே நான், 1935 செப்டம்பர் மாதம் பதினொன்றும் நாள் விடுதலை கிடைத்ததும், மீண்டும் போலீசார் கண்பார்வையிலே சில மாதங்கள் இருக்கலானேன். நான் படுகின்ற மன வேதனையைக் கண்ட என்னுடைய நண்பர்களாகிய திரு பெருமாள் புலவர் எனக்கு ஆறுதல் சொல்லி, "சுவாமிகளிடம் உம்மை அழைத்துச் செல்லுகிறேன். அவர்களால் உம்முடைய குறைகள் நீங்கும்" என்ருர்கள். திரு பெருமாள் புலவரும் சுவாமிகளுடைய மனமொத்த அன்பராகும். 1936 மே மாதம் இருபத்திரண்டாம் நாள் திரு பெருமாள் புலவரும், சப்-இன்ஸ்பெக்டர் திரு சோலைச் செட்டியாரும் நானும் சுவாமிகளைத் தரிசிக்கச் சென்ருேம். என்னோடு வந்த பெரியார்கள் இருவரும் சுவாமிகளிடம் என்னுடைய நிலையை எடுத்துக் கூறினார்கள். சுவாமிகளுடைய திருப்பாதத்தில் பணிவோடு தலை வணங்கி, "நான் செய்த அடாத செயல்களை எல்லாம் சொல்லி புண்படும் என் மனதிற்கு ஆறுதல் அருள வேண்டும். என்னை நல்லவனாக நாலு பெரிய மனிதர்களோடு பழகுமாறு செய்ய வேண்டும். இப்போதும் நான் போலீசார் கண்காணிப்பில் இருக்கிறேன். இவைகளை நீக்கி எனக்கு நல்வழி காட்டுங்கள்," என்று கண்ணீர் ததும்பக் கதறினேன். என்னுடைய பரிதாப நிலையைக் கண்ட சுவாமிகள் "ஊமைத்துரை, கவலைப் படாதீரும், உம்முடைய தகாத செயல்களை யெல்லாம் பொட்டணம் கட்டியாகி விட்டது. "உள்ளியர் தெள்ளியராயினும் ஊழ்வினை மெள்ள நுழைந்தே தீரும் என்ற பெரியோரின் வாசகம் பொய்க்காது. ஆனால் இன்றோடு உம்முடைய பாவச் செயல்கள் எல்லாம் கழிந்தன. வடகாசியம்மன் அருளும் உமக்கு இருக்கிறது. கூடிய சீக்கிரம் விமோசனம் கிடைக்கும்," என்று திருவாய் மலர்ந்தருளினார்கள். அதற்குப் பின் என்னுடைய கர்ம வினை யெல்லாம் தீர சுவாமிகளின் பக்தனாகவும் தெய்வத் திரு பொதிச் சுவாமி அவர்களுக்கு உண்மை ஊழியனும் ஆனேன். சுவாமிகளிடம் நான் பழகும்போதும் பேசும்போதும் மிகப் பணிவோடு பயந்து நடப்பேன்.

சுவாமிகள் சொல்லுகிற வாக்கு எதுவாயினும் பலித்து விடும். இதை யான் நேரடியாகச் சங்கரன் கோவிலிலே கண்டிருக்கிறேன். சுவாமிகள் ஒரு தனி ஆசனத்தில் அமர்ந்திருக்கப் பல அன்பர்கள் அவர்களைச் சுற்றி உட்கார்ந்திருந்தார்கள். அப்போது அங்கிருந்த போலீஸ் திரு பிச்சையாண்டியா பிள்ளை என்பவர், "தோட்லாம்பட்டி வேலுத் தேவரும், மேலப்பட்டி தொந்தித் தேவரும், நம் ஊமைத்துரைத் தேவரை விடக் கெட்டிக்காரர்கள்தான். ஆனால் அவர்கள் நிறம் கருப்பு. அப்படியிருந்தாலும் கட்டி வயிரந்தான்," என்று ஏளனமாய்க் கிராமத்திலுள்ள வீரர்களைப்பற்றிப் பேசினார். இவ் வார்த்தைகளைக் கேட்ட சுவாமிகள், "ஐயா எதுவும் நிதானமாகப் பேசினால்தான் சரியாக இருக்கும். உம் சரீரமும் மித மிஞ்சிக் கருப்பாக இருந்தால், கருங்குன்மப் பத்தே ஏற்பட்டு விடும்" என்று சொன்னார்கள். இவ்வாறு சுவாமிகள் சொன்னவுடன் திரு பிச்சையாண்டியா பிள்ளை எழுந்து தடாலென்று சுவாமிகளுடைய திருப்பாதங்களிலே விழுந்து

கண்ணீர் விட்டு "சுவாமிகளே! என்னை மன்னித்து விடுங்கள். அறியாமல் செய்த பிழைக்கு தாங்கள் மனம் இரங்க வேண்டும்," என்று கெஞ்சினார். அதற்குச் சுவாமிகள், "ஐயா வருவது வந்தே தீரும். கொஞ்ச நாள் அனுபவித்த பின் விமோசனம் கிடைக்கும்." என்று அருளினார்கள். நாங்கள் எல்லோரும் சுவாமிகளுடைய பேச்சைக் கேட்டு எதுவும் புரியாது விழித்தோம். அதன் பொருள் அப்போது எவருக்கும் விளங்க வில்லை. பின்னர் நாற்பத்திரண்டு நாட்கள் கழித்து திரு பிச்சையாண்டி பிள்ளையைச் சந்திக்க நேர்ந்தது. என்னையே திடுக்கிடச் செய்தது அவருடைய தோற்றம். சரீரம் முழுதும் கருமை நிறப் பத்து தடித்து நீர்க் கோத்திருந்தது. அப்பொழுதுதான் சுவாமி அவர்களுடைய திருவாக்கின் பொருள் எனக்குப் புரிந்தது. இரண்டாண்டுகளுக்குப் பின்னால் திரு பிச்சையாண்டியா பிள்ளை சுவாமிகளிடம் வந்து திருவடி வணங்கி விமோசனம் அருளும் படி வேண்டினார். அதற்குச் சுவாமிகள் மருந்தும், விபூதியும் கொடுத்து வியாதியைத் தீர்த்தருளினார்கள்.

மற்றொரு நிகழ்ச்சி. தெய்வத்திரு பொதிச் சுவாமி அவர்களுக்கும், சுவாமிகளுக்கும் உள்ள அருள் வடிவங்களைக் காட்டுவதாகும். அதாவது ஒரு பௌர்ணமி நாளில் தெய்வத் திரு. பொதிச் சுவாமி அவர்களும், சுவாமி அவர்களும், ரெங்க சமுத்திரத்தில் இருந்தார்கள். அன்றைய நாளில் இருவரும் கரிவலம் வந்த நல்லூர் பால்வண்ணநாதரைத் தரிசிக்க வேண்டுமென்று இருந்தார்கள். அப்படிப் புறப்படும்பொழுது திடீரென்று பெருமழை இடிமின்னலோடு பெய்யத் தொடங்கியது. அப்போது சுவாமிகள் தெய்வத்திரு. பொதிச் சாமிகளைப் பார்த்து "இனிநாம் பால்வண்ணனை எப்படித் தரிசிக்க முடியும்?" என்று வினவினார்கள். அதற்கு தெய்வத்திரு பொதிச் சுவாமிகள், "ஒருவன் வண்டிகொண்டு வருவான். அதிலே நாம் போய்விடலாம் கவலைப் படாதீர்கள் சுவாமி," என்றார்கள். அந்த நேரத்தில் ஒரு குசச் செட்டியார்தான் ஓட்டி வந்த வண்டியை அவருடைய சொந்தக்காரர் வீட்டில் நிறுத்திவிட்டு வந்து சுவாமிகள் இருவர்களையும் கண்டு தரிசனம் செய்தார். அப்போது செட்டியாரைப் பார்த்து ஆசீர்வதித்து தெய்வத்திரு பொதிச் சுவாமிகள், "செட்டியாரே! உம் வண்டியில் கரிவலம்வந்தநல்லூர் செல்லவேண்டும். வருகிறீர்களா?" என்று கேட்டார்கள். "அதற்குத் தடையென்ன சுவாமிகளே! வண்டியிலே எல்லோரும் போகலாம்," என்று சொன்னார் அச் செட்டியார். பெரும் மழையிலே பாதைகள் யெல்லாம் சகதிக் காடாய்க் கிடந்தன. ஆகையால் அவர்கள் அமர்ந்திருந்தவண்டி மெதுவாக கரிவலம்வந்த நல்லூர் வந்து சேர்ந்தது. அதிக நேரமான தாகையால் பௌர்ணமி பூசையெல்லாம் முடித்துக் கோயிற் கதவுகளை அடைத்துவிட்டார்கள். இதைக்கண்ட சுவாமிகளுடைய மனம் வருத்தப்பட்டது. அந்த வண்டி கோயில் முன்னால் நிறுத்தப்பட்டது வண்டியோட்டி வந்த செட்டியார் மாடுகளை அவிழ்த்துக்கொண்டு இரு சுவாமிகளிடமும் விடைபெற்று வண்டிப் பேட்டைக்குப் படுக்கச் சென்றுவிட்டார். தெய்வத்திரு. பொதிச்சுவாமியவர்கள் வண்டியிலேயும், சுவாமிகள் கோயிற் திண்ணையிலும் படுத்துக்கொண்டார்கள். சுவாமிகள், பூசை முடிந்துவிட்டதே என்று வருத்தப் படுகிறார்கள் என்பதைத் தெய்வத்திரு. பொதிச்சுவாமிகள் அறிந்து கொண்டார்கள். இரவு சுமார் மணி பன்னிரண்டு இருக்கும். தெய்வத்திரு. பொதிச்சுவாமிகள் திண்ணையில் படுத்திருந்த சுவாமிகளை எழுப்பி, "சுவாமி எழுந்திருங்கள் பால்வண்ண நாதருக்குப் பாலாபிஷேகம் நடக்கப் போகிறது," என்று சொன்னார்கள். கோவில் கதவுகள் தானாக திறந்துகொள்ள கோயிலுக்குள் சென்றார்கள். மேளச் சத்தமும், மணியோசையும் கேட்கத் தொடங்கின. மலர்கள் தானே யெழுந்து பால்வண்ணநாதரின் கழுத்திலே மாலையாக மாறின. கற்பக

பீடத்திலே ஒரு தட்டிலே சூடம் கொளுத்தப் பட்டது. பெருஞ்சுடராய், சுவாமிகள் மிக மகிழ்வோடு தெய்வத்திரு. பொதிச்சாமி அவர்களுடைய அருளால் பூசை நடக்கும் பால் வண்ண நாதரைத் தரிசனம் செய்தார்கள். பின்னர் மேளதாளங்கள் வெகு விமரிசையாக முழங்க பால் வண்ண நாதருக்கு குடம் குட மாக பாலாபிஷேகம் நடந்ததுகண்டு களித் தார்கள். அவர்களுடைய கையிலும் பால் நிறைந்தது. அருந்தினார்கள். பிறகு சுத்தநீர் அபிஷேகம் நடந்ததும் சுவாமிகள் பால் வண்ண நாதரைத் தெரிசனம் செய்துவிட்டுத் திரும்பினார்கள். தெய்வத்திரு. பொதிச் சுவாமியவர்கள் சுவாமிகளைப் பார்த்து," என்ன, சுவாமி பாலாபிஷேகம் நடந்ததா, பால் அள்ளிப் பருகினீர்களா? என்று வினவி னார்கள். அதற்கு சுவாமிகள் அமிர்தக் கடலில் ஆனந்தத் தாண்டவம் ஆடினேன் என்றார்கள் புன்முறுவலோடு. சுவாமிகளுக்கு தெய்வத்திரு. பொதிச்சாமி அவர்களின் அருள் சக்தி தெரி யாமல் இல்லை. இதிலிருந்து சக்தி வடிவம் கொண்ட உள்ளங்கள் உலகத்தில் எதையும் செய்து காட்டும் என்று தெரிகிறது. இந்த அரிய நிகழ்ச்சியை தவத்திரு. பொன்னையா சுவாமியவர்களே எனக்கு நேரடியாக ஒரு சமயம் திருவாய்மலர்ந்தருளினார்கள்.

1955ம் ஆண்டில் சுவாமிகளைத் தரிசிக்க மற்ற அன்பர்களுடன் நானும் சென்றிருந் தேன். அப்பொழுது மணி ஆறரை இருக் கும். சுவாமிகளைத் தரிசனம் செய்தோம். இரவு பதினொன்றுவரைப் பேசிக்கொண்டிருந் தோம். நாங்கள் அவர்களிடம் விடைபெற்றுக் கொண்டு வீடு நோக்கிப் புறப்பட்டோம். அப்போது சுவாமியவர்கள் எங்களைப் பார்த்து. "விரைவாகப் புறப்பட்டுச் செல்லுங்கள். மழை பெய்யப் போகிறது. நனைந்துவிடாமல் வீடுபோய்ச் சேருங்கள்," என்று சொன்னார் கள். நாங்கள் வெளியிலே வந்து பார்த்தோம், மேகங்கள் சிறிதும் இல்லை. வானம் வெளிச்ச மாகவே இருந்தது. வெள்ளியும் முளைத்திருந் தது. என்ன! இப்படியிருக்கு சுவாமிகள் மழை வரும் என்று சொல்லியிருக்கிறார்களே என்று நினைத்து ஆச்சரியப்பட்டோம். வானம் இவ்வளவு வெளிச்சமாய் இருக்க மழை எங்கே வரப் போகிறதென்று சந்தேகம் கொண்டு சிறிது தூரம் மெதுவாக நடந்து சென்றோம். அனைவரும் அதிசயப்படும்படி திடீரென பெரும் மழை பெய்யத் தொடங்கியது. நனைந்து விடு வோமே என்று ஓடினோம். ஆனாலும் எங்களு டைய ஆடைகளெல்லாம் நனைந்துவிட்டன. சுவாமிகளுடைய அருள் சக்தியை நினைத்துப் போற்றித் துதித்தோம். அன்று பெய்த மழை ஆறுய்ப்பெருகி குளங்குட்டைகளெல்லாம் நிறைந்தது. இவ்வாறு அருள் சக்திபடைத்த சுவாமியவர்கள் கருவையிலே திருக்கோயில் கொண்டார்கள். என்னை நல்லவனுக்கிய இந்நற் தெய்வம் என்னுடைய வாழ்க்கையை என்றும் மாசில்லாது மகிழவைக்கும் என நம் பித் துதித்து வருகிறேன்.

---

## அருள் மொழிகள்

கீழ் குறித்தவாறு சில முக்கிய நாதஸ்வர வித்துவான்களின் திறமையை விளக்குவார்கள். வித்துவான் திரு. வீராசாமி பிள்ளை அவர்கள் பல்லவி எடுப்பிலும், அதை ஆலாபரணம் செய்வதிலும் நிபுணர். திரு வேழிமிழலை சகோதரர்கள், கீர்த் தனை உருப்படிகளை மிகவும் இனிமையாகவும், சுத்தமாகவும் வாசிப்பதில் நிபுணர்கள். காலஞ்சென்ற இராஜரத்தினம் பிள்ளை அவர்கள் இராகம் வாசிப்பதில், முக்கியமாகத் தோடி இராகத்தில், ராஜாவாகும். இவர்கள் "கார்," அளவுடன் கொடுத்து, சுரசுத் தத்துடனும், நாதக் குளுமையுடனும் வாசிப்பார்கள். இவ்வாறு ரசித்துச் சொல்லு வார்கள்.

# சிவசக்தி அருள்பெற்ற சுவாமிகள்

**திரு [illegible], செண்பகபுரம்.**

இல்லறமே நல்லறமாகக் கொண்ட எங்கள் தவத்திரு பொன்னைய சுவாமி அவர்கள், இவ்வாழ்க்கையில் இருந்து இனிமையடைந்து பிரம்ம ஞானத்தை யோகம் மூலம் பெற்ருர்கள். தன்னையறிந்தவன் தலைவனை யறிவான் என்ற கவிக்கூற்றுப்படி சுவாமி அவர்கள் தன்னைத்தானறிந்தவர்கள். இப்படிப்பட்ட உயர் நோக்க முன்னவர்களைத்தான் தனக்கு நண்பர்களாக ஏற்றுக் கொள்வார்கள். சுவாமிகளிடம் வந்து, வாழ்வுதேட வழியில்லாதவர்கள். "சுவாமிகளே! தங்களை வணங்குகிறோம், எங்களுக்கு எப்போது உத்தியோகம் கிடைக்கும். எங்கள் வாழ்வு மலர ஏதேனும் வழியுண்டா? சுவாமிகளே! கருணை விழிகாட்டுங்கள்," என்று கேட்பார்கள். இதைக் கேட்ட சுவாமி அவர்கள் சிந்தனை செய்து, ஞானக் கண்ணுல் பார்த்து, அவர்களிடம் உத்தியோகம் கிடைக்கும், கிடைக்காது என்று உறுதியோடு சொல்லிவிடுவார்கள். இப்படி அவர்கள் சொல்லுகிற வார்த்தைகள், எல்லோரும் வியக்கச் சரியாகவே இருக்கும். மற்ருெரு உத்தியோகஸ்தர் வந்து, சுவாமி அவர்களிடம் "சுவாமிகளே! நான் சின்ன உத்தியோகம் பார்த்துக் கொண்டிருக்கிறேன். மேல் உத்தியோகம் போக முடியுமா? ஏதாவது வழி சொல்லுங்கள். சுவாமிகளே!" என்று கேட்பார். இதற்கு சுவாமி அவர்கள் "அப்பா! உனக்கு மேல் உத்தியோகம் ஆறுமாதத்திற்குள் கண்டிப்பாய்க் கிடைத்துவிடும். இதை ஒரு காகிதத்திலே குறித்துக் கொள்" என்று திருவாக்களித்து விபூதியும் கொடுப்பார்கள். சுவாமிகள் சொன்னபடியே அவருக்கு மேல் உத்தியோகம் கிடைத்துவிட்டது. இதைக் கண்ணுல் நேரடியாகக் கண்டிருக்கின்றேன்.

சுவாமி அவர்கள் தெய்வ வாக்குப் பெற்றவர்கள். ஆறு ஆண்டுகளுக்கு முன் நாதஸ்வர வித்வான் திரு காருக்குறிச்சி அருணுசலம் தெய்வத்திரு பசுபதி பரமகுரு பொதிச் சுவாமிகளின் குரு பூசைக்கு வந்திருந்தார்கள். அந்த விழாவிலே அவர்கள் மிகப்பணிவோடு தவத்திரு பொன்னைய சுவாமிகளுக்கு வணக்கம் செலுத்தி விட்டு, தன்னுடைய இனிய கான நாதஸ்வரக் கச்சேரியை நடத்திஞர்கள். அக்குழலிசையைக் கேட்டு சுவாமி அவர்கள் மிகவும் மகிழ்ச்சியடைந்தார்கள். அதனுல் திரு காருக்குறிச்சி அருணுசலம் அவர்கள் சுவாமிகளின் அன்பைப் பெற்ருர்கள். குருபூசைக்கு வந்த எல்லோருடைய மனத்தையும் அவர்கள் குழலிசையால் தன் வசப்படுத்திக் கொண்டார்கள். அக்கவர்ச்சி பொருந்திய இசையில் ஈடுபட்ட சுவாமி அவர்கள். "அருணுசலம்! அபாரம். நயமான இசை. விழாவுக்கு வந்த எல்லோருடைய உள்ளங்களையும் உங்கள் குழலிலே அடைத்து விட்டீர்களே! அருணுசலம்! இந்த விபூதியைப் பூசிக்கொள்ளுங்கள். இனி உங்களுடைய நாதஸ்வரத்திற்கு நல்ல கிராக்கி ஏற்படப் போகிறது. அகில இந்தியப் புகழ் பெறுவீர்கள். நாதஸ்வர சக்கரவர்த்தி என்கிற பெயரும் உங்களுக்குக் கிட்டப் போகிறது. கச்சேரிக்குப் பணமும் உயரும். வெளி நாடு செல்ல வேண்டிய வாய்ப்புகளும் உங்களுக்குக் கிடைக்கும்," என்று திருவாய் மலர்ந்தருளிஞர்கள். "கொடுக்கிற தெய்வம் கூரையைப் பிய்த்துக் கொண்டு கொடுக்கும்," என்பார்கள். அது போலவே கலியுலகத் தெய்வமாகிய சுவாமி அவர்களின் திருவாக்கு காருகுறிச்சியாரின் நாதஸ்வரகானத்தை உலகரியச் செய்து விட்டது; அன்ஞருடைய வாழ்க்கையையும் வளப்படுத்தியுள்ளது.

இப்படி இதயபூர்வமான தெய்வீக வாக்கும், வளமிகு இன் சொல்லும் சுவாமிகளிடம் பெறுவோர் வாழ்க்கையிலே ஏற்றம் பெற்றுள்ளார்கள். இதை யான் நேரடியாகப் பன்முறை கண்டிருக்கின்றேன். இதோடு சுவாமி அவர்களின் அருள் உதவி பெற்ற குடும்பத்தார்களோ ஆயிர ஆயிரமாய் அவர்களுடைய

தெய்வச் செயல்களை, கதை கதையாய்ப் பெருமையோடு இன்றும் அழகுறப் பேசி வரு கிறார்கள்.

''கொல்லான் புலாலை மறுத்தானைக் கை கூப்பி
எல்லா உயிர்களும் தொழும்''

என்கிற வள்ளுவனின் கொள்கையிலே சுவாமி அவர்கள் கோபுரமாய் நின்றார்கள். குன்றின் மேலிட்ட விளக்காகி கூடிவரும் மக்களின் மனஇருள் போக்கி நன்மை பயக்கும் பல உதவிகளைச் செய்திருக்கிறார்கள். பிற உயிர்களைக் கொல்லாத கருணையுள்ளம் கொண்டவரையும், புலால்தனை உண்ணாது வாழும் புனிதரையும் இவ்வுலக எல்லா உயிர்களும் கைகூப்பித் தொழும். அது போன்று நமது சுவாமி அவர்களைத் தெரியாதார், அவர்களுடைய அருள் செறிந்த உள்ளத்தைக் கேள்விப் படாதவர்கள் எவரும் இருக்க மாட்டார்கள். வள்ளுவனின் கவிப்படியே வண்ண நெறியாளராகிய சுவாமி அவர்களை மக்கள் கண்டால் போதும், புது உலகம் கண்டது போல் புன்னகையோடு ''புத்தர் வழிகொண்ட செல்வரே! நீவிர் வாழ்க! அருள்தனை வழங்கி எங்கள் ஆற்றுத்துயர்தனைப் போக்குங்கள்,'' என்று வாழ்த்தி அவர்களுடைய மலர்ப்பாதம் பணிவார்கள்.

சுவாமி அவர்கள் இல்லற ஞானம் பெற்று சமாதியடைந்தவர்கள். அருள் வாக்குப் பெற்றவர்கள். அறிவுக்கடல்; பொருள் இல்லாத எளிய மக்களுக்கு வேண்டுவன அளிக்கும் அன்புத் தெய்வமாகிய சுவாமி அவர்கள் பொறுமை உள்ளம் கொண்டவர்கள். பொன்னான சுடர் எப்பொழுதும் மலர்ந்த அவர்களுடைய திரு முகத்திலே வீசிக் கொண்டேயிருக்கும். தன்னோடு கள்ள மனதோடு பழகுகிறான், கயமை புரிகிறான் என்று கண்டு கொண்டால் அப்படிப்பட்ட நண்பர்களை முதலில் திருந்தட்டும் என்று மன்னிப்பார்கள். அதற்கு இசைந்து அவர்கள் வரவில்லை என்றால், சுவாமி அவர்கள் அக்கசடர்களை மனதில் நினைத்து, ஏதாவது ஒன்று சொல்லுவார்களேயானால், அது அப்படியே பலித்து அல்லல் படுத்திவிடும்.

இதனால் பழகும் நண்பர்கள் அவர்களிடம் மிக பயபக்தியோடு நடந்து கொள்வார்கள். தங்களுடைய வாழ்க்கையையும் வளப்படுத்திக் கொள்வார்கள்.

சுவாமி அவர்களின் திருப்பாதம் தொழும் பாக்கியம் அடியேனுக்குப் பின் வருமாறு ஏற்பட்டது. பத்தாண்டுகளுக்கு முன் நான் வருமானவரி கட்டி வந்தேன். நம் அரசாங்கம் போடும் இந்த வரியை என்னால் கட்டமுடியவில்லை. என்ன செய்வது என்று தெரியாமல் திண்டாடினேன். அப்பொழுது என்னுடைய நண்பராகிய திரு முத்தையாத் தேவர், ''பாளையங்கோட்டையில், பெருமாள்புரத்தில் தவத்திரு பொன்னையா சுவாமி அவர்கள் இருக்கிறார்கள். அவர்களிடம் நாம் சென்றால் தீராத கஷ்டங்கள் எல்லாம் தீர்ந்துபோகும்,'' என்று என்னிடம் கூறினார்கள். உடனே எனக்கு அவர்களுடைய திருப்பாதம் பணிந்து என்னுடைய துயர்களை எல்லாம் எடுத்துச் சொல்லி, அவர்களுடைய அன்பைப் பெறவேண்டும், அப்பொழுதுதான் என் வாழ்க்கையில் பின்னிக்கிடக்கும் அல்லல்கள் போகும் என்ற தீவிர எண்ணம் உதித்தது. அந்த நேரத்திலேயே நானும் என்னுடைய நண்பரும் தவத்திரு பொன்னைய சுவாமி அவர்களைக் காண்பதற்காக பாளையங்கோட்டை சென்றோம். அங்கு பெருமாள்புரத்தில் உள்ள இல்லத்தில் சுவாமிகளைக் கண்டோம், என்ன ஆச்சரியம்! பல பெரிய பணக்காரர்கள், நிலக்கிழார்கள், தங்களுடைய தோளிலே கிடந்த அங்கவஸ்திரங்களை, இடுப்பிலே கட்டிக்கொண்டு, மிகப் பணிவாக சுவாமிகள் கூறும் வார்த்தைகளைக் கேட்டுக் கொண்டிருந்தார்கள். இக்காட்சியைக் கண்ட என்னுடைய மெய் சிலிர்த்தது. என்னையறியாமலே சுவாமிகளின் திருப்பாதங்களில் விழுந்து வணங்கினேன்.

"சுவாமி! நான் ஒரு ஏழை. பத்து வருடமாக வருமானவரி கட்டிவருகிறேன். காடு, கரை விளைச்சல் இல்லை. இப்போது என்னால் இவ்வரியைக் கட்டமுடியவில்லை. எந்த வழியும் இல்லாது திண்டாடுகிறேன். தாங்கள் தான் அடியேனை மனமுவந்து காப்பாற்ற வேண்டும்," என்று மிகப் பணிவோடு சுவாமி அவர்களின் திருப்பாதங்களைத் தொட்டு, வணங்கிக் கேட்டேன். என்னுடைய பரிதாபமான நிலையைக் கண்ட சுவாமி அவர்கள் "சங்கையா! உமக்கு இனிமேல் வருமானவரி கிடையாதய்யா, இந்தாரும் விபூதியைப் பூசிக்கொள்ளும் கவலையில்லாமல் வீடு போய்ச் சேரும். அடுத்த வாரம் நீர் இங்குவாரும்," என்றார்கள். அத்தெய்வச் சீலர் கூறிய வார்த்தைகள் வருமான வரிபோடும் ஒரு அதிகாரி கூறியது போலவே என் உள்ளத்தில் பட்டது. சுவாமி அவர்களைக் கண்ட மகிழ்ச்சியிலே எனது ஊராகிய செண்பகபுரம் வந்து சேர்ந்தேன். நான் வந்த மூன்று நாட்கழித்து, இனி வருமானவரி கட்டவேண்டியதில்லை என்று பெரிய அதிகாரியிடமிருந்து பதில் வந்து விட்டது. இப்பதிலைக் கண்ட நான் கருணை பொழியும் தெய்வமாகிய சுவாமிகளின் தயாள குணத்தை எண்ணி உள்ளங்கசிந்தேன். அவ்வுத்தம சீலரைக் காண்பதற்காக, உடனே பாளையங் கோட்டைக்கு விரைந்து சென்றேன். இவ்வாறு ஏழை, எளியவர்கள், பாமரர்கள் முதலியோர்கள் தங்களுக்கு ஏதாவது துன்பம் ஏற்பட்டால், சுவாமி அவர்களிடம் வந்து தங்கள் குறையைச் சொல்லுவார்கள். அவர்களுடைய நிலையைக்காணும் சுவாமி அவர்கள் புன்னகை மலர, ஆறுதல் கூறி, வந்த இடையூறுகளைப் போக்குவார்கள். இப்படி நல்ல உள்ளமும், நயமான உரையும், நறுந் தமிழ்ப் புலமையும் நமது சுவாமி அவர்களிடம் குடி கொண்டிருந்தன.

சித்த வைத்தியத்திலே எவரையும் இணைந்து ஈடுபடுத்த முடியாத மகாநிபுணர் சுவாமி அவர்கள். அவர்களுடைய வைத்திய முறைகள் வலிவிழந்தோருக்கு வல்லமையும், நலிந்தோருக்கு நல்லுரமும் வழங்குகின்றன. என்னுடைய மனைவிக்கு நீண்ட நாட்களாக துவாலை என்ற நோய் ஏற்பட்டு மிகவும் மனமொடிந்து சங்கடப்பட்டாள். எத்தனையோ டாக்டர்கள் அவளுக்கு சிகிச்சை செய்தும் வியாதி குணமடையவில்லை. பின்னர் வருந்துயர் போக்கும் சுவாமி அவர்களின் திருப்பாதம் பணிந்து, என்னுடைய மனைவி படும் அவதியை எடுத்துக்கூறினேன். விவேகதெய்வமாகிய சுவாமி அவர்கள் பலவாறு சிந்தனை செய்துபின் "சங்கையா! ஊழ்வினைப் பயனை மாற்றுவது பெரிய கஷ்டமாகுமே. ஆனாலும் என்னுடைய அன்புக்குப் பாத்திரமாகி விட்டீர். அமைதியுள்ளவனுக்கு ஆண்டவன் அவதியையும் கொடுத்திருக்கிறான். ஆத்திரப் படாதே ஏழாண்டிலே தொலைய வேண்டிய பீடைகள் இன்றோடு ஒழியப் போகிறது. கவலையை விடும் இந்த விபூதியைக் கொண்டு போய் உன் மனைவிக்குக் கொடும். இந்த ஒரு வேளை மருந்திலேயே எல்லாச் சனியன்களும் பறந்து விடும் என்று திருவாய் மொழிந்தார்கள்.

சுவாமி அவர்கள் கொடுத்த ஒரு அரிசி எடையுள்ள அப்ரேகம் என்ற மருந்து, ஒரே வேளையில் என் மனைவியின் வியாதியைப் போக்கடித்தது. எவரும் தீர்க்கமுடியாத என்னுடைய மனைவியின் வியாதி விவேக மூர்த்தியாகிய சுவாமி அவர்களின் திருக்கருணையால் தீர்ந்தது. அது எனக்கு மிகுந்த ஆச்சரியத்தை உண்டாக்கியது. தீராத இவ்வியாதி ஒரேவேளை மருந்தில் எப்படிக் குணமாயிற்று என்று சந்தேகம் உண்டாகியது. பின்னர் தான் சுவாமி அவர்கள் நன்மருந்து கொடுத்தாலும், அவர்களுடைய உள்ளத்திலே நடமாடும் தெய்வச் சுடரே என்னுடைய மனைவியின் வியாதியைக் கொன்று, அவளுக்கு நல் வாழ்வு அளித்திருக்கிறது என்பதைத் தெரிந்து கொண்டே, ஊழ்வினையையும் தீர்க்கின்ற அந்த உத்தமத் தெய்வத்தை நினைத்தவுடனே என் கண்களில் நீர் கசிந்தது. சுவாமி அவர்கள்

என்னிடம் "சங்கையா! வீட்டிற்கு மனைவியே குடும்பவிளக்கு. அது அணையாமல், மங்காமல் எரிந்து கொண்டிருந்தால்தான் குடும்பம் பிரகாசத்தோடு "இனிது விளங்கும்" என்று கூறுவார்கள். இவ்வரிய எண்ணமுடைய திரு சுவாமி அவர்கள் தன்னுடைய ஞான திருஷ்டியால் பல ஆண்டுகள் துயர் பட்ட என்னுடைய வீட்டுக்காரியின் வியாதியையும், அதைப் பார்த்து பக்தன்படும் திண்டாட்டத்தையும் கண்டு, பக்தனின் பரிதாப நிலையைப் போக்கி குடும்ப விளக்கை ஒளிபடச் செய்தார்கள். இப்படி எனக்கு நற்கதியளித்த சுவாமிகளின் ஆத்ம சக்திக்கு என்றென்றும் நான் பணிபுரியக் கடமைப்பட்டவனாகும்.

ஒருநாள் நான் சுவாமி அவர்களுக்குப் பணிவிடை செய்து கொண்டிருக்கும்போது, "சுவாமி! என்னுடைய மகளுக்கு இது பேறு கால நேரமாகும். ஏதாவது தீங்குவருமோ என்று கவலைப்படுகிறாள். அவளுக்கு என்ன குழந்தை பிறக்கப் போகிறதோ! சொல்லுங்கள் சுவாமி," என்று அவர்களிடம் கேட்டேன். இதைக் கேட்டவுடன் சுவாமி அவர்கள் கலகல வென்று சிரிக்கத் தொடங்கினார்கள். அப்பொழுது சொர்ணபிம்பமாய் ஒளிவிட்டுப் பிரகாசித்தது அவர்கள் திருமுகம். "சங்கையா! உம்மைப் பார்க்கின்றபொழுது எனக்கு வேடிக்கையாகத்தானய்யா இருக்கிறது. அச்சம் எப்பொழுதும் உம் உள்ளத்தில் குடிகொண்டிருக்கிறது. அமைதியையும், அறிவையும் பாழாக்குவது இவ் அச்சந்தான். பராசக்தி, உம் மகளுக்கு ஒரு ஆண் குழந்தையைக் கொடுக்கப் போகிறாள். இனி அவளுக்கு அதிர்ஷ்டந்தான். இப்போது சில பெரிய மிராசுதார்கள் வருவார்கள். கடையில் போய் நீர் சர்க்கரை வாங்கிக் கொண்டு வந்து, என்னுடைய மகளுக்கு, இன்னும் பதினைந்து நாள் கழித்து ஆண் குழந்தை பிறக்கப் போகிறது. என்று சொல்லி எல்லோருக்கும் கொடும்" என்று மகிழ்வோடு மொழிந்தார்கள். சுவாமி அவர்களின் கட்டளைப்படி சர்க்கரை வாங்குவதற்காகக் கடைக்குச் சென்றேன்.

என்ன இது! குழந்தை பிறப்பதற்கு முன்னராகவே இங்கு வருவோர்க்கு சர்க்கரை வழங்கச் சொல்கிறார்களே என்று எண்ணிக் கொண்டே சர்க்கரையை வாங்கிக்கொண்டு திரும்பினேன். என்ன ஆச்சரியம்! அவர்கள் சொன்னதுபோலவே பல பெரிய மிராசுதார்கள் சுவாமி அவர்களோடு பேசிக்கொண்டிருந்தார்கள். அக் காட்சியினைக் கண்ட எனக்கு கைகால்கள் ஓடவில்லை. கையிலே சர்க்கரையை வைத்துக்கொண்டு மெய்மறந்து நின்றேன். "என்னய்யா! தயங்கி நிற்கின்றீர்; உள்ளேவாரும்" என்ற சுவாமி அவர்களின் குரலைக் கேட்டவுடன், பயபக்தியோடு நான் அவர்களிடம் சென்றேன். பின்னர் சுவாமி அவர்களின் சொற்படி, வந்த பெரிய மனிதர்களிடம் நான் "ஐயா! தாங்கள் தற்போது வரப் போவதையும் எனக்குப் பதினைந்து நாட்களில் ஒரு பேரன் பிறக்கப் போகிறான் என்பதையும் சுவாமிகள் ஏற்கனவே கூறிவிட்டார்கள். தாங்கள் எல்லோரும் இச் சர்க்கரையை எடுத்துக் கொள்ளுங்கள்," என்று குரல் நடுங்கக் கூறினேன். சுவாமிகளின் தெய்வ வாக்கைக் கேட்ட அப் பிரமுகர்கள் அசந்துபோய், நாடியிலே கைவைத்து, வியப்படைந்து சுவாமிகளின் திருப்பாதங்களில் பணிவோடு விழுந்து வணங்கினார்கள். வாடிய உள்ளத்தோடு அதில் ஒருவர் புலம்பினார். அவர் "சுவாமி! என்னை மன்னித்துவிடுங்கள். விளையாட்டுத்தனமாக எண்ணி வந்துவிட்டேன். பல பெரிய மனிதர்கள் தங்கள் சித்துக்களை எடுத்துக் கூறியும் அலட்சியமாக இருந்தேன். சுவாமி வரும்வழியிலேயே அதற்குரிய தண்டனை கிடைத்துவிட்டது. வரும்போது சும்மாயிருந்த என் ஒரே செல்லமகன் திடீரென்று வீட்டில் காய்ச்சலால், துடிதுடிக்கிறான். என்ற செய்தி கிடைத்தது. உடனே வீடு சென்று துவண்டு கிடக்கும் என்னுடைய மகனைப் பார்த்தவுடன் வாய்விட்டுக் கதறினேன் சிறிது நேரத்தில்

அவன் படுக்கையிலே பொன்.. பொன்...சாமி ...என்று புலம்பினுன். அப்பொழுதுதான், "ஐயோ சுவாமி அவர்களை தவறுதலாக எண் ணிவிட்டோமே," என்று கதறினேன். என் ஆசையொரு மகன்படும் பரிதாப நிலையைப் போக்க, தங்கள் பாதங்களில் விழுந்து மன் னிப்புக் கேட்கவே இப் பாவி வந்திருக்கிறேன். சுவாமி! நான் நினைத்த பிழைகளை மன்னித்து, எனக்காவது தண்டனை கொடுங்கள். ஆனுல் என் ஒரே செல்வ மகனைக் காப்பாற்றுங்கள். சுவாமி! இச் சோதனையை என்னுல் தாங்க முடியாது. என் மகனைக் காப்பாற்றுங்கள்," என்று மிகப் பரிதாபத்தோடு கண்ணீர்விட்டு, சுவாமிகளின் பாதங்களில் விழுந்து கெஞ்சி ஞர். அவரைக் கண்ட சுவாமி அவர்கள் இரக்கங் கொண்டு, "பண்ணையாரையா! பணம் பாதாள மட்டும் பாயும் என்கிற வரட்டுக் கவுரவம் ஏராளமாய் உமக்கு இருக்கிறதையா. அது வேதாளமாகிவிட்டால் விதியை நினைத்து நொந்து கொள்வீர். மனிதனை மனிதனுய் மதிக்கிற குண வேணுமய்யா. அது இல்லாது பணம் பத்தும் செய்யும் என்று பகல்வேசம் போட்டால் பின்னுல் படுகிற பாடுவேரய்யா சரி, இனியாவது நன்னெறிகளை விரும்பிக் கற்றுக் கொள்ளும். உமது பையனுக்கு ஒன் றும் செய்யாது. இந்த விபூதியை அவனுக்குப் பூசும் நாளையே அவன் இங்கு வரவேண்டு மென்பான், அழைத்துவாரும்," என்று சொன் ஞர்கள்: இதைக்கேட்ட பண்ணையாருக்கு மகிழ்ச்சி அதிகரித்தது. போகும்போது அப் பண்ணையார் சுவாமி அவர்களுக்கு பாத வணக்கம் செய்து சென்ருர்.

மறுநாளே தன்னுடைய மைந்தனை அழைத் துக்கொண்டு அப்பண்ணையார் சுவாமி அவர்க ளிடம் வந்து சேர்ந்தார். சுவாமி அவர்கள் பண்ணையாருடைய செல்வக் குமரனை தட்டிக் கொடுத்து ஆசீர்வாதம் செய்து அனுப்பினுர் கள். இவ்வாறு எத்தனையோ அதிசயங்களைச் சுவாமிகள் சக்தி பூசையின் மகிமையால் காட்டி யிருக்கிருர்கள்.

குறித்த நாளிலே தெய்வத் திருவுடையார் சுவாமி அவர்கள் கூறியபடியே என்னுடைய மகளுக்கு எவ்வித இடையூறுமின்றி ஒரு ஆண் குழந்தை பிறந்தது. அந்த நற்செய்தியை சுவாமிகளிடம் கூற ஒடோடி வந்தேன். செய்திகேட்ட சுவாமிகள் சிரித்தார்கள். "என்ன சுவாமி சிரிக்கிறீர்கள்?" என்றேன். "என்னய்யா! பேரன் பிறந்த ஆனந்தத்தில் இப்படி ஒடி வத்துவிட்டீரே. வீட்டில் உம் மகளுக்கு பிரசவத்திற்குப்பின் ஜன்னி கண்டு அவதியுறுகிருள். நீர் வந்ததும் ஒரு வகைக்கு நல்லதே. இந்தாரும் நான் கொடுக்கும் இந்த மருந்தை கொடுத்துத் துணிப்புகை பிடியும், யாவும் குணமாகும்," என்ருர்கள். மருந்தை வாங்கிக்கொண்டு வீட்டிற்கு விரைந்தேன். சுவாமிகள் சொன்னபடி அவதியுற்றுக் கொண்டிருந்த என் மகளைச் சுகப்படுத்தி னேன். என்னே! சுவாமிகளின் அருள்!

சில சமயங்களில் சுவாமி அவர்களுக்கு உற் சாகம் பிறந்துவிட்டால், உண்மை படர்ந்த பல கதைகளைத் தத்துவ விளக்கங்களோடு சொல்லுவார்கள். அத் தெய்வச் சிந்தனை யாளர் கூறிய கதையொன்று, இன்று சொல் லியது போல் இருக்கிறது. இடைக்காட்டார் ஆடுமேய்த்துக் கொண்டிருந்த ஒரு காட்டில், ஒரு வேந்தனும் வேட்டையாடிக்கொண்டு வந்தான்: அவன் எய்த அம்பு ஒரு ஆட்டைக் கொன்று விட்டது. அதைக் கண்ட மன்னன் பயந்து போய், அங்கு ஆடு மேய்த்துக்கொண் டிருந்த இடைக்காட்டாரின் காலில் விழுந்து, "ஐயா! தெரியாமல் அம்பை விட்டு இந்த ஆட்டைக் கொன்று விட்டேன். பாவம் செய்து விட்டேன் என்னை மன்னித்து, இப்பழி பாவத் திலிருந்து என்னைக் காப்பாற்றுங்கள்," என்று கேட்டான். அவ் வேந்தன் கேட்டபோது இடைக்காட்டார் கம்பைத் தரையில் ஊன்றிக் கொண்டு நிஷ்டையில் இருந்தார். பின் அவர் கண்களைத் திறந்து, "அப்பா! நீ, அந்த ஆட் டைக் கொன்றது உனக்குக் குற்றமில்லை. முன் ஜென்மத்தில், அந்த ஆடு மனிதனுய் இருந்து

உன்னை அரிவாளால் வெட்டிக் கொன்றிருக்கிறது. அது யாருக்கும் தெரியாமல் இருந்தது. ஆகையால்தான், நீ இப்போது இந்த ஆட்டை அம்பால் எய்து கொன்றிருக்கிருய். அதனுல் உனக்குக் குற்றமில்லை,'' என இடைக்காட்டார் சொன்னுர்கள். உடனே வேந்தன் மகிழ்வாய் அரண்மனை போய்ச் சேர்ந்தானும். இப்படி சுவாமி அவர்கள் சொல்லுகின்ற பல கதைகள் பயனுள்ளதாய் உள்ளத்தைத் தொடும்.

ஒரு நாள் நான் சாத்துக்குடியும், ஆரஞ்சும், மலைப்பழமும் வாங்கிக் கொண்டு போய் சுவாமி அவர்களிடம் கொடுத்து, அவர்களுடைய மலரடிகளுக்கு வணக்கம் செலுத்தினேன். அப்போது சுவாமி அவர்கள் ''சங்கையா! இன்னும் ஒரு மணி நேரத்தில், ஒரு பக்தன், ஒரு கூடையில் ஏழு மாம்பழங்களும், நான்கு டஜன் மலைப்பழங்களும், நான்கு சேர் முந்திரிப் பருப்பும் இங்கு கொண்டு வருகிருன். நீர் அதைப் பார்க்கலாம்,'' என்று சொன்னுர்கள். இவ்வாறு சுவாமி அவர்களும் நானும் பேசிக் கொண்டிருக்கும் போது, அவர்கள் சொன்னது போலவே, ஒரு மணி நேரங் கழித்து ஒரு அன்பன் பழக்கூடை யொன்றை தலையில் சுமந்து கொண்டு வந்து சேர்ந்து, சுவாமிகள் காலில் விழுந்து வணங்கினுன். நான் உடனே கொண்டு வந்த பழக் கூடையில் என்னென்ன பழங்கள், எவ்வளவு இருக்கின்றன என்று பரிசோதனை செய்து பார்த்தேன். என்ன விந்தை! சுவாமி அவர்கள் சொன்னது போலவே எல்லாப் பழங்களும் சரியாகவே இருந்தன. வந்த அன்பன் சுவாமி அவர்களிடம் பயபக்தியோடு பணிந்து, ''சுவாமி நான் எஸ்.எஸ்.எல்.சி. தேர்ச்சி யடைந்திருக்கிறேன். ஒரு வருடம் ஆகியும் இன்னும் எனக்கு வேலை கிடைக்கவில்லை. தங்கள் கருணைதான் என் வாழ்க்கைக்கு வழிகாட்ட வேண்டும். எனக்கு எப்போது, எந்த வேலை கிடைக்கும் என்றருள வேண்டுகிறேன்,'' என்று கெஞ்சிக் கேட்டான்.

அதற்கு சுவாமி அவர்கள், ''தம்பி! கவலைப் படாதே. இன்னும் ஆறு மாதத்தில் ரயில்வே இலாக்காவில் உனக்கு கிளார்க் வேலை பார்க்கும்படி உத்தரவு வரும். அதற்கு வேண்டிய வைகளை எழுதிப்போட்டு எதிர்பார்த்திரு. ஆனுல் அதற்கு ஒரு அத்தாட்சி கேட்கிறேன். அது சரியாக இருந்தால்தான் உனக்கு விரைவாக வேலை கிடைக்கும். உன்னுடைய வலது தொடையில் ஒரு மச்சம் இருக்க வேண்டும், பார்,'' என்ருர்கள். அவன் உடனே தனது வலது தொடையைப் பார்த்த போது சுவாமி சொன்னபடியே ஒரு மச்சம் இருந்தது. இவ்வாறு சுவாமியவர்கள் தன்னுடைய ஞான திருஷ்டியால் உள்ளக் கூற்றையும், உடற் கூற்றையும் கண்டறிகின்ற சித்துத் தன்மை யுடையவர்கள். அவர்கள் அப்பையனைப் பார்த்து ''தம்பி, நீ வீட்டிற்குப் போகலாம். வேலை கிடைத்தவுடன் இங்கு வந்து சேர். மனத் திருப்தியோடு, போ,'' என்று கூறினுர்கள். சுவாமிகளின் தெய்வ வாக்குப்படியே அப்பையனுக்கு ஆருவது மாதத்திலே இரயில் வேயிலே கிளார்க் வேலை கிடைத்து விட்டது. அவனும் வேலை கிடைத்த செய்தியை சுவாமி களிடம் சொல்லுவதற்காக, ஏராளமான பழ வகைகளோடு வந்து சேர்ந்தான். வணங்கித் தன் நன்றியைத் தெரிவித்துக் கொண்டான். பின்னர் பயபக்தியோடு அவர்களிடம் விபூதி வாங்கி பூசிக் கொண்டு மிக மகிழ்வாய் கிடைத்த வேலையைப் பார்க்கச் சென்ருன். இந்த நிகழ்ச்சியையும் சுவாமிகளோடு கூடவே யிருந்து கண்டேன்.

அதிக விமரிசையாகக் கொண்டாடக் கூடிய தெய்வத்திரு பசுபதி பரமகுரு பொதிச்சாமி அவர்களின் குருபூசை வந்து சேரும். அப்போதுதான் பக்தர்களாகிய நாங்கள் இவ் விழாவிலே முழு மனதுடன் உழைப்போம். வண்டி வண்டியாக வாழைகளையும், வாழைக்

காய்களையும், இலைக்கட்டுகளையும் கொண்டு வந்து சேர்ப்பது உம் பொறுப்பு என்று என்னை நியமித்து விடுவார்கள். இப்படிப் பல அன்பர்களை பல அலுவல்களுக்காக நியமித்து விடுவார்கள். நாம் எல்லோருக்கும் முன்னதாகவே வந்து விட்டோம் என்று சுவாமிகளுக்குத் தெரிய வேண்டும் என்கிற உற்சாகத்தில் வண்டிகளை விரட்டிக் கொண்டு வருவோம். ஆனால் சுவாமிகளின் இல்லத்தில் எல்லா வண்டிகளும் ஒன்றாகவே வந்து சேரும். இப்படி எங்கள் தொண்டுகளை யெல்லாம் வேறுபாடு இல்லாமல் ஒன்றாக்கி விடுவார்கள் உத்தமத் தெய்வமாகிய சுவாமி அவர்கள்.

இப்படிச் சீரான சித்து விளையாடல்களைக் காண்பித்து தென்னாட்டு மக்களின் உள்ளங்களிலே என்றும் நீங்காத அன்புச் சுடர்மயமாகி விட்டார்கள். உண்மைகளை ஞான திருஷ்டியால் கண்டறியும் தவத்திரு பொன்னையா சுவாமி அவர்கள் சமாதியாகி கரிவலம் வந்தநல்லூரில் திருக்கோயில் கொண்டார்கள். தவமுனிவராகிய சுவாமி அவர்களின் அருள் எங்கள் குடும்பத்தில் ஏற்பட்ட எத்தனையோ அல்லல்களைப் போக்கி அகங் குளிரச் செய்துள்ளது. அதுபோல் அருள் கடவுளாகிய சுவாமிகளின் ஆசி என்றென்றும் எல்லோரது வாழ்க்கையையும் வளப்படுத்தும்.

---

# தெய்வத் திருவாக்கு

திரு. B. K. ராஜமாணிக்கம், LAE., தேவாரம்

அறிமுகம்:- இவ்வுலக வாழ்வில் 'நல்லோரை காண்பதுவும் நன்று; அவரோடு இணங்கி இருப்பதுவும் நன்று,' என்ற கூற்றிற்கிணங்க, தெய்வத்திரு பொன்னையா சுவாமி அவர்களுடைய அறிமுகம், தெய்வாதீனமாக 1947-ம் ஆண்டு பெரியகுளத்தில் எனது மதிப்பிற்குரிய தந்தை மூலமாக கிடைத்தது. அத்தவச் செல்வர் முதல்நாளன்று எனக்கு அளித்த தெய்வவாக்கு "நன்றாகப்படி உனக்குப் படிப்பு நன்கு வரும்" என்ற இனிய வார்த்தைகள் தான்.

சிந்தனையும் தொடர்பும்: அன்று முதல் என் சிந்தனையை அவரது ஆற்றலின்பால் செலுத்தப்பட்டு தந்தையின் மூலம், ஒவ்வொன்றையும் ஊன்றி கேட்டு வந்தேன். அவரது செயலாற்றல் மிகப்பல. அதனை அவர்களுடன் மிகப் பழகிய பெரியோர் பலர் கூறும் வாய்மொழியில் கண்டுள்ளேன். வாய்ப்பில் உள்ளனர். 1947ம் ஆண்டுக்கு பின் சுமார் 30 முறைகள் அவர்களைச் சந்தித்து பேசும் வாய்ப்புகள் கிடைத்தன. ஒவ்வொரு வாய்ப்பும் பொன் போன்றவையாகும். அவர் தமது குமாரர்களின் படிப்பு, உயர்வு முதலியவைகளை கூறி எனக்கு படிப்பின் உயர்வை எடுத்துக்காட்டி உற்சாகம் ஊட்டி வந்தார்கள்.

தெய்வத்தன்மை: நான் முற்பகுதியில் பழகிய போது செல்வாக்கு நிறைந்த பெரியோர் என எண்ணியே இருந்தேன். பின் கூர்ந்து பார்த்த பின்தான் அவரது தெய்வத்தன்மையை அரியலானேன். (அவர்களுடைய அருள் பூத்த கண்களும் சிவந்த உடலும் முகமும், கண் பார்வை இவைகள்) எனக்கு தெய்வத்தன்மையை எடுத்துக் காட்டின. என்றும் மறக்க முடியாத இரண்டு சம்பவங்கள் என் மனதில் சூழ்ந்து உள்ளன. அதில் ஒன்று மிகவும் மனம் சவங்கி, நான் தந்தையுடன் 1949ம் வருடம் ஜூலை மாதம் மதுரையில் சுவாமி அவர்களின் அறிவுரைகளுக்கும் உதவிக்கும் காத்திருந்தேன். பெரியோர் திரு அழகர் ராஜா அவர்களுடன் சுவாமி தங்கி யிருந்தார். மேல்படிப்பு படிக்க முடியுமா? என ஏங்கிய நிலை. ஆனால் சுவாமி காலை பூஜை முடிந்ததும் என்னை அழைத்து விபூதி கொடுத்து உடனே இன்ஜீனியர் படிப்பிற்கு சேர்ந்துவிடு என்று செல்க்சன்

ஆர்டரை கொடுத்தார். "நீ நன்கு படித்து பூர்த்தி செய்து விடுவாய் பொருள் உதவி தானுக வரும்" என மொழிந்தார். எனக்கு பெருவியப்பு ஏற்பட்டது. திரு அழகர் ராஜா பொருளுதவி புரிந்தார். அந்த ஒரே வாக்கில் எனக்கு பொருளுதவி பல வழிகளில் கிடைத்த துடன், அரசாங்க உதவிகள் அனைத்தும் கிட்டி நன்கு பயின்று தேர்ச்சிபெற இயன்றது.

மற்றொரு பெரிய நிகழ்ச்சி என்னவென்றால் நான் எனது சர்டிபிகேட் பெற்று தந்தையுடன் பாளையங்கோட்டை சென்று சுவாமியவர்களை வீட்டில் தரிசித்தது, வேலை கிட்ட வழி கோரி னேன். உடனே "முன்னே சாப்பிடுங்கள். வேலை தானுக வரும். படித்தாகி விட்டாய். நான் இருக்கிறேன். இனி உனக்கென்ன குறை ஏற்பட்ப்போகின்றது. என் பையன்களும் வேலைகளில் உள்ளனர். இனி உனக்கு சிரம மில்லை" என மொழிந்தார். எங்களுக்கு மிகுந்த அன்புடன் உபசாரம் அளித்தனர் சுவாமியும் அம்மையாரும். இது 1953 ம் வருடம் செப்டம் பர் மாதத்தில் நடந்தவை என எண்ணுகிறேன். பின் ஊர் திரும்பியதும் சுவாமியின் வாக்கு அருளால் வேலை கிடைத்தது. பின் படிப் படியாக பல வேலை கிடைத்தது இன்று அவரது அருளால் ஒரு நிலைகாண வழி கிட்டியுள்ளது. இனியும் அவர் அருளால் மேலும் நல்ல வழி காண அவரை வணங்கி வருகிறேன்.

"உங்களுக்கு இல்லாததா" இது அவர் அளித்த கடைசி வாக்கு. 15-8-60 ம் தேதி அவரை கடலூரில் சந்தித்து குடும்ப விவரங் களை பரிமாறிக் கொண்டேன். எனது அன்பு தந்தையும் அவரது நண்பரான திரு. B. K. காமாட்சி செட்டியார் மறைந்த செய்தி கேட்டு கண்ணீர் வடித்து என்னை தழுவிக் கொண்டார் எனக்கே துக்கம் தாளவில்லை. தந்தையும் சுவாமியும் சுமார் 40 ஆண்டு பழக்கம். அரை மணி நேரத்திற்கு பின்தான் சுயநிலை அடைந் தேன். பின் அவரை வணங்கி விபூதி பெற் றேன். விபூதி அளிக்கும் போதுதான் "உங்க ளுக்கில்லாததா-என் அன்பும் ஆசியும்" என தெய்வமொழி பகர்ந்தார். மேலும் உன்னை என் குமாரர்கள் நன்கு கவனித்துக் கொள்வார் கள். கவலைப்பட வேண்டாம் எனக்கூறி பிரி யாவிடை அளித்தார்.

மகான் ஆண்டவன் திருவடி அடைந்த விபரம் அறிந்து துக்கத்தில் ஆழ்ந்தேன். எனது தனி மையை உணர்ந்தேன். ஆனால் 14-12-60 அன்று கரிவலம் வந்த நல்லூரில் சுவாமியின் குருபூஜையில் கலந்தபோது அவரே உயிருடன் இருந்து ஆசி கூறுவதுபோன்ற உணர்வு என் உள்ளத்தில் எழுந்தது அவர்பால்கொண்டுள்ள பற்றால் என்றும் ஆசி கிட்டிக்கொண்டே இருக் கும்.

"கருத்து." சுவாமி அவர்கள் "கண்கண்ட தெய்வம்." என்றும் அவர் அருள் வேண்டு வோர் அனைவருக்கும் குறைவின்றி கிட்டும்.

வாழ்க அவர்கள் திருப்பெயர்.

* * *

## நான் கண்ட சுவாமிகள்

திரு பி. பசுபதி, நாசரேத்.

உயர்திரு. பொன்னையா சுவாமி அவர்களின் அருளால் துயர்தீர்ந்து நன்மை பெற்றவர்கள் பலர். அவர்களில் யானும் ஒருவன். ஆகை யால் அவர்களைப் பற்றி எனக்கு தெரிந்தவை களை எழுதுகிறேன்.

உயர்திரு சுவாமி அவர்கள் எப்பொழுதும் தெய்வீகக் களையுடனும், புன்னகையுடனும் தோற்றமளிப்பார்கள். வெறுப்பு, விருப்பு இரண்டிற்கும் அப்பாற்பட்டவர்கள். ஒரு வரு டத்திற்கு முன்பு அவர்கள் இறைவனுடன்

கலந்து விட்டார்கள். இன்று அவர்கள் புகழ் பாடப்படுகிறது. உயர்திரு சுவாமி அவர்கள் கரிவலம்வந்தநல்லூரில் பொதிச்சாமி என்று வழங்கப்பட்டு வந்த தெய்வத்திரு பசுபதி பரம குரு அவர்களின் சீடர்.

உயர்திரு. பொன்னையா சுவாமிகளைப்பற்றி எழுதும்போது தெய்வத்திரு பொதிச்சாமிகளை பற்றி எழுதாமல் இருக்க முடியாது, அவர்கள் உடலை வருத்தி ஆன்மீக சக்தி பெறுவதற்காக ஆட்டுரலையும், குத்துரலையும் பொதியாக கட்டி சுமந்து கொண்டு கரிவலம்வந்தநல்லூர் வட்டாரத்தில் அலைந்தார்கள். அவர்கள் பொதியைச் சுமந்து கொண்டு அலைந்ததால் அவர்களுக்கு பொதிச்சாமி என்று பெயர் ஏற்பட்டது. தெய்வத்திரு. பொதிச்சாமி அவர்கள் இல்லறம் விட்டுத் துறவறம் பூண்டு மக்கள் மத்தியில் இருந்து கொண்டே இறைவன் அருளைப் பெற்றார்கள். நினைத்ததை முடிக்கும் ஆற்றல் உள்ளவராய் இருந்தார்கள். அவர்கள் வாக்கு பலித்தது. அவர்களிடமிருந்து நல்ல வாக்குகளுக்காக மக்கள் ஏங்கிக் கொண்டிருந்தார்கள். அந்த மகான் தான் மறையும்போது தனக்கு ஆன்மீக வாரிசாக நம் உயர்திரு. பொன்னையா சுவாமி அவர்களை விட்டுச் சென்றார்கள்.

உயர்திரு பொன்னையா சுவாமி அவர்களால் எங்கள் குடும்பம் அடைந்த நன்மை என்னவென்பதை கூறுகிறேன். முதல் ஆறு குழந்தைகளையும் பெண்குழந்தைகளாகப் பெற்ற எனது பெற்றோர்கள் ஆண் மகவு தங்களுக்கில்லையென்ற குறையுடன் உயர்திரு பொன்னையா சுவாமி அவர்களை நாடி தங்கள் குறைகளை கூறினர். உயர்திரு பொன்னையா சுவாமி அவர்களுக்கு ஆண்டி முதல் அரசன் வரை பழக்கம் உண்டு. யாரிடத்திலும் அன்புடனும் இனிமையாகவும் பேசுவார்கள். உயர்திரு சுவாமி அவர்கள் எனது பெற்றோரை தெய்வத்திரு பொதிச்சாமி அவர்களிடம் அழைத்துச்சென்று அவர்கள் குறைகளை எடுத்துரைத்தார்கள். தெய்வத்திரு பொதிச்சாமி அவர்கள் எனது பெற்றோருக்கு இரங்கி "உங்களுக்கு இனி பிறக்கும் குழந்தை ஆண் மகவாக இருக்கும்" என்று நல்வாக்கு கொடுத்தார்கள். அவர்கள் வாக்கின்படி அடுத்த குழந்தை ஆண் மகவாகப் பிறந்ததால் அக்குழந்தையாகிய எனக்கு பசுபதி என்று தெய்வத்திரு பொதிச்சாமிகளின் பெயரைச் சூட்டினார்கள். இன்று தெய்வத்திரு பொதிச்சாமிகளின் அருளாலும் உயர்திரு பொன்னையா சுவாமி அவர்களின் அருளாலும் நன்றாக வாழ்க்கை நடத்திக்கொண்டு வருகிறேன்.

தெய்வத்திரு பொதிச்சாமியின் மறைவிற்கப்புறம் உயர்திரு பொன்னையா சுவாமிகளிடத்தில் இறைவன் அருள் மிகுதியாக ஏற்பட்டது. இல்லறத்தில் இருந்துகொண்டே ஆண்டவனுடன் தொடர்பு கொண்டிருந்த உயர்திரு பொன்னையா சுவாமி அவர்கள் சித்த வைத்தியத்தில் நிபுணர். ஆங்கில மருத்துவ முறை விரிவாக பரவியிருக்கிற இக்காலத்திலும் உயர்திரு பொன்னையா சுவாமிகளின் மருந்திற்கு பிரபுக்கள் ஏங்குவார்கள். இத்தகைய மகானின் மறைவு மக்களுக்கு ஈடுசெய்ய முடியாத நட்டமாகும். யாவும் இறைவன் செயல்!

உயர்திரு பொன்னையா சுவாமி அவர்கள் மறையும்போது நமக்கு ஆறுமணிகளையும், ஒரு அன்னையையும் விட்டுச் சென்றிருக்கிறார்கள். சுவாமி அவர்களின் காலத்திலேயே சுவாமி அவர்களின் மனைவியாரிடத்திலும் இறைவன் அருள் உண்டு. இன்று இறைவன் அந்த அன்னையிடம் குடிகொண்டு இருக்கின்றான். சுவாமி அவர்கள் விட்டுச் சென்ற ஆறில் மூன்று பெண் மணிகள். ஆண்களில் முதல்மணி திரு. குருசிரோன்மணி. சித்தவைத்தியத்திற்கு தலைமணியாய் விளங்கும் இவர்கள் வைத்தியத்துறையில் நம் நாட்டிற்காக பெரும்பணியாற்றி வருகிறார்கள். அடுத்தது தெய்வத்திரு பொதிச்சாமி அவர்களின் பெயர்கொண்ட திரு. பரமகுரு ஒரு போலீஸ் சூப்பரின்டெண்டெண்ட்.

போலீஸ் என்றதும் பயம் கொள்ளும். நமது பாமர மக்களிடையே போலீஸ் உங்கள் நண்பன் என்ற உண்மையை வெளிப்படுத்த "உங்கள் நண்பன்" என்ற திரைப்படத்தை உருவாக்கி போலீஸ் இலாகாவிலேயே ஒரு புதிய திருப்பத்தை ஏற்படுத்திய வீரர். மக்கள் சேவையை லட்சியமாகக் கொண்ட மகான். கடைசி எல்லோருக்கும் இனியவராய் சுவாமி அவர்களின் இல்லத்திலேயே இருந்து மடம், மடத்தை சுற்றியுள்ள நிலம், பொதுமக்கள் சேவை இவற்றைக் கவனித்துக் கொண்டு வருகிறவர் திரு. கிருஷ்ணமூர்த்தி அவர்கள். இவர்கள் சிவில் இன்சினியரிங் படித்து இருந்தாலும் அரசாங்க அலுவலை நாடாது பொதுப்பணியாற்றி வருகிறார்கள்.

சுவாமி அவர்களின் குடும்பம் என்றும் நீடூழி வாழ இறைவனை வேண்டுகின்றேன். சுவாமிகளின் அருள் எங்கும் எவர்க்கும் கிட்டப் பிரார்த்திக்கின்றேன்.

---

## ஞானகுரு

**சோதிடம் திரு S. சுப்பையாத்தேவர், கோதைநாச்சியார்புரம்.**

எனக்கு வயது சுமார் பதினைந்து இருக்கும் போது தெய்வத்திரு பசுபதி பரமகுரு பொதிச் சுவாமிகளை கரிவலம்வந்தநல்லூர் தவத்திரு பொன்னையா சுவாமிகள் வீட்டில் கண்டிருக்கின்றேன். அங்கு சுவாமிகள் வீட்டிற்கு நான் செல்லும் போது அரையணுக் கொண்டு போவது என் வழக்கம். ஏனென்றால் பொதிச் சுவாமிகள் எப்பொழுதும் தன் பக்கத்தில் வைத்திருக்கும் சுரக் குடுக்கையில் அரையணுவைப் போடுவது வழக்கம். நான் அணுவைப் போடும்போது சுரக்குடுக்கையில் ஒன்றுமில்லாமல் இருக்கும். பின் அதே குடுக்கையிலிருந்து நிறைந்த விபூதியை எடுத்து எனக்கும் மற்றவர்களுக்கும் கொடுப்பார்கள். எனக்கு அது ஓர் அபூர்வமான தோற்றமாய்த் தென்பட, நான் ஆசையுடன் பலநாள் போய் அந்த அதிசய சுரக்குடுக்கையிலே அணுவைப் போட்டு வந்தேன். என் ஊர் ஒன்றரை மைலுக்குட்பட்டதால் அடிக்கடி போய் அங்கு சுவாமிகளைக் கண்டு வருவேன்.

வழக்கம்போல் ஒருநாள் நான் அரை அணுவைச் சுரக்குடுக்கையிலே போடும் நேரத்தில், சிவந்த நிறமும், சிரித்தமுகமுடைய சுவாமிகள் திடீரென்று என் முன்னால் தோன்றினார்கள். செம்மேனியோடு சிவபெருமான் போல் தோன்றிய அவர்கள் பொன்னையா சுவாமிகள் என்பதைத் தெரிந்து கொண்டேன். அவர்கள் என்னைப் பார்த்து "தம்பி, பலதடவை இங்கு உன்னைப் பார்க்கிறேன். மிக மகிழ்ச்சி. பொதிச் சாமிகள் காசு இல்லாமல் விபூதி தரமாட்டேன் என்கிறார்களோ?" என்று சிரித்த முகத்தோடு சொன்னார்கள். அன்று என் இளமையில் கூறிய வார்த்தைகள் இன்னும் என் இருகாதுகளிலும் ஒலித்துக் கொண்டிருக்கின்றன. அப்படி ஒலிக்கும் பொழுது என் பால்ய நினைவும், அரையணுக் கொண்டு சென்று பொதிச் சாமிகள் சுரக்குடுக்கையில் போட்ட நினைவும், மலர்ந்த முகத்தோடு நம் சுவாமிகளைக் கண்ட தோற்றமும் என்னை இன்றும் அளவில்லாத வியப்பில் ஆழ்த்தி வருகின்றன.

ஒருநாள் நான் அங்கு சென்றிருக்கும்போது நம் சுவாமிகள் என்னைப் பார்த்து, "அடிக்கடி இங்கு வருகிறாயே உனக்கு எந்த ஊரோ? உனக்கு இறைவன் பற்று இருக்கிறது," என்று சொன்னார்கள். சுவாமிகள் கேட்ட கேள்விக்கு மறு மொழி சொல்வதற்குப் பயந்து, பணிவுடன் "சுவாமி! எனது சொந்த ஊர் கோதை நாச்சியார்புரம். நான் தங்களையும், பொதிச்

சாமிகளையும் பார்க்க வேண்டுமென்பதற்காகவே வருவேன். இதுதான் தவிர வேறென்றுமில்லை," என்று பயத்தோடு சொன்னேன். என் பயந்த நிலையைக் கண்ட சுவாமிகள் அருள் சுரந்த முகத்தோடு அன்பாக, "உனக்குதெய்வ பக்தியில் நல்ல பற்று இருக்கிறது. அப்பற்று உன்னை நல்ல பாதையில் இழுத்துச் செல்லும். எளிய குடும்பத்தில் நீ பிறந்தவனாயிருந்தாலும் உன் வாழ்க்கையிலே நல்ல முன்னேற்றமடைவாய். உன்னையும் பலர் தேடும் மனிதனாய் வாழ்வாய். பயம் என்பது வாழ்க்கையில் இருக்கக் கூடாது. படர்கொடிபோல் வளர்கின்ற வாழ்க்கையில் பரிவும், பாசமும் கலந்து வளர வேண்டும். பயமும், பண்பில்லாத செயலும் இருக்கக்கூடாது" என்று திருவாய் மலர்ந்தருளினார்கள். அன்பு கலந்த அவர்களுடைய நற்சொற்சுடர்கள் தான் என் வாழ்க்கையைச் சீர் படுத்துவதற்கு ஏதுவாகவும், ஏணியாகவும் இருந்தது.

நான் என் குடும்ப வாழ்க்கைத் துவக்கியதும் தெய்வக்கடல் சுவாமிகள் அருளிய வார்த்தைகளை ஓதியும் உணர்ந்தும் கடைபிடித்து வந்தேன். அவ்வாறு வருங்காலையில், இல்லற வாழ்க்கையில் நிறைந்த பற்றுண்டான காலத்தில் மீண்டும் சுவாமிகளைக் கண்டு தரிசிக்க வேண்டுமென்ற தோற்றம் என் உள்ளத்தில் எழுந்தது. அது சமயம் சுவாமிகளிடம் நெருங்கிப் பழகிவந்த என் நண்பர் திரு கிருஷ்ணசாமி அவர்களுடனும், முன்னமே சுவாமிகளிடம் பழகிவந்த என் ஊர் கருப்பையாத்தேவர் அவர்களுடனும் ஆயிரத்து நூற்று ஐந்தாம் ஆண்டு வைகாசி மாதம் மீண்டும் தெய்வ அருளுடைய சுவாமிகளைக் கண்டு திருவடிகள் வணங்கித் தரிசிக்க வேண்டுமென்ற ஆசையோடு கருவை சென்றோம். சுவாமிகள் உயிர்க்கினிய உபதேசங்களையும், உள்ளத்திற்குரிய தத்துவங்களையும் எடுத்துக் கூறி நல்ல வழிக்குச் செல்லும் பாதையைக் காட்டினார்கள்.

இப்படி நாங்கள் சந்தித்து வருங்காலையில் சுவாமிகள் எங்களுக்கு வேடிக்கையான ஒரு கதை சென்னார்கள். ஒரு நரியானது இரண்டு ஆட்டுக் கிடாய்கள் ஒற்றுமையுடன் இருந்ததைப் பிரித்துக் கொன்று தின்ன வேண்டுமென்ற நோக்கத்துடன், அந்தக்கிடாய்களிடம் தன்னுடைய சூழ்ச்சியைக் காட்ட ஆரம்பித்தது. அதையறிந்த இரண்டு கிடாய்களும் விளையாடும் பாவனைபோல், நரியை நடுமையமாக நிற்க வைத்து இரு கிடாய்களும் முட்டத் தொடங்கியது. நடுமத்தியில் அகப்பட்ட நரியானது அக்கிடாய்களின் கடுமையான முட்டிலகப்பட்டு இறந்தது. அதுபோல் ஒற்றுமையாய் இருக்கின்ற ஊர்களையும், குடும்பங்களையும் தன் சுயநலத்திற்காகப் பிரிக்கவேண்டுமென்று எண்ணும் பல சூட்சிகள் செய்யும் பேடிகள் இத்துற்கதிதான் அடைவார்கள். இக்கதை சிறியதாகயிருந்தாலும் இதன் கருத்து மிக உயர்வானதாகும். இவ்வாறு பழகி வரும் அன்பர்களுக்கு வாழ்க்கைக்கு வேண்டிய நன்னெறிகளையும், உலகத்தோடு ஒட்டஒழுகலுக்கு வேண்டிய அறிவுரைகளையும் அழகாக எடுத்துக் கூறுவார்கள் நம் ஞானகுரு.

ஒருநாள் சுவாமிகளிடம் எனக்கு இருந்த பகைமையைத் தடுக்கவேண்டுமென்று திருவடிகளைப் போற்றி வணங்கி ஓர் உதவியை நாடினேன். அதற்கு அவர்கள் கூறியதாவது "இரண்டு கற்களை யெடுத்து ஒன்றோடொன்று பலமாகத் தட்டினால் தீப்பொறிகள்தான் பறக்கும். வனத்திலுள்ள மூங்கில் மரங்களும் ஒன்றோடொன்று உரசத் தீ கிளம்பி வனத்தையே அழித்துவிடும். ஆகவே விரோதத்தை விரோதத்தாலோ, பகையை பகையாலோ அழிப்பது என்பது கூடாது. அதனால் குடும்பங்கள் அழிந்து விடும். தீயைத் தண்ணீர்விட்டு அணைப்பது போல், விரோதத்தைச் சாந்தம் என்னும் பொறுமையால் இணைத்தால், விரோதம், பகை முதலியவை தானாகவே அழிந்துவிடும். இதை நீர் மந்திரமாகவே வைத்துக் கொள்ளும்.

ஆத்மாவிற்கு அனுதாபமான புத்தியை நல்ல வழிகளில் பயன்படுத்தினுல் ஆத்மாவிற்குச் சக்தி யுண்டாகும்'' என்று திருவாய் மொழிந்து என் பகைமையைப் போக்கிச் சாந்தமுள்ள வனுக்கி விட்டார்கள்.

என் மனம் நிம்மதியற்ற வேளைகளில் சுவாமி களிடம் சென்று, திருவடி தொட்டு வணங்கி சிறிது நேரம் அவர்களோடு பேசிவிட்டு வருவேன். வெளியே வரும்போது என் மனக்கவலை கள் அகலச் சந்தோஷமான தோற்றத்துடனே வருவேன்.

''தெருண்ட மேலவர் சிறியவர் சேறினும்—
அவர்தம்
மருண்ட தன்மையை மாற்றுவரெனும் இது
உலக வழக்கே
உருண்ட வாய்தோறும் பொன்னுருள்
உறைத்துறைத்தோடி
இருண்ட கல்லையும் தன்னிறமாக்கிய இரதம்''

என்ற நீதிக்கிணங்க, இக்கவியின் கூற்றுப்படி நம் ஒப்பற்ற சுவாமிகளை அண்டினவர்களெல்லாம் அவர்களின் அருள் வடிவத்தால் வாழ்க் கையிலே இனிதுபெற்று நல்லவை யாவும் அடைந்திருக்கிறுர்கள். இவ்வாறு தெய்வச் சித்தராகிய நம் சுவாமிகளின் வாழ்க்கையிலே நிகழ்ந்த அதிசயங்களைக் கூறுதல் இயலாத காரியம். இப்படியிருக்க அன்பும், ஆதரவும் எனக் குக் காட்டி வந்த ஞானகுருவாகிய எம்பெருமான் சுவாமிகள் சமாதி கொண்டு திருக் கோயில் கொண்டார்கள் என்பதைக் கேட்டு நெஞ்சங் கலங்கி கண்ணீர் விட்டேன். நாடு போற்றும் தெய்வம் சுவாமிகளை அன்று காணும்போது என்றும் கண்டதுபோல் காணப் பெற்றேன். வேறென்றும் கண்டேனில்லை.

சித்தகல்ப சிரோன்மணி, வேதாந்த விளக்கு அறவழிகாட்டிய அன்புத் தெய்வம் சுவாமிகள் இன்றைக்கு எனக்கு நேரில் உதவிசெய்ய, நான் தவறிவிட்டாலும் எனக்குச் சில அல்லல் வரும் போது, அவர்களின் ஆத்மாவின் சக்தியானது எனக்குத் தோற்றத்துடன், எனது அல்லல் எல்லாம் நீக்கி நிறைந்த மகிழ்ச்சியைக் கொடுத்து வருகிறது.

❋ ❋ ❋

## சுவாமிகளின் மகத்துவம்

திரு. A. P. P. N. அழகப்ப நாடார், தூத்துக்குடி.

சுவாமிஜி அவர்களுக்கு தொண்டு புரியும் பெரும்பாக்கியம் எங்கள் குரு பிர்மஸ்ரீ வெங்கட்ட ராமய்யர் அவர்கள் அருளால் கிடைக்கப் பெற்றேம். சுவாமிஜி அவர்கள் இல்லறத்தை நடத்தி முக்தியடைந்த மகான். அவர்களுடைய மகத்துவம் சாதாரணமாக உடனே புலப்படாது.

அவர்கள் சமஸ்கிருதம், கம்பராமாயணம் மகாபாரதம் முதலிய இலக்கியத்தில் பாண்டித் தியம் பெற்றவர்கள். அவைகளை அழகுபட சில சந்தர்பங்களில்வியாக்கியானம்செய்யும்போது நாம் மெய்மறந்து லயித்துவிடுவோம். அவர் கள் திரிகால ஞானி என்பதை எங்கள் குடும்ப அநுபவத்தை கொண்டே சொல்லிவிடலாம்.

உதாரணமாக நாங்கள் பொருளாதார நெருக்கடியில் கஷ்டப்பட்டுகொண்டு இருக்கும் போது சுவாமிகள் பௌர்ணமி தினத்தன்று அம்பாள் பூஜை செய்து நிஷ்டையில் ஆழ்ந்து எங்கள் குடும்ப ஒற்றுமையை வலியுறுத்தி எங் கள் எதிர்கால நற்பலன்களையும் எடுத்து சொல்லி ஆசியுடன் அருள்புரிந்த நிலையில் அவ் விதமே அம்பாள் கிருபையால் பலிதமாகி சுவாமிஜியின் கடாக்ஷமும் பெற்றேம்.

சுவாமிஜியின் அருள்வாக்கால் எனக்கு பத்தாவதாக ஆண்குழந்தை பிறந்து பரமகுரு ராஜா நெல்லையப்பன் என்ற நாமம் சூட்டப் பெற்று நற்பயன் அடைந்தோம். சுவாமிஜியை தியானிக்கும்போது எல்லாம் ஜோதி வடிவான சதாசிவ தோற்றமும் அத்தோடு கலந்த கான வடிவான கோபால கிருஷ்ணனின் தோற்றமும் உதயமாகி சதாபிஷேகத்தில் மூழ்கி ஆனந்த நிலை அடையப்பெறும் பிரேமைதான் ஏற்படுகிறது என்றால் மிகையாகாது. சுவாமிஜியின் கடாக்ஷம் பக்தர்களுக்கு அருள்மாரி பொழிந்து ரக்ஷிக்க சுவாமிஜியின் திருமலர் பாதங்களை தியானித்து பூஜித்து கொள்கிறோம்.

---

# கலியுகக் கடவுள்

திரு S. ஆறுமுகசாமி நாடார், நெல்லை

இல்லற வாழ்க்கையிலே ஆணும் பெண்ணும் மனமொத்து உறவாடினால்தான் நன் மக்கட் பேறுகளைப்பெற்று வாழ்க்கையிலே இனியவை காண முடியும். இத்தகைய திருவாய் மொழியே சித்தகல்ப சிரோன்மணி தவத்திரு பொன்னையா சுவாமிகள் எனக்கு முதன்முதல் வழங்கிய தேவவாக்காம். வாழ முடியாத எத்தனையோ ஏழை எளியவர்களை வாழ வைத்தார்கள். தவறுகள் பல செய்து தவித்த மனிதர்களுக்கு நல்லறிவு புகட்டி அவர்களை நல்லொழுக்க முள்ளவர்களாக, நாட்டு மக்களோடு வாழச் செய்துள்ளார்கள் சுவாமிகள் புன்னகையோடு அவர்களைப் பார்த்து, "அப்பா முன் ஜென்மத்தில் செய்த பாவம் உங்களை சும்மாவிடவில்லை. பாவ புண்ணியத்தினால் மனிதன் தாழ்கின்றான், உயர்கின்றான். இது உலகத்தையே ஆட்டிப் படைக்கும் பரம்பொருளின் சக்தியாகும். அச்சக்தி உங்களை மன்னித்து இன்னும் கொஞ்சநாளில் உங்களை வாழவைக்கும். அது வரை நீங்கள் ஆண்டவனைப் பிரார்த்தித்து வாருங்கள். நிழல்போன்று உங்களைப் பின் தொடர்ந்து உங்களுக்கு நல்ல பயனளிக்கும்" "என்று கூறுவார்கள். அவ்வாறு அவர்கள் பலருக்கு அறிவுரை கூறியதைக் கேட்டு நான் ஆச்சரிய முற்றிருக்கின்றேன். அவ் அன்பர்கள் சுவாமிகளிடம் பல நாள் தங்கியிருந்து, புதிய உணர்வு பெற்றவர்களாய்ப் பாவத்திலிருந்து விடுபட்டுப் பரமஞானம் பெற்றவர்களாக வீடு திரும்பி இல்லறமாம் நல்லறத்தைக் கைக்கொண்டிருக்கிறார்கள். இதை நான் நேரடியாகவே கண்டு வியந்திருக்கிறேன். பாவம் செய்தவர்கள் காசி யாத்திரை செய்தால் அவை தீர்ந்துவிடும் என்று முன்னோர் சொல்லக் கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனால் காசியாத்திரை செய்வதைவிடக் கருவையில் குடியிருக்கும் கலியுகக் கடவுள் தவத்திரு பொன்னையா சுவாமிகளிடம் சென்றால் நம் பாவம் பறந்தோடும். சுவாமிகளின் திருப்பாதம் தொட்டு வணங்கி வரங்கேட்டால் நம் பாவம் தொலைவதோடு நம் மனைவி மக்களுக்கும் நெடுங்காலம் சுகத்தோடும், செல்வத்தோடும் வாழவும், நல்லருள் வழங்குகிறார்கள். இதைக் கேட்டுணர்ந்த மக்கள் சுவாமிகளிடம் நாடோறும் வந்து அருள்பெற்று சீர் கெட்ட வாழ்க்கையைச் செம்மைப் படுத்தித் திரும்புவார்கள். சுவாமிகள் பரம்பொருளின் ஞானம் பெற்று, சித்து சக்தி படைத்து பல்லாயிரக் கணக்கான மக்களின் பாவச் சுமைகளை அகற்றி அன்போடு அருள்கொடுக்கும் தெய்வச் சித்தர். அவர்களுடைய திருவடிகளை அன்போடு போற்றி வணங்கி, அருள் பெற்று என் குடும்பத்தை நலமாக்க கரிவலம்வந்தநல்லூர் நோக்கிச் சுவாமிகளைத் தரிசனம் செய்ய அடிக்

கடி செல்வேன். மக்கள் எப்போதும் கூடி யிருக்க, மலர்போல் புன்னகை செய்து, விரும் பிய மனத்திற்கெல்லாம் வேண்டியவை அரு ளும் நம் சுவாமிகளின் செந்திருவடிகளிலே விழுந்து வணங்குவேன். என் கண்கள் உருகிக் கண்ணீர் வடிய என் குடும்பத்திலுள்ள கவலை களை யெல்லாம் மனம்விட்டுச் சுவாமிகளிடம் எடுத்துக் கூறித் திடமும், நிம்மதியும் பெறு வேன்.

சுவாமி "ஐயா! நாணயத்திற்கு இரு பக்கம் இருப்பதுபோல் இல்லற வாழ்க்கையிலே இன் பமும் துன்பமும் கலந்திருக்கின்றன. இவை ஒவ்வொன்றும் மிகுதியானால் வாழ்க்கையிலே சுவை காண்பது அரிதாகும். அச்சுவையை வளர்ப்பதும், வாடவைப்பதும் மனைவியின் கையிலேதான் உள்ளது. முற் பிறவியிலே செய்த நல்வினை தீவினையாலே விதியென்ற கபடத்தில் மனிதனுயை வாழ்க்கை அமை கிறது. கரும வினைக் கடலைக் கடக்க பக்தி என்ற படகு கட்டிக் கடந்து, பரம்பொருளின் ரகசியங்களை உணர்ந்து, ஞான வழிகளைக் கையாண்டு அற வாழ்க்கையைக் கைக்கொண் டால் பேரின்பம் அடையலாம். ஐயா! உம்மு டைய மனக் கஷ்டங்கள் நீங்கி உம்முடைய குடும்பம் நல்லநிலை அடையும். கவலைப் படா தீரும்," என்று வேதாந்த விளக்கங்களைக்கூறி என் மனதிலே சிலந்தி வலைபோல் பின்னப் பட்டிருந்த என் துன்பத்தைப் போக்குவார் கள்.

மனிதனோடு வாழ்க்கையிலே சங்கிலிபோல் தொடரும் பிறவிப் பாவங்களைப் போக்கும் அரும் பெரும் வல்லசக்தி சுவாமிகளிடம் அமைந்திருப்பதைக்கண்டு அவர்களிடம் பய பக்தியோடு அன்புக் கடமைகளைச் செய்து வந் தேன். சுவாமிகள் மனிதனுக்கு இருக்க வேண் டிய பண்பாட்டையும், பழக்க வழக்கங்களையும் எனக்கு அடிக்கடி வலியுறுத்தி எடுத்துக் கூறு வார்கள். என்னைப்போல் பல அன்பர்கள் சுவாமிகளைச் சூழ்ந்திருக்க அவர்கள் மனி தன் வாழவேண்டிய நெறிமுறைகளையும் பகவத்கீதை முதலிய வேத சாஸ்திரங்களை யும் எங்களுக்கு எடுத்தோதுவார்கள். திருக் குறள், கம்பராமாயணம் முதலிய இலக்கியங் களையும் நம்சுவாமிகளிடம் கேட்டு இன்பம் அடைந்திருக்கின்றேன். அவ்வாறு இலக்கண இலக்கியங்களைக் கண்டு ஆய்ந்த அகத்திய முனிவர் ஆகிய நம் சுவாமிகள் பேருரையாற் றத் தொடங்கினால், நாங்கள் மெய்மறந்து கேட் டுக் கொண்டிருப்போம். காலம் கடர்வதை யும் மறப்போம்.

சுவாமிகள், "பண்பிற்கு இலக்கணமும், பழகுவதற்குப் படிப்பினையும் மனிதனுக்கு வேண்டியவை. அவைகளைக் கற்றறிதல் நமக்கு அறியாமையைப் போக்கி நலம் விளைவிக்கும். வண்டிக்கு இரண்டு சக்கரங்கள் போல் வாழ்க் கைக்குப் பண்பும், பழக்கமும் இரண்டு சக்க ரங்களாக இருத்தலால், மேடு பள்ளங்கள் பார்த்துச்செல்ல வாழ்க்கையிலே இனிமை உண்டாக்கும்," என்று எனக்குப் பல வேதாந்த அறிவுரைகளைப் பகர்வார்கள். அதேபோல் சுவாமிகளிடம் நான் பண்பிற்கும் பழக்கத்திற்கும் வேண்டிய நன்னெறிகளை எல்லாம் பல ஆண்டுகள் அவர்களிடம் பழகிக் கற்றறிந்தேன். நான் சுவாமிகளோடு கொண்டுள்ள நட்பு என்னுடைய வாழ்க்கை யிலே புதிய நன் மார்க்கங்களை உண்டாக்கியது. நாளடைவில் என் வாழ்க்கையிலே மலரும் மணத்தைக்கண்டு, சுவாமிகளோடு தொடர்பு கொண்டிருப்பவர்கள் பூர்வ ஜென்மத்தில் சிறி தாவது புண்ணியம் செய்திருப்பவர்கள் தான் என்று தெரிந்து கொண்டேன். அதிலே நானும் ஒருவன் என்று நினைக்கின்றபோது என் மனம் மட்டற்ற மகிழ்ச்சியடைகின்றது. எல்லாம் எழில் பெருக்கும் திருவருளேதான் காரணமாகும்.

சுவாமிகள் சித்த வைத்தியத்திலே தலை சிறந்தவர்கள் ஆவார்கள். அவர்களுடைய அருள் பெருகும் சித்த வைத்தியம் ஒரு அபூர்வ

சக்திவாய்ந்ததாகும். சுவாமிகள், மருந்தால் தீராத நோய்களையும் தீர்த்திருக்கிறார்கள். அன்றியும் அருள் செய்கையால் பெரும் வியாதி யுள்ளவர்களையும் காப்பாற்றியிருக்கிறார்கள். இத்தகைய அவர்களுடைய ஆற்றலையும் அவர்களுடைய ராஜ வைத்திய முறைகளையும் மனிதனால் அறிய முடியாது என்பதைத் திட்டவட்டமாகக் கூறுகிறேன். சுவாமிகளிடம் அருள்கொண்ட சித்த வைத்தியமே குடிகொண்டிருக்கிறது என்பதை என் அனுபவத்தால் அறிந்து கொண்டேன். சுவாமிகளுடைய அருளும், அன்பு வைத்தியமும் என் குடும்பத்திற்கு புனிதத்தையும், சுகத்தையும் அறிந்து அருளியுள்ளது.

கோடை காலம் வந்துவிட்டால் மூன்று மாதங்கள் என்னுடைய இடது காலில் பெருவிரல் பக்கம் புண் தோன்றி என்னை மிகவும் வேதனைப்படுத்தி வந்தது. பாராத வைத்தியர்கள் இல்லை. அவ்வாறு பார்த்தும் பலன் கிட்டவில்லை. என்னைக் காண்பவர்கள் எல்லாம் என்னுடைய கால் புண்ணைப் பார்த்து, எவ்வளவோ கோடி மருந்திருக்க உம்முடைய கால் புண்ணிற்கா மருந்தில்லை என்பார்கள், அதிலே ஏளனம் கலந்திருக்கும். இது எனக்குப் பெருத்த வேதனையைக் கொடுத்தது. பின்னர் ராஜ வைத்தியராகிய அருள் தெய்வம் நம் சுவாமிகளிடம், அவர்களுடைய திருவடிகளைப் போற்றி, என் காலிலே உள்ள தீராப் புண்ணைப் பற்றிக் கூறினேன். சுவாமிகள் என்னை அன்போடு ஏற்று ஆறு வேளைப் பஸ்பம் கொடுத்து சாப்பிட்டுவரச் சொன்னார்கள். என்ன விந்தை! என்னுடைய இடது கால் பெருவிரலில் இருந்த புண் இருந்த இடம் தெரியாமல் குணமாகியது. இப்போது சுமார் பதின்மூன்று வருடங்களாய் அத்தொந்தரவே இல்லை.

அரும் பெரும் தெய்வமாகிய நம் சுவாமிகளிடம் என் குடும்பத்தில் நடக்கும் காரியங்களைத் தெரிவித்து, அவர்களுடைய ஆலோசனைப்படியே என்குடும்பத்தை நடத்திவந்தேன் இன்றுவரை நன்மையே வளர்ந்து வருகிறது. ஒரு சமயம் என்னுடைய பையனுக்கு பீனிச நோய் ஏற்பட்டு மிகவும் சங்கடப்பட்டான். நான் அவனை நம் சுவாமிகளிடம் அழைத்துச் சென்றேன். செகம் போற்றி வணங்கும் நம் சுவாமிகள் என்னுடைய பையனை ஆசீர்வதித்து, அவனுடைய நெற்றியிலே திருநீறு பூசி, மூன்று வேளைப் பஸ்பம் கொடுத்து சாப்பிடச் சொன்னார்கள். அவ்வாறு அவர்கள் வழங்கியமூன்று வேளைப் பஸ்பத்தால் அந்நோய் தீர்ந்தது. என்ன ஆச்சரியம். நாளது வரை என் பையனுக்கு ஜலதோச வியாதியே வந்தது கிடையாது. சுவாமிகள் அருளோடு அளிக்கின்ற பஸ்பங்கள் எப்படிப்பட்ட வியாதிகளாய் இருப்பினும் மணிக்கணக்கிலே அவைகளைத் தீர்த்து வைக்கின்றன. சுவாமிகள் அருளிய பஸ்பங்களும், லேகியங்களும் என் குடும்பத்திலே வரும் எல்லா வியாதிகளையும் அரை நொடியிலே தீர்த்து வைத்து நலமாக்கியிருக்கின்றன. இத்தகைய அபூர்வ சக்தி வாய்ந்த ராஜ வைத்தியம் சுவாமிகளுடைய அருள் வடிவத்திலே பிறந்தவையாகும்.

ஆயிரக் கணக்கான மக்களுக்கு அன்பும், அருளும் அளித்து அறவழிகாட்டும் நம் சுவாமிகள், அவர்கள் தன் கைப்படத் தயாரித்த பஸ்பம், லேகியம், எண்ணெய் முதலிய மருந்து வகைகள் கற்ப கோடி காலம் வைத்து காப்பாற்ற வேண்டிய அரிய புதையல்களாகும். அறுவைச் சிகிச்சை செய்து வரும் இக்காலத்தில் கூட சுவாமிகளுடைய மருந்துகள் அந்த அறுவைச் சிகிச்சை யில்லாது நோயைக் குணப்படுத்திவிடும். இத்தகைய சுவாமிகளுடைய வீரியம் வாய்ந்த மருந்துகள் சில சில இப்பொழுது என்னிடம் இருக்கின்றன என்பதைப் பெருமையோடு கூறிக்கொள்கிறேன்.

என் குடும்பம் அமைதி பெற்று, என்னுடைய பையன்களும், நம் சுவாமிகளுடைய திருவருள் சக்தியின் பார்வையால் வளர்ந்து நன்கு படித்து வந்தார்கள். பின் சுவாமிக

ளுடைய கட்டளைப் படியே அவர்களை மேலே படிக்க வைத்து, அவர்களுக்குரிய துறைகளைக் கையாளச் செய்தேன். என்னுடைய பையன் களுடைய படிப்பிற்கும், முன்னேற்றத்திற் கும் சுவாமிகளுடைய திருவருளே முக்கிய காரணமாகும். எனக்கு மட்டுமல்ல பல்லா யிரக் கணக்கான மக்களுக்கு நல்வாழ்வு கொடுத்து நல்வழி காட்டி யிருக்கிறுர்கள் நம் கலியுகக் கடவுள்.

என்னுடைய பையன், பெண் முதலானோர் திருமண சமயங்களில் சுவாமிகளிடம் சென்று, மாப்பிள்ளை, பெண் பொருத்தம் கேட்டேன், அவர்கள் இனிய முகத்தோடு "எல்லாம் நன் மையாகவே முடியும். இது நல்ல பொருத்தந் தான். வாழ்க்கையிலே அன்பும், அறனும் இணைந்து இன்பம் பெருகும், கவலைப்படாது கலியாண காரியங்களைத் தடபுடலாக நடத் துங்கள். நன்னெறி வழிகளிலே வளர்ந்து வந்த உம்முடைய செல்வங்களுக்கு எக்குறை வும் வராது. இந்தாரும் விபூதியைக் கொண்டு சென்று மாப்பிள்ளை பெண்ணுக்குத் தாலி கட்டி முடிந்ததும் பூசும்" என்று திருவாய் மொழிந்தார்கள். சுவாமிகளுடைய அருள் வாக்குப்படியே எல்லாம் நன்முறையிலே நடந் தது. இதை நான் என்றும் மறப்பதற்கில்லை.

காடுபோல் வாழ்க்கையிலே வளரும் துன்பங் களைப் போக்கி, கனிவோடு அருள் கொடுத்துக் காப்பாற்றும் சுவாமிகள் உண்மையிலே இக் கலியுகத்திலே அவதரித்த கண்கண்ட கடவு ளாகும். அவர்கள் சொன்னது நடக்கும். நடக்கும் என்பதை நம்பாது ஏளனம் செய் வோர்கள் அல்லல் பட்டு அவதியுற்றுக் கடைசி யிலே சுவாமிகளிடம் வந்து திருவடிகளிலே சரணடைவதை நேரடியாகக் கண்டிருக்கின் றேன். அம்மகான் பதினைந்தாண்டுகளுக்கு முன்னுல் அருளிய திருவாக்குப் படியே என் குடும்பத்தில் நல்லவை நாளுக்கு நாள் பெருகிய வண்ணமே இருக்கின்றன.

'அருள் தெய்வமாம் சுவாமிகளுடைய திரு வடிகள் போற்றி, வணங்கி, அவர்கள் திருவாய் மொழிந்தவழியிலே குடும்பத்தை நடத்தி நான் நற்பேறு பெற்று வருங்காலையில், நம் சுவாமி கள் கருவையிலே சமாதி கொண்டு திருக்கடவு ளானுர்கள் என்ற செய்தியைக் கேட்டுக் கண் கலங்கினேன். எனக்கு வேண்டிய உதவிகளைச் செய்து, உரிமையோடு என் குடும்பத்திற்கு நல்வழிகளை வகுத்துக் கொடுத்த அக் கருவை நாதன் கலியுகக் கடவுள் நம் சுவாமிகளை நான் நாள்தோறும் நன்மலரிட்டு வணங்கி வழிபடு கிறேன்.

---

## சுவாமிகளின் அருள் மொழிகள்

திருவிழா நேரங்களில் அம்மன் சாமியை அலங்கரித்து, ஊர்வலமாகச் சப்பரத்தில் எடுத்துச் செல்லும்போது, சப்பரத்திற்கு முன்னுல், 'விசிரி ஆயான்,' என்பவர் கீத்து விசிரியும் கையுமாக மிக ஆசாரத் தோற்றத்துடனும், முக்கியத் துவம் வாய்ந்த தோற்றத்துடனும் நிற்பார். சப்பரம் பூஜை முடிந்து ஒரு இடம்விட்டு மறு இடம் புறப்படும்போது அவர் 'போகட்டும், போகட்டும்,' மென்பார். அவ்வாறே மறு பூஜைக்காகத் தாஞகவே நிற்கும்போதும், நிற்கட்டும், நிற்கட்டுமென்பார். ஆனுல் இவர் அப்படிச் சொல்வதற்காகமட்டும், சப்பரம் நிற்பதாகவுமில்லை; போவ தாகவுமில்லை. இருந்தாலும் இவர் மேல் குறித்தவாறு சொல்லுவதை நிறுத்துவ துமில்லை. அப்படிச் செய்வதில் இவருக்கு ஒரு பெருமிதம். இப்படியொத்த வேடிக்கையான ஆத்மாக்களின் விநோதப் போக்கை விளக்கிச் சொல்லி எல்லோரையும் சிரிக்க வைப்பார்கள்.

# வேத விற்பன்னர்

திரு கோபாலய்யர், கோவில்பட்டி

தவத்திரு பொன்னையா சுவாமிகளை நான் சிவகாசியில் செ.மு.நந்தவனத்தின் மேடையில் முதன் முதலாக 1923 ஜூலை மாதம் கண்டு தரிசனம் செய்தேன். அத்தரிசனக் காட்சி என்னை மெய்மறக்க வைத்தது. காரணம், அந் நேரம் சுவாமிகள் புன்னகையோடு சுவாமி விவேகானந்தா அவர்களைப்போலவே, தலையில் நீண்ட சரிகைத் தலைப்பாகைக் கட்டி ஒளி வீசும் தேஜசுடன் காணப்பட்டார்கள். அன்று என்னோடு திரு. வெங்கட்டராம அய்யர் அவர்களும் சிவகாசியில் வைத்தியம் செய்து வந்த திரு வெள்ளைச்சாமி நாடார் அவர்களும், இன்னும் முனிசிபல் மானேஜர் திரு. சுப்பா நாயுடு அவர்களும் இருந்தார்கள். குறிப்பாக தவத்திரு. ஆவுடைச் சங்கு சுவாமிகளும் எங்களோடு இருந்தார்கள். சுவாமிகளின் திருப்பாதம் தொட்டு வணங்கினேம். சுவாமிகளும் அருளோடு அளவளாவி எங்களை மகிழ்ச்சிப் படுத்தினுர்கள்.

சுவாமிகள்நீலகிரிக்குமூலிகைகொண்டுவரப் புறப்படும் போது தவத்திரு ஆவுடைச் சங்கு சுவாமிகள் பூஜை செய்து, தேங்காய் உடைத்தார்கள். அது அழுகலாய் இருந்ததைக் கண்ட அவர்கள் திடுக்கிட்டு "சுவாமிகளே! என்ன இப்படி அபசகுணமாயிருக்கிறது? ஆபத்து வரும் போல் இருக்கிறதே? இதைத் தெரிந்து தான் போகிறீர்களா?" என்று கேட்டார்கள். அப்போது நம் சுவாமிகள் சிரித்துக்கொண்டே "சுவாமிகளே! வருவதை அறிந்துதான் போகிறேன். அதிலே ஆபத்தும் உளது. என்ன செய்வது? வினைப்பயனை அனுபவித்துத்தானே ஆக வேண்டும். இல்லையென்ருல் அடுத்த பிறவியெடுத்து அதை அனுபவிக்கவேண்டியதிருக்கும் எனவே வருவதைக் கண்டு துணிந்தே போகிறேன். போய் வருகிறேன்" என்று சொல்லி சுவாமிகள் நீலகிரி புறப்பட்டார்கள்.

அவர்கள் போகும் போது எங்களிடம் "அன்பர்களே! நம் ஆவுடைச் சங்கு சுவாமிகள் தெருவிலே எச்சிலை பொறுக்குகிருர் என்று நினைக்காதீர்கள், சுவாமிகள் ஓர் தெய்வப் பிறவி. அதை மக்கள் அறியாமல் இருக்கிருர்கள். அருள் குடி கொண்டிருக்கும் அத்தெய்வப் பிறவியைப் போற்றி வாருங்கள். பலன் கிடைக்கும்" என்று சொன்னுர்கள். பாம்பின் கால் பாம்பறியும் அல்லவா? சுவாமிகள், ஆவுடைச் சங்கு சுவாமிகளுடைய பெருமையை எடுத்துக்கூறியபின் மக்கள்,தெருவிலேஎச்சிலை பொறுக்கிக் கொண்டிருக்கும் அவர்களை. வீடு வீடாக அழைத்தும் போய் விருந்துகள் வைக்கத் தொடங்கினுர்கள். திரு. வெங்கட்டராம அய்யர் அவர்கள் வீட்டில் தவத்திரு. ஆவுடைச் சங்கு சுவாமிகளுக்கு படுக்கையும், சாப்பாடும் நடந்து வந்தன. கார்த்திகை முதலிய விசேஷ காலங்களில் ஒரே நாளில் ஏழு, எட்டு இடங்களில் ஆவுடைச் சங்கு சுவாமிகள் சாப்பிட்டு விட்டு, சாப்பாடு உறைக்கவேயில்லை என்பார்கள் அத்தகைய அவருடைய மாணிக்கம் மக்கள் அறியாமல் மண்ணிலே புதைந்து கிடக்கக் கூடாது என்று மக்களுக்கு விளக்கிக் காட்டிய வேத விற்பன்னராம் நம் சுவாமிகளின் அருள் கசிவுதான் என்னே!

பின்னர் சுவாமிகள் நீலகிரியிலிருந்து திரும்புகையில் திரு வெங்கட்டராம அய்யர் அவர்கள் மட்டும் சுவாமிகளைப் பார்த்திருக்கிருர்கள். "வருவதைஅனுபவித்துத்தான் ஆகவேண்டும்' என்று சொல்லிச் சென்ற சுவாமிகள் அப்போது மலேரியா ஜுரத்தோடு வாடி வருந்தி மெலிந்த உடலோடு காணப்பட்டார்கள் என்று என்னிடம் கூறினுர்கள். பின் சுவாமிகள் தனக்குத் தானே வைத்தியம் செய்து குணப்படுத்திக் கொண்டார்கள்.

அது முதல் சுவாமிகள் அடிக்கடி சிவகாசி வரலானார்கள். அவ்வாறு அவர்கள் வந்து திரு வெங்கட்டராம அய்யர் அவர்கள் வீட்டில்தான் தங்கிச் செல்வார்கள். சுவாமிகள் அங்கு வந்து விட்டால் பல பெரிய பிரமுகர்கள், முதலாளி கள், வைத்தியர்கள், வித்வான்கள் முதலியோர் கூட்டமாக சுவாமிகளின் திருவடிகள் போற்றி தரிசனம் செய்யக் கூடுவார்கள். அந்நேரம் சுவாமிகள் அவர்களை ஆசீர்வதித்துவிட்டு,எந்த விஷயத்தை எடுத்துப் பேசினாலும் பல மணி நேரம் தொடர்ச்சியாகப் பேசிக் கொண்டிருப் பார்கள். கேட்கக் கேட்க செவிக்கு இன்பம் கடலாய்ப் பெருகும். மனமும், அறியாமை நீங்கி ஆண்டவன் பால் பற்று கொள்ளும். கருணைக் கடலாகிய சுவாமிகளின் அருளுக்குமுன் யாவ ராயினும் எதிர்த்து வாதாடமுடியாது. முடிவில் வாதத்தில் தோற்றோர் சுவாமிகளுடைய திருவடிகளில் விழுந்து பணிவோடு வணங்கிச் செல்வார்கள்.

சுவாமிகள் சிவகாசி வந்து திரு. வெங்கட்ட ராம அய்யர் அவர்களின் வீட்டில் தங்கிப் பல ரோடு உரையாடிக் கொண்டிருப்பதும், ஆசி கூறுவதும் பக்கத்து வீட்டிலிருக்கும் பல அந்த ணர்களுக்குப் பிடிக்க வில்லை. அவர்கள் வேதம் கற்ற கர்வத்தால் சுவாமிகளை சோதிக்க எண்ணி ஒருநாள், சுவாமிகள் வந்ததும் அவர்களிடம் சென்றார்கள். "சுவாமிகளே! எங்களுக்குத் தாங்கள் சமஸ்கிருதவேத சுலோகங்களைச் சொல்லி விளக்க வேண்டும். நாங்கள் கோவில் குருக்கள். வேத பாராயணம் செய்து கொண் டிருக்கிறோம்" என்று சொன்னார்கள். அழுக் காறுநெஞ்சோடு தம்மைசோதிக்கவந்திருக்கும் அவர்களின் நிலையைக் கண்ட சுவாமிகள்,சிரித் துக்கொண்டே சமஸ்கிருதத்திலுள்ள வேதாந்த சுலோகங்களை எடுத்துச் சொல்லி மணிக்கணக் காக அவர்களை மயங்க வைத்தார்கள். சுவாமி களின் ஆழ்ந்த வேத ஞானத்தைக் கண்ட அந்தணர்கள் அழுக்காறு நீங்கி தாங்கள் செய்த தவறுக்காக சுவாமிகளிடம் மன்னிப்புக் கேட்டார்கள். உடனே சுவாமிகள், "ஐயா; வேதம் ஓதியும் மும்மலங்களையுடைய உடல் களைத்தான் தாங்கி வந்திருக்கிறீர்கள். ஆகவே குடியிருக்கக்குச்சுவீடுகட்டக்கூட உங்களுக்கு ஒன்றும் இருக்காது. பரம் பொருளின் சக்தி கண்டவர்களை நீங்கள் அலட்சியம் செய்ய லாகாது," என்று புத்திகூறி அனுப்பினார்கள்.

அன்போடு அருள்கொடுக்கும் அற்புதமூர்த்தி யாகிய சுவாமிகள் 1932 வரை சிவகாசிக்கு அடிக்கடி வந்துகொண்டிருந்தார்கள், கருவை யிலே பால் வண்ண நாதர்கோவில் கும்பாபி ஷேகத்தில் பாடப்பட்ட ஒரு பாடலை திரு. வெங்கட்டராம அய்யர் அவர்களிடம் கொடுத் துப் படிக்கச் சொன்னார்கள். அவர்கள் படித்த தைக் கேட்ட சுவாமிகள், "ஐயா ஏன், நீங்களும் இவ்விதம் பாட்டு எழுதலாகாது?" என்றார்கள் "என் தாய் மொழி தெலுங்கு நான் தமிழ் கற்ற வனல்ல.பின் எவ்விதம் தமிழில் கவி எழுதுவது? என்று கேட்டார்கள் திரு. வெங்கட்டராம அய்யர் அவர்கள். அதற்கு சுவாமிகள் "எழுதுங்கள்"என்று அருளினார்கள்.சுவாமிகளு டைய அருள் புன்னகை அடியாராகிய திரு. வெங்கட்டராம அய்யர் அவர்களுக்கு திடத்தைக் கொடுத்தது. உடனே "அக்கறையுடன்" என்று தொடங்கிய ஒரு பாட்டை எழுதி சுவாமிகளிடம் படித்துக் காண் பித்தார்கள். சுவாமிகள் "இம்முதலடியில் 'அ' என்ற உயிரும் 'க்' என்ற மெய்யும் 'க' என்ற உயிர்மெய்யும் கலந்திருக்கிறது சரி தானே. பாட்டு தாராளமாக வரும். எழுதுங் கள்." என்று ஆசீர்வாதம்செய்தார்கள்.தெலுங் கரான திரு. வெங்கட்டராம அய்யர் அவர்கள் தமிழ் இலக்கணம் என்பதே தெரியாதிருந்தும் சுவாமிகளுடைய அருளால் ஆயிரக் கணக்கில் பாடல்கள் எழுதத் தொடங்கி விட்டார்கள். அப்பாடல்கள் இலக்கண வரம்புக்குட்பட்ட தாகவே இருக்கின்றன. சுவாமிகளுடைய அருளால் பாடும் அவர்களுடைய பாடல்கள், தாயுமானவர், அருணகிரிநாதர், சித்தர்கள்

போன்ற பல பெரியோர்களின் பாடல்களைப் போலவே இருக்கின்றன. ஆயிரக்கணக்கான அப்பாடல்களை யெல்லாம் பைண்டு செய்து பல புத்தகங்களாகக் கைவசம் வைத்துள்ளார்கள். நம்சுவாமிகளுடையதிருவருளால், இலக்கணம் படித்த பல புலவர்கள் வியந்து பாராட்டும்படி நினைத்த நேரத்தில் திரு. வெங்கட்டராம அய்யர் அவர்கள் பாடக் கூடிய சக்தி ஏற்பட்டு ஏராளமாக இப்பொழுதும் பாடிக் கொண்டிருக்கிறார்கள்.

சுவாமிகள் இராஜபாளையம் ஊருக்கு மேற்கே ஊரணிக்கருகிலுள்ள தர்க்காசு நிலத்தை வாங்கி தர்ம காரியத்திற்காக மனை யொன்று கட்ட முயற்சி செய்தார்கள் அவர்கள் செய்து வந்த முயற்சியைப் பல பிரமுகர்களும், பணக்காரர்களும் அவர்களுடைய அருள் தெரியாது எதிர்க்கலானார்கள். குடும்பம் நடத்தும் போலிச் சாமி யென்றும், அவர்களுக்கு அவ்விடத்தைக் கொடுக்கக் கூடாதென்றும் ஜில்லா கலெக்டருக்கு அப்பிரமுகர்கள் மனுப் பல போட்டார்கள். தமக்கு வந்த எதிர்ப்புச் சக்தியைப் பொருட்படுத்தாது, தெய்வப் பிறவியாகிய சுவாமிகள் ஓர் நாள் ஜில்லா கலெக்டரைக் காணச் சென்றார்கள். அவர்களுடைய அருள் வடிவத்தையும், அன்பு முகத்தையும் கண்ணுற்ற கலெக்டராகிய திரு. வி. டி. கிருஷ்ணமாச்சாரியர் அவர்கள், சுவாமிகளைக் கண்டவுடன் மெய்மறந்து வணங்கி, ஆசனத்தில் இருக்கச்செய்து, அன்பு மரியாதைகள் செய்யத் தொடங்கி விட்டார்கள். தெய்வமாய் விளங்கும் இச்சுவாமிகளையா போலிச்சுவாமி என்றார்கள், இவ்வூர் பிரமுகர்கள் என்று தன் மனத்திலுள்ள எண்ணத்தையும் மாற்றி சுவாமிகள் வந்த காரியமாகிய அந்த தர்க்காசு நிலத்தை கொடுக்க தாசில்தாருக்கு உத்தரவு போட்டார்கள். களிப்போடு கலெக்டர் அவர்கள் சுவாமிகளிடம் ஆசீர்வாதம் பெற்று, தன் காரிலேயே இராஜபாளையம் சுவாமிகள் வீட்டில் கொண்டு வந்து விட்டுச் சென்றார்கள்.

பின்னர் சர் சி. பி. ராமசாமி அய்யர் அவர்களும், சர் பி. டி. ராஜன் அவர்களும், திரு. குமாரசாமி ரெட்டியார் அவர்களும் சுவாமிகளுக்கு அறிமுகமாகி அன்பு கொண்டார்கள்.

சிவகாசி திரு. பி. கே. எஸ். ஏ. ஆறுமுக நாடார் அவர்கள் சுவாமிகளின் அன்புக்குரியவர்களாகும். சுவாமிகள் ஒரு நாள் அவர்களிடம் "உங்களுக்கு மேல்பதவி யொன்று காத்திருக்கிறது. வரும் சந்தர்ப்பத்தை நழுவ விடாதீர்கள்" என்று கூறினார்கள். அதுசமயம் திரு. ஆறுமுக நாடார் அவர்களும் எம். எல். சி. க்காக மனுப் போட்டார்கள். தேர்ந்தெடுக்கும் நாளிலே திரு. நாடார் அவர்கள் சென்னை செல்லாது கவலையாய் இருந்தார்கள். காரணம் அவருடைய பையன் கடுமையான ஜூரம் கண்டு பிழைக்க முடியாமல் தவித்தான். அத்தகைய இக்கட்டான நிலையில் அவர்கள் தயங்கிக் கொண்டிருந்தார்கள். அந்நேரம் சுவாமிகள் வந்து "என்னய்யா, இன்னும் போகாமல் இருக்கிறீர்கள்? உங்களுக்காக எல்லோரும் காத்துக் கொண்டிருக்கிறார்கள். உங்கள் பையனுக்கு ஒன்றும் ஏற்படாது. பயப்படாமல் பிரயாணத்திற்கு ஏற்பாடு செய்யுங்கள்" என்று சொல்லி அப்பையனுக்கு ஒரு வேளை மருந்து கொடுத்து குணப்படுத்தினார்கள், சுவாமிகளின் கட்டளைப்படியே திரு. ஆறுமுக நாடார் அவர்கள் சென்னை சென்று எம். எல். சி. யாகத்தேர்ந்தெடுக்கப்பட்டு யாவும் சுவாமிகளின் கிருபையால் நடந்தது என்று போற்றி மகிழ்ந்தார்கள்.

சிவகாசி பெண்பாடசாலை கட்டிடத்திற்கு 1932ல் அஸ்திவாரம் போடப்பட்டு பின் கட்டி முடிக்கப்பட்டது. சுவாமிகளின் முயற்சியால் சர்க்காரிடமிருந்து ரூபாய் முப்பதினாயிரம் நன்கொடை வாங்கி அப்பள்ளிக்கூடம் கட்டி முடிக்கப்பட்டது. அந்தக் காலத்தில் சுவாமிகளுக்குத் தெரியாத ஜில்லா கலெக்டர்களோ, பெரிய உத்தியோகஸ்தர்களோ, ஜமீன்தார்களோ கிடையாது. மாகாண அமைச்சர்களும், மற்றும்

பல பெரிய பிரமுகர்களும் சுவாமிகளுடன் தொடர்பு கொண்டிருந்தார்கள். சுவாமிகள் அருளால் பெண்பாடசாலை மாணவிகளைக் கொண்டு நந்தனார் நாடகம் தயாரித்து, சிவ காசி, தூத்துக்குடி, மதுரை, சென்னை முதலான இடங்களில் சிறப்பாக நாடகம் நடத்தி முப்பதி னாயிரம் ரூபாய் வசூல் செய்யப்பட்டது. அப் பணத்தால் அப் பெண்பாடசாலை மேலும் விருத்தி செய்யப்பட்டது. சுவாமிகளுடைய அருள் இவ்வாறு நாட்டு மக்களுக்கும் நம்மவர் கல்விக்கும் உதவி செய்து வந்தது.

நம் சுவாமிகளுடைய பாக்கியத்தால் கருவை யில் தெய்வத்திரு பொதிச்சுவாமிகளைக் கண்டு தரிசனம் செய்தேன். பள்ளிக் கட்டிடம் கட்டு வதற்கு தேக்குமரம் வாங்குவதற்காக சுவாமி களோடு நானும் அப்பாடசாலையின் தலைமை யாசிரியர் என்ற முறையில் திருவனந்தபுரம் சென்றேன். அங்கு சர் சி. பி. ராமசாமி அய்யர் அவர்கள் நம்சுவாமிகளை அன்போடு வரவேற்று மகிழ்ந்தார்கள். சுவாமிகள் அவர்களுடைய குருமகான் மஸ்தான் முகமத்கான் அவர்களை தரிசிக்க என்னையும் அழைத்துச் சென்றார்கள். நான் மூன்று நாட்கள் அங்கு குருமகானைத் தரி சிக்க நேர்ந்தது. அதுசமயம் அம்மகான் நம் சுவாமிகளுடைய அரிய பெருமைகளை எடுத் துக் கூறலானார்கள். "ஐயா! தவத்திரு பொன் னையா சுவாமிகள் என்னுடைய உத்தம சீடரா கும். சுவாமிகள் கோடிப் பாம்பு. மிகவும் வேகம் அதிகம். ஆகவே, நிதானமாகப் பழகுங் கள். சொன்னது பலிக்கும். அதிகம் நெருங்கி யும், நெருங்காமலும்பணிவோடு அவர்களுடன் பழகுங்கள். சுவாமிகள் பல ஆண்டுகள் இங்கு சமஸ்கிருதம் படித்தும் பட்டம் பெற்றார்கள். அவர்கள் ஒரு வேத விற்பன்னர். இங்கே சமஸ் கிருதப் பண்டிதராக வேலைபார்க்க அவர் களுக்கு அழைப்பு வந்தது. ஆனால் அதை வேண்டா மென்று மறுத்துவிட்டார்கள். இவ் வுலகில் இவ்வளவு வைராக்கியத்துடன் இருப் பது மிகவும் சிலரே. துறவறத்தில் இறங்கின வர்கள் பலர் இருக்கிறார்கள். ஆனால் இவர் களைப்போல் ஒரு இல்லற முனியைக் காண்பது அரிது. சன்னியாசியாக வடக்கே காசி முத லான இடங்களுக்கு போகப் புறப்பட்டார்கள். ஆனால் இளமையிலேயே அவர்களுக்குத் திரு மணம் ஆகியிருந்ததால் யான் அவர்களை இல்ல றத்திலிருந்தே பரம்பொருளின் சக்தி கண்டு ஞானியாய் இருக்கக் கூறினேன். அவர்களு டைய . அருள் கிடைத்தால் மக்களுடைய வாழ்க்கையில் என்றும் செல்வமும், சிறப்பும் உண்டாகும், "என்று மகிழ்ச்சியாகக் கூறினார் கள். அதைக்கேட்டு பூரித்தது என் மனம்.

1924-ல் சிவகாசிக்குபக்கத்தில் உள்ள திருத் தங்கல் என்ற ஊரில் நம் சுவாமிகளைப் பார்க்க திருவனந்தபுரம் குருமகான் முகமத்கான் சுவா மிகள் வந்திருந்தார்கள். அவர்களோடு ஆழ் வார்குறிச்சி திரு சுப்ரமணிய முதலியார் அவர்களும் வந்திருந்தார்கள். அன்று இரவு பூஜையை முடித்துவிட்டு இருவரும் வெகுநேரம் அளவளாவிப் பேசிக் கொண்டிருந்தார்கள். விடிந்தவுடன் நானும் திரு வெங்கட்டராம அய்யர் அவர்களும் சிவகாசிக்குத் திரும்பி னோம். உடனே சுவாமிகள் குருமகானை அனுப்பி விட்டு ராஜபாளையம் திரும்பினார்கள்.

ஒரு சமயம் இராமநாதபுரம் இராஜா அவர் கள் வரும்படி வேண்டியதால் சுவாமிகள் அங்கு சென்றார்கள். அன்று இராஜா அவர்க ளோடு இருந்த தாசில்தார் திரு கோவிந்தன் நாயர் அவர்கள் சுவாமிகளை தரிசனம் செய்து நட்புக் கொண்டார்கள். அத்தாசில்தார் மாற்ற லாகி வேறு ஊருக்குச் செல்ல இருந்தார்கள். அவர்கள் சுவாமிகளிடம் தான் வேறு ஊருக்கு மாற்றலாகிச் செல்வதால் சுவாமிகள் தன்னு டன் போட்டோவில் உட்கார வேண்டுமென்று கேட்டுக் கொண்டார்கள். சுவாமிகள் மன மில்லாது போட்டோவில் உட்கார மறுத்தார் கள். ஆனால் தாசில்தாரின் வற்புறுத்தலுக்கு இணங்க போட்டோவில் அமர்ந்தார்கள்.

போட்டோ எடுத்துக் கழுவிப் பார்த்ததில் சுவாமிகளுடைய உருவம் மாத்திரம் படத்தில் விழாது காலியாக இருந்தது. சுவாமிகளுடைய அற்புத சித்து வேலையைக் கண்டு ஆச்சரியப் பட்டு அன்போடு அனைவரும் வணங்கினார்கள்.

திருவில்லிப்புத்தூரில் நான் தங்கியிருந்த போது எனக்கு மலேரியா காய்ச்சல் வந்து என்னை படுத்த படுக்கையாக்கி விட்டது. சுவாமிகள் பல தடவை வந்து எனக்கு மருந்து கொடுத்து குணப்படுத்தினார்கள். இவ்வாறு சுவாமிகள் பல சந்தர்ப்பங்களில் எனக்கும் என்னுடைய மனைவிக்கும் நோயுற்ற காலங்களில் தாமாகவே வந்து மருந்துகள் கொடுத்து எங்களை காப்பாற்றியிருக்கிறார்கள்.

எவ்வளவு பணம் வந்தாலும் தாராளமாகச் செலவு செய்து விடுவேன். இதை சுவாமிகள் கண்டித்து வந்தார்கள். சுவாமிகள் என்னை சோதிக்க எண்ணி ஒருசமயம் என்னிடம் "ஐயா! நம் குழந்தைக்கு காதணி விழா வருகிறது. அதற்கு செலவிற்கு நூறு ரூபாய் வேண்டும். எங்கேயாவது வட்டிக்கு வாங்கி கொடுங்கள். திருப்பிக் கொடுத்து விடலாம்" என்று சொன்னார்கள். அதற்கு நான் "சுவாமிகளே! என்னிடமே பணம் இருக்கிறது. இதோ வைத்துக் கொள்ளுங்கள்" என்று சொல்லி சுவாமிகளிடம் கொடுத்தேன். அதற்கு அவர்கள், இப்படி பணத்தின் அருமை தெரியாது செலவழித்தால் கடைசி காலத்தில் கஷ்டப்பட நேரிடும். வரவு அறிந்து பணத்தைச் செலவிட வேண்டும். பக்கத்து வீட்டில் சொசைட்டி செகரட்டரி இருக்கிறார். அவரிடம் சொல்லி பாளையங்கோட்டை பெருமாள்புரம் காலனியில் இருக்கும் மாதத்தவணைக்கு பணம் கட்டும் ஒரு வீட்டை வாங்கிக் கொள்ளுங்கள். கடைசி காலத்தில் பயன்படும்," என்று கூறினார்கள். சுவாமிகள் திருவுள்ளபடி மாதத்தவணையில் ஒரு வீடு என்பேருக்கு வாங்கப்பட்டது.

திரு வெங்கட்டராம அய்யர் அவர்கள் குடும்பம், இன்று நற்சிறப்போடு விளங்குகிறது என்றால் நம் சுவாமிகளின் திருவருளேதான் காரணமாகும். திரு வெங்கட்டராம அய்யர் அவர்கள் தன் குமாரன் திரு வெங்கு இண்டர்மிடியட் தேறியவுடன் அவரை ஆசிரியர் பயிற்சிக்காக அனுப்பவேண்டுமென்று முடிவுகட்டிக் கொண்டு சுவாமிகளிடம் சென்று திருவடிகள் போற்றி வணங்கி நின்றார்கள். அப்போது சுவாமிகள் புன்னகையோடு, "என்ன பையனை ஆசிரியர் பயிற்சிகா அனுப்பப்போகிறீர்கள்? மேலே படிக்க வையுங்கள். அவர் அகில இந்திய இஞ்சினியராகக் கூடிய சந்தர்ப்பம் இருக்கிறது. அதை இழக்கக்கூடாது. இஞ்சினியரிங்க் காலேஜில் சேர்த்து விடுங்கள். பின்னால் அமெரிக்காவிற்கு சர்க்கார் ஸ்காலர்ஷிப்பில் போகக் கூடிய வாய்ப்பும் இருக்கிறது" என்று கூறினார்கள். ஞானதிருஷ்டியாய் எதிர்காலம் கண்டு கூறும் சுவாமிகளின் அருள் வாக்குப் படியே திரு வெங்கட்டராம அய்யர் அவர்கள் தன் பையனை இஞ்சினியர் காலேஜில் சேர்த்தார்கள். அவர்களுடைய பையனும் சுவாமிகளிடம் இளவயதிலிருந்தே பழகி அவர்கள் இதயத்தில் இணைபிரியாதவரானார். அருள்த் தெய்வம் சுவாமிகளுடைய தெய்வ வாக்குப் படியே திரு வெங்கு இஞ்சினியரிங் காலேஜில் படித்து, அமெரிக்கா முதலிய மேல் நாடுகள் சென்று, பட்டம் பெற்று தற்சமயம் கரக்பூரில் அகில இந்திய இஞ்சினியராகப் பணியாற்றிக் கொண்டிருக்கிறார்.

நான் தலைமைஆசிரியர் பதவியிலிருந்து ஓய்வு பெற்றேன். பணத்தை சிக்கனப் படுத்தாது செலவழித்த காரணத்தால் கடைசி காலத்தில் மிகவும் கஷ்டப்பட்டேன். அப்பொழுது தான் சுவாமிகளுடைய பொன்மொழிகளை உணரத் தொடங்கினேன். என்னைத் திருத்துவதற்காகவே என்னிடம் சுவாமிகள் தம் குழந்தையின் காதணி விழாவிற்கு நூறு ரூபாய் வட்டிக்கு வாங்கிக் கொடுங்கள் என்று கேட்டதைப் பின்

ஞல் உள்ளத்தால் உணர்ந்தேன். உத்தம தெய்வமாகிய சுவாமிகளுடைய பொன்மொழிகளை வாழ்க்கையின் பற்றுக் கோடாய்க் கொண்டு பரமனே என்று வணங்கி வருகிறேன். சுவாமிகளின் திருவுள்ளப்படியே முடிந்த பாளையங் கோட்டை பெருமாள் புரத்தில் உள்ள என் வீட்டை விற்பனை செய்து விட்டேன். அப் பணத்தைக் கொண்டுதான் இப்பொழுது கால ஜீவனம் நடத்தி வருகிறேன். இது நான் கடைசி காலத்தில் கஷ்டப்படக்கூடாது என்று சுவாமிகள் அருளிய புண்ணியமே. அவர்கள் கருணையே என்னைப் பலவழிகளில் காத்து வருகிறது. கருவையிலே சமாதியாகி திருக்கோவில் கொண்ட அத் தெய்வம் எங்களை என்றென்றும் காத்தருளும் என்று கைகூப்பி வணங்கி வருகிறேன்.

## சுவாமிகளின் அருள் மொழிகள்

பெண்கள் வயது வந்து பக்குவமடைந்து வீட்டிற்குள் அடங்கி இருந்தாலும்கூட, புஷ்பவதியானதை அறிந்து பெண் கேட்டுக் கல்யாணம் செய்துகொள்ளத் தாஞகவே விசாரித்து வருகிறார்கள். அதேபோல் ஒருவர் தன்னைக் கல்வி கேள்விகளால், நிலத்தை உழுது பண்படுத்தி விதைப்பதற்குத் தயாராக பக்குவப்படுத்துவதுபோல் தயார் செய்து கொண்டு அடக்கத்துடன் பொறுத்திருந்தால், தக்க குரு, அன்னாரைத் தேடிவந்து, யோகநிலையில் தன்னை அறிந்து தலைவனையு மறியும் மார்க்கத்தை சுட்டிக்காட்டுவார். விட்ட குறை தொட்ட குறையின் நிமித்தப்படி, தக்க 'டயம்' (காலம்) வரும் போது, இந்த வாய்ப்புத் தாஞகக் கைகூடும். அப்படி ஏற்படும் சந்தர்ப்பத்தை நழுவவிடாமல் எதிர்பார்த்துப் 'பூத்திருப்பதுபோல்' இருக்கவேண்டும்.



# அருள் ஆலயம்

திரு. R. முத்துக்குமாரன், கடலூர்

அருள்ச் சுடரால் நம் அகம் கவர்ந்து, ஒளி பெருக்கி, உயர் நெறிகள் ஊட்டி, நம் வாழ்க்கைக்குரியநல்வழிகளைக்காட்டுபவர் அருளாளர் அலையாய் வரும் நம் துன்பங்களைப் போக்கி, அன்பு கொண்டு ஆதரிக்கும் அவ்வருளாளர் இந்த அவனியிலே விளங்கும் அருள் ஆலயமே யாகும். அடியார்களை வணங்கினாலே போதும் அது ஆண்டவனை வணங்குதற்குச் சமம் என்பர் சான்றோர். ஆனால் தெய்வப் பிறவியாகிய நம் சுவாமிகளை வணங்கினாலே சிவபெருமானை தரிசித்தது போலாகும். என் வாழ்க்கையின் விடிவிளக்காய் விளங்கும், நான் அனுதினமும் வணங்கிவரும் அருள் ஆலயம் தவத்திரு பொன்னையா சுவாமிகளாகும்.

தெய்வப்பிறவியாகிய சுவாமிகளுடைய அருள்வாக்கும், அன்பும் பெற்ற நான் அவர்களோடு தொடர்பு கொண்ட நிகழ்ச்சி மிக அதிசயமாக இருக்கும். நான் சுவாமிகளுடைய மைந்தர் திரு பரமகுரு அவர்களோடு அண்ணாமலை சர்வகலாசாலையிலே படித்து வந்தேன். நாங்கள் இருவரும் உடன் பிறந்தவர்களாகப் பழகி வந்தோம். ஒருவரை விட்டு ஒருவர் பிரிவதில்லை. ஒருநாள் விடுமுறையில், அறையில் நான் விசில் அடித்துக் கொண்டும், பாடிக் கொண்டுமிருந்தேன். என் நண்பர் திரு பரமகுரு அவர்களோ அதற்கு ஏற்றார் போல் மிக அழகாகத் தாளம் போடத் தொடங்கிவிட்டார்கள். நான் "காயமே பொய்யடா, இது வெறும் காத்தடைத்த பையடா" என்று உற்சாகமாகப் பாடிக் கொண்டிருந்தேன். எங்களுடைய நையாண்டி மேளம் விடுதியிலுள்ள எல்லா மாணவர்களையும் கவர்ந்தது அவர்களும் கூச்சல் போட்டு எங்களைப்போல் ஆடத் தொடங்கி விட்டார்கள். ஒரே அமர்க்களம், அப்போது திடீரென்று சுவாமிகள் எங்கள் அறைக்குள் நுழைந்து விட்டார்கள். ஆட்டம் போட்டுக் கொண்டிருக்கும் நாங்கள் அவர்களைக் கண்டவுடன் அசந்துபோய் அசைவற்றுச் சிலைகள் போல் நின்றோம். சில்க் ஜிப்பா போட்டு வந்த அவர்களைக் கண்ட நான், புதுத் தமிழ் புரபசர் வந்திருக்கிறார்கள் போலும், நம்முடைய ஆட்ட பாட்டத்தைக் கண்டு பொறுக்க முடியாமல் கண்டிக்க வந்துவிட்டார்களோ வென்று பயந்துகொண்டே "சார், மன்னித்து விடுங்கள். நீங்கள் இருப்பது தெரியாது. தெரியாமல் ஆடிக் கூச்சல் போட்டு விட்டோம். இனிமேல் செய்யவில்லை சார்," என்று தடுமாறிக் கூறினேன். என் நிலையைக் கண்ட என் நண்பர் திரு பரமகுரு அவர்கள் புன்னகை பூத்தார்கள். "அப்பா எப்பொழுது வந்தீர்கள். அமருங்கள் என்று சொல்லி சுவாமிகளை உட்கார வைத்தார்கள். அதைக் கண்ட எனக்கு வியப்பு மேலிட்டு, என் நாடியே சிறிது நேரம் நின்று பிறகு ஓடியது. சுவாமிகள் சென்னை சென்று திரும்பிவரும் வழியிலே தன் மைந்தரைக் காண வந்திருக்கிறார்கள் என்பதை அவர்களுடைய உரையாடலிலே கண்டுகொண்டேன். அவர்கள் நன்மைக் கண்டிப்பார்களோ வென்று அஞ்சினேன். ஆனால் சுவாமிகளோ "தம்பி" என்று என்னை அழைத்துப் பக்கத்திலே தன் மகனோடு அமர வைத்தார்கள்.

"நாம் எடுத்த இக்காயம் ஒரு பொய்தான், ஆனால் மாயையை நீக்கி மெய்ஞ்ஞான வழியைக் கைக்கொண்டால் நம் பிறவி மெய்யே யாகும். ஆசையை அளவாகவே வளர்க்க வேண்டும். அது அதிகரித்தால் அறிவைக் கெடுக்கும். அதனால் மெய்யுடல் காத்தடைத்த பையாய் ஆகிறது. ஆசையை அழித்து, ஐம்புலன்களை அடக்கி, ஆண்டவன் அன்பு பெறு

வோன் அமைதியோடு அருள் உலகத்திலே சஞ்சரிப்பான். மண்பாண்டம் உடைந்தால் ஓடாகிறது. உலகில் பெரும் பாசம் கொண்ட உடல் ஆவி போனால் பிணமாகிறது. ஆனால் ஆண்டவன் பற்றுக் கொண்டு ஊடுருவும் உள்ளங்கள் ஆத்மச் சுடர் வடிவம் பெற்று பெருமை தேடிக் கொள்கின்றன. ஆசையை அமைதிபடுத்த முடியாத காரணத்தால் ஆட்டம் போட்டீர்கள், பரவாயில்லை. மாணவர் பருவம். ஆனால் பின்னர் வெளி உலகம் புகுங்கால் புதிய எண்ணங்கள் பெறுவீர்கள். அப்போது உலகியலுக்கு வேண்டிய பயிற்சியையும், பயனையும் கல்லூரியிலேயே பெறவில்லையே என்று ஏங்குவீர்கள். அதற்கு இளமையிலேயே மனதை ஒர் முகப்படுத்தி தக்க நூல்களைப் படித்தும், வெளியார்களோடு ஒன்றிப் பழகியும், அவர்கள் கடைப் பிடிக்கும் பண்பு வழியைக் கண்டு தெரிந்து கடைப் பிடித்தும் நன்கு திருந்த வேண்டும். அவ்வாறு செய்யின் சிறந்தவர்களாக விளங்குவீர்கள். அப்போது காத்தடைத்த பையடா என்பது போய் மானிடப் பிறவி அரிய பிறவி என்ற எண்ணம் விளைந்து, பொன்னனதாய் நாட்டிற்கும், நந் தமிழ்மொழிக்கும் நற்கடமை செய்யவிழைவீர்கள்," என்று திருவாய் மொழிந்து ஓர் சொற்பொழிவே நிகழ்த்தி விட்டார்கள். என் நண்பர் மூலம் சுவாமிகளுக்கு அறிமுகப்படுத்தப்பட்டு, அவர்களுடைய தூய அன்புக்குப் பாத்திரமானேன்.

சுவாமிகள் புன்னகையோடு "தம்பி! உன்னை எனக்கு மிகவும் பிடித்திருக்கிறது. இருவரும் உடன் பிறந்தவர்களாகவே பழகுகிறீர்கள். இது கடைசி வரை உங்களுக்கு நன்மை பயக்கும். குற்றம் பார்க்கில் சுற்றம் இல்லை. ஆகவே நட்பிலே தீமை கண்டால் நாம் காணும் பெருமை, அன்பு முதலியன குலையும். நெஞ்சத்து அகநக நட்பது நட்பு என்று கொள்ள வேண்டும். உயிர்காக்கும் தோழனாய் வாழ வேண்டும்," என்று அறிவுரை கூறினார்கள். அவர்களுடைய ஆசீர்வாதம் பெற்று அன்புடையவனானேன்.

மறுநாள் காலையிலே சுவாமிகள் "நாம் வாழ்க்கையிலே செய்தது ஏதாவது தவறு என்று தெரிந்தால் நாமே நம்மைத் தண்டித்துக் கொள்ள வேண்டும். அவ்விதம் கடைப் பிடிப்பின் நம் வாழ்வு என்றும் வளம்பெறும். பெரியார்கள் கூறும் கருத்துக்களை நம் வாழ்க்கைக்குப் பாடமாக்கிக் கொள்ள வேண்டும். வள்ளுவர் வாக்குப் போல் நீங்கள் இளமையிலே பெரியாரைப் பேணு தொழுகிற்பேரா இடும்பை தரும். நமக்கு ஏற்படும் தவறுகளை நாமே நமக்குத் தண்டனை கொடுத்துத் திருத்திக் கொண்டால் நல்லருள் உலகம் காணலாம். நல்லவரே ஆங்கு இருப்பர். நான் வருகிறேன் அன்பு கொண்டு நட்புடையவராய் இருங்கள்," என்று வாழ்த்தி விட்டு ஒரு தனவந்தரோடு காரிலே புறப்பட்டுச் சென்றார்கள்.

சுந்தரப் புன்னகையோடு சுவாமிகள் மக்களுக்கு அருளும் பொது வேதவாக்குகள் வாழ்க்கைக்கு என்றும் பேரொளியாய் விளங்கும். பூத்துக் குலுங்கும் வாழ்வுக்குப் புத்துணர்வூட்டும். பல சமயத்தவர்களும் சுவாமிகளிடம் பற்றோடு வந்து, தம் வாழ்க்கை நலமடைய அவர்களுடைய மலர்ப்பாதங்களிலே விழுந்து வணங்கி அருள் பெற்றுச் செல்வர். அருட் தெய்வமாம் சுவாமிகளுடைய அருளால் அநேகர் அரிய செல்வத்தோடு வாழ்வதைக் கண்டு வருகிறேன். சுவாமிகளிடம் பக்தியோடு என்றும் இருந்து, அவர்களிடம் அன்பும், அருளும் பெற்றால், அவர் குடும்பம் தலை முறை தலை முறையாக இனி வாழ்கின்ற பெருமையை அடைவார்கள். ஆயிரத்துத் தொளாயிரத்து நாற்பதாம் ஆண்டிலிருந்து அருட் தெய்வம் சுவாமிகளிடம் அன்போடு தொடர்பு கொண்டிருந்தேன். ஆண்டுக்கு இரு முறை நான் அவர்களைத் தரிசிப்பேன். அது சமயம் அவர்கள் எனக்குக் கனியுரை வழங்குவார்கள்.

அதைக் கேட்டு என் வாழ்வு சீரும் சிறப்பும் பெற்று வந்தது.

அருளாலயமாம் சுவாமிகளைக் கண்டு தரிசனம் செய்து திருவருள் பெறுவதற்காக ஒரு சமயம் பாளையங்கோட்டை சென்றேன். நம் சுவாமிகளை வேதாந்த விரிவுரையாளர் என்று கண்ட யான், விநோதச் சித்துக்கள் புரியும் தெய்வப்பிறவி என்பதைப் பின்வரும் நிகழ்ச்சி மூலம் கண்டு மகிழ்ந்தேன். நான் விழுப்புரம் சென்று திருநெல்வேலி எக்ஸ்பிரஸ் மூலம் பாளையங்கோட்டைக்குப் புறப்பட்டேன். அப்போது சென்னையிலிருந்து ரயில் வண்டியில் வந்து கொண்டிருந்த ஒருவர் எனக்கு நண்பரானார். அவரும் பாளையங்கோட்டை சென்று சுவாமிகளைத் தரிசிக்க இருக்கிறார்கள் என்று கேட்ட உடன் என் உள்ளம் உவகையுற்றது. அவர் "தம்பி! நீங்களும் சுவாமிகளைக் காணத் தானே போகிறீர்கள் புண்ணியம் செய்தவர்கள். நான் இப்பொழுது வாழ்ந்து கொண்டிருக்கிறேன் என்றால் நம் சுவாமிகளுடைய திருவருளே தான். ஆபரேஷன் செய்தும் ஏழாண்டாய்இருந்த கொடிய வயிற்றுவலி விடவில்லை. நாலைந்து பிள்ளை குட்டிகளையுடைய நான் சாகத்துணிந்தேன். குடும்பம் நடுவீதியிலே நிற்கும் என்று நண்பர் தடுத்து, சுவாமிகளிடம் சென்றால் தீராத வியாதி தீரும் என்றார். உடனே நான் பாளையங்கோட்டை சென்று சுவாமிகளின் திருவடிகளிலே விழுந்து வணங்கி, என்னுடைய கொடுமையைப் போக்குங்கள் என்று ஏழு நாள் தங்கி, வரம் கேட்டேன். அவர் அருளால் என் வயிற்றுவலி நீங்கியது. என்கர்மவினையைத் தீர்த்த அக்கடவுளை ஆண்டுக் கொருமுறை கண்டு தரிசித்து வருகிறேன்," என்று பயபக்தியோடு கூறினார். சர்வ வல்லமையுடைய சுவாமிகளுடைய அரிய அருட் பெருமையைக் கேட்ட என் கண்களிலே கண்ணீர் பெருகி நின்றது. இருவரும் திருநெல்வேலி வந்தவுடன் என்னோடு வந்தவர் தான் கடை வீதிக்குப் போய் விட்டு, சிறிது நேரம் கழித்து வருகிறேன் என்று சொல்லி விட்டுப் போய் விட்டார்.

பாளையங்கோட்டைப் புதுப்பேட்டைத் தெருவிலே நம் சுவாமிகளைக் கண்டேன். திருவடி போற்றி வணங்கினேன். அவர்கள் அன்போடு என்னை அழைத்துப் பக்கத்திலே உட்காரச் சொன்னார்கள். என்னுடைய பிரயாண வசதியைக் கேட்டுக் கொண்டு வந்த சுவாமிகள் திடீரென்று, "தம்பி! முத்து, ரயிலில் வந்து நண்பரானாரே, அவர் எங்கே?" என்று கேட்டார்கள். அதைக் கேட்ட எனக்குத் தூக்கி வாரிப் போட்டது. நம்மோடு வந்தவரை சுவாமிகள் இங்கிருந்து எப்படிக் கண்டார்கள்? என்று ஆச்சரியமுற்றேன். ஞானதிருஷ்டியால் நற்சித்தரான நம் சுவாமிகள் இங்கிருந்தே எல்லாவற்றையும் அறிந்து கொள்வார்கள் என்று தெரிந்து கொண்ட நான் மெய் மறந்து வீற்றிருந்தேன், சுவாமிகள் "தம்பி! நீ பண்புள்ளவனாக வாழப் போகிறாய். எப்பொருளைக் கண்டாலும் குணமறிந்து கூடுதல் வேண்டும். குரங்குக் கூட்டமே நமக்கு ஓர் புத்தியைக் கற்பிக்கும். ஒரு தாய்க் குரங்கு தனக்கு ஒரு பொருள் கிடைத்தால் தான் தொடாது, தன் வயிற்றிலே இருக்கும் குட்டியின் கையைப் பிடித்து, அதைத் தொட்டு நல்லவை தீயவை என்று கண்டுதான் எடுக்கும் அதுபோல் நாம் மனதை ஒர்முகப் படுத்தி பொருளின் குணமறிய வேண்டும். இல்லை யென்றால் மரத்திற்கு மரம் தாவும் குரங்குபோல் ஆகிவிடும் நம் வாழ்வு" என்று புன்னகை மலரப் புத்தி புகட்டினார்கள்.

நான் வந்திருப்பதைக் கண்ட என் நண்பர் திரு பரமகுரு அவர்கள் ஒடிவந்து என்னைத் தழுவிக் கொண்டார்கள். அக்காட்சியை தெய்வ வடிவமான அவர்களுடைய தாயாரவர்கள் அன்போடு பார்த்துக் கொண்டிருந்தார்கள். அப்போது சுவாமிகள், "கோமதி!

தம்பி முத்துவும் நம் பிள்ளைகளிலே ஒருவன் தான். நம் தம்பியோடு கல்லூரியிலே படிக்கிறுன். எல்லா உரிமையும் இங்கு அவனுக்கு உண்டு,'' என்று கலகலவென்று சிரித்துக் கொண்டே சொன்னுர்கள். அவ்வொலி, வீணையின் நாதம் போல் இனிமையாக இருந்தது. அவ்வேளையில் ரயிலிலே என்னேடு வந்த நண்பர் ஒரு பெரிய கூடை நிறைய பழங்களோடு, சுவாமிகளிடம் வந்து, சுவாமிகளின் திருவடிகளை வணங்கினுர். அக்காட்சி என்னைப் பிரமிக்க வைத்தது. சில நாட்கள் அங்கே சுவாமிகளுடன் தங்கி விட்டு, விடை பெற்று ஊருக்குத் திரும்பினேன். சுவாமிகள் தம் வீட்டில் எக்காரியம் நடந்தாலும், என்னை அழைத்து அன்போடு உறவாடுவார்கள். இவ்வாறு சுவாமிகளுடைய குடும்பமும், எங்களுடைய குடும்பமும் ஒன்றுபட்டு உளமாற உறவாடி வந்தன. அவ்வுறவு சுவாமிகளின் அருளால் ஆயிரம் மடங்காய்ப் பெருகி வளர்ந்து கொண்டிருக்கின்றது.

சுவாமிகளுடைய அருள்பெற்று செல்வமாகக் குடும்பம் நடத்திக் கொண்டிருந்த நான் தனித் தொழிலை ஆரம்பிக்கலானேன். அதற்கு சுவாமிகளுடைய அருள் ஆணி வேராக ஊன்றியது. அவர்கள் இளமையில் எனக்கருளிய தெய்வ வாக்குகளை வாழ்க்கையின் பாடமாகக் கொண்டு நன்முறையில் முன்னேறி இரண்டு பஸ்கள் நடத்தும் அளவுக்கு வந்தேன். அதிலே எத்தனையோ இடையூறுகள் தலையெடுத்தன. ஆனுல் சுவாமிகளுடைய அருள் பலத்தால் அவைகளைக் களைந்து கண்ணியத்தோடு தொழிலைக் கைக் கொண்டு வந்தேன். அச்சமயம் சுவாமிகளுடைய மைந்தர் திரு பரமகுரு அவர்கள் சென்னைக்கு துணை போலீஸ் கமிஷனராக மாறினுர்கள். அந்நேரம் சுவாமிகள் சென்னைக்கு வந்து தன் மைந்தர் வீட்டில் தங்கிக் கொண்டு என்னை அழைத்துவரச் செய்தார்கள். நான் உடனே சென்னை சென்று சுவாமிகளை தரிசனம் செய்தேன். அவர்கள் மகிழ்ச்சியோடு எனக்கு நல்லாசி கூறி, ''தம்பி! முத்து உனக்கு இன்னும் பல பஸ் வண்டிகள் ஓட இருக்கின்றன. கவலைப்படாதே, கொஞ்ச நாளைக்குக் கஷ்டம் இருக்கும். பின் தனசம்பத்தோடு வாழ்வாய். சொந்த முயற்சியிலே முன்னேறும் உனக்கு, என் அருள் உன்னை செல்வந்தனுக்கும். உண்மையும், உழைப்பும் கைவிடாது நீ காத்துவர வேண்டும்'', என்றுர்கள்.

ஆண்டவன் அருளால் என் நண்பர் திரு பரமகுரு அவர்கள் கடலூருக்கு மாவட்ட போலீஸ் அதிகாரியாய் மாற்றலானுர்கள். திருவருள் தெய்வம் சுவாமிகள் சில காலம் கடலூர் வந்து தன் மைந்தரோடு தங்கியிருந்தார்கள். அப்போது என்னுடைய சந்தேகங்களை யெல்லாம் போக்கி, சந்தோஷ வாழ்வுக்கு அடிகோலியாக நல்ல இயல்புகளை எடுத்துக் கூறுவார்கள். சுவாமிகள் கடலூரில் தங்கி வந்த போது இரு தினங்கள் சுவாமிகளைக் கவனிக்கும் பொறுப்பு என்னிடம் ஒப்படைக்கப் பட்டிருந்தது என் பாக்கியமே. சுவாமிகளும் என்னைத் தம் மகனுகவே பாவித்து, நான் செய்யும் பணிவிடைகளைக் கண்டு மகிழ்ச்சியடைந்தார்கள்.

கடைசியாக கடற்கரைப் பக்கத்தில் இருக்கும் கடலூர் பங்களாவில் சுவாமிகள் எனக்குக் கூறிய அறிவுரைகள் அமுதம் கலந்தவையாகும். ''தம்பி! வாழ்க்கை யென்பது பல நூல் இழைகளால் பின்னப்பட்ட ஆடை போன்றதாகும். அவ்வாறு நெய்யப்பட்ட ஆடை இருபக்கங்களிலும் வண்ணக் கரைகள் போடப்பட்டிருந்தால்தான் காண்பதற்குகவர்ச்சியாக இருக்கும். அது போன்றே வாழ்க்கையிலே சிறிதாவது இன்பம் கலந்து இருந்தால்தான் வாழ்வு சுகமடையும். நீ! வாழ்க்கையிலே நிம்மதி பெற்று நெஞ்சங்குளிர வாழும் காலம் அண்மையிலே இருக்கிறது'', என்று திருவாய் மொழிந்தார்கள். அத்தகைய அருள் மொழி கூறிய அறக் கடவுளாகிய சுவாமிகள் கருவையிலே சமாதியாகித் திருக்கோயில் கொண்டார்கள். நான் வணங்கி வரும் அருள் ஆலயமாம் சுவாமிகள் என்றும் என் வாழ்க்கைக்கு நலமே நல்குவார்கள். சுவாமிகள் அருளியபடியே எனக்குத் தற்போது நான்கைந்து பஸ்கள் ஓடுகின்றன. எல்லாம் அவ்வருள் ஆலயத்தின் அருள்தான்.

# ஆத்ம ஞானி

திரு. T. V. சோமசுந்தரம் பிள்ளை, சென்னை.

தவத்திரு பொன்னையாசுவாமிகளை எனக்கு கடந்த பத்து ஆண்டுகளுக்கு மேலாகத் தெரியும். அவர்களது அன்பைப் பெற்று அதன் அனுபவத்தையும் கண்டு இருக்கிறேன். அந்த அருளன்பை அடைந்தவர்கள் வாழ்க்கையிலே சிறப்புற்று வாழ்வார்களென என் அனுபவத்தின் மூலம் அறிந்திருக்கிறேன். தியாகராய நகரில் எங்கள் வீட்டிற்கு எதிரே குடியிருந்த திரு முத்துச்சாமி தேவர் அவர்களின் செல்வக்குமாரி கமலாவை, சுவாமிகளின் குமாரர் திரு பரமகுரு அவர்கள் மணம் செய்வதற்கு முன்பே நானும் சுவாமிகளும் ஒருவரையொருவர் உளம் ஒன்றி அன்னியோன்யமாய்ப் பழகி வந்தோம். திரு பரமகுரு அவர்களின் திருமணத்திற்கு நாங்கள் ஒரு வழியில் உதவியாயிருந்தது பற்றி நினைத்து மகிழ்ச்சியடைகிறோம்.

நான் சுவாமிகளை முதன் முதல் பார்த்ததுமே என் மனம் ஞான தத்துவத்தில் மூழ்கியது. தெய்வ அருள் படைத்த அவர்களது திருவாக்குப் பெற அவர்களை அன்போடு தரிசனம் செய்தேன். பல வழிகளில் சிதறும் என் மனதை ஒர்மைப்படுத்தி ஞான வழியில் திருப்ப வேண்டும் என்று சுவாமிகள் கருணை கொண்டார்கள். அவர்கள் புன்னகையோடு "பூமி ஆழ்வோனும், புலனடக்கி வாழ்வோனும் இறைவன் அடியைத்தான் இறுதியில் அடைகிறார்கள். ஆனால் புலனடக்கி வாழும் ஞானிகள் இறைவன் திருவடிகளை அடைந்ததும், இறையுருவம் பெற்று, பல பிறப்பு ஒழிகிறார்கள். ஆத்ம ஞானம் பெற்று ஆண்டவன் வழிச் செல்லும் வாழ்க்கையில்தான் அமைதி காண முடியும். ஒவ்வொரு உள்ளத்தின் சங்கல்ப சக்திக்கு ஏற்ப எல்லாச் செயல்களும் நடைபெற்று, ஆவிக்குரிய நன்மை தீமைகள் கிட்டும். இது நிலம் கண்டு நீர் மாறுதல் போலாகும்," என்று திருவாய் மொழிந்தார்கள். அத்திருவருள் கருத்துரைகள் என் மனதிலுள்ள மாயையை நீக்கித் தெய்வப் பற்றுண்டாக்கியது.

எறும்பு ஊரக் கல் தேயும் என்பர். ஆனால் அவ்வளவு நீண்ட கால முயற்சியின்றி, சுவாமிகளுடைய திருவருள் பெற்ற நிமிடத்திலேயே வாழ்க்கையின் இருள் அகன்று ஒளி தென்படும். சுவாமிகளுடைய திருமுகத்தைக் காண்போர் தாமரை மலரின் வடிவத்தையேதான் காண்பார்கள். அத்தாமரையில் படும் நீர் போல சுவாமிகள் இல்லறத்திலே இருந்து பெரிய மகானாய்ச் சிறந்து விளங்கினார்கள். அவர்களது மலர் முகத்திலே என்றும் புன்னகை ததும்பும். இதயந்தொட இன்பமாய் அவர்கள் பேசும் காட்சியை நான் கண்டிருக்கிறேன். அதிலே ஏடுகள் அறியா ஞான தத்துவங்கள் கலந்திருக்கும். சோகக்குறி என்பதே சுவாமிகளிடம் அறவே கிடையாது.

திரு பரமகுரு அவர்களின் திருமணத்திற்குப் பின் ஒரு சமயம் சுவாமிகளும் நானும் தனித்துப் பேசிக் கொண்டிருந்தோம். அப்பொழுது அவர்கள் என்னிடம் தாம் சில காலம் ஏகாந்த வாசம் செய்ததாயும், அது சமயம் ஆத்ம ஞானத்தால் வரும் பல இன்பங்களைக் கற்றறிந்து அனுபவித்ததாகவும் கூறினார்கள். அவைகளை எனக்குப் பின் வரும் கவிதை உருவிலே உபதேசம் செய்தார்கள்.

"இல்லறமே வீட்டின்பம்
இல்லாளும் நல் வாழ்வும்
புல்லித் தழைக்கும் புகழ்."
"குற்றும் பேய் நெஞ்சைச் சுருக்கி
சுகவழியே பற்றற்று நிற்கப் பயில்."
"காகமுறவு கலந்துண்ணக் கண்டீ ரகண்—
டா—கார சிவ

போகமெனும் பேரின்ப வெள்ளம் பொங்கித்
தளும்பி பூரணமா
யேக உருவாய்க் கிடக்குதையோ! இன்புற்றிட
நாமினி யெடுத்த
தேகம் விழுமுன் புசிப்பதற்குச் சேரவாரும்
செகத்தீரே."

"எத்தனை யிடர்வரினும், எக்கொடிய
நோய் வரினும், என் னென்ன
வின்னல் வரினும், ஏழ்மை வரினும்
பிறரிகழ்ச்சி வரினும், உடல்
இளைத் தென்பு முருகி விடினும்,
சித்தி வரினும், எனைச் செகமெலாம்
பித்த னெனச் சீறி சிரிக்க வரினும்
தெளிந்துட் கலந்த மெய்ச்சிவ காயமதனிலே,
சிறுமை யொன்றுண்டா குமோ?"

"சிந்தனையற்றுப் பிரியமும் தானற்றுச்
செய்கையற்று, நினைந்தது மற்று
நினையாதது மற்று, நின் மலனுய்த்
தனந் தனியே யிருந்தானந்த
நித்திரை தங்குகின்ற வனந்தனி
லென்றிருப் பேதைத்தனே கயிலாயத்தனே."

"ஆகாயம் நீங்காமலாடியது போலடங்கும்
ஏகாந்திக் கெங்கிருந்தா லென்?"

"சென்றது கருதார் காலைச் சேர்வது நினையார்
கண்முன்
நின்றது புசிப்பார் வெய்யில் நிலவாய் விண்
விழுது வீழ்ந்ததும்
பொன்றின சவம் வாழ்ந்தாலும் புதுமையா
யொன்றும் பாரார்
நன்று தீதென்னார் சாக்ஷி நடுவான ஜீவன்
முத்தார்."

இவ்வாறு எனக்கு ஞானோபதேசம் செய்து என் மனதையும், மார்க்கத்தையும் நல்வழிப் படுத்திய ஆத்மஞானியாம் நம் சுவாமிகள் 1960-ம் ஆண்டு கருவையிலே சமாதியாகித் திருக்கோயில் கொண்டார்கள். அவர்களைச் சார்ந்தவர்களும், என்போல் அரிய ஞானோப தேசம் பெற்றவர்களும், அந்தப் பரம் பொரு ளான குருவை என்றென்றும் சிந்திக்கக் கடமைப் பட்டிருக்கிறார்கள்.

---

# குருசீடர் உறவு முறை

குரு சீடர் உறவில், பலவிதமும், பலதரமும் உண்டு. மீன்கள் தன் முட்டைகளைத் தனது கூர்மையான பார்வையால் பார்த்தே பொரிக்கின்றன. அதேபோல் சீடர்களைத் தனது கடாச்சியம் பொருந்திய அருள் பார்வையின் சக்தி கொண்டு, தீட்சை கொடுத்து குருவானவர் வழி காட்டுவார்கள். மற்றும் சில குருக்கள், பறவைகள் அடைகாத்துக் குஞ்சு பொரிப்பது போல, தங்களின் அரும் கரத்தால் தொட்டு ஆசி கூறி வழி காட்டு வார்கள். மற்றும் சிலர், ஆமை கருதிக் கருதித் தனது முட்டைகளைப் பொரிப்பது போல், தனது மனதில் கருதிக் கருதி சங்கல்பம் செய்து சீடர்களைப் பண்படுத்துவார்கள். அத்துடன், பூனையானது தனது குட்டிகளைத் தானாகவே வாயில் கவ்விக்கொண்டு ஒரு இடமிருந்து மறு இடம் சென்று, தக்க இடம் கண்டு காப்பதுபோல், சீடர்களைத் தாங்க ளாகவே அருள் செய்து பேணிப் போற்றி ஆத்மீக நிலையை கருணையுடன் ஊட்டு வார்கள் சிலர். இதற்கு மாறுதலாகச் சீடர்கள், குரங்குக்குட்டி தனது தாயைத் தானாகவே இறுகப் பற்றி, அது செல்லும் இடங்களுக்கு உடன் சென்று, வளர்வது போல், தங்கள் குருவை நெருங்கி இணை பிரியாதிருந்து ஆத்ம முக்தி அடைவார்கள். இவ்வாறொத்த அன்பும், கருணையும், அருளும் நிறைந்த இணைப்பால், ஒரு குளவியா னது, தனது கூட்டில் வைத்த புழுவை ஊதி ஊதி அதன் உருவையும், தன்மையை யும் மாற்றி தன்னையொத்த குளவியாக்குவது போன்று குருவானவர்கள் சீடர்களுக்கு முக்தியடையும் மார்க்கம் காட்டுவார்கள். இம்முறை இவ்விதமாகப் பலவிதமாகும்.

# வரும் பொருள் உரைக்கும் அருங்குணக் குன்று

திரு கன்னிக்கண்ணன், சென்னை.

பள பளக்கும் திருமேனி, அதில் பளிச்சிடும் புன் முறுவல். அந்த மோகன முறுவலுடன் போட்டியிடும் ஒளிவிடும் கண்கள். அந்தக் கவர்ச்சி கண்களி லிருந்து விண்ணெனத் தெறிக்கும் ஒளி வீச்சு. அந்த ஒளி வீச்சில்தான் என்ன தீர்க்க தரிசனம்! அப்பப்பா அதை வர்ணிக்க ஒரு மாமனிதன் தான் வேண்டும். நெஞ்சத்தில் நினைத்து கைவண்ணத் தால் அதை வடித்துக் காட்டிவிட முடியாது. அதை நேரில் பார்த்தவர்களுக்குத்தான் புரியும் அன்னார் வாய்ச் சொல் கேட்பவர்களுககுத்தான் தெரியும். இத் தனை சிறப்புக்கும் மதிப்புக்கும், பெருமைக்கும் உரிய அந்த மகான் யார்?

அவர்தான் என் போன்ற பலரைக் கவர்ந்த சித்த கல்ப சிரோன்மணி தவத்திரு கி. போ. பொன்னையா சுவாமிகள — வரும் பொருள் உரைக்கும் அருங் குணக்குன்று!

அந்த சிறப்புமிகு குணக்குன்று சென்ற 1960 ஐப்பசி திங்கள் 19-ம் நாள் நம்மையெல்லாம் மீளா துயரத்தில் ஆழ்த்தி விட்டு அமரத்துவம் அடைந்துவிட்டது!

பிரகாசமான கதிர்களை வீசி நாடெங்கும் இருளகற்றி கருத்துக்கிடக்கும் இதயச்சுவர்களை பளபளப்பாக்கி, அந்தகாரத்தினிடையே அவனிக்கு வழிகாட்டிய அந்த அகல்விளக்கு ஆத்மீக ஒளியில் இரண்டறக் கலந்து விட்டது!

தூய பாதையைக் காட்டி, வரும் பொருள் கூறி தெய்வீகத்திற்கு சாட்சியாய் விளங்கி வந்த அந்த பொன்னுடல் நாம் கதறக்கதற, கண்ணீர் மல்க மல்க நம்மைவிட்டு மறைந்து, அந்த ஒளி மயமான உடல் ஒளியிலே கலந்து விட்டது.

மரணம் எல்லா மனிதனுக்கும் கடைசிப்புகலிடம் எதிலேயும் மீட்சிகாண இந்த புதுயுகத்தில் வழி இருக்கிறது. மரணத்தை வெல்ல வழியுமுண்டோ? இறைவன் ஏன் மக்கள் மீது இத்தகைய கடும் ஆயுதத்தை பிரயோகிக்கிறான். சுவையைக்காட்டி, சுவையை ஊட்டி கடைசியில் எல்லாவற்றையும் இல்லையென்று ஆக்கி விடுகிறானே!

அவருடன் உரையாடி மகிழ்ந்த நாட்கள், அறிவு மெச்சி புளகாங்கிதமடைந்த காலங்கள், வரும் பொருள் கூறி எங்களை யெல்லாம் புல்லரிக்க வைத்த நிமிடங்கள் எல்லாம்கனவா? பொய்யா? பழங்கதையா? இந்த புனிதமான நினைவுகளை அளித்துவிட்டுப்போன அவரை இனியும் காணமுடியுமா? நினைத்தால் இதயம் கேவுகிறது! வதனத்தில் நீர் பூத்து பொங்குகிறது! நினைக்க நினைக்க துன்பம் பெருகுகிறது! தாங்க முடியாமல் மனம் பொருமுகிறது!

அவரது அறிவின் தீட்சணயத்தை நினைத்து மகிழ்ந்து, அவரோடு உரையாடிய காலத்தில் உதிர்த்த கருத்துக்களை ஊடுருவி ஆராய்ந்து அதன் உட்பக்கம் கண்டு உவகை கொண்டு அவர்கள் காட்டிய நெறிகளை பிறழாமல் பின்பற்றி அதிலே தன் இதயத்தை கரைத்துக் கொண்டிருக்கும் நாம் கொடுஞ் சோகத்திலிருந்து வழிகாண முடியும்.

நம்மைவிட அவரது அருந்தனையர்களான திரு வாளர்கள் குருசிரோன்மணி, பரமகுரு, கிருஷ்ணமூர்த்தி அன்னாரின் செல்வப்புதல்விகளான திருமதிகள் சரஸ்வதி, லட்சுமி, இராஜேஸ்வரி ஆகி யோரின் துயரம்பன்மடங்கானது. அளவிட இயலாதது எதைக்கூறினாலும் அழித்துவிட முடியாதது.

அவர்களது இதயங்கள் எத்தனையோ கனவுகள் கண்டிருக்கும்' அந்த பொன்மேனியுடன் ஒட்டி உறவாடி பெருமைகொண்டிருக்கும். அவர்களுக்கு ஏற்பட்ட இந்த இழப்பு சாமான்யமானதல்ல.

''தந்தை மகற்கு ஆற்றும் நன்றி அவையத்து முந்தியிருப்பச் செயல்'' என்ற பொய்யாமொழிப் புலவரின் பொன்மொழி கேற்ப தன் மைந்தர்களை நாடறியச் செய்தார்!

தனக்கிருந்த ஆற்றல் மிகுந்த வைத்தியத் தன்மையைப் போதித்து அவரது மைந்தன் குரு சிரோன்மணியை பெரும் டாக்டராகக் கண்டார்.

தனக்கிருந்த மேதைத் தன்மையை, அறிவின் எழுச்சியை, கண்ணியத்தை காக்கும் தூய உள் ளத்தை இந்த மாநிலமே கண்டு வியக்கும் பெரும் போலீஸ் அதிகாரி பரமகுருவின் உருவில் கண்டார்.

தனக்கிருந்த பொதுநல சேவை ஆர்வத்தையும் அழுத கண்களை துடைக்க விரையும் கரங்களையும் வாட்டம் அடைந்தோரை மீட்பதே தன் கடமையாகக் கொண்ட பொது நலவாதி மக்கள் சேவகர் பொ. கிருஷ்ணமூர்த்தி உருவில் கண்டார்.

தந்தையால் மக்கள் பெருமை அடைந்தனர்.

மக்களால் தந்தை பெருமை அடைந்தார்.

இத்தகு லட்சியமிகு தந்தை அரிய வித்தகர் சித்த வைத்தியத்திலே விற்பன்னர். இல்லறத்திலே துற வறம் பூண்டு அருள் கண்டு நல்லறம் கண்டவர்.

அவர் பழம்பெரும் நீதிகளுக்கு அகராதி

புதிய சமுதாயத்திற்கு ஒரு விரிவுரை

அவர் பெருமைகள் வெல்க! வாழ்க!